சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# 1 அகநானூறு

களிற்றியானை நிரை

மூலமும் உரையும்

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# அகநானூறு

## களிற்றியானை நிரை

மூலமும் உரையும்

1

உரையாசிரியர்

புலியூர்க் கேசிகன்



சாரதா பதிப்பகம்

சென்னை - 600 014.

☎ 044-2811 4402 / 044 - 2844 3791 / 97907 06548

நூல் கிடைக்குமிடம் :

**கௌரா புத்தக மையம்**
செயிண்ட் ஜான் சர்ச் வணிக வளாகம்
10, ராக்கின்ஸ் சாலை, திருச்சிராப்பள்ளி-1
☎ : 99520 34876 / 0431 2419584

**கௌரா புத்தக மையம்**
4, வெங்கட்ராங்கம் பிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.
☎ : 97907 06548 / 94449 10346

விலை : ரூ. 80.00

* முதற் பதிப்பு : ஜூன் 2010


* பதிப்பாசிரியர் : **எஸ். கௌமாரீஸ்வரி** M.A., M.L.I.S.,
* நூலின் பெயர் : அகநானூறு - களிற்றியானை நிரை மூலமும் உரையும்
* பக்கங்கள் : 12 + 268 = 280
* ஒளி அச்சு : ஜெய் ஜீனா
* வெளியீடு : சாரதா பதிப்பகம்
ஜி-4, சாந்தி அடுக்ககம்,
3, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு,
ராயப்பேட்டை, சென்னை - 14.
* அச்சிட்டோர் : கிளாசிக் பிரிண்டர்ஸ், செ - 2

CODE : 919

**கௌரா ஏஜென்ஸீஸ்**
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.
☎ : 044-2844 3791 / 97907 06548 / 97907 06549
www.gowrabookfair.com. E-mail : gowra_09@yahoo.in / gowra09@gmail.com

# பதிப்புரை

*எட்டுத்தொகை நூல்களுள் அகநூலாக அமையும் பெருமை உடையது அகநானூறு. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளில் நானூறு பாக்களைக் கொண்டிருக்கிறது. நூலைத் தொகுத்தவர் உப்பூரிக்கிழார் மகனார் உருத்திரசன்மனார். தொகுப்பித்தவர் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. அகநானூறு களிற்றியானை நிரை (பாடல்கள் 1- 120) மணிமிடை பவளம் (பாடல்கள் 121 - 300) நித்திலக் கோவை (பாடல்கள் 301 - 400) என்னும் முப்பிரிவுகளாக அமைந்துள்ளன.* **வில்லவதரையன்** *பாடலும் இதனை உணர்த்தும்.*

**ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்**
**நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய**
**இன்பப் பகுதி இன்பொருட் பாடல்**
**நானூ றெடுத்து நூனவிற் புலவர்**
**களித்த மும்மதக் களிற்றியா னைநிரை**
**மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்**
**மேவிய நித்திலக் கோவை என்றாங்கு**
**அத்தகு பண்பின் முத்திற மாக**
**முன்னினர்த் தொடுத்த நன்னெடுந் தொகை.**

*1 முதல் 120 வரை உள்ள களிற்றியானை நிரைப் பாடல்கள் நிமிர்ந்து நடந்து செல்லும் களிற்றின் பெருமித நடை உடையன.* **களிற்றியானை நிரை**க்கு *புலியூர்க் கேசிகன் எளிமையான உரை வழங்கியுள்ளார். உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாடு நடைபெறவிருக்கும் இவ்வேளையில் தமிழரின் அகவாழ்வு நெறிகளைக் கூறும் அகநானூறு இலக்கியத்தைக் கற்று இன்புறுவோம்.*

**பதிப்பகத்தார்**

# உள்ளே...



**பிற்சேர்க்கை**

# அகநானூறு - களிற்றியானை நிரை

உணர்வுகள், அகத்துப் பொங்கி எழுவனவும், புறத்து நிகழ்ச்சிகளைச் சார்ந்து தோன்றுவனவும் என்னும் இரு வகையின. அவற்றுள், அகத்தே முகிழ்த்துப் பொங்கி எழுந்து பெருகுவதாய்ப், புறத்தே பேச்சாகவும் வெளிப்பட்டுத் தோன்று கின்ற உணர்வுகளின் தமிழ்ச் சொற்கோவையே, அகநானூற்றுக் களிற்றியானை நிரை என்னும் இந்நூலாகும். இது, நெடுந்தொகை என்னும் அகநானூற்றுள் முதற்பகுதியும் ஆகும்.

அகநானூற்றைத் தொகுத்தவர், உப்பூரிகுடி கிழார் மகனார் உருத்திரசன்மர்; தொகுப்பித்து உதவியவன், பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. இப் பாண்டியனின் செய்யுள், மருதத்திற் குரிய 26ஆம் செய்யுளான இந்நூலுள் விளங்குதலைக் காணலாம்; இதனால், இவனும் தமிழறிந்த பெரும் புலமையாளன் என்பது விளங்கும்.

தாம் தொகுத்த தொகைநூல் என்றும் மறையாது தமிழர்பால் நிலைக்க, இதன் தொகுப்பாசிரியர் மேற்கொண்ட செய்யுள் வைப்புமுறை பெரிதும் பாராட்டற்கு உரியதாகும். ஒற்றை எண் பெறும் 1, 3, 5, 7, 9 என வரும் செய்யுட்கள் பாலைத் திணையிலும், இரண்டும் எட்டும் பெறுவன குறிஞ்சித் திணையிலும், நான்கு எண் பெறுவன முல்லைத் திணையிலும், ஆறு எண் பெறுவன. மருதத் திணையிலும், பத்து எண் பெறுவன நெய்தல் திணையிலுமாக, முறையே செய்யுட்கள் ஒருவகை எண்முறை ஒழுங்கோடு தொகுக்கப் பெற்றுள்ளன.

பழந்தமிழரின் அகவொழுக்க நினைவுகளோடு மட்டுமே அமையாமல், அவர்களது பெருமையும், மறமும், ஒழுக்கமும், வளமையும், பண்பும், மற்றும் பற்பல வாழ்வியல் நெறிச் செப்பங்களும் இத் தொகையினுள் பொதிந்து கிடக்கின்றன. இவை, நமக்கு நம் முன்னோர் தம் வாழ்வியலிலே சிறந்து ஒளிர்ந்த செப்பத்தையும், பெருமிதத்தையும் நன்கு விளக்குகின்றன.

இந் நெடுந்தொகையின் பழைய உரையுடன் கிடைத்த ஏட்டுப் பிரதிகளுள் ஒன்று, திருநெல்வேலிச் சீமையிலுள்ள நாங்குனேரி வட்டத்துப் பெரும்பழஞ்சி (பெருமளஞ்சி என்று இந்நாளிலே வழங்கும்) என்பதும், அதன்கண் 'ஆறு நாட்டுக்குச்

சேர்ந்த பெரும் பழனையிலிருக்கும் நல்லையப் புலவர் மகன் பொன்னையன் நெடுந்தொகை' எனக் காணப்பட்ட குறிப்பும், இதனைப் பேணிக் காத்த தென்பாண்டித் தமிழரின் தமிழன்பைக் காட்டுவதாகும். அதன்கண் காணப்பெற்ற 'கொல்லம் 460' என்னும் குறிப்பு, அந்த ஏட்டுப் பிரதி படி செய்யப்பெற்ற காலத்தையே இற்றைக்கு ஏழு நூற்றாண்டுகட்கும் முற்பட்ட தென்று காட்டி, இந்நூலின் பழைமையை வலியுறுத்தும்.

அகநானூற்றின் முதற்பகுதியாக இக் களிற்றியானை நிரை அமைந்து விளங்குகின்றது. இது 1 முதல் 120 முடியவுள்ள செய்யுட்களின் தொகையாகும். மும்மதக் களிறுகள் நிரையாகச் செம்மாந்து செல்லும் செவ்விபோலச் சொற்கள் செம்மாப்புடன் செறிந்து, பொருள் நிறைவோடு முறையாக அமைந்த செய்யுட்கள் இவை என்றும் கூறலாம்.

நயமிக மலிந்த இச் செய்யுட்களைப் பாடிய சான்றோரினைப் பற்றியும், அவர்களாற் பாடப்பெற்ற தலைவர்களைப் பற்றியும், பிற்சேர்க்கையாக விளங்கும் பகுதிகளிற் சில செய்திகள் குறிப்பாகச் சொல்லப்பட்டுள்ளன. அதனைக் காணின், மேலும் எண்ணிறந்த நயங்கள் மலிந்தன இந்நூல் என்னும் பெருமித வுணர்வு, ஆழ்ந்து கற்றும், எண்ணித் திளைத்தும், சிந்தித்து மகிழ்ந்தும் இன்புறும் தமிழன்பர்களுக்கு எல்லாம் தமிழூற்றாகச் சுரந்து பெருகி, அவர்களை மென்மேலும் ஆழ்ந்து கற்கத் தூண்டிக் களிப்பிலும், அறிவு நுட்பத்திலும் ஆழ்த்தும் எனலாம்.

செய்யுட்களின் மேலோட்டமான கருத்துவளத்தைத் தொட்டுக் காட்டிச் சென்று, அதன்மூலம், அகநானூற்றை ஆழ்ந்து நுட்பமாகக் கற்று மகிழ்வதற்கான ஆர்வத்தை எழுப்புதல் வேண்டும் என்பதே, இந்தத் தெளிவுரை அமைப்பின் நோக்கமாகும். அந்த அளவிலேயே, கருத்தைத் தெளிவுபடுத்தும் அளவில் இத் தெளிவுரை அமைந்து செல்கின்றது.

இந் 'நெடுந்தொகை' என்னும் அகநானூற்றை, முற்றவும் தேடியெடுத்து ஆராய்ந்து, செம்மையாக வெளியிட்ட தமிழ்ப் பெரும்பணியினாலே, என்றும் தமிழன்பரின் உளங்களில் நிலைபெற்ற புகழைத் தமதாக்கிக் கொண்டுள்ளவர், **கம்பர் விலாசம் திருமிகு இராஜகோபால அய்யங்கார்** அவர்களாவர். இந்நூல் முழுவதற்கும் நல்லுரை அமைத்து அடுத்து வழங்கிய வர்கள், கரந்தைக் கவியரசு எனப் பெரும் புகழ்பெற்றுள்ள பெரியார் **திரு. ரா. வேங்கடாசலம் பிள்ளையவர்களும், நாவலர் பண்டித ந.மு. வேங்கடசாமி நாட்டார்** அவர்களும் ஆவர்.

சங்க இலக்கியச் செய்யுட்களை எல்லாம் புலவர்களின் வரிசையாக ஒழுங்குபடுத்தி, அவர்களின் புலமைச் சிறப்பைப் புரிந்து போற்றுவதற்கேற்ற வகையிலே பேராசிரியர் திரு.

வையாபுரிப் பிள்ளையவர்கள் தம் சங்க இலக்கியப் பதிப்பைச் சென்னைச் சைவசித்தாந்த மகா சமாசத்தார் வழியாக வெளியிட்டனர். இதனால், தமிழன்பர் பெற்ற பெரும் பயனோ அளவிட்டு உரைத்தற்கும் அரிதாகும். மர்ரே கம்பெனியார் முற்றவும் செய்யுட்களைச் சீர்பிரித்து, எளிதாகக் கற்றறிவதற்குரிய ஒரு பதிப்பினையும் இதன் பின்னர் வெளியிட்டுத் தமிழ் வளர்ச்சிக்கு உதவியுள்ளார்கள். இவை இரண்டும் செய்யுட் பதிப்புக்கள்.

இப் பதிப்புக்கள் பலவும் தமிழறிஞருக்கு மட்டுமே பயன்படக் கண்டு, தமிழார்வம் உடையவர் அனைவருமே விருப்பமுடன் எளிதாகக் கற்று மகிழும் வகையிலேயும், இத் தெளிவுரை அமைப்பு உருவாக்கப் பெற்றிருக்கின்றது.

அகநானூற்றுச் செய்யுட்களை அகங்கனிய எடுத்துச் சொல்லியும், அதன் வளமைகளைப் பலவாக விரித்து உரைத்தும் தமிழ்வளம் பெருக்கிவரும் எண்ணற்ற தமிழ்ப் புலவர்கட்கும், தமிழ் அன்பர்கட்கும், யான் மிகமிகப் பெரிதும் நன்றியுடையேன்.

பொதுவாக, அகநானூற்றுச் செய்யுட்களைக் கற்பவர்கள், தம்மை அந்தந்தச் செய்யுட்களின் தலைவன் அல்லது தலைவி அல்லது பிறர் மனநிலைகளோடு முற்றவும் ஒன்றுவித்தவர் களாக, தாமும் அவ்வுணர்வுகளிலே திளைப்பவர்களாகக் கலந்துவிடும்பொழுதுதான், இந்த இலக்கியத்தின் தமிழ்ச் செழுமையை உள்ளபடியே அறிந்துணர்ந்து பயனடைய இயலும். அங்ஙனம் கற்கும்போதுதான், பாடிய புலவர்களின் அறிவுச் செழுமையும், தமிழ்வளமும், பழம் தமிழக நலமும் விளங்கும்; தமிழ்ப்பற்றும் தமிழ் ஆர்வமும் முகிழ்த்து மலர்ந்து நாடெங்கும் மணக்கவும் தொடங்கும்.

தமிழ் உலகம், இத்தகு தமிழார்வத்தோடு இதனை விரும்பிக் கற்று மகிழும் என்று நம்புகின்றேன்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப்பற்று!

**புலியூர்க் கேசிகன்.**

# நூல் வரலாறு

## பாயிரம்

நிலைபெற்ற அறநெறியினைப் பேணி வத்தவர்கள், எப் புறத்தும் வெற்றியுடன் சிறப்புற்ற ஆட்சிச் சக்கரத்தினை நடாத்தியவர்கள், யாதும் பழுதற்ற சீரிய கொள்கையினை உடையவர்கள் வழுதியராகிய பாண்டியர்கள். அவர்களுடைய அவைக்கண்ணே, அறிவு குடிகொண்டிருக்கும் செறிவுடைய மனத்தவரும், வானளாவிய நற்புகழினை உடையவருமாகிய சான்றோர்கள் குழுமியிருந்து, அருமையுடைய முத்தமிழினையும் ஆராய்ந்து வந்தனர். அந்தக் காலத்தே.

ஆராய்ந்து சாலச் சிறந்தவையெனத் தெரிந்த சிறப்பினை யுடைய இனிய தமிழ்ப் பாடல்களுள், நெடியவாகி அடிகள் அதிகமாக விளங்கிய இன்பப் பகுதியினைச் சார்ந்த இனிய பொருள் அமைந்த பாடல்கள் நானூற்றை எடுத்து, நூல்களை ஆராய்ந்து சொல்லும் புலவர் பெருமக்கள் தொகுத்தனர்.

மும்மதங்களால் களித்தலையுடைய களிற்றியானை நிரை, மணியோடும் சேர்த்துக் கோத்த அழகு ஒளிரும் மணிமிடை பவளம், சிறப்பான நித்திலக்கோவை என்ற விதமாக, அத்தகைய பண்பினோடு முத்திறம் உடையனவாகத் தொடுத்தற்கு நினைந்து தொகுத்தது, நல்ல நெடுந்தொகையாகும்.

அந் நெடுந்தொகைக்குக் கருத்து எனப் பண்பினையுடைய சான்றோர் முற்காலத்தே சொன்னவற்றை நாம் ஆராய் வோமானால், அருமையுடையவாகிய பொருளுடைமையினைக் கருத்தாகக் கொண்டு, எவ்விதக் கோணுதலும் இல்லாமல், பாட்டமைதியோடு பொருந்துமாறு, செய்யுள் தகைமையிற் சிறந்த அகவல் நடையினால், கருத்து இனிதாக இயற்றியோன், பரிகள் பூட்டிய தேரினையுடைய வளவர்கள் காத்துப் பேணும் வளமையான சோழ நாட்டினுள்ளேயும், நாடு எனச் சிறப்பித்துக் கூறப்படும் மிக்க பெருமையுடைய சிறப்பினையும், என்றும் வளங் கெடுதலில்லாத உயர்வினையுமுடைய இடையளநாட்டுத் தீதற்ற கொள்கையினர் வாழுகின்ற பழைமையான ஊர்கள் பலவற்றுள்ளும் சிறந்த ஊர் என்ற புகழுடன் விளங்கிய, சீர்மைக் கெழுமிய மணக்குடி என்னும் ஊரினனான, செம்மை நிரம்பிய **தேவன்** என்பவனாவன். அவன், தொன்மையாகவே சிறப்புடைய நன்மையாளர் மலிந்த தமிழ்க் குடியினனும் ஆவன்.

நின்ற நீதி வென்ற நேமிப்
பழுதில் கொள்கை வழுதியர் அவைக்கண்
அறிவுவீற் றிருந்த செறிவுடை மனத்து
வான்றோய் நல்லிசைச் சான்றோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றுந் தெரித்த காலை 5

ஆய்ந்த கொள்கைத் தீந்தமிழ்ப் பாட்டுள்
நெடிய வாகி அடிநிமிர்ந் தொழுகிய
இன்பப் பகுதி யின்பொருட் பாடல்
நானூ றெடுத்து நூல்நவில் புலவர்
களித்த மும்மதக் களிற்றியானை நிரை 10

மணியொடு மிடைந்த அணிகிளர் பவளம்
மேவிய நித்திலக் கோவை என்றாங்கு
அத்தகு பண்பின் முத்திற மாக
முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகைக்குக்
கருத்தெனப் பண்பினோர் உரைத்தவை நாடின் 15

அவ்வகைக்கு அவைதாஞ் செவ்விய அன்றி
அரியவை யாகிய பொருண்மை நோக்கிக்
கோட்ட மின்றிப் பாட்டொடு பொருந்தத்
தகவொடு சிறந்த அகவல் நடையால்
கருத்தினிது இயற்றி யோனே - பரித்தேர் 20

வளவர் காக்கும் வளநாட் டுள்ளும்
நாடெனச் சிறந்த பீடுகெழு சிறப்பிற்
கெடலருஞ் செல்வத்து இடையள நாட்டுத்
தீதில் கொள்கை மூதூ ருள்ளும்
ஊரெனச் சிறந்த சீர்கெழு மணக்குடிச் 25

செம்மை சான்ற தேவன்
தொன்மை சான்ற நன்மை யோனே!

*இத் தொகைக்குக் கருத்து அகவலாற் பாடினான் இடையள நாட்டு மணக்குடியான் பால்வண்ண தேவனான* **வில்லவ தரையன்.**

*இத் தொகைப்பாட்டிற்கு அடியளவு - சிறுமை பதின் மூன்று; பெருமை முப்பத்தொன்று. தொகுப்பித்தான் பாண்டியன்* **உக்கிரப் பெருவழுதி**; *தொகுத்தான் மதுரை* **உப்பூரிகுடிகிழான் மகனாவான் உருத்திர சன்மன்** *என்பான்.*

*"வண்டு படத் ததைந்த" என்பது முதலாக, "நெடுவேள் மார்பின்" என்பதீறாகக் கிடந்த நூற்றிருபது பாட்டும்* **"களிற்றியானை நிரை"**; *இப் பெயர் காரணப் பெயர்; செய்யுட்*

காரணமோ பொருட் காரணமோ எனிற் பொருட் காரணம் உணர்க.

"நாணகையுடைய நெஞ்சே" என்பது முதலாக, "நாள் வலை" என்பதீறாகக் கிடந்த நூற்றெண்பது பாட்டும் "**மணி மிடை பவளம்**"; இப்பெயர் உவமையாற் பெற்ற பெயர்; செய்யுளும் பொருளும் தம்முள் ஒவ்வாமையால்.

"வறனுறு" என்பது முதலாக "நகை நன்று" என்பதீறாகக் கிடந்த பாட்டு நூறும் "**நித்திலக் கோவை**"; இவை செய்யுளும் பொருளும் ஒக்குமாகலின்.

**வியமெல்லாம் வெண்டேர் இயக்கங் கயமலர்ந்த**
**தாமரை யாறாகத் தகைபெறீஇக் காமர்**
**நறுமுல்லை நான்காக நாட்டி வெறிமாண்ட**
**எட்டும் இரண்டுங் குறிஞ்சியாக் குட்டத்து**
**இவர்திரை பத்தா இயற்பட யாத்தான்**
**தொகையின் நெடியதனைத் தோலாச் செவியான்**
**வகையின் நெடியதனை வைப்பு.**



# அகநானூறு -

# களிற்றியானை நிரை

# மூலமும் உரையும்

## சிவபிரான் வாழ்த்து

*(யாவராலும் அறிதற்கு அரியவன் சிவபெருமான். அவன் உயிர்களின் மீது கருணை கொண்டவனாகத், தன் உருவத் திருமேனி காட்டியும் வந்து அருள்வான். இது பொருளாக, அவனுடைய உயர்வையும், ஆற்றலையும், அவன் உமாமகே சனாகக் காட்சி தருகின்ற சிறப்பினையும் கூறி, அவனைப் போற்றுவது இது.)*

**கார்விரி கொன்றைப்; பொன்னேர் புதுமலர்த்**
**தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்;**
**மார்பி னஃதே மைஇல் நுண்ஞாண்;**
**நுதலது இமையா நாட்டம்; இகல்அட்டுக்,**
**கையது கணிச்சியொடு மழுவே; மூவாய் 5**

**வேலும் உண்டுஅத் தோலா தோற்கே;**
**ஊர்ந்தது ஏறே; சேர்ந்தோள் உமையே -**
**செவ்வான் அன்ன மேனி, அவ்வான்**
**இலங்குபிறை அன்ன விலங்குவால் வைஎயிற்று,**
**எரியகைந் தன்ன அவிர்ந்து விளங்கு புரிசடை, 10**

**முதிராத் திங்களொடு சுடரும் சென்னி,**
**மூவா அமரரும் முனிவரும் பிறரும்**
**யாவரும் அறியாத் தொன்முறை மரபின்,**
**வரிகிளர் வயமான் உரிவை தைஇய,**
**யாழ்கெழு மணிமிடற்று, அந்தணன் 15**

**தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே.**

*கார்காலத்தில் கட்டவிழ்ந்து மலரும் கொன்றையின் பொன்னைப் போன்ற புதுமலர்களினால் சேர்த்த தாரினை உடையவன்; கட்டிய மாலையினை உடையவன்; தொடுத்த கண்ணியினையும் உடையவன் சிவபிரான். குற்றம் இல்லாத நுண்மையான பூணூல் அவன் மார்பினிடத்தே விளங்கும். அவன் நெற்றியிடத்தோ இமையாத கண்; அவன் கைகளில் விளங்குவனவோ குந்தாலியும் மழுவாயுதமும். அவை, பகைவரை*

வென்ற சிறப்பும் உடையன. தோல்வியே அறியாதவன் அவன். அத்தகைய அவனுக்கு, முத்தலை வேலும் உண்டு. அவன் ஏறி ஊர்ந்தது ஆன் ஏறு; அவனில் ஒரு பகுதியாகச் சேர்ந்திருப்பவள் உமையம்மை!

செவ்வானத்தைப் போன்று ஒளியுடைய செந்நிறம் வாய்ந்தது அவனுடைய திருமேனி. அவ் வானத்திலே விளங்கும் பிறைநிலவினைப் போன்ற வளைந்த வெண்மையான கூரிய பற்கள் அவனுடையவை. நெருப்பு கப்புவிட்டு எரிந்தாற் போன்று விரிந்து, இடையீடுபட்டு விளங்குவது அவனுடைய முறுக்குண்ட செஞ்சடை. வளர்ந்து முதிராத இளந்திங்களுடன் கூடியதாக அவன் சென்னி ஒளிவீசும். மூப்பே இல்லாதவரான அமரர்களும் முனிவர்களும், மற்றையோரும், பிறர் யாவரும் அறியமுடியாத, அத்துணைப் பழைமையான தன்மையினை உடையவனும் அவன்!

கோடுகளுடன் விளங்கும் வலிய புலியின் தோலினை உடுத்தவன்; யாழ் இசை முழங்குகின்ற நீலமணிக் கழுத்தினன்; உயிர்கள் பால் அளப்பருங் கருணையினை உடைய அந்தணன் அச் சிவபெருமான்! அவனுடைய, அழிதல் இல்லாத திருவடி நீழலையே உலகம் தனக்குக் காப்பாகக் கொண்டு என்றும் தங்கியிருக்கின்றது!

**சொற்பொருள்:** 2. தார் - சேர்ப்பது, விசேடமாக இடுவது. மாலை - கட்டுவது; அழகுக்கு இடுவது. கண்ணி - தொடுப்பது; போர்க்காலத்துச் சூடுவது. 5. கணிச்சி - குந்தாலி. மூவாய் வேல் - மூன்று முனைகளையுடைய முத்தலைச் சூல். 10. எரி அகைதல் - நெருப்பு கப்புவிட்டு எரிதல். அவிர்ந்து விளங்குதல் - விட்டுவிட்டு விளங்குதல். 13. மரபு - தன்மை. 15. யாழ்கெழு மணிமிடறு - யாழிசையினும் இனிக்கப் பேசும் அருங் குரல் எழும் அழகிய கழுத்து; சாமவேதம் பாடின மணிக் கழுத்து; மணிக் கழுத்தாவது, நஞ்சுண்டு நீலநிறம் பெற்றதனால். 16. தவிர்ந்தன்று - தங்கிற்று. அதனால், உலகு இடையூறற்று வாழ்கின்றது என்பது கருத்து. இஃது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது என்பர் பேராசிரியர்.

**விளக்கம்:** இதன்கண், ஊழிமுடிவிலே புவன போகங்களை மீளவும் படைக்கத் திருவுள்ளங்கொண்ட இறைவன், ஆதி சக்தியுடன் இயைந்து நிற்கின்ற பெருங்கருணை வடிவமும் பெறப்படும்.

# அகநானூறு - களிற்றியானை நிரை

## 1. பிரியலம் என்ற சொல்!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.*

*(காதலன் பிரிந்து சென்றதனால் ஆற்றாமை மிகுந்தவள் ஆயினாள் தலைவி. அவள் தன் தோழிக்குத், தன் ஆற்றாமை மிகுதி புலப்படக் கூறியது இது. 'யான் வாடக்' காடு கடந்து செல்வந் தேடச் சென்றவர், தாம் முன் சொன்ன 'பிரியலம்' என்ற தம் உறுதிச் சொல்லையும் பொய்த்தனரே' என அவள் வருந்துகின்றாள்.)*

வண்டுபடத் ததைந்த கண்ணி, ஒண்கழல்,
உருவக் குதிரை மழவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி,
அறுகோட்டு யானைப் பொதினி யாங்கண்,
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய 5

கல்போற் பிரியலம் என்ற சொல்தாம்
மறந்தனர் கொல்லோ - தோழி! - சிறந்த
வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் - நிலம்பக
அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின், 10

நிழல்தேய்ந்து உலறிய மரத்த; அறைகாய்பு,
அறுநீர்ப் பைஞ்சுனை ஆமறப் புலர்தலின்
உகுநெல் பொரியும் வெம்மைய; யாவரும்
வழங்குநர் இன்மையின், வௌவுநர் மடிய,
சுரம்புல் லென்ற ஆற்ற; அலங்குசினை 15

நாரில் முருங்கை நவிரல் வான்பூச்
சூரலம் கடுவளி எடுப்ப, ஆருற்று,
உடைதிரைப் பிதிர்வின் பொங்கி,முன்
கடல்போல் தோன்றல - காடு இறந்தோரே?

தோழி! சிறப்புடைய மூங்கிலைப் போன்ற பணைத்த எம் தோள்களும் நெகிழுமாறு, எமக்குத் தொலைவிலுள்ள நாட்டுப் பொன்னணிகள் ஆகிய செல்வங்களைக் கொணர்ந்து தருவதற்காக, அவர் எம்மைப் பிரிந்து போயினரே!

தரையெங்கும் வெடிப்புக்கள் ஏற்படுமாறு, வெம்மையான கதிரவன் நெருப்பினைப் போல எங்கும் பசுமையற்றுப் போகுமாறு எரித்தலினால், தம் நிழல் தேய்ந்து உலறிப் போன மரங்களை உடையது; பாறைகளும் கொதிக்கும்படியாக நீரற்றுப்போன பசுஞ்சுனைகள், நீர்ப்பசையே அற்றுக் காய்ந்து போனதனால், சொரிந்த நெல் பொரியாகப் போகும் அளவுக்குக் கொடிய வெம்மையினையும் உடையது; யாவரும் அவ்வழியாக வருபவர் இல்லாததனால், வழிப் பறித்து உண்டு வாழ்பவரும் தமக்கு ஏதும் கிடையாதாராகிப் பசியினால் மடிய, அச்சுரம் தன் அழகிழந்து போனதாகிக் கிடக்கின்றது. அசைகின்ற கிளைகளை யுடைய, நாரற்ற முருங்கையின் உச்சியிலே இருந்த வெண்மை யான பூக்கள், சூரைக் காற்றாகிய கடுங்காற்று எடுத்துச் சிதற எங்கும் உதிர்ந்து பரவிச் சிதறி, கரையிலே மோதி உடைந்து அலைகள் பொங்கிச் சிதறுவதைப் போலக் கிடக்கும் கடல் முகப்புப் போல, அக் காட்டின் முகப்பும் தோன்றும். அத்தகைய கொடிய காட்டையும் கடந்து அவர் சென்றனரே!

அப்படிச் சென்ற அவர், 'வண்டினம் மொய்த்துச் சிதறு மாறு, புதிய பூக்கள் தொடுத்த கண்ணியைச் சூடிக், கால்களிலே ஒள்ளிய வீரக் கழல்கள் ஒலிமுழங்க, அஞ்சத்தக்க குதிரைகளை உடைய மழவர்களை வெருட்டி ஓட்டிய, முருகப் பெருமானைப் போன்ற நல்ல பேராற்றலையுடைய நெடுவேள் ஆவியின், அறுத்துத் திருத்திய கொம்புகளையுடைய போர் யானைகள் மலிந்த பொதினி மலையினிடத்தே, 'சாணைக்கல் செய்யும் சிறுவன் அரக்கோடு சேர்த்து இயற்றிய கல்போல, யாமும் என்றும் நின்னைப் பிரியமாட்டோம்' என்று, தாம் முன்னர் எமக்குக் கூறிய அந்த உறுதிச் சொற்களையும் மறந்து விட்டனரோ, தோழி?

**சொற்பொருள்:** 1. ததைந்த - சிதறின; மலர்ந்த. 2. உருவக் குதிரை - உட்கத்தக்க குதிரை. 4. அறுகோடு - அறுத்துத் திருத்தின கோடு; சிங்கத்தை வென்ற கோடும் ஆம். பொதினி - ஆவியின் மலை. 5. காரோடன் - பணையான். பயின் - அரக்கு. 6. கல் - சாணை; அரக்குங் கல்லும் சேர்த்தியபின் பிரிக்க ஒண்ணாது; அதுபோலச் சேர்ந்த யாமும் பிரியோம் என்றனன். 9. வெறுக்கை - செல்வம். 11. உலறிய - பட்டுப்போன. 14. வெளவுநர் - ஆறலை கள்வர். 17. சூரல் - சுழித்து அடித்தல். 18,19 முன் கடல் - கடல் முன்.

## 2. கங்குல் வருதலும் உரியை!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *பகற்குறிக் கண் செறிப்பு அறிவுறீஇத் தோழி வரைவு கடாயது.* **சிறப்புற்றோன்:** *பொதினித் தலைவன் நெடுவேள் ஆவி.*

*(தன் தலைவியைச் சந்திக்கப் பகற்குறியிடத்தே வருகின்றான் ஒரு தலைவன். அவனுக்குத் தலைவி இற் செறிக்கப்பட்ட செய்தியைக் கூறி, விரைய அவளை மணம் வேட்டு வருமாறு தோழி அறிவுறுத்துகின்றாள்.)*

**கோழிலை வாழைக் கோள்முதிர் பெருங்குலை**
**ஊழுறு தீங்கனி, உண்ணுநர்த் தடுத்த**
**சாரற் பலவின் சுளையோடு, ஊழ்படு**
**பாறை நெடுஞ்சுனை, விளைந்த தேறல்**
**அறியாது உண்ட கடுவன் அயலது** 5

**கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது,**
**நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்**
**குறியா இன்பம், எளிதின், நின்மலைப்**
**பல்வேறு விலங்கும், எய்தும் நாட!**
**குறித்த இன்பம் நினக்கெவன் அரிய?** 10

**வெறுத்த ஏஎர், வேய்புரை பணைத்தோள்,**
**நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு**
**இவளும், இனையள் ஆயின், தந்தை**
**அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்**
**கங்குல் வருதலும் உரியை; பைம்புதல்** 15

**வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன;**
**நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே!**

வளமையான இலைகளையுடைய வாழையின் காய்கள் மிகுதியாக விளங்கும் பெருங்குலையில், தாமாகவே முதிர்ந்து பழுத்த இனிமையான வாழைக் கனிகள், உண்ணுபவர்களைத் தம் இனிமை மிகுதியினால் திகட்டச் செய்து அதிகமாக உண்ணாதபடி தடுக்கும் சாரற் பலாவின் இனிய சுளைகள், முறைமைப்பட்ட பாறைக்கண் அமைந்த நெடிய சுனையின் நீர், நன்கு விளைந்த நறுந்தேன் ஆகியவற்றை எல்லாம், தன் அறியாமையினால் அடுத்தடுத்து உண்ட ஓர் ஆண் குரங்கானது, அதன் பக்கத்தே மிளகுக் கொடிகள் படர்ந்து வளர்ந்திருக்கும் சந்தன மரத்திலே ஏறுவதற்கும் முடியாதாகி, நறுமணமிக்க பூக்களாகிய படுக்கையிலே களிப்புடன் கிடந்து உறங்கும். இவ்வாறு, தாம் எதிர்பாராத இன்பத்தை நின் மலையகத்துப் பல்வேறு விலங்கினங்களும் எளிதாகப் பெற்று மகிழும்.

அத்தகைய மலை நாடனே! எதிர்பார்த்து வருகின்ற இன்பம் நினக்கு எவ்வாறு அரியதாகுமோ?

மிக்க அழகினை உடைய, மூங்கிலை நிகர்த்த பணைத்த தோள்களையுடைய இவளும், நிறுத்தவும் நில்லாது நின்னையே தொடர்கின்ற நெஞ்சத்தை உடையவளாக, நின்னிடத்தே இத்தகைய காதல் உடையவள் என்றால், இவளுடைய தந்தையின் அரிய காத்தல் தொழிலையுடைய காவலாளர் சோர்ந்திருக்கும் செவ்வியை மறைவாக அறிந்து, இரவிலே இரவுக்குறி நாடி வருவதற்கும் நீ உரியவனாவாய்!

அல்லாமலும், பசுமையான புதர்கள் சூழ்ந்த வேங்கை மரங்களும், ஒள்ளிய பூங்கொத்துக்கள் விரியப் பெற்றுள்ளன; மிக்க தண்மையான திங்களும் நிரம்புதலையுற்று இருக்கின்றது; அதனையும் நீதான் அறிவாயாக!

**சொற்பொருள்:** 1. கோழிலை - கொழுவிய இலை; கோள் - காய். 3. ஊழ்படு - முறைமைப்பட்ட. 5. அறியாது உண்டல் - உண்பதனால் கிளிமயக்கம் ஏற்படும் என்பதறியாது உண்டல். 6. கறிவளர் சாந்தம் ஏறாதென்றது, அக்காட்டு வளமும் கூறியதாகும். 7. வீ அடுக்கம் - பூப்படுக்கை. 8. குறியா இன்பம் - முயற்சியும் உளப்பாடும் இன்றி வந்த இன்பம். 11. வெறுத்த - மிக்க. 14. சோர்பதன் - இகழ் பதம். 16. வேங்கை மலர்ந்தன என்றலால், தினை முற்றிய தனால் தலைவி இற்செறிப்புண்டாள் எனப் பகற்குறி மறுத்ததாம். 14. காவலர் சோர்பதன் ஒற்றி என்றலால், அது அருமையாதலை உணர்த்தி இரவுக் குறியாகிய அதுவும் மறுத்து வரைவு கடாயதாயிற்று. 17. திங்கள் நிரம்பிற்று என்றது, வளர்பிறை அன்றிக் கல்யாண நாட்கொள்ளாராகலின், அதுவும் ஆயிற்று என உணர்த்தி, வரைவு வேட்டதாகும்.

**விளக்கம்:** 'கடுவனின் அறியாமை போன்றே, நீயும் களவிலே கூடி, நின் அறநெறியையும் தப்பி, இக்களவினை நீங்கி வரையவுமாட்டாது, இதன்பாலே மயங்கா நின்றனை' என்று, குறிப்பால் தலைவனின் செயலைச் சுட்டிக் கூறியது எனவும் கருதலாம். 'குறித்த இன்பம் நீ வரைந்துவரின் நினக்கு எங்ஙனம் அரியதாகும்?' என்று, தோழி, தலைவனுக்கு உறுதி கூறி வரைந்து வரத் தூண்டுகின்றாள்.

## 3. பின்நின்று துரக்கும் நெஞ்சம்!

**பாடியவர்:** எயினந்தை மகனார் இளங்கீரனார். **திணை:** பாலை. **துறை:** முன் ஒரு காலத்து, நெஞ்சினால் பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்தான் தலைமகன். பிரிந்து சென்றவன், இடைச் சுரத்தினின்று அவள் நலம் நயந்து மீளலுற்ற

நெஞ்சினைக் கழறிப்போய், பொருள் முடித்து வந்தான். அவன், பின்னும் பொருள் வலிக்கப்பட்ட தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவு அழுங்கியது இது.

(முன் ஒரு காலத்து நெஞ்சிலே பொருளார்வம் எழத் தலைவியைப் பிரிந்து போயினான் ஒரு தலைவன். இடை வழியிலே, அவன் மனம் அவளுடைய எண்ணத்தைத் தூண்டி அவனை மீளுமாறு வற்புறுத்தியது; அதனை மீறிப்போய்ப் பொருள் தேடி வந்தான். இப்போது, மீண்டும் அவன் நெஞ்சு பொருளாசை கொள்ளத் தொடங்கியது. அதன் பழைய நிலையைக் கருதி அவன் போகாதிருந்தான். அவனுடைய காதல் மிகுதியும், அவளைப் பிரிய அவன் உள்ளம் ஒருப்படாத இணைந்த பாசமும் இதன்கண் புலப்படும்.)

**இருங்கழி முதலை மேஎந்தோல் அன்ன**
**கருங்கால் ஓமைக் காண்பின் பெருஞ்சினைக்**
**கடியுடை நனந்தலை, ஈன்று இளைப்பட்ட,**
**கொடுவாய்ப் பேடைக்கு அல்கிரை தரீஇய**
**மான்றுவேட்டு எழுந்த செஞ்செவி எருவை- 5**

**வான்தோய் சிமைய விறல்வரைக் கவாஅன்,**
**துளங்குநடை மரையா வலம்படத் தொலைச்சி,**
**ஒண்செங் குருதி உவற்றியுண்டு அருந்துபு;**
**புலவுப்புலி துறந்த கவவுக்கழிக் கடுமுடை**
**கொள்ளை மாந்தரின் - ஆனாது கவரும் 10**

**புல்லிலை மராஅத்த அகன்சேண் அத்தம்,**
**கலந்தரல் உள்ளமொடு கழியக் காட்டிப்**
**பின்நின்று துரக்கும் நெஞ்சம் நின்வாய்**
**வாய்போற் பொய்ம்மொழி எவ்வமென் களைமா -**
**கவிரிதழ் அன்ன காண்பின் செவ்வாய், 15**

**அந்தீங் கிளவி, ஆயிழை மடந்தை**
**கொடுங் குழைக்கு அமர்த்த நோக்கம்**
**நெடுஞ்சேண் ஆரிடை விலங்கும் ஞான்றே?**

பெரிய உப்பங் கழிகளிலேயுள்ள முதலைகளின் மேல் தோலைப் போன்று விளங்கும், கருத்த அடிமரத்தையுடைய ஓமை மரத்தின் காட்சிக்கு இனிய பெரிய கிளையில், பாது காவலையுடைய பரந்த ஓர் இடத்திலே, குஞ்சு பொறித்துக் காவல் இருந்த வளைந்த வாயினையுடைய தன் பேடைக்கு மிகுதியான இரையினைக் கொணர்ந்து தருவதற்காக மயங்கி, இரையை விரும்பி எழுந்தது, சிவந்த காதுகளை யுடைய ஓர் எருவைச் சேவல்.

வானைத் தழுவும் முடிகளையுடைய சிறந்த அம்மலையின் சாரலில் ஒருபுறத்தே, அசைந்த நடையினையுடைய மரையாவை வலப்பக்கத்திலே வீழுமாறு அடித்து வீழ்த்தி, அதன் ஒள்ளிய செங்குருதியை உறிஞ்சிக் குடித்து அருந்திவிட்டுப், புலால் நாற்றமுடைய ஒரு புலியானது, அதனைக் கைவிட்டுச் சென்றது. மூட்டுவாய் கிழிந்து, மிகுந்த முடைநாற்றம் வீசிக்கொண்டிருந்த அந்த மரையாவின் தசையைக் கொள்ளைக் கூட்டத்தினரைப் போலக் கவர்ந்து சென்று கொண்டிருந்தது அந்தப் பருந்துச் சேவல். அத்தகைய காடு, இலைகளற்ற மரங்களையுடையதாக அகன்று, நெடுந்தொலைவு பரந்தும் கிடக்கும்.

'என் தலைவிக்கு நல்ல கலன்களை ஈட்டிக் கொணர்ந்து தரல் வேண்டும்' என்ற உள்ளத்துடன், அதனைக் கடந்து செல்லவும், என்னைப் பின்நின்று தூண்டிவிடுகின்ற என்னுடைய நெஞ்சமே!

முருக்கம்பூவின் இதழ்கள்போலக் காண்பதற்கு இனிய சிவந்த வாயிதழ்களையும், அழகிய இனிக்கின்ற பேச்சினையும், தெரிந்தெடுத்த ஆபரணங்கள் அணிந்த சிறப்பினையும் உடைய, என் மடந்தையின் வளைந்த காதணிகளுடன் பொருந்துகின்ற அமர்த்த கண்களின் பார்வையானது, நெடுந் தொலைவிலே யுள்ள பாலைவழி இடத்தும், என் உள்ளத்தே என்பால் தோன்றி, என்னை மேற்செல்லவிடாது தடுக்கும் அல்லவோ?

வாய்மைபோல நீ உணர்த்தும் பொய்ம்மொழிகள் அத்தகைய என் துன்பத்தினை எங்ஙனம் போக்குமோ? அதனைச் சொல்வாயாக!

**சொற்பொருள்:** 1. மேஎந்தோல் - மேவின தோல். 3. கடி - காவல். இளைப்பட்ட - காவற்பட்ட; வலைப்பட்ட 4. அல்கு இரை - மிக்க இரை. 5. மான்று - மயங்கி. விறல் - பெருமையால் பிற மலைகளை வென்ற சிறப்பு. 7. வலம்பட - வலத்தே வீழ; வெற்றி பட. உவறி உண்டு - உறிஞ்சிக் குடித்து; ஊற்றி உண்டு. 9. கவவு - மூட்டுவாய். 13. துரக்கும் - முடுக்கும்.

## 4. கவின் பெறு கானம்!

**பாடியவர்:** குறுங்குடி மருதனார். **திணை:** முல்லை. **துறை:** தோழி தலைமகளைப் பருவங்காட்டி வற்புறுத்தியது.

(தன்னைப் பிரிந்து தொழில்மேற் சென்ற தலைவனை நினைந்து நினைந்து உருகிக் கொண்டிருக்கிறாள் ஒரு தலைவி. 'அவன் குறித்துச் சென்ற கார்காலம் இதோ தொடங்கிவிட்டது; அவனும் விரைய வந்துவிடுவான்' என்று, பருவ காலத்தைக்

*காட்டி, அவள் ஆற்றாமையைப் போக்க முயல்கிறாள் அவளுடைய தோழி.)*

**முல்லை வைந்நுனை தோன்ற, இல்லமொடு**
**பைங்காற் கொன்றை மென்பிணி அவிழ,**
**இரும்பு திரித்தன்ன மாஇரு மருப்பின்,**
**பரலவல் அடைய, இரலை தெறிப்ப**
**மலர்ந்த ஞாலம் புலம்புபுறக் கொடுப்ப, 5**

**கருவி வானம் கதழுறை சிதறிக்**
**கார்செய் தன்றே, கவின்பெறு கானம்;**
**குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி,**
**நரம்பு ஆர்த்தன்ன, வாங்குவள்பு அரிய,**
**பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த 10**

**தாதுண் பறவை பேதுறல் அஞ்சி,**
**மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்,**
**உவக்காண் தோன்றும் குறும்பொறை நாடன்,**
**கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது,**
**நெடும்பெருங் குன்றத்து அமன்ற காந்தட் 15**

**போதவிழ் அலரின் நாறும் -**
**ஆய்தொடி அரிவை!-நின் மாணலம் படர்ந்தே.**

*தெரிந்தெடுத்த அழகிய தொடிகளை அணிந்த அரிவையே!*

*முல்லையிலே கூர்மையான நுனியை உடைய அரும்புகள் தோன்றின. தேற்றாமரத்தின் முகைகளும், பசிய அடி மரத்தினை உடைய கொன்றை மரத்தின் மொட்டுக்களும், மெல்லிய தம் பிணிப்பு அவிழ்ந்து மலர்ந்தன. இரும்பினை முறுக்கினாற் போலப் பெரிய கருமையான கொம்புகளையுடைய ஆண்மான்கள், பரற் கற்களையுடைய பள்ளங்களில் எல்லாம் துள்ளிக் குதிக்கின்றன. மலர்ச்சி பெற்ற நிலமெல்லாம், மழையற்ற தம் வறட்சியை விட்டொழித்துவிட்டன. வானம் இடி முழங்கி, மழைத் துளிகளை விரைந்து சிதறிக் கார்ப்பருவத்தையும் தோற்றுவிக்கின்றது. அதனால், கானமும் புதியதோர் அழகினைப் பெறுகின்றது.*

*குறுமலை நாட்டினனான நின் தலைவன், ஆரவாரிக்கும் ஒலி மிகுந்த விழவினையுடைய உறந்தை மாநகருக்குக் கீழ்ப் பாலுள்ளதாகிய நீண்ட பெரிய மலையினிடத்தே, நெருங்கிய காந்தளின் இதழ்கள் கட்டவிழ்ந்து மலர்ந்தால், நின்னுடைய மாட்சிமையுடைய அழகினை அவ்விடத்தே நினைந்து விடுபவன்!*

*வளைந்த தலையாட்டத்தினால் அழகுபெற்ற, கொய்த பிடரி மயிரினையுடைய குதிரைகளை இழுத்துச் செலுத்தும் கடிவாளம் நெகிழப், பூத்த சோலையிலே தம் துணையோடு வாழ்ந்த, யாழ் நரம்பு ஒலித்தாற்போல முரலுகின்ற, தேனையுண்ணும் வண்டினங்கள் பேதுற்று மயங்குமோ வென அஞ்சித் தன் தேர்மணிகளின் நாவை ஒலியாமற் கட்டுபவன் நின் தலைவன். தேரைச் செலுத்துவதிலே மாட்சிமைப்பட்டவனான அவன், விரைந்து தேரைச் செலுத்தி வந்து உவ்விடத்தே தோன்றுவான். அதனால், நின் வருத்தத்தைக் கைவிடுவாயாக!*

**சொற்பொருள்:** *1.இல்லம் - தேற்றாமரத்தின் பூ. 2. பிணி - மொட்டு. அவல் அடைய - பள்ளங்கள் எல்லாம். தெறித்தல் - துள்ளுதல். 6 புலம்பு - நீர்பெறாத வருத்தம். புறக்கொடுத்தல் - புறத்தே போதல். 8. குரங்குளை - வளைந்த தலையாட்டம். 11. தாதுண்பறவை - வண்டினம். பேதுறல் - மய்க்கமுறுதல். 14. உறந்தைக் குணாது குன்றம் - உறையூர்க்குக் கீழ்ப்பாலதாகிய சிராப்பள்ளி மலை.*

*'துணை வண்டுகளின் பிரிவுக்கு அஞ்சுமவன் நின்னைப் பிரிய ஒவ்வான்; விரைய வருவான் என்பது கருத்து. கடிவாளம் நெகிழ என்றது குதிரைகளை வேகமாகச் செலுத்தி என்றபடி.*

## 5. பிழையலள் மாதோ?

**பாடியவர்:** *பாலை பாடிய பெருங்கடுங்கோ.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது.*

*(பொருள் வேட்கையானது உள்ளத்திலே மிக்கு எழத் தன் தலைவியைப் பிரிந்து செல்ல நினைத்தான் ஒரு தலைவன். அவன் பிரிவை அறிந்த அவளுடைய நிலைமையைக் கண்டான். அதனைத் தன் நெஞ்சிற்குச் சொல்லித் தான் போவதையும் நிறுத்திக் கொண்டான்.)*

**அளிநிலை பொறாஅது அமரிய முகத்தள்,**
**விளிநிலை கொள்ளாள், தமியள், மென்மெல,**
**நலமிகு சேவடி நிலம்வடுக் கொளாஅக்,**
**குறுக வந்துதன் கூர்எயிறு தோன்ற**
**வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள் 5**

**கண்ணிய துணரா அளவை, ஒண்ணுதல்,**
**வினைதலைப் படுதல் செல்லா நினைவுடன் -**
**முளிந்த ஓமை முதையலம் காட்டுப்,**
**பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி,**
**மோட்டிரும் பாறை ஈட்டுவட்டு ஏய்ப்ப, 10**

**உதிர்வன படூஉம் கதிர்தெறு கவாஅன்,**
**மாய்த்த போல மழுகுநுனை தோற்றி,**
**பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல்,**
**விரல்நுதி சிதைக்கும் நிரைநிலை அதர,**
**பரல்முரம்பு ஆகிய பயம்இல் கானம் 15**

**இறப்ப எண்ணுதிர் ஆயின் - 'அறத்தாறு**
**அன்று'என மொழிந்த தொன்றுபடு கிளவி**
**அன்ன ஆக என்னுநள் போல,**
**முன்னம் காட்டி, முகத்தின் உரையா**
**ஓவச் செய்தியின் ஒன்று நினைந்து ஒற்றி 20**

**பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு,**
**ஆகத்து ஒடுக்கிய புதல்வன் புன்தலைத்**
**தூநீர் பயந்த துணையமை பிணையல்**
**மோயினள் உயிர்த்த காலை, மாமலர்**
**மணிஉரு இழந்த அணியழி தோற்றம் 25**

**கண்டே கடிந்தனம், செலவே - ஒண்டொடி**
**உழையம் ஆகவும் இனைவோள்**
**பிழையலள் மாதோ, பிரிதும்நாம் எனினே!**

*கொஞ்சமே! நாம் அளிசெய்யும் நிலைமையையும் பொறாதவளாக, அதற்கு மாறுபட்ட முகத் தோற்றத்தினை உடையவளா யிருந்தனள். நாம் அழைத்த காலத்தும் அதனைக் கேளாதவள் போலிருந்தனள். அருகிலேயே நாமிருந்து தான் ஒரு தமியள்போலவே எண்ணினள். அழகு மிகுந்த அவளுடைய சிவந்த பாதங்கள் நிலத்தினை வடுப்படுத்துமாறு மெல்ல மெல்ல நடந்து, என் அருகேயும் வந்தனள். தன் கூர்மையான பற்கள் தோன்ற, வாடிய உள்ளத்திலே இருந்து எழுந்த வாய்மையற்ற போலிப் புன்முறுவலையும் செய்தனள். யாம் பிரிந்து செல்ல எண்ணியதைப் பற்றிய ஒரு முடிவினை, நாமே உணர்வதற்கு முன்னரே, ஒள்ளிய நுதலினையுடைய அவள், நாம் வினையின்கண் ஈடுபடுதல் கூடாது என்ற எண்ணத்துடனேயே, அவ்வாறு எல்லாம் ஆயினள்.*

*பட்டுப்போன ஓமை மரங்களையுடைய பழைமையான அழகிய காட்டிலே, பளிங்குகளைப் போன்று விளங்கும் நெல்லி மரத்தின் பல காய்கள், உயர்ந்த பெரிய பாறைகளின் மேலாகச் சிறுவர்கள் வட்டாடச் சேர்த்துவைத்த கழங்குகளைப் போல உதிர்ந்து கிடக்கும், கதிரவன் எரிபரப்பும் அத்தகைய மலைச்சாரல் அது. தீட்டி வைத்தவை போலத் தேய்ந்த தம் முனைகளுடன் விளங்கும், பகுத்து வைத்த குடுமிகளைப் போன்ற கூர்மையான கற்கள், அவ்வழி நடப்பவரின் விரல் முனைகளைச்*

சிதைக்கும் வண்ணம் நிரைநிரையாகக் கிடக்கும் பாதை அது. பரல்கள் நிரம்பிய வன்னிலமாகிய, எவ்வகைத் தாவரங்களும் தோன்றுதல் இல்லாத அத்தகைய கானத்தையும் கடந்து செல்ல எண்ணுவீர். ஆனால், "காதலித்தாரைப் பிரிதல் அறநெறிப் பட்டதன்று என்று சொல்லப்படுகின்ற பழைமையான முதுமொழியானது வெறும் பேச்சாகவே சொல்லப்பட்டுக் கழிக" என்று சொல்பவளே போலக் குறிப்புக்களால் முற்படக் காட்டினள். முகத்தோற்றத்தாலும் உரைத்தனள். அந்த ஒரு நினைவையே தன் உள்ளத்தில் மேற்கொண்டு, ஓவியப்பாவை போல நின்றனள். கண்ணின் பாவையையும் மறைத்த கண்ணீர் நிரம்பிய பார்வையுடன், தன் மார்பகத்தே அணைத்திருந்த எம் புதல்வனது சிறு குடுமியிலே சூட்டியிருந்த, தூயநீர் சொட்டிக் கொண்டிருந்த, இளைப்பூக்களால் தொடுக்கப் பெற்ற செங்கழுநீர் மாலையை மோந்தனள். மோந்து அவள் பெருமூச்சு விட்டபோது, அந்தப் பெரிய மலர்கள் பவளம்போன்ற தம் அழகிய உருவினை அந்நிலையே இழந்து போயின. பொலிவு அழிந்து வாடிய அவற்றின் தோற்றத்தையும் கண்டேன். அதன்மேல் போவதையும் விலக்கினேன். ஒள்ளிய தொடியணிந்த அவள், யாம் அருகிலே உள்ளபோதும் அங்ஙனமெல்லாம் வாடினாள். நாம் பிரிந்தோம் என்றால், பிழைத்திருக்கவே மாட்டாளே!

**சொற்பொருள்:** 1. பொறாது அமரிய - பொறாமை யாலே மேவின. தமியள் - நாண் முதலாகிய குணங்கள் ஒழியத் தானே யாதலும் ஆம். 5. வறிது - சிறிது. 13. பாத்தி அன்ன - பகுத்து வைத்தால் ஒத்த. 14. நிரைநிலை அதர - கல்லொழுங்குபட்ட நிலைமையையுடைய வழிகள். 19. முன்னம் - குறிப்பு. 21. பாவை - கண்ணிற் பாவை. 23. பிணையல் - செங்கழுநீர் மாலை.

## 6. கற்பின் புதல்வன் தாய்!

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம். **துறை:** பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனுக்குக் கிழத்தி கூறியது. சிறப்புற்றோர்: ஐயை என்பாளின் தந்தையான உறையூர்த் தித்தனும், கழாஅர்த் தலைவனான மத்தியும்.

(ஒரு தலைவன், பரத்தை ஒருத்தியுடன் தொடர்பு கொண்டு கூடி இருந்துவிட்டு, மீண்டும் தன் வீடு திரும்புகின்றான். அவன் இல்லக் கிழத்தி, அவனது செயலை வெறுத்தவளாக அவனுடன் ஊடிக் கூறுவதாக அமைந்தது இது.)

**அரிபெய் சிலம்பின் ஆம்பலந் தொடலை,**
**அரம்போழ் அவ்வளைப் பொலிந்த முன்கை,**
**இழையணி பணைத்தோள், ஐயை தந்தை,**

**மழைவளம் தரூஉம் மாவண் தித்தன்**
**பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண் - 5**

**கழைநிலை பெறாஅக் காவிரி நீத்தம்,**
**குழைமாண் ஒள்ளிழை நீவெய் யோளொடு,**
**வேழ வெண்புணை தழீஇப், பூழியர்**
**கயம்நாடு யானையின் முகனமர்ந் தாங்கு,**
**ஏந்தெழில் ஆகத்துப் பூந்தார் குழைய, 10**

**நெருநல் ஆடினை, புனலே; இன்றுவந்து**
**'ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்,**
**மாசில் கற்பின், புதல்வன் தாய்'என,**
**மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி,எம்**
**முதுமை எள்ளல்; அஃது அமைகும் தில்ல! 15**

**சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து**
**அம்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி,**
**வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்,**
**முள்ளரைப் பிரம்பின் மூதரில் செறியும்,**
**பல்வேல் மத்தி, கழாஅர் அன்னஎம் 20**

**இளமை சென்று தவத்தொல் லஃதே;**
**இனிமைஎவன் செய்வது, பொய்ம்மொழி, எமக்கே?**

*உள்ளிடு பரல்கள் பெய்த சிலம்பினையுடையவள்; நீராம்பலால் தொடுக்கப்பெற்ற மாலையினை அணிபவள்; அரத்தால் போழ்ந்து அழகியதாகச் செய்த வளைகளால் அழகு பெற்று விளங்கும் முன்கையினை உடையவள்; ஆபரணங்கள் அணிந்திருக்கும் பணைத்த தோள்களையும் உடையவள்; ஐயை என்பவள். அவளின் தந்தை, மழை வளத்தினைப்போல வரையாது வழங்குகின்ற, பெரு வண்மையினையுடைய சித்தன் என்னும் சோழ மன்னன். நெற்குவியல்கள் நிறைந்திருக்கின்ற, அவனுடைய கோநகராகிய உறையூரினிடத்தே:-*

*ஓடக்கோலும் நிலைபெறாத அளவுக்குப் பெருகியோடும் காவிரியின் புதுநீர்ப் பெருக்கிலே மாட்சிமையுடைய குழையுடன் பிற ஒளிரும் ஆபரணங்களையும் அணிந்த வெய்ய தன்மையினளான பரத்தை ஒருத்தியுடன், வேழக் கரும்பாலாகிய வெண்மையான தெப்பத்திலே, பூழியர்களின் குளத்தினை விரும்பிச் செல்லுகின்ற யானையின் முகமலர்ச்சிபோல முகத்திலே களிப்புடையவனாக, அழகுமிகுந்த நின் மார்பகத்துக் கிடந்த பூந்தாரும் குழையுமாறு, அவளைத் தழுவியவனாக, நேற்று நீ புனலாடினை!*

இன்றோ, இவ்விடத்தே வந்தனை; "மதர்த்த கொங்கை களையும், மார்பகத்துப் படர்ந்த தேமலினையும், குற்றமற்ற கற்பினையும் உடையவளே! எம் புதல்வனை ஈன்ற தாயே" என்றெல்லாம், மாயமான பல பொய்ம்மொழிகளை, மிகப் பணிவோடும் எம்பாற் சொல்லினை. எமது முதுமையினைச் சுட்டிப் பேசி ஏதும் நீ இகழ்தல் வேண்டாம். அஃது எமக்கு மிகவும் பொருந்துவதே யாகும்.

தீச்சுடர்போல விளங்கும் அழகிய தாமரை மலர்களை யுடைய, நீர்வளம் மிகுந்த வயல்களிலே, அழகிய உள்துளை யினையுடைய வள்ளைக் கொடிகளை உழக்கிக் கொண்டு, வாளை மீனைத் தின்னும் கூர்மையான பற்களையுடைய நீர்நாய். பின்னர், முட்கள் பொருந்திய தண்டினையுடைய பிரப்பஞ் செடியின் பழைய புதரிலே சென்று தங்கும். அத்துனை நீர்வளம் மிகுதியுடையது, மத்தி என்பானது வேல் வீரர் பெருக்கத்தினை உடைய 'கழார்' என்னும் ஊர். அந்த ஊரினைப் போன்று, எம்முடைய இளமையும் எம்மை விட்டுச் சென்று நாட்கள் பலவாயின. நின்னுடைய, இப்போதைய பொய்ம்மொழிகள் தாம், எமக்கு, இனி எங்ஙனம் இனிமை செய்யப்போகின்றன? எனவே, இங்கிருந்து அகன்று, அவளிடத்தேயே நீயும் போய்விடுக!

**சொற்பொருள்:** 2. வளைப் பொலிந்த - வளையலால் அழகுற்ற. 6. கழை - ஓடக்கோல். வேழம் - வேழக் கரும்பு. 9. யானை எனவே, பிடியும் அடங்கும். அதுபோல, அவனை யொத்தே அப்பரத்தையும் மகிழ்வுடன் புனலாடினாள் என்க. 14. மாயம் - வஞ்சனை. பயிற்றி - பலகாற் சொல்லி. 15. 'புதல்வன் தாய்' என்றதனைத் தன் முதுமையைக் காட்டி இகழ்வதாகக் கொண்டனள். 19. அரில் - பிணக்கம்.

**விளக்கம்:** பெண்மையின் சிறப்பைக் கூறுபவள், ஐயையால் சிறப்புற்ற தித்தன் என்றாள். நீர்நாயின் உவமை, தாமரை மலர் போன்ற இனிதானதை விட்டு வாளைமீனை நச்சித் திரியும் அதன் இயல்புபோல, நீயும் நின் காதன் மனைவியான எம்மை விட்டுப் பரத்தையை நாடிச் சென்று இன்புற்று வருகின்றனை என்பதாம். வள்ளைக் கொடிகளை உழக்கியது போலப் பரத்தையின் தாய் முதலியோரை அவரறியாதே பரத்தையைக் கொள்வது மூலம் கலங்கச் செய்தனை என்பதாம். பிரப்பந் தூரிலே நீர்நாய் சென்று தங்குவதுபோல, நீயும் தங்குவதற்கு மாத்திரந்தானே இவண் வந்தனைபோலும் என்பது, குறிப்பு.

## 7. வலை காண் பிணை!

**பாடியவர்:** *கயமனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *மகட் போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப் பின்சென்று, நவ்விப் பிணாக் கண்டு சொல்லியது.*

*(தலைவி ஒருத்தி, தன் தலைவனுடன் கூடியவளாக, உடன் போக்கிலே அவனுடன் சென்றுவிட்டனள். அவளைத் தேடிச் சுரத்தினிடையே பின்தொடர்ந்து சென்றனள் அவளுடைய செவிலித்தாய். இடைவழியிலே, பெண்மான் ஒன்றைக் கண்டதும், தன் ஆற்றாமையை அதனிடமுங்கூறி அவள் புலம்புகிறாள்.)*

**முலைமுகம் செய்தன; முள்ளெயிறு இலங்கின;**
**தலைமுடி சான்ற; தண்தழை உடையை;**
**அலமரல் ஆயமொடு யாங்கணும் படாஅல்;**
**மூப்புடை முதுபதி தாக்குஅணங்கு உடைய;**
**காப்பும் பூண்டிசின்; கடையும் போகலை;** 5

**பேதை அல்லை - மேதையம் குறுமகள்!**
**பெதும்பைப் பருவத்து ஒதுங்கினை, புறத்து' என,**
**ஒண்சுடர் நல்லில் அருங்கடி நீவி,**
**தன்சிதைவு அறிதல் அஞ்சி - இன்சிலை**
**ஏறுடை இனத்த, நாறுஉயிர் நவ்வி! -** 10

**வலைகாண் பிணையின் போகி, ஈங்குஓர்**
**தொலைவில் வெள்வேல் விடலையோடு, என்மகள்**
**இச்சுரம் படர்தந் தோளே; ஆயிடை**
**அத்தக் கள்வர் ஆதொழு அறுத்தென,**
**பிற்படு பூசலின் வழிவழி ஓடி,** 15

**மெய்த்தலைப் படுதல் செல்லேன், இத்தலை,**
**நின்னொடு வினவல் கேளாய்; - பொன்னொடு**
**புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி,**
**ஒலிக்குழைச் செயலை உடைமாண் அல்குல்,**
**ஆய்சுளைப் பலவின் மேய்கலை உதிர்த்த** 20

**துயத்தலை வெண்காழ் பெறூஉம்**
**கல்கெழு சிறுகுடிக் கானவன் மகளே.**

*'நின் முலைகளும் முகம்கூட்டி நிரம்பியுள்ளன. கூர்மையான நின் பற்களும் ஒளிபெற்றன. நின் கூந்தலும், முடித்தலுக்கு ஏதுவாக நன்கு வளர்ந்துள்ளன. தண்மையான தழையாடையினையும் நீ உடுத்திருக்கின்றாய். நாற்புறமும் சுற்றிச் சுழன்று திரிகின்ற நின்னுடைய ஆயத்தாருடன் கூடி, இனிமேலும் எவ்விடத்தும் நீ செல்லாதிருப்பாயாக. பழைமை*

வாய்ந்த தொல்பதியான இவ்வூர்ப் புறங்கள், தாமே தாக்கி வருத்தும் பல அணங்குகளை உடையன. அதனால், நீ, இனிக் காவல் எய்தியவளாயினாய். வீட்டின் கடைவாயிலுக்கும் நீ போகாதிருப்பாயாக. அறிவுள்ளவளான எம் இளைய மகளே! நீ பேதைப் பருவத்தினளும் அல்லள். அதனைக் கடந்து, பெதும்பைப் பருவத்தின் மலர்ச்சியிலே ஒதுங்கியவளா யுள்ளனை என்பதை அறிவாயாக' என்றேன்.

அதனைக் கேட்ட அவள், என் செய்தனள் தெரியுமோ?

நல்லொளி பரப்பும் சிறந்த எம் வீட்டின், அருமையுடைய காவலையும் எப்படியோ கடந்துவிட்டனள். தான் களவிலே ஒழுகிவரும் ஒழுக்கமான தன் சிதைவினை யாம் அறிந்து விட்டோமோ எனப் பயந்தனள் போலும்! இனிதாக முழங்கும் ஆண்மானையுடைய மான் இனத்தினைச் சார்ந்த, நல்ல உயிர்ப்புடன் விளங்கும் இளம் பெண்மானே! கேளாய்; வலை கண்ட பெண்மான் வெருவி அயலே விரைந்து ஓடுவதுபோல இல்லினின்றும் வெளியேறிச் சென்றனள். இவ்விடத்து, ஒரு தோற்றமுமில்லாத வெள்ளிய வேலினை ஏந்திய இளைஞன் ஒருவனுடன், அவள், இந்தச் சுரத்தின் வழியாகவே வந்தனள்.

அந்த அளவே, அருஞ்சுரத்துக் கள்வர்கள் தொழுவங் களினின்றும் பசுக்களைக் கவர்ந்து செல்ல, அவரைப் பின் தொடர்ந்து வெருட்டிச் சென்று போரிட்டு, அவற்றை மீட்க விரையும் அப்பசுக்களுக்கு உரிமையுடையவர் போல, அவளைப் பின் தொடர்ந்து, அவளை மீட்டுக் கொண்டு போகக் கருதியவளாக யானும் வந்தேன். ஆயின், இதுவரை அவளை யான் அணுகவும் பெற்றிலேன்.

பொன்னோடு புலிப்பல்லும் கோத்த, ஒலிக்கும் மணி களுடன் கூடிய தாலியினை அணிந்தவள்; தழைத்த அசோகின் தளிரினால் அமைந்த தழையாடையினை அணிந்தவள்; அதனால் மாட்சிபெற்று விளங்குகின்ற அல்குல் தேரினை உடையவள்; பலாப் பழத்தினது கொட்டைகளை விட்டுவிட்டு, அதன் சிறந்த சுளைகளை மட்டுமே உண்கின்ற குரங்கினங்கள் உதிர்த்த, தலையிலே ஆர்க்கினையுடைய, வெண்மையான பலாக் கொட்டைகள் எம்மருங்கும் சிதறிக் கிடக்கும் இம்மலை நாட்டிலே, விளங்கும் சிறு குடியிருப்பினரான எம் கானவரின் மகள் அவள்!

இவ்விடத்து, நின்னிடம் யான் வினவுவதனைக் கேளாய்; அவள் இவ்வழியாகப் போயினதை நீதான் கண்டனையோ?

**சொற்பொருள்:** 1. முகஞ்செய்தல் - நிரம்புதல்; இலங்குதல் - விழுந்து எழுந்து ஒளிவிடுதல். 2. சான்ற - அமைந்தன. முடித்தலின்

பன்மைநோக்கிப் பன்மை கூறப்பெற்றது. 3. படால் - படாதே கொள். 4. முதுபதி - பழம்பதி; பெயரும் ஆம். 5. பூண்டி - பூண்டாய்; 'சின்' அசை. 8. சுடர் - விளக்கு. 9. தன் சிதைவு - தன் குற்றம்; இன்சிலை - இனிய சிலைப்பு. 10 நாறு உயிர் - தோன்றும் உயிர்ப்பு. 12. தொலைவு - தோல்வி. 15. வழிவழி ஓடி - அவர் சென்ற வழியெல்லாம் தொடர்ந்து ஓடி. 19. ஒலித்தல் - தழைத்தல். செயலை - அசோகு. 20. கலை - முசு; குரங்கு. 21. துய் - ஆர்க்கு.

**விளக்கம்:** 'செவிலித் தாயார் கானவர் மகளைக் கண்டு அவளிடம் வினவியது இது' என, இதனை நச்சினார்க்கினியர் குறித்துள்ளனர். வலை கண்ட மான், அதனுட்பட விரும்பாது விரையக் கடந்து போவதுபோல, இற்செறிப்பிற்கு உட்பட்டு நலிய விரும்பாத கானவர் மகளும், உடன்போக்கிலே ஈடுபட்டனள். 'கானவர் மகள்' என்றது, மானோடு அடைவுபடுத்திக் கூறியது.

## 8. கங்குலும் அரிய அல்ல!

**பாடியவர்:** பெருங்குன்றூர் கிழார். **திணை:** குறிஞ்சி **துறை :** தலைமகன் சிறைப்புறத்தானாகத், தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொல்லியது.

*(தலைவி, தலைவன் மேல் உள்ளங்கலந்த காதல் உடையவள். அவனைக் கணமும் பிரியப் பொறுக்காதவள். அவள் மனம் தமக்குள் விரைந்து மணவினை நிகழ்வதை விரும்புகிறது. இரவுக்குறியிடத்தே அவனைத் தேடி வந்தவள், அவ்வருகையின் அருமை புலப்படக் கூறித் தலைவனின் உள்ளத்தைத் திருமண ஏற்பாட்டிலே திருப்ப முயலுகின்றனள்.)*

**ஈயற் புற்றத்து ஈர்ம்புறத்து இறுத்த**
**குரும்பி வல்சிப் பெருங்கை ஏற்றைத்**
**தூங்குதோல் துதிய வள்உகிர் கதுவலின்,**
**பாம்பு மதன்அழியும் பானாட் கங்குலும்,**
**அரிய அல்ல-மன் - இகுளை! 'பெரிய 5**

**கேழல் அட்ட பேழ்வாய் ஏற்றைப்**
**பலாவமல் அடுக்கம் புலாவ ஈர்க்கும்**
**கழைநரல் சிலம்பின் ஆங்கண், வழையொடு**
**வாழை ஓங்கிய தாழ்கண் அசும்பில்,**
**படுகடுங் களிற்றின் வருத்தம் சொலியப் 10**

**பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்**
**விண்தோய் விடரகத்து இயம்பும் அவர்நாட்டு,**
**எண்ணரும் பிறங்கல் மானதர் மயங்காது,**
**மின்னுவிடச் சிறிய ஒதுங்கி, மென்மெலத்**
**துளிதலைத் தலைஇய மணியேர் ஐம்பால் 15**

**சிறுபுறம் புதைய வாரி, குரல் பிழியூஉ**
**நெறிகெட விலக்கிய, நீயிர், இச்சுரம்**
**அறிதலும் அறிதிரோ?, என்னுநர்ப் பெறினே.**

*தோழி! பிளந்த வாயினையுடைய ஆண்புலி ஒன்று, பெரிய பன்றியினைக் கொன்று வீழ்த்தியது. பலாமரங்கள் செறிந்த பக்கமலைச் சாரலில், எங்கும் புலால் நாற்றம் எடுக்க, அதனை இழுத்துச் சென்றது. அப்படிப் புலி செல்லுகின்ற, மூங்கில்கள் தம்முள் உரசி உரசி ஒலிசெய்கின்ற, மலை அது. அவ்விடத்திலே, சுரபுன்னையோடு வாழை மரங்களும் ஓங்கி வளர்ந்துள்ள பகுதி ஒன்று. அவ்விடத்தே, பள்ளமான நீர் அறாத ஒரு குழியிலே, கடுமையான இயல்பினையுடைய களிற்றியானை ஒன்று வீழ்ந்து பட்டது. அதன் வருத்தத்தைத் தீர்க்கும் பொருட்டாக அதனுடைய பிடியானையானது, பெரிய பெரிய மரங்களைக் குழியினின்றும் களிறு ஏறி வருவதற்கு ஏற்றபடியாக, முறித்து முறித்துப் போட்டது. அப்போது எழுந்த மரம் முறிபடும் ஓசையானது, விண்ணைத் தழுவ விளங்கும் அம்மலையின் குகைகளில் எல்லாம் எதிரொலித்தது. அத்தகையதான அவருடைய மலைநாட்டிலே, எண்ணற்கும் அரியவான மான்களின் செலவினால் ஏற்பட்ட காலடித்தடம் பதிந்து விளங்கும் கவறுபட்ட வழிகளுள் சென்று, யாம் மயங்கவில்லை. மின்னல் வழிகாட்டச், சிறுகச் சிறுக நடந்தோம். மெல்ல மெல்ல வந்து சேர்ந்தோம். இவ்விடத்து, "மழைத் துளிகளைத் தம்மிடத்தே கொண்ட, நீலமணி போலும் அழகிய, ஐவகையாக முடிக்கப்பெற்ற கூந்தலை, நும்பிடரியானது மறையுமாறு பின்புறமாக வாரி முடித்து, முடித்த அத் தொகுதியைப் பிழிந்து கொண்டே வருபவரே! முறையற்ற வகையிலே வழிகள் பின்னிக் கிடக்கும் இச்சுரத்தின்கண் வருவதற்குரிய நேரிய வழியினை நீவிர் இதற்குமுன்பே அறியவும் அறிவீரோ" என்று, நம்மீது பரிவுடன் கேட்கும் அன்புடையாரை மட்டும் யாம் பெற்றோமில்லை. பெற்றோமானால்,*

*"ஈயல்களையுடைய புற்றுக்களின் குளிர்ந்த மேற்புறத்தே தங்கிய புற்றாஞ் சோறாகிய இறையினைப், பெரிய கையினையுடைய ஆண் கரடியானது எடுக்கும்; அப்போது, அதன் தொங்கும் தோல் உரைக்குள் பொருந்தியிருக்கும் கூர்மையான நகங்கள் பற்றிக்கொள்ளுவதனால் அப்புற்றினுள்ளே இருக்கும் பாம்பும் தனது வலிமை அழிந்துபோம். அத்தகைய, இம் மழைக்காலத்து நள்ளிரவும், காட்டு வழியும், நமக்குக் கடந்து வருதற்குக்கூட அரியதன்று.*

**சொற்பொருள்:** *3. துதிய உகிர் - உறைபுக்க நகம். 4. பானாள் - பாதிநாளாகிய இரவு, நள்ளிரவும் ஆம். 6. ஏற்றை - புலி ஏறு.*

9. அசும்பு - மலையிலுள்ள சேற்றுக் குழி. பூசல் - மரத்து ஓசை. 12. விடரகம் - மலைக்குகை. 13. மான் அதர் - மான்கள் செல்லும் தடம் பதிந்த வழி. 14. மின்னுவிட - மின்னல் வழிகாட்ட.

**உள்ளுறை பொருள்கள்:** 1. கரடிக்குப் பாம்பை வருத்த வேண்டும் என்னும் கருத்துச் சிறிதும் இல்லை. எனினும், அது தன் காரியம் செய்யவே, அதன் நகங்கள் படுதலாற் பாம்பும் துயருற்றது. அதுபோல, அவரும் நம்மை வருத்தும் எண்ணம் உடையவரல்லர். எனினும், அவர் தமது காரியமாகிய களவின்ப நுகர்விலேயே ஒழுகுதலால், நாமும், இவ்வாறு எதிர்பாராத பல வருத்தங்களுக்கு உள்ளாகின்றோம்.

2. பலாப்பழத்தின் நாற்றமுடைய மலைச்சாரலிலே, பன்றியைக் கொன்று இழுத்துவருதல் மூலம், புலால் நாற்றம் எவ்விடத்தும் கமழச் செய்துவிட்டது புலி. அதுபோல, அவரும் தம் இன்ப நாட்டத்தால் நம்மைக் களவிலே கூடி, நம் சிறப்புடைய குடிக்கு ஊரின்கண் எழுந்த அலரினை உண்டாக்கிவிட்டனர்.

3. வாழைக் காட்டிலே வாழையினை உண்ணவந்த களிறு, அதனையும் இழந்து, குழியுள்ளும் சிக்கியது, அதன் துயர் தீர்க்கப் பிடியானை மரங்களை முறித்துப் போட்டது. அது மரங்களை முறிக்கும் ஒலி எங்கும் கேட்டது. அதுபோல், அவரும் நமது நலம் நுகர விரும்பி வந்தார். களவு ஒழுக்கமாகிய குழியிலே சிக்கினார். அதனின்றும் கரையேற வழியறியாது மயங்கினார். அதனை விட்டு வரையவும் மாட்டாது, நம் வீட்டுக் காவலின் அருமை யினால் நம்மை அடையவும் மாட்டாது துயருற்றார். அதனைப் போக்க, அறத்தொடு நிற்றல் முதலியவற்றால் நாமே வரைந்து மணந்துகொள்ள முயன்றாலோ, ஊர் எல்லாம் அலர் பெரிதாக எழுகின்றதே? இஃது என்னையோ?

## 9. நசைஇச் சென்ற நெஞ்சு!

**பாடியவர்:** கல்லாடனார். **திணை:** பாலை. **துறை:** வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

(தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்றனன் ஒரு தலைவன். அவள் நினைவை அவன் மனம் ஒருபோதும் மறக்கவே இல்லை.. ஒருவாறாக வினையும் முடிந்தது. அவன் திரும்பிக் கொண்டிருக்கின்றான். அவன், 'தன் நெஞ்சம் தனக்கு முன்பே தன் காதலிபாற் சென்றுவிட்டது' என்பதனைத், தன் பாகனுக்கு மிகவும் நயமாக உரைக்கின்றான்.)

**கொல்வினைப் பொலிந்த, கூர்ங்குறும் புழுகின்,**
**வில்லோர் தூணி வீங்கப் பெய்த**

அம்புநுனை ஏய்ப்ப அரும்பிய இருப்பை
செய்படர் அன்ன செங்குழை அகந்தோறு,
இழுதின் அன்ன தீம்புழல் துய்வாய் 5

உழுதுகாண் துளைய வாகி, ஆர்கழல்பு
ஆலி வானிற் காலொடு பாறித்,
துப்பின் அன்ன செங்கோட்டு இயவின்,
நெய்த்தோர் மீமிசை நிணத்தின் பரிக்கும்
அத்தம் நண்ணிய அங்குடிச் சீறூர் - 10

கொடுநுண் ஓதி மகளிர் ஓக்கிய
தொடிமாண் உலக்கைத் தூண்டுரல் பாணி
நெடுமால் வரைய குடிஞையோடு இரட்டும்
குன்றுபின் ஒழியப் போகி, உரந்துரந்து,
ஞாயிறு படினும், 'ஊர்சேய்த்து' எனாது, 15

துனைபரி துரக்கும் துஞ்சாச் செலவின்
எம்மினும், விரைந்து வல்எய்திப் பல்மாண்
ஓங்கிய நல்லில் ஒருசிறை நிலைஇ,
பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்,
கன்றுபுகு மாலை நின்றோள் எய்தி, 20

கைகவியாச் சென்று,கண் புதையாக் குறுகி,
பிடிக்கை அன்ன பின்னகம் தீண்டி,
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ-
நாணொடு மிடைந்த கற்பின், வாணுதல்,
அம்தீம் கிளவிக் குறுமகள் 25
மென்தோள் பெறநசைஇச் சென்றவென் நெஞ்சே?

கொல்லும் தொழிலிலே சிறந்ததும், கூர்மையான குறும் புழுகு எனப் பெயரியதும், வில்வீரர்களின் அம்பறாத் தூணி களிலே மிகுதியாகப் பெய்திருக்கப் படுவதுமாகிய, குப்பி முனை களைப் போன்று, இருப்பை மரத்திலே இருப்பை மொட்டுகள் அரும்பின. செப்புத் தகடுகள்போன்ற அதன் சிவந்த தளிர்களுக்கு உள்ளெல்லாம், நெய்போன்ற நிறமுடைய, இனிய துளையுள்ள பூக்கள் விளங்கின. அவை, தமது ஆர்க்குகள் கழன்று, காம்பினை நீக்கிக், காணக்கூடிய துளையினை உடைய வாக, வானிலிருந்து பெய்யும் பனிக் கட்டிகளைப் போலக், காற்றாற் சிதறுண்டு தரையிலே வீழ்ந்தன. பவளம் போன்ற சிவந்த மேட்டுப்புறங்களிலே விழுந்து கிடக்கும் அப்பூக்கள், சிவப்பு நிணத்தின்மீது வெண்ணிறக் கொழுப்பு படர்ந்திருப் பதைப் போலத் தோன்றும். பாலை நிலத்திலேயுள்ள, அழகிய குடிமக்களை உடைய, அத்தகைய எம்முடைய சிற்றூரினிடத்தே-

மென்மையான கூந்தலின் மயிர்கள் சுருண்டு சுருண்டு விளங்குகின்றவர் மகளிர். அவர், பூண் கட்டுதலால் மாட்சிமைப் பட்ட உலக்கைகளை உயர்த்துத் திணை குற்றுவர். அப்போது, உரலின்கண் நின்றெழுகின்ற அவர்களின் உலக்கை யொலியானது, நெடிய பெரிய மலைச்சாரலினின்றும் எழுகின்ற ஆந்தைகளின் ஒலியோடு கலந்து, ஒலியும் எதிரொலியும் போலே மாறிமாறி ஒலித்துக் கொண்டிருக்கும்.

குன்றுகளும் பிற்பட, அவற்றைக் கடந்து செல்கின்றோம்; தேரினை விரைவாகச் செலுத்துகின்றோம்; ஞாயிறானது மறைந்தபோதும், 'ஊர் தொலைவிலே யுள்ளதே' எனக் கருதித் தேரினை நிறுத்தவும் எண்ணாது, ஏற்கெனவே விரைந்து செல்லும் குதிரைகளை, மேலும் விரையச் செல்லுமாறு, முடுக்கி ஓட்டுகின்றோம். இவ்வாறு மடிதல் இல்லாது வீடுநோக்கிப் போகின்றவர் யாம். எம்மினும் -

பல கட்டுக்களால் அமைந்த மாண்புடன் ஓங்கியது எமது நல்ல இல்லம். அதனிடத்து, ஒருபுறத்தே நிலையாக நின்று, நல்ல பக்கத்தே பல்லியானது ஒலிக்குந்தோறும் அதனைப் போற்றியவளாகக், கன்றுகள் வீடு திரும்புகின்ற மாலை வேளையிலே, எம் வரவுபார்த்து நிற்பவள் எம் தலைவி. நாணொடு செறிந்த கற்பினை உடையவள்; ஒளிருகின்ற நெற்றியினை உடையவள்; அழகியதான இனிய சொல்லினை உடையவள்; இளமைப் பருவத்தையும் உடையவள் அவள். அவளை அடைந்து, கைகளைக் கவித்துச் சென்று, அவளை நெருங்கி, அவள் கண்களைப் புதைத்து, பிடியானையின் துதிக்கை போன்ற அவளுடைய பின்னலிட்டுத் தொங்கும் கூந்தலைத் தீண்டி, அவளது தொடியணிந்த கைகள் பொருந்த, மென்மையான தோள்களை அடைவதற்கு விருப்பமுற்று, எமக்கு முன்னாகவே விரைந்துசென்ற எம் நெஞ்சமானது, அவளைத் தானும் சென்று தழுவியது கொல்லோ?

**சொற்பொருள்:** 3. அம்பென்றது, மெல்லிய முட்டை. 4. செப்படர் - செப்புத் தகடு. 5. துய் - பஞ்சு. புழல் - காணுதல். 7. ஆலி- பனிக்கட்டி. காலொடு -காற்றாற் சிதறுண்டு. 8. கோடு - மேடு, இயவு - வழி. 11. கொடு நுண் ஓதி - வளைந்த பனிச்சை. ஒக்கிய - எடுத்த. 14. உரந்துரந்து - வலியாற் செலுத்திய. 16. துனைபரி - விரைந்து செல்லும் குதிரை. துரத்தல் - முடுக்குதல். 22. பின்னகம் - பின்னின மயிர்.

**விளக்கம்:** தன் மனம் அவளை அடையத் துடிக்கும் நிலையைப் பாகனுக்கு அறிவிக்க விரும்புகின்றான் தலைவன். தன் தேர் வேகமாகப் போவது அவனுக்கும் தெரியும். மேலும்,

விரைவுபடுத்துவதற்காகத், தனக்கு முன்னேயே சென்றுவிட்ட தன் நெஞ்சத்தைப் பற்றிப் பாகனிடம் கூறுகின்றான்.

'பாங்கர்ப் பல்லி படுதொறும்' என்பது, அது கொண்டு தம் எண்ணம் நிறைவெய்தும் எனக் கருதும் மரபினைக் காட்டும்.

## 10. கொண்டு பெயர்தல் வேண்டும்!

**பாடியவர்:** அம்மூவனார். **திணை:** நெய்தல். **துறை:** இரவுக்குறி வந்து, தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி கூறியது. **சிறப்பிக்கப் பெற்றது:** சேரர் கடற்றுறையாகிய தொண்டி.

*(தலைமகள், தலைமகனைப் பிரிதலால் படும் வேதனை மிகுதியைக் காணப் பொறாதவள் ஆயினாள் தோழி. அதனால், அவள் நலன் அழியாமல் என்றும் திகழவேண்டுமானால், அவளை என்றும் பிரியாதிருக்கும் வகையாக, விரையவந்து மணந்து, நின் ஊர்க்கு அவளை அழைத்துப் போய்விடுவாயாக' என்று தலைவனிடம் கூறுகின்றாள்.)*

**வான்கடற் பரப்பில் தூவற்கு எதிரிய,**
**மீன்கண் டன்ன மெல்லரும்பு ஊழ்த்த,**
**முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினைப்,**
**புள்ளிறை கூரும் மெல்லம் புலம்ப!**
**நெய்தல் உண்கண் பைதல கலுழப்**
**பிரிதல் எண்ணினை ஆயின், நன்றும்,**
**அரிது துற்றனையால் பெரும! - உரிதினின்**
**கொண்டு ஆங்குப் பெயர்தல்வேண்டும் - கொண்டலொடு**
**குரூஉத்திரைப் புணரி உடைதரும் எக்கர்ப்**
**பழந்திமில் கொன்ற புதுவலைப் பரதவர்** 10

**மோட்டுமணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி,**
**மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்**
**வளங்கெழு தொண்டி அன்ன இவள்நலனே.**

பெரிய கடற்பரப்பிலே எழுகின்ற அலைகளின் திவலைகளை எதிரேற்றுக் கொண்ட, வானத்து மீன்களைக் கண்டாற் போன்ற, மென்மையான அரும்புகளை ஈன்றன முடம்பட்ட முதிர்ந்த புன்னை மரங்கள். அவற்றின், பெரிய நிலையினையுடைய கரிய கிளைகளிலே, கடற்பறவைகள் தங்கியிருக்கும். அத்தகைய மென்னிலமாகிய கடற்கரைப் பகுதியின் தலைவனே!

நெய்தல் பூவினைப் போன்றன மையுண்ட எம் தோழியின் கண்கள். அவை வருத்தமுற்றனவாகக் கலங்குமாறு, நீ அவளைப் பிரிந்து செல்வதையும் எண்ணினையோ? அங்ஙனம் எண்ணினை

யானால், மிக்க நன்மையானதும், மிக்க அருமையானதுமான ஒன்றினை மேற்கொள்வாயாகுக! பெருமானே, இவளை நினக்கே உரிமையுடையவளாக மணந்து கொண்டு, விரைவாக நின்னூர்க்கே இவளையும் நின்னுடன் அழைத்துப் போய் விடுவதனை உடனே செய்வாயாக.

கீழ்க் காற்றினால் விளக்கம் பொருந்திய கடலலைகள் மோதி உடைக்கும், மணல் மேட்டிற் கிடக்கும் பழைமையாகிப்போன படகுகளைச் செப்பனிட்டுப் புதுக்கியிருந்தனர், புதிய வலையினையுடைய பரதவர்கள். உயர்ந்த மணலையுடைய அடைகரையிலே, அலைகளால் ஒதுக்கப்பட்டு வந்து கிடக்கும் சுறாமீனின் கொள்ளையினை அவர்கள் கண்டனர். மணம் நாறுகின்ற பாக்கத்தின்கண் உள்ள பிறருக்கும் அவற்றை அவர்கள் பகுத்துக் கொடுத்தனர். அத்தகைய கடல்வளம் மலிந்தது தொண்டி என்னும் கடற்கரைப் பட்டினம். அதைப் போன்று சிறப்புடன் விளங்குவது இவளுடைய பேரழகும் ஆகும். அது, நின் பிரிவினால் நலிதலுக்கு உட்படாமற் காப்பாயாக!

**சொற்பொருள்:** 1. தூவல் - துவலையை. 2. ஊழ்த்த - புறப்படவிட்ட. 4. இறைகூரும் - தங்குதன் மிகும். 5. பைதலகலுழ - வருத்தம் உடையவாய் அழ. 8. கொண்டல் - கீழ்க்காற்று; வடகிழக்குப் பருவக்காற்று. 12. பகுத்தல் - பலருக்கும் கொடுத்தல். புன்னை, புள்ளினங்களுக்கு ஆதாரமாயினாற்போல, நீயும் எங்கட்கு ஆதாரமாவாய் என்றது உணர்க.

**உள்ளுறை பொருள்:** 'பரதவர், முறையாகக் கடல் மேற் சென்று முயன்று கடல்வளம் தேடுதலை விடுத்து, எதிர்பாராது காற்றால் ஒதுக்கப்பட்டுக் கிடைத்த சுறாமீன் கொள்ளையைப் பலருக்கும் பகுத்து வழங்கினர். நீவிரும் முறையாக வரைந்து வந்து மணந்து, இவளுடன் இன்புறுதலை விடுத்து, எதிர்பாராது வாய்த்த களவிலேயே மயங்கினீர்; அதனைப் பலரும் அறியச்செய்து, அலர் எழவும் காரணமாயினீர் என்பதாம்.

## 11. கைகவர் முயக்கம்!

**பாடியவர்:** ஔவையார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகள் வேறுபாடு கண்டு, ஆற்றாளாய தோழிக்குத், தலைமகள் ஆற்றுவல் என்பது படச் சொல்லியது.

*(அவன் பிரிந்தான். பிரிவுத் துயரால் அவள் நலிந்தாள். அதுகண்டு அவளுடைய தோழி மிகவும் வருத்தம் உடையவளா யினாள். தோழிக்குத், தான் அவன் வரும்வரை ஆற்றியிருப்பதாகக் கூறித் தலைவி அவள் வருத்தத்தைப் போக்க முயலுகிறாள்.*

*துயருற்றவரினும், அவருக்கு அன்புடையார் அதிகமாக வருந்துவர் என்னும் உலகியல் உண்மையும் இதனால் உணரப்படும்.)*

**வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்**
**நெருப்பெனச் சிவந்த உருப்பவிர் அங்கட்டு,**
**இலையில மலர்ந்த முகையில் இலவம்**
**கலிகொள் ஆயம் மலிபுதொகுபு எடுத்த**
**அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி,** 5

**கயந்துகள் ஆகிய பயம்தபு கானம்**
**எம்மொடு கழிந்தனர் ஆயின், கம்மென,**
**வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப்,**
**படுசினை தாழ்ந்த பயிலிணர் எக்கர்,**
**மெய்புகுவு அன்ன கைகவர் முயக்கம்** 10

**அவரும் பெறுகுவர் மன்னே! நயவர,**
**நீர்வார் நிகர்மலர் கடுப்ப, ஓமறந்து**
**அறுகுளம் நிறைக்குந போல, அல்கலும்**
**அழுதல் மேவல வாகிப்,**
**பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே!** 15

*வானத்திலே ஊர்ந்து செல்லுகின்ற தன்மையது விளங்கும் ஒளியினையுடைய ஞாயிற்று மண்டிலம், அது தீயெனச் சிவந்தது. அதனுடைய வெம்மையால் எரிக்கப்பட்டு விளங்குவது அழகிய காடு. அதனிடத்தே, இலையற்றுப் போயினவைகளாக மலர்ந்துள்ளன அரும்பு இல்லாத இலவம் பூக்கள். இலவம் அங்ஙனம் மலர்ந்திருக்கின்ற தன்மை, ஆரவாரத்தைக் கொண்ட மகளிர் கூட்டம், மகிழ்வுடன் கூடி எடுத்த அழகிய கார்த்திகை விளக்கீடு விழாவின் நெடிய விளக்கு ஒழுங்குபோலத் தோன்றும். அத்தகைய காட்டிலே, குளங்கள் நீரற்றுப்போய்ப் புழுதி பட்டுத் தோன்றும். அவ்வாறு வளம் தப்பிய காடு அது. அதனிடத்து, நம்மையும் உடன் கொண்டவராக, நம் தலைவர் சென்றனர் என்றால்*

*மார்புக் கச்சினை விரித்து வைத்தாற்போல, மணல் மேடுகள் எழும்பியுள்ள காட்டாற்றினது, மிக்க பூங்கொத்துக்களை யுடைய மரக்கிளைகள் தாழ்வாக விளங்குகின்றதொரு மணல் மேட்டிலே, உடல்கள் ஒன்றுடன் ஒன்று உட்புகுந்து விட்டாற்போன்று விரும்பும் முயக்கத்தினை, அன்பு தோன்ற, அவரும் எம்முடன் கூடி அடைவர்.*

*குற்றமற்ற எமது கண்களும், நீர்சோரும் ஒளி பொருந்திய நீர்க்குவளை மலரினைப்போல, ஒழிவே இல்லாமல், நீரற்று வரண்ட குளத்தினையும் பெருக்கி விடுவனபோல நாளும் நீர்*

சொரிந்து, அழுதலைப் பொருந்தாவாகும்; யான் துயிலவும் பெறுவேன்!

**சொற்பொருள்:** 2. சிவத்தல் - கோபித்தல். உருப்பு - வெப்பம். 4. ஆயம் - மகளிர் கூட்டம். 5. சுடர் - நெடுங்கொடி - விளக்கின் நெடிய வரிசை. 7. கம்மென - விரைய, 12. நிகர் - ஒளி.

## 12. இருதலைப் புள்ளின் ஓர் உயிர்!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** பகற்குறிவாரா நின்ற தலைமகன், தோழியால் செறிப்பு அறிவுறுக்கப்பட்டு, 'இரவுக்குறிவாரா வரைவல்' என்றாற்கு, அதுவும் மறுத்து, வரைவு கடாயது.

*(ஒத்த மனம் உடையவரான இரு காதலர்கள், தம்முள் கண்டு காதலித்துக் களவு ஒழுக்கத்திலும் ஈடுபட்டிருந்தனர். தினை முற்றிவிட, அவள் புனங்காவலுக்கு வருவதும் நின்றது. அவளின் பருவ மலர்ச்சியை உணர்ந்த பெற்றோர், இற் செறிப்புச் செய்தனர். பகலிலே, அவர்கள் சந்திக்கும் இடத்திலே, அவன் வந்து ஆர்வத்துடன் காத்திருந்தான். தலைவியினுடைய தோழி வந்து, தலைவி இற்செறிக்கப்பட்ட செய்தியைக் கூறுகின்றாள். அவன், இரவிலே வந்து சந்திக்க விரும்புகிறான். அவள் அதனையும் மறுத்துத் திருமணம் செய்து கொள்ள வற்புறுத்துகிறாள்.)*

**யாயே, கண்ணி னும்கடுங் காதலளே**
**எந்தையும், நிலன்உரப் பொறாஅன்; 'சீறடி சிவப்ப,**
**எவன்,இல! குறுமகள்! இயங்குதி! என்னும்;'**
**யாமே, பிரிவு இன்று இயைந்த துவரா நட்பின்,**
**இருதலைப் புள்ளின் ஓர்உயிரம்மே; 5**

**ஏனல்அம் காவலர் ஆனாது ஆர்த்தொறும்**
**கிளிவிளி பயிற்றும் வெளில்ஆடு பெருஞ்சினை**
**விழுக்கோட் பலவின் பழுப்பயம் கொண்மார்,**
**குறவர் ஊன்றிய குரம்பை புதைய,**
**வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம் 10**

**புலிசெத்து, வெரீஇய புகர்முக வேழம்,**
**மழைபடு சிலம்பில் கழைபடப் பெயரும்**
**நல்வரை நாட! நீவரின்,**
**மெல்லியல் ஓரும் தான் வாழலளே!**

எம் தாயிருக்கின்றனளே, அவள், தன் கண்களினுங் காட்டில் இவள்மீது பெருங்காதல் செலுத்துகின்ற இயல்பினள். தந்தையும், இவள் தரையிலே அடிபொருந்தி நடக்க நேரினும், உள்ளம் பொறுக்காதவன். இவள் நடப்பதைக் காணின், 'ஏடி! எம்

இளைய மகளே! நின் சிறிய அடிகள் சிவப்ப எதற்காகவோ செல்கின்றனை?' என்று கேட்பவன். யாங்களோ, பிரிவு என்பதே இல்லாமல் ஒன்றுபட்டதும், உவர்த்தலே இல்லாததுமான பெருநட்பினால், இருதலைப் பறவைபோல, இரண்டு உடற்கும் ஓர் உயிரே என்னுமளவு எமக்குள் பெருகிய காதலை உடையோம்.

தினைப்புனத்தினைக் காக்கின்ற குன்றவர் மகளிர், ஓயாது குரலெழுப்பி ஆரவாரிக்கும் பொழுதெல்லாம், கிளிகளும் தம் இனத்தைக் கூவி அழைக்கும். பலாமரத்தின் பெரிய கிளைகளிலே, அணில்கள் ஆடிக் கொண்டிருக்கும். பெரிய காய் களைக் கொண்ட பழமாகிய பயன்களும் விளங்கும். அவற்றைக் கொள்ளுவதற்குக் குறவர்கள் குடிசை நாட்டியிருப்பர். அக்குடிசை மறையுமாறு தேன்பாயும் வேங்கை மலர்கள் அவற்றின்மேற் சொரிந்து பரந்திருக்கும். அந்தத் தோற்றத்தைப் 'புலியோ' என்று கருதிப், புள்ளிகள் பொருந்திய முகத்தினை யுடைய யானையானது அஞ்சும். மேகங்கள் பொருந்திய பக்கமலைகளிலுள்ள மூங்கில்கள் முறிபடுமாறு, அந்த யானை விரைந்து பெயர்ந்து கடுகிச் செல்லும். அத்தகைய நல்ல மலை நாட்டிற்கு உரியவனே! அதனைக் கடந்து, நீ இரவுநேரத்தில் வருவதென்றால், மெல்லிய தன்மையினளான இவள் 'நினக்கு எத்தகைய ஊறு நேர்ந்ததோ?' என எண்ணித், தான் வருந்தி உயிர் வாழ்ந்திராள். இதனையும் நீ அறிவாயாக!

**சொற்பொருள்:** 1. யாய் - தாய். காதலன் - அன்புடையான். 2. சீறடி - சிறியவான மெல்லடிகள். 3. இல - ஏடீ! குறுமகள் - இளைய மகள். 4. துவரா நட்பு - உவர்ப்பில்லாத என்றும் இனிக்கின்ற நட்பு. 5. இருதலைப்புள் - இரண்டு தலைகளை யுடைய ஒரு பறவை. 7. வெளில் - அணில். 8. விழுக்கோட் பலவு - பெரிய காய்களையுடைய பலாமரம். 9. குரம்பை - குடிசை. 10 . தேம் - தேன். புலி செத்து - புலி என்று கருதி. 12. மழை - மேகம். கழை - மூங்கில். 16. ஒரும் : அசை.

தாய் தந்தையரின் அன்பை உரைத்ததன் மூலம் இற் செறிப்பும், நீ வரின் மெல்லியல் வாழலள் என்பதனால் இரவுக் குறியின் ஏதத்திற்கு அவள் அஞ்சுதலையும் கூறினள். ஏனலங் காவலர் குறவர் எனவும் கொள்வார் சிலர்.

**உள்ளுறை பொருள்:** அஞ்சவேண்டாத குடிசைக்கு யானை அஞ்சும். தனக்கு உணவு ஆகப் பயன்படும் மூங்கில்களை அந்த அச்சத்தால் நாசஞ் செய்யும். அதுபோல, இவள்மேல் அன்புடையவரான இவள் பெற்றோர், இவள் கருத்துக்கு இசைந்து இவளை நினக்குத் தருவர் என அறியாது, நீ வீணே அஞ்சினை. வரைந்து கொள்ளவும் முயன்றாயில்லை. அதனால்,

நினக்கு இன்பந்தரும் எமக்கும் பிரிவுத் துன்பமாகிய ஊறும் விளைவித்தனை என்பதாம்.

## 13. புலம்பொடு வந்த வாடை!

**பாடியவர்:** பெருந்தலைச்சாத்தனார். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரியலுற்ற தலைமகனைத் தோழி செலவழுங்கு வித்தது; உடம்பட்டதூஉம் ஆம். **சிறப்புற்றோன்:** தென்னவன் மறவனான கோடைப்பொருநன் பண்ணி.

*(பொருள் தேடிவருவதற்காகத் தன் தலைவியைப் பிரிந்து வேற்றுநாடு செல்ல விரும்புகின்றான் ஒரு தலைவன். 'அதனால், தலைவி தன் உயிரையே இழந்துவிடவும் கூடும்' என்று கூறி, அவனைச் செல்லாது தடுக்கின்றாள் தோழி. அல்லது, 'யாம் துன்புற்றாலும் சகித்திருப்போம்; நின் முயற்சி நன்கு நிறைவுறுக' என, அவன் போதற்கு இசைகின்றாளும் ஆம்.)*

**தன்கடற் பிறந்த முத்தின் ஆரமும்,**
**முனைதிரை கொடுக்கும் துப்பின், தன்மலைத்**
**தெறல்அரும் மரபின் கடவுட் பேணிக்,**
**குறவர் தந்த சந்தின் ஆரமும்,**
**இருபேர் ஆரமும் எழில்பெற அணியும் 5**

**திருவீழ் மார்பின் தென்னவன் மறவன்-**
**குழியில் கொண்ட மராஅ யானை**
**மொழியின் உணர்த்தும் சிறுவரை அல்லது,**
**வரைநிலை இன்றி இரவலர்க்கு ஈயும்,**
**வள்வாய் அம்பின் கோடைப் பொருநன் - 10**

**பண்ணி தைஇய பயம்கெழு வேள்வியின்,**
**விழுமிது நிகழ்வது ஆயினும் - தெற்குஏர்பு,**
**கழிமழை பொழிந்த பொழுதுகொள் அமையத்துச்,**
**சாயல் இன்துணை இவட்பிரிந்து உறையின்,**
**நோய் இன்றாக செய்பொருள்! வயிற்பட 15**

**மாசுஇல் தூமடி விரிந்த சேக்கை,**
**கவவுஇன் புறாமைக் கழிக - வள வயல்,**
**அழல்நுதி அன்ன தோகை ஈன்ற**
**கழனி நெல்லின் கவைமுதல் அலங்கல்**
**நிரம்புஅகன் செறுவில் வரம்புஅணையாத் துயல்வரப், 20**

**புலம்பொடு வந்த பொழுதுகொள் வாடை,**
**இலங்குபூங் கரும்பின் ஏர்கழை இருந்த**
**வெண்குருகு நரல, வீசும்**
**நுண்பல் துவலைய தண்பனி நாளே!**

தன்னுடைய தென்கடலிலே பிறந்த முத்தினைக் கோத்து அந்த ஆரத்தை அணிந்தவன்; பகைவர் பணிந்து திறை கொடுக்கும் ஆற்றலினையுடையவனும், தன்னுடைய பொதிய மலையினிடத்தே கோயில் கொண்டிருப்பவனும், பிறரால் வெற்றி கொள்ளப்படுவதற்கு அரியவனுமாகிய முருகக் கடவுளை வழிபட்டுக், குறவர்கள் கொணர்ந்து தந்த சந்தன ஆரத்தையும் அணிந்தவன்; அத்தகைய பெருமையை யுடைய இரண்டு ஆரங்களையும் அழகுற அணியும், திருமகள் விரும்பும் மார்பினையுடையவன், தென்னவனாகிய பாண்டியன்.

குழியிலே வீழ்த்திக் கைக்கொண்ட பழகாத யானைகளைத், தன் ஏவலினால் செயற்படும்படி உணர்த்துவிக்கின்ற சிறுபொழுது அல்லாமல், பிற பொழுதுகள் எல்லாம், ஒரு வரையறை ஏதும் இல்லாமல், இரவலர்களுக்கு வாரி வாரி வழங்கிக் கொண்டே இருப்பவன்; கூர்மை வாய்ந்த அம்பினை உடையவன்; கோட்டைக்குத் தலைவன்; பாண்டியனின் படைத்தலைவன் பண்ணி என்னும் பெயரினன். அவன் இயற்றிய, பயன் மிகுந்த களவேள்வியினும் காட்டில், நீர் தேடி வருவதாகக் கூறும் பொருளால் சிறந்த பயன் நிகழுமாயினும் -

மேகங்கள் தெற்கே சென்றனவாக, மிக்க மழையினைப் பொழிந்த, மழைக்காலத் தன்மையைக் கொள்ளும் கூதிர்க் காலத்துச், சாயலிற் சிறந்த இனிய துணைவியான இவளைப் பிரிந்து, வேற்று நாட்டிலே நீர் தங்குவீராயின், நீர் தேடுகின்ற பொருள்கள், எவ்வித இடையூறும் இல்லாது வந்து வாய்ப்பனவாக! தக்க இடத்திலே, குற்றமற்ற தூய விரிப்பு விரிக்கப்பெற்ற படுக்கையினிடத்தே, இவளைத் தழுவிப் பெறுகின்ற இன்பமானது, நுமக்கு வாயாமற் கழிந்து போயினும் போவதாக!

வளமுடைய வயல்களிலே, நெருப்பின் கொழுந்தினைப் போன்ற தோடுகளை ஈன்ற, வயல் நெல்லின் பலவாகக் கிளைத்த முதலிலிருந்து தோன்றி நிரம்பிய நெற்கதிர்கள், அகன்ற வயலினிடத்து வரப்புக்களையே அணையாகக் கொண்டு கிடந்து அலையுமாறு, தனிமையாகிற துன்பத்தினை மேற்கொண்டு வருகின்ற தன்மையது, பனிக்காலத் தன்மையினைக் கொண்ட வாடைக்காற்று. அக்காற்றானது பூக்கள் விளங்கும் கரும்பினது ஓங்கின தண்டின் மீதிருக்கும் வெண்மையான நாரையானது ஒலிக்கும்படியாகவும் வீசும். அத்தகைய வாடை வந்து வருத்தும், நுண்மையான பல துளிகளைக் கொண்டு விளங்குவது குளிருகின்ற பனிக்காலம்!

**சொற்பொருள்:** 2. பேணி - பூசை பண்ணி. 7. மராஅ - மருவாத. 11. தை இய - செய்த. வேள்வி - களவேள்வி. 13. பொழுது

- காலத்தன்மை. 18. அழல் நுதி - அழற்கோடு. தோகை - நெற்றோடு; கடைகூர்த்துச் சிவந்திருத்தலினால் அவ்வாறு கூறினர்.

**விளக்கம்:** கூதிர்க் காலத்திலே, பிரிவின் வேதனை மிகுதியினால் அவள் பெரிதும் துயருற்று நலிவாள்; அதனால் அவள் நின் போக்கை நிறுத்துக என்று கூறியதாம். அன்றி, பிரிவுக்கு உடம்பட்டதாயின், அக்காலத்துக் கொடுமையைக் கூறி, அதற்குள் தவறாது வருக என்றதாகும்.

முத்தாரமும் சந்தின் ஆரமும் அணிந்த பாண்டியனைக் கூறியது முத்தாரமும் சந்தின் தொய்யிலும் விளங்கும் அவளுடைய மார்பகத்தையும் உணர்த்தும். 'தென்னவன் மறவன்' என்பதனைத் தென்னவனாகிய மறவன் எனவும் கூட்டிப் பொருள் கொள்வர். 'பிரிந்து உறையின் நோய் இன்றாகச் செய்பொருள்!' என்றது, அஃது வாய்ப்பதாகாது என்னும் உட்கருத்து உடைய சொற்களாகும். விளைவயலின் பயனான நெற்கதிர்களைத் துவளச் செய்வது போலப், பனிக்காலம் அவளையும் துவளச் செய்யும்; நீர்ப் பறவையான குருகும் குளிர் தாங்காது ஒலிக்குமாயின் அவள் புலம்பாது என் செய்வாள்? உவமைகளை இவ்வாறெல்லாம் பொருத்திக் காணுக.

## 14. யாங்கு ஆகுவம் கொல்?

**பாடியவர்:** ஒக்கூர் மாசாத்தனார். **திணை:** முல்லை. **துறை:** பாணன் தனக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

(தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் வரவேண்டிய நாள். அவள், அவன் வரவை எதிர்பார்த்து ஏங்கி வாயிலிலே நிலையாக நின்றனள். மாலைக் காலமும் மெல்லப் போய்க் கொண்டிருந்தது. 'இன்று மாலை அவர் வாரார் போலும்; காலையில் வருவார்' என்றனன் பாணன். 'மாலை வேளையிலே வர நினையா தவரானால் காலையிலே யாம் என்ன கதியாவோமோ? யாரறிவார்?' என்றாள் அவள். பாணன் பேச்சற்று நின்றுவிட்டான். 'கடவுளை வாழ்த்துவது ஒன்றுதான் அவனால் முடிந்தது. அவ்வேளை, தலைவனின் தேரும் வந்துவிட்டது. உள்ளம் கவர்ந்த அந்த இனிய காட்சியை, அப்பாணன், தன் தோழர்க்கு உவப்புடன் சொல்லுகின்றான்.)

**'அரக்கத்து அன்ன செந்நிலப் பெருவழி,**
**காயாஞ் செம்மல் தாஅய், பலஉடன்**
**ஈயல் மூதாய் வரிப்பப், பவளமொடு**
**மணிமிடைந் தன்ன குன்றம் கவைஇய**
**அம்காட்டு ஆர்இடை, மடப்பிணை தழீஇத்,** 5

**திரிமருப்பு இரலை புல்அருந்து உகள,**
**முல்லை வியன்புலம் பரப்பிக் கோவலர்**
**குறும்பொறை மருங்கின் நறும்பூ அயரப்,**
**பதவு மேயல் அருந்து மதவுநடை நல்ஆன்**
**வீங்குமாண் செருத்தல், தீம்பால் பிலிற்ற**
**கன்றுபயிர் குரல, மன்றுநிறை புகுதரும்**
**மாலையும் உள்ளார்ஆயின், காலை**
**யாங்கு ஆகுவம்கொல்? பாண!", என்ற**
**மனையோள் சொல்எதிர் சொல்லல் செல்லேன்,**
**செவ்வழி நல்யாழ் இசையினென், பையெனக்** 15

**கடவுள் வாழ்த்திப், பையுள்மெய்ந் நிறுத்து,**
**அவர்திறம் செல்வேன் கண்டனென், யானே-**
**விடுவிசைக் குதிரை விலங்குபரி முடுகக்**
**கல்பொருது இரங்கும் பல்ஆர் நேமிக்**
**கார்மழை முழக்குஇசை கடுக்கும்,**
**முனைநல் ஊரன், புனைநெடுந் தேரே!** 20

'செவ்வரக்கினைப் போன்று செந்நிலமாக விளங்குவது பெருவழி. அங்கே, காயாவின் பூக்கள் பரவிக் கிடக்கும். தம்பலப் பூச்சிகள் பலவும் ஒருங்கே வரிசை வரிசையாக ஊர்ந்து கொண்டிருக்கும். அதன்கண் விளங்கும் குன்றம், பவளத்தோடு நீல மணியினைப் பொருத்தி வைத்தாற் போலத் தோன்றும். எங்கணும் இவ்வாறு சூழ்ந்து கிடக்கும் காட்டின் அகத்தேயுள்ள அரிய இடங்களில், மடப்பத்தினையுடைய தன் பெண்மானைத் தழுவிக் கொண்டதாக, இரும்பு திரித்துவிட்டாற்போல விளங்கும் கொம்புகளையுடைய ஆண்மானானது, புல்லைத் தின்றவாறு தாவித் தாவிச் செல்லும். தம்முடைய பசுநிரைகளைக் கோவலர் முல்லை நிலத்திலே பரவி மேயவிட்டிருப்பர். அவர்கள் குன்றுகளின் பக்கத்தே நறுமணப் பூக்களை எடுத்து அணிந்தும் மகிழ்ந்திருப்பர். அறுகம் புல்லாகிய உணவினை அருந்திய, வலிய நடையினவான நல்ல பசுக்களின், பருத்த மாண்பினையுடைய மடிகள் இனிய பாலைச் சொரிந்து கொண்டிருக்கும். அவை, தம் கன்றுகளை நினைந்து அழைக்கும் குரலினவாக, மன்றுகளில் நிறையுமாறு வந்து சேர்ந்து கொண்டிருக்கும். இத்தகைய மாலைக் காலத்திலுங்கூட, எம் தலைவர் எம்மை நினையார் ஆயினர். அங்ஙனமாயின், நாளைக் காலை வேளைக்குள் யாம் எந்நிலை உறுவேமோ, பாணனே?" என்று, அவன் இல்லத்துத் தலைவியானவள் சொல்லினள்.

அதற்கு எதிராக எதுவும் சொல்லுவதற்கு இயலாதவ னாயினேன். என் நல்ல யாழிலே செவ்வழிப் பண்ணினை மெல்லென இசைத்தேன். கடவுளைப் போற்றினேன். அவளுடைய

துன்பத்தை என் உடலுள்ளும் நிறுத்தியவனாக, யானும், அவளுடைய நிலைமையாகிய துயருக்கே செல்லலானேன்.

தூண்டப்பெறும் வேகங்கொண்ட குதிரையின், எதிர்ப் படும் தடைகளாகிய அவற்றை விலக்கி, முன்செல்லும் செலவு மிகுதியாகக், கற்களிலே மோதி ஒலிக்கும் பல ஆரங்களையுடைய தேருருளையின் ஒலியானது, கார்காலத்து மேகங்களின் இடி முழக்கினைப்போல ஒலிசெய்ய, முனையாகிய நல்லூரையுடைய வன் வரும், அணிசெய்யப் பெற்ற நெடுந்தேரினை அவ்வேளையிற் கண்டேன். அவளும் தன் துயர் தீர்ந்தனள்.

**சொற்பொருள்:** 2. தாஅய் - தாவி. 9. மேயலருந்து - மேயலாக ஆர்ந்த, மேயல் - உணவு. மதவு - வலி. 10. செருத்தல் - பசுவின் மடி. பிலிற்ற - புறப்படவிட. 16. பையுண் - நோய்.

**விளக்கம்:** இரலை தன் பிணையைத் தழுவிச் செல்லும் காட்டுவழி வருபவராயிருந்தும் எம்மை மறந்தாரோ? இதன்கண் உட்பொதிந்துள்ள ஏக்கத்தை உணர்க. பாணன் கடவுளை வாழ்த்தியது, அவளுக்காக இரங்கி அருளுதலை வேண்டி என்க.

'கடவுள் வாழ்த்தி' என்பது காண்க. கடவுள் என்னும் இறைக்குரிய சொல்லின் ஆட்சி பழைமையானது என்பதனையும் இதனால் அறிக. கடந்து நின்றும், உள் நிறைந்து நின்றும் உயிர்க்கு உதவுஞ் சக்தியையே 'கடவுள்' என்றனர்.

## 15. காப்பு இகந்து போகி!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய தாய் சொல்லியது. **சிறப்பு:** கோசர்களின் துளுநாடு; பாழிமலைத் தலைவனான நன்னன்.

(தன்னுடைய மகள் களவிலே கூடிவருவதை, அவளுடைய உடலினும் செயலினும் காணப்பெற்ற புதுப்புது மாற்றங் களினால் உணர்ந்தாள் தாய். அவள் மனம் பெரிதும் வருந்தியது. தன் மகளை, வீட்டைவிட்டு அயலே செல்லுதலும் கூடாதெனத் தகைந்து இற்செறித்தாள். மகளோ, தன் காதலனுடன் கலந்த அன்பினள். அதனால், எப்படியோ கட்டுக் காவல்களை எல்லாம் கடந்து, அவனுடன் வெளியேறிப் போய்விட்டாள். அப்போது, தாய் சொல்லியது இது.)

**எம்வெங் காமம் இயைவது ஆயின்,**
**மெய்ம்மலி பெரும்பூண், செம்மற் கோசர்**
**கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த**
**பாகல் ஆர்கைப் பறைக்கட் பீலித்**
**தோகைக் காவின் துளுநாட்டு அன்ன,** 5

**வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின்**
**செறிந்த சேரிச் செம்மல் மூதூர்,**
**அறிந்த மாக்கட்டு ஆகுக தில்ல -**
**தோழி மாரும் யானும் புலம்பச்,**
**சூழி யானைச் சுடர்ப்பூண் நன்னன் 10**

**பாழி அன்ன கடியுடை வியன்நகர்ச்**
**செறிந்த காப்பு இகந்து, அவனொடு போகி,**
**அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத்**
**துய்த்த வாய, துகள்நிலம் பரக்க,**
**கொன்றை யம்சினைக் குழற்பழம் கொழுதி, 15**

**வன்கை எண்கின் வயநிரை பரக்கும் -**
**இன்துணைப் படர்ந்த கொள்கையொடு ஓராங்குக்,**
**குன்ற வேயின் திரண்ட என்**
**மென்தோள் அஞ்ஞை சென்ற - ஆறே!**

அவளுடைய தோழிமார்களும் யானும் அவளைக் காணாது புலம்புகின்றோம். முகபடாம் அணிந்த போர் யானைகளையும், ஒளிசெய்யும் அணிகளையும் உடையவன் நன்னன். அவனுடைய **பாழி** என்னும் ஊர் மிகுந்த கட்டுக் காவல்களை உடையது. அதைப்போன்று காவல் செறிந்து விளங்கிய, தந்தையினது பெரிய இல்லத்தின் காவலையும் கடந்து சென்று விட்டனள். அவள் காதலனான அவனோடும் உடன்போக்கிலே தானும் போய்விட்டனள்.

அருஞ்சுரத்து இருப்பையிலே ஆர்க்குக் கழன்ற புதிய பூக்கள் விளங்கும். அவ்விடத்தேயுள்ள கரடிகள், அப் புதுப் பூக்களைத் தின்னும், அங்ஙனம் தின்றவாயினவாய், அவை நிலம் புழுதி பரக்கும்படியாகச் செல்லும். சென்று கொன்றை மரத்தின் அழகிய கிளைகளிலேயுள்ள குழல் போன்ற கொன்றைப் பழங்களைக் கோதும். வலியமைந்த கைகளையுடைய அக் கரடிகளின் வலிய கூட்டம் அங்ஙனம் பரந்து செல்லுகின்ற வழியிலே அவள் சென்று விட்டனள்! குன்றத்து மூங்கிலைப் போன்ற, திரண்ட மென்மையான தோள்களையுடைய எம் அன்னை, அங்ஙனம் போய் விட்டனள்!

மெய்ம்மையான மொழிகளால் சிறப்புற்றோர், பேரணிகளை உடைய செம்மல்கள், கோசர். அவருடைய நாடு துளு நாடு. தலையிலே ஆர்க்கினையுடைய, திரண்ட பசுமையான காய்கள் முற்றிப் பழுத்த பாகற் பழங்களைத் தின்னும், பறைபோல வட்டமான கண்களையுடைய தோகைகளைக் கொண்ட மயிலினங்கள் நிறைந்திருக்கும் சோலைகளை உடையது அத் துளு நாடு. அவர்கள் செல்லும்

வழியிடையிலேயுள்ள நெருங்கிய சேரிகளைக் கொண்ட தலைமைபெற்ற ஊர்கள் எல்லாம் அத் துளு நாட்டைப் போன்றே, பொருளற்று வரும் புதியவர்களைத் தாங்கிப் பேணும் பண்பினை அறிந்த மக்கள் தொகையினை உடையவாகுக! எம்முடைய மிகுதியான ஆர்வம் கைகூடுவதென்றால், அங்ஙனமே எல்லாம் ஆகுக!

**சொற்பொருள்:** 3. கொம்மை - பெருமை. அம் - சாரியை. குடுமி - தலையிலே ஆர்க்கு. 4. பறைக்கண் - வட்டமான கண். அறிந்த மாக்கள் - வழங்கும் பண்பினை அறிந்த மாக்கள்; முகமறிந்த மாக்கள் - என்பர். கொடையிலே மடம் பட்டவர் எனல்பற்றி 'மாக்கள்' என்றனர். 19. அஞ்ஞை - அம்மை மகளை, 'எம் அம்மை!' என விளிப்பது, இன்றும் தமிழ் வழக்கு ஆகும். பாழி - ஓர் ஊர். நகர் - மாளிகை.

**விளக்கம்:** அவர் சென்றவிடங்களில் எத்தகைய துன்பமும் இல்லாது நலமுடன் இருக்க வேண்டுமென விரும்பும் தாயுள்ளம் இங்ஙனம் விரும்புகிறது. கோசர் வாய்மையிற் சிறந்தவர் என்பது போல வண்மையிலும் சிறந்தவர் என்பதும் இதனால் விளங்கும். நன்னனின் பாழிக் காவல் போல விழிப்புடைய காவலைக் கடந்து சென்றனள் என்பது, தலைவியின் காதல் மிகுதியையும், அவளைத் தாய் தடைசெய்ய முயன்ற முயற்சியின் அளவையும், அது பலியாமற் போனமையையும் விளக்கும்.

**உள்ளுறை பொருள்:** "கரடி இருப்பைப் பூவின் இனிமையிலே செருக்குடையதாகிக் கொன்றைப் பழங்களைக் கோதிப் போனதுபோல, எம் மகளும், அவனிடம் கொண்ட தொடர்பின் இனிமைச் செருக்கினால், உடன் பழகிய தோழியரையும், பெற்று வளர்த்த எம்மையும் ஒதுக்கிப் போயினாளே!" என்பதாம்.

## 16. நீயும் தாயை இவற்கு!

**பாடியவர்:** சாகலாசனார். **திணை:** மருதம். **துறை:** பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைமகன், 'யாரையும் அறியேன்' என்றனன்; அவனுக்குத் தலைமகள் கூறியது.

*(தன் கணவன் பரத்தை ஒருத்தியுடன் உறவு கொண்டிருந்ததனை அவன் மனைவியும் அறிந்தாள். வீடு வந்த அவனோ, தான் எவரையும் அறியேன் என்றான். தன் கணவனின் சாயலுடைய வனாக இருந்த தன் புதல்வனை, அந்தப் பரத்தை ஒரு சமயம் காதலுடன் அணைத்து வாஞ்சை காட்டிய நிகழ்ச்சியைக் கூறி, அவனுடைய உறவைத் தானும் அறிந்திருப்பதை வெளியிடுகின்றாள் அந்த மனைவி.)*

**நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்**
**தாதின் அல்லி அவிர் இதழ் புரையும்,**
**மாசுஇல் அங்கை, மணிமருள் அவ்வாய்,**
**நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்,**
**யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத், 5**

**தேர்வழங்கு தெருவில், தமியோற் கண்டே,**
**கூர்எயிற்று அரிவை குறுகினள்; யாவரும்**
**காணுநர் இன்மையின், செத்தனள் பேணிப்,**
**பொலங்கலம் சுமந்த பூண்தாங்கு இளமுலை,**
**'வருகமாள, என்உயிர்!' எனப் பெரிது உவந்து, 10**

**கொண்டனள் நின்றோட் கண்டு,நிலைச் செல்லேன்,**
**'மாசுஇல் குறுமகள்! எவன் பேதுற்றனை?**
**நீயும் தாயை இவற்கு?'என யான்தற்**
**கரைய, வந்து விரைவனென் கவைஇ,**
**களவு உடம்படுநரின் கவிழ்ந்து, நிலம்கிளையா, 15**

**நாணி நின்றோள் நிலைகண்டு, யானும்**
**பேணினென் அல்லெனோ - மகிழ்ந! - வானத்து**
**அணங்குஅருங் கடவுள் அன்னோள், நின்**
**மகன்தாய் ஆதல் புரைவது-ஆங்கு எனவே!**

*நீர் நாய்களையுடைய பழைய நீர்த்தேக்கம் ஒன்று, அதன்கண் தாமரைகள் தழைத்திருக்கும். அத் தாமரைகளின் பூந்தாதாகிய அல்லியின் அயலே இருக்கும் மெல்லிய இதழினைப் போன்ற, குற்றமற்ற உள்ளங்கையினை உடையவன்; பவளத்துண்டுகள் போன்ற சிவந்த அழகிய வாயினை உடையவன்; நாவினாற் பயின்று பழகித் திருத்தமாகப் பேசப் படாததும், ஆனால் கேட்டார்க்கு மகிழ்ச்சியைத் தருவது மாகிய, தேனினும் இனிக்கும் குதலைச் சொற்களைப் பேசுபவன்; காண்பவர் யாவரும் விருப்பமுறுகின்ற கவர்ச்சியினை யுடையவன்; பொற்றொடி அணிந்தவன்; நம் புதல்வன்!*

*பொன் அணிகளைச் சுமந்து வருபவள் போல ஏராளமான நகைகளை அணிந்திருந்த, கூர்மையான பற்களையுடைய நின் காதற் பரத்தையானவள், அவன் சிறுதேர் ஓட்டி விளையாடிக் கொண்டு தெருவிலே தமியனாய் நின்றதைக் கண்டனள். நின்னைப் போன்று அவனும் தோற்றும் ஒப்புமையினைக் கருதிப் போற்றினள். எவரும் காண்பவர் இல்லாமையினால் துணிந்து அவனருகே சென்றாள். மிகவும் மகிழ்வினை உடையவளாக, 'என் உயிரே! என்னிடம் வருவாயாக' என்றாள். அவனும் செல்லப், பூண்களை அணிந்த தன் இளைய முலைகளிலே அவனை அணைத்துக் கொண்டாள். அதனை யானும் அன்று கண்டேன்.*

நான் நின்ற நிலையிலிருந்து, அதனைக் காணாதவள் போலத் திரும்பிவிடவில்லை. விரைந்து போய், அவளை அணைத்துக் கொண்டேன். "மாசற்ற இளைய மகளே! ஏன் மயங்குகின்றனை? நீயும் இவனுக்கு ஒரு தாய்தானே!" என்று அவளிடம் கூறினேன்.

தாம் செய்த களவினைக் கண்டுகொண்டவர் முன்பாக களவுசெய்தவர், தம் தவறை ஒப்புக் கொண்டு தலைகவிழ்ந்து நிற்பதுபோல, அவளும் என்முன் முகம்கவிழ்ந்து நின்றனள். நிலத்தைத் தன் கால்விரலாற் கீறினவளாக வெட்கியும் நின்றனள். வானத்துத் தெய்வமாக விளங்குகின்ற, அரிய கற்புக் கடவுளான அருந்ததியைப் போன்ற அவள், நின் மகனுக்குத் தர்யாக ஆகுதல் பொருந்துவதே! எம் மகிழ்நனே! அப்படியே, யானும் அவளைப் போற்றினேன் அல்லனோ?

**சொற்பொருள்:** 3. மணி - பவள மணி. 4. நவிலல் - பழகுதல். யாவரும் - அனைவரும், பகைவரும். 6. தேர் - சிறுதேர்; தேர் வழங்கு தெரு, தலைவனின் தேர் செல்லுகின்ற தெருவுமாம்; அதன்கண் தமியனாய் நின்ற புதல்வன் என்க. 8. செத்தனள் பேணி - கருதிப் பேணி. செத்து - ஒப்பும் ஆம். 12. எவன் பேதுற்றனை என்றது, அவள் கொண்ட பதற்றங் கண்டு கூறியது. 18. அணங்கரும் கடவுள் - பிறரைத் தன் அழகால் வருத்துகின்ற எய்தற்கரிய தெய்வமகள்; 'தாக்கணங்கு' என்னும் குறள்.

**விளக்கம்:** தான் அவளைத் தன் தங்கையாக உவந்து ஏற்றுக்கொண்டது போலக் கூறினும், அவளை எள்ளுதலே உட்கிடக்கை என்க. 'பூண் விளங்கு இளமுலை' என்றது, தன்னினும் இளமை நலன் உடையவள் அவள் எனக் கருதிக் காமுற்ற அவனைச் சுட்டி எள்ளுவது. 'வருக மாள என் உயிர்' என்றது, அப் பரத்தையும் நின் மையலிலேயே மூழ்கியுள்ளனள் எனக் கூறி, அஃது அவளுக்கு இயல்பன்மையென்று நகையாடிதாம்.

'நீயும் தாயை இவற்கு' எனக் கூறும் மரபினைச் சாத்தனார் மணிமேகலையுள், மணிமேகலையை 'மாபெரும் பத்தினி மகள்' எனக் கண்ணகியின் மகளாக மாதவி கூறுவதாகக் கூறுவதனாலும் அறியலாம்.

## 17. சீறடி வல்ல கொல்!

**பாடியவர்:** கயமனார். **திணை:** பாலை. **துறை:** மகளைப் போக்கிய செவிலித்தாய் கூறியது.

(செல்வமாக வளர்ந்த கன்னி, இற்செறிப்பையும் கடந்து, காவலனுடன் சுரத்து வழியே சென்றனள். 'அவள் அடிகள் அந்தப் பாதைவழி நடக்கவும் வல்லதோ' என்று ஏங்கித் துயருறுகிறாள்,

அவளைப் பேணி வளர்த்த செவிலித் தாய். தாய்மையின் பாசமும், காதலின் சக்தியும் புலப்படத் தெளிவுபடுத்தும் பாடல் இது.)

**வளம்கெழு திருநகர்ப் பந்துசிறிது எறியினும்,**
**இளந்துணை ஆயமொடு கழங்குஉடன் ஆடினும்,**
**'உயங்கின்று, அன்னை! என்மெய்'என்று அசைஇ,**
**மயங்கு வியர் பொறித்த நுதலள், தண்ணென,**
**முயங்கினள் வதியும் மன்னே! இனியே, 5**

**தொடிமாண் சுற்றமும் எம்மும் உள்ளாள்,**
**நெடுமொழித் தந்தை அருங்கடி நீவி,**
**நொதும லாளன் நெஞ்சுஅறப் பெற்றஎன்**
**சிறுமுதுக் குறைவி சிலம்புஆர் சீறடி**
**வல்லகொல், செல்லத் தாமே - கல்லென - 10**

**ஊர்எழுந் தன்ன உருகெழு செலவின்,**
**நீர்இல் அத்தத்து ஆர்இடை, மடுத்த,**
**கொடுங்கோல் உமணர், பகடுதெழி தெள்விளி**
**நெடும்பெருங் குன்றத்து இமிழ்கொள இயம்பும்,**
**கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல், 15**

**பெருங்களிறு உரிஞ்சிய மண்அரை யாஅத்து**
**அருஞ்சுரக் கவலைய அதர்படு மருங்கின்,**
**நீள்அரை இலவத்து ஊழ்கழி பல்மலர்,**
**விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்,**
**நெய்உமிழ் சுடரின் கால்பொரச் சில்கி, 20**

**வைகுறு மீனின் தோன்றும்**
**மைபடு மாமலை விலங்கிய சுரனே!**

செல்வம் பொருந்திய அழகிய மாளிகையிடத்தே, சிறிது நேரம் பந்து எறிந்து ஆடினாலும், தன்னொத்த தோழியராகிய இளையபெண்கள் கூட்டத்துடன் ஒருங்கிருந்து சிறிது நேரம் கழங்கு ஆடினாலும், 'அன்னாய்! என் உடல் தளர்கின்றது!' என்று கூறித் தளர்பவள் எம் மகள். வியர்வு அரும்பி நிறையும் நேறியினளாகத், தண்ணென்று எம் மேனி குளிர, வாஞ்சையுடன் அந்நிலையே வந்து எம்மைக் கட்டியும் கொள்பவள்! அங்ஙனம் அவள் வாழ்ந்த மென்மையெல்லாம் கழிந்ததே!

இப்பொழுதோ, தொடியணிந்து மாட்சியுற்ற தன் தோழியரையும், எம்மையும் நினையாதவளாயினாள்! மிக்க புகழினை உடைய தந்தையின் கடத்தற்கரிய காவலினையும் எப்படியோ கடந்து சென்றாள்!

நீர்ப்பசையற்ற சுரங்களின் அரிய இடங்களிலே, கொடுமையான அடிக்குங் கோல்களையுடைய உப்புவாணிகர்,

மேற்செல்லாது நின்ற எருமைக்கடாக்களை அடித்து உரப்பி ஒட்டுகின்ற தெளிவான ஒலிகள், ஊர் ஒருமிக்கத் திரண்டு எழுந்தாற்போன்ற ஆரவாரத்துடன் கேட்கும். அவை நெடிய பெரிய மலையிலே எதிரொலி உண்டாக வந்து இசைக்கவும் செய்யும். பக்க மலைகள், கடுமையான கதிரவனின் கதிர்கள் தாக்கி முறுகிய மூங்கில்கள் அடர்ந்தனவாக விளங்கும். தம் உடலிலே சேற்றினைப் பொருந்திய பெரிய களிறுகள் உரசுதலால், காய்ந்த மண்ணைப் பொருந்தியவாக விளங்கும் அடிமரங்களுடன் யாமரங்கள் தோன்றும், கவர்த்த வழிகள் பலவற்றையுடைய, கடத்தற்கு அரிய சுரம் அது. அதன் பக்கங்களிலே, நீண்ட அடிமரங்களை உடைய இலவரமரத்தின் முதிர்ச்சிமிக்க பலவாகிய பூக்கள், விழாவினை மேற்கொண்ட பழைய ஆற்றலையுடைய முதிய ஊரிலே ஏற்றிவைத்த நெய்பெய்த விளக்குகளின் சுடர் தெரித்து விழுவதுபோலக் காற்றுப் பொருதலால் சிதறி வீழும். மரத்தில் பூக்களும் மிகச் சில வாகிப்போம். விடியற்காலத்துத் தோன்றும் விண்மீன்களைப் போல அவை பின்னர் அருகித் தோன்றும். மேகங்கள் பொருந்தும் பெருமலைகள் குறுக்கிட்டுக் கிடக்கும் அத்தகைய சுரநெறியிலேயும் அவள் நடந்து சென்றனளே!

ஏதிலாளனான அவள் காதலனது நெஞ்சத்தைத் தனக்கே உரியதாகப் பெற்ற, என் சிறிய மூதறிவுடைய மகளது, சிலம்பு விளங்கும் சிற்றடிகள்தாம், அவ்வழிச் செல்லுவதற்கும் வல்லனவாமோ? ('ஆகாவே' என எண்ணி நைந்தது இது.)

**சொற்பொருள்:** 9. சிறுமுதுக் குறைவி - பருவத்து இளையளாயினும்அறிவினாலே மிகுந்திருப்பவள். 11. உரு - உட்கு. 13. தெழித்தல் - உரப்புதல். 12. மடுத்த - போகாது சண்டித்தனம் செய்த. 13. பகடு - எருமைக் கடா. 14. இமிழ் - இசை. 15. பிறங்கல் - மலைப்பக்கம். 18. ஊழ்கழி- முறைமை மிகுந்த.

**விளக்கம்:** பந்தாடுதலும் கழங்காடுதலும் தமிழகச் சிறுமியர் ஆடும் விளையாட்டுக்களாம். அதற்கே உடல் வருந்திற்று என்பவள், எங்ஙனம் போயினளோ எனப் புலம்புகிறாள். "பகடு மடுத்த நெறி, கடுங்கதிர் வேய் திருகிய நெறி, மண் அரை யாத்த நெறி, கவலையை அதர்படுநெறி, இலவத்துப் பன்மலர் கால்பொரச் சில்கிய நெறி" என, வழியின் வேனற்கொடுமையைக் கூட்டி உணர்க.

## 18. பகல் வரினும் வருக!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** தோழி 'இரவு வருவானைப் பகல் வர' என்றது.

(ஒரு தலைவியைத் தான் களவிடத்தே கூடி இன்புற்ற ஒரு தலைவன், இரவுவேளையிலே வழியின் ஏதங்களையும் பொருட்படுத்தாமல் அவளை நாடி வருகின்றான். அதனைத் தலைவியால் பொறுக்க முடியவில்லை. ஒரு நாள் அவனுக்குத் துன்பம் என்றால் மறுநாள் அவள் வாழ்பவள் அல்லள். எனவே, தோழி, தன் தலைவியின் உள்ளத்தை உணர்ந்து, பகலிலேயே அவர்கள் சந்திக்கலாம் எனவும், அதற்கேற்ற இடம் எது எனவும் தலைவனிடம் கூறி, அவனது இரவு வருகையை நிறுத்த முயலுகிறாள்.)

**நீர்நிறம் கரப்ப, ஊழுறுபு உதிர்ந்து,**
**பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்று,**
**கராஅம் துஞ்சும் கல்உயர் மறிசுழி,**
**மராஅ யானை மதம்தப ஒற்றி,**
**உராஅ ஈர்க்கும் உட்குவது நீத்தம் -** 5

**கடுங்கண் பன்றியின் நடுங்காது துணிந்து,**
**நாம அருந்துறைப் பேர்தந்து, யாமத்து**
**ஈங்கும் வருபவோ? - ஓங்கல் வெற்ப! -**
**ஒருநாள் விழுமம் உறினும், வழிநாள்,**
**வாழ்குவள் அல்லள், என்தோழி; யாவதும்** 10

**ஊறுஇல் வழிகளும் பயில வழங்குநர்**
**நீடுஇன்று ஆக இழுக்குவர், அதனால்,**
**உலமரல் வருத்தம் உறுதும், எம்படப்பைக்**
**கொடுந்தேன் இழைத்த கோடுஉயர் நெடுவரை,**
**பழம்தூங்கு நளிப்பிற் காந்தள்அம் பொதும்பில்,** 15

**பகல்நீ வரினும் புணர்குவை - அகல்மலை**
**வாங்குஅமைக் கண்இடை கடுப்ப, யாய்**
**ஓம்பினள் எடுத்த, தடமென் தோளே.**

உயர்ந்த மலையினையுடைய தலைவனே! நீரின் நிறம் மறையுமாறு, முதிர்புற்று உதிர்ந்த அழகிய மலர்கள் நெருங்கிய காட்டாற்றிலே, முதலைகள் பல கிடக்கும். உயர்ந்த கல்லிலே மோதி மீளுகின்ற சுழிகளும் பல உள்ளன. தன் இனத்தோடு சேராது, தனித்துத் திரியும் களிற்று யானையை, அதன் மதம் அழியுமாறு மோதி, வலிமையுடன் இழுத்துச் செல்லும் அச்சந்தரும் வெள்ளமும் அதன்கண் செல்லும்.

அவ் வெள்ளமுடைய காட்டாற்றினையும், அஞ்சாமையை உடைய காட்டுப் பன்றியைப்போல, நீயும் நடுக்கமின்றிக் கடந்து வருகின்றனை. அணங்குகள் உறைவன என்பதனால் அச்சம் விளைகின்ற அரிய துறையினையும் கடந்து, நள்ளிரவின் நடு யாமத்திலே இவ்விடத்திற்கு வருபவரும் உளரோ? ஒருநாள்

இரவு நீ துன்பம் உற்றனை என்றாலும், அடுத்து வரும் மறுநாட் காலையிலேயே, என் தோழி உயிரோடு வாழ்பவள் அல்லளே! எவ்விதமான இடையூறும் இல்லாத வழிகளானாலும், அங்குப் பலகாலும் போய்வருவாரும், நீடுதல் இலையாகத் தவறுதலும் செய்வரன்றோ? அதனால், நின் இரவுவருகை குறித்து யாங்கள் மனஞ்சுழலும் வருத்தத்தினையே அடைகின்றோம்.

அகன்ற மலையிலுள்ள வளைந்த மூங்கிலின் கணுக்களுக்கு இடைப்பட்ட இடத்தைப்போல, எம் தாய் போற்றி வளர்த்தவை அகன்ற மென்மையான எம் தலைவியின் தோள்கள். எம் தோட்டத்தினை அடுத்துள்ள, வளைந்த தேனிறால் வைக்கப் பெற்ற முகடுகள் உயர்ந்திருக்கும் நெடிய மலைக்கண், பழங்கள் தொங்குகின்ற மரச் செறிவினுள், காந்தள் செறிந்த அழகிய புதரினிடத்தே, பகற் போதிலே நீ வந்தாயானாலும், அவள் தோள்களைத் தழுவிப் பொருந்துவை! (அதனால், இனிப் பகலிலேயே வருக என்றனள் என்க.)

**சொற்பொருள்:** 3. கல் உயர் மறி சுழி - உயர் கல் மறி சுழி. 4. மராஅ யானை - மதத்தாலே பிடியொடுங் கன்றொடும் மருவாத யானை. 9. விழுமம் - இடர். வழி நாள் - பின்னாள்; விழுமம் அறிவது பின்னாள்; அந்நிலையே அவள் வாழாள் என்க. 12. நீடின்று - நீடுதல் இலையாக.

**விளக்கம்:** இனி, 'தேனிழைத்த நெடுவரை, எனவும் பழம் தூங்கும் நளிப்பின் எனவும், காந்தளம் பொதும்பு எனவும் பகற் குறியிடத்தைக் குறிப்பிடுவதனால்; தேன் எடுக்க வருவாரும், பழம் சேகரிக்க வருவாரும், பூப்பறிக்க வருவாருமாகப் பகல்வேளை அவ்விடத்து மக்கள் நிறைந்திருப்பர் என்பது கொண்டு, பகற்குறியும் குறிப்பால் மறுத்து, வரைவுகடாயினாள், என்று கொள்ளுக.

## 19. எம்மே மறவல் ஓம்புமதி.

**பாடியவர்:** பொருந்தில் இளங்கீரனார். **திணை:** பாலை. **துறை:** நெஞ்சினால் பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன், தலைமகளுடைய நலன் விரும்பி எண்ணிய, தன் நெஞ்சிற்குக் கூறியது.

(நெஞ்சில் பொருளாசை மிகுந்தது, அவன் தலைவியைப் பிரிந்து சென்றான். இடைவழியில், அவன் நெஞ்சிலே அவளுடைய நினைவு மிகுந்தது அவளை அடையும் ஆசையும் அதிகமாயிற்று. தன்னைத் தூண்டிப் பிரியச் செய்த தன் நெஞ்சமே தனக்குத் துணையற்று, அவளை நாடிப் பின் செல்வதனைக் கண்டு, அவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதாக அமைந்தது இது.)

**அன்றுஅவண் ஒழிந்தன்றும் இலையே; வந்துநனி**
**வருந்தினை - வாழி,என் நெஞ்சே! - பருந்துஇருந்து**
**உயாவிளி பயிற்றும், யாஉயர் நனந்தலை,**
**உருள்துடி மகுளியின் பொருள்தெரிந்து இசைக்கும்**
**கடுங்குரற் குடிஞைய நெடும்பெருங் குன்றம், 5**

**எம்மொடு இறத்தலும் செல்லாய்; பின்நின்று,**
**ஒழியச் சூழ்ந்தனை ஆயின், தவிராது,**
**செல்இனி; சிறக்கநின் உள்ளம்! வல்லே**
**மறவல் ஓம்புமதி; எம்மே - நறவின்**
**சேயிதழ் அனைய ஆகிக், குவளை 10**

**மாஇதழ் புரையும் மலிர்கொள் ஈர்இமை,**
**உள்ளகம் கனல உள்ளுதொறு உலறி,**
**பழங்கண் கொண்ட, கதழ்ந்துவீழ், அவிர்அறல்**
**வெய்ய உகுதர, வெரீஇப், பையென,**
**சில்வளை சொரிந்த மெல்இறை முன்கை 15**

**பூவிழ் கொடியின் புல்லெனப் போகி;**
**அடர்செய் ஆய்அகல் சுடர் துணைஆக,**
**இயங்காது வதிந்த நம் காதலி**
**உயங்குசாய் சிறுபுறம் முயங்கிய பின்னே!**

*எம் நெஞ்சமே! நீ வாழ்க! நாம் அவளைப் பிரிந்து வந்த அன்றே, அவ்விடத்தேயே ஒழிந்து கிடந்தாயும் அல்லை. இவ்வளவு தொலைவு வந்து, இப்போது மிகவும் வருத்த முற்றனை!*

*பருந்துகள் இருந்து, வழிச்செல்வோர் அஞ்சி வருந்தும் கூக்குரலைப் பலகாலும் எழுப்பும். யாமரங்கள், தம் உயர்ந்த அகன்ற கிளைகளிலே, உருள்கின்ற இழுகுபறையின் ஓசையைப் போலப், பொருள் தெரியுமாறு ஒலிக்கும் கடுமையான குரலினையுடைய ஆந்தைகளை உடையனவாக இருக்கின்றன. இத்தகைய நெடும் பெரும் குன்றத்தினை எம்மோடு சேர்ந்து நீயும் கடந்து செல்லாய் ஆயினை! பின்னே சென்று ஒழிந்துபோகவே கருதினாய்! ஆனால், தடையின்றி இப்போதே விரைந்து போய்விடுவாயாக! நின் உள்ளத்து எண்ணம் சிறப்பதாக!*

*முன்னர்க் குவளையினது கரிய இதழினை ஒப்பன அவள் கண்கள்; அவை நீர் மிகுதியுடையவாக மாறி, இமைகளும் நனைந்திருக்கும். அதனால், பின்னர் நறவம் பூவின் சிவந்த இதழ் போலாகும். உள்ளத்தினுள்ளே கொதிப்பும் அதிகமாக, நினைக்கும் போதெல்லாம் வற்றித் துன்பம் கொள்வதற்கு ஏதுவான விரைந்துவீழும் கண்ணீர், வெப்பமுடையதாய்ச் சொரியும். பிரிவினால், அவள் உள்ளம் வெருவியிருப்பாள். சில*

வளைகள் சொரியப் பெற்ற மெல்லிய சந்தினையுடைய முன்கையினள் அவள். பூக்கள் ஒழியப் பெற்ற கொடிபோலப் பொலிவில்லாமலும், பையப் பையவும் அவள் செல்வாள். சென்று, பொற்றகட்டான் இயன்ற அகலிடத்துத் தான்ஏற்றிய அந்தி விளக்கே துணையாக, எங்கணும் செல்லவும் சக்தியற்றவளாகச் சோர்ந்திருப்பாள். அந்த நம் காதலியின், வருந்தி மெலிந்த பிடரினைத் தழுவிய பின்னராவது, எம்மை மறத்தலை நீக்கி விடுவாயாக!

**சொற்பொருள்:** 1. வந்து - போந்து. 4. உருள்துடி கடிப்பு - உருளுகின்ற இழுகு பறை. மகுளி - ஓசை. 4. ஆந்தைக் குரல், 'குத்திப் புதை' என்றதோர் பொருள் தோன்ற இசைக்கும். 7. சிறத்தல் - நினைத்தது பெறுதல். 9-14 நறவின் சேயிதழ் செவ்வரிக்கு ஒப்பாகவும், குவளை கண்வடிவிற்கு ஒப்பாகவும் உரைப்பாரும் உளர். 14. வெரீஇ - பிறர் தன் நிலை காண்பாரோ என அஞ்சி. 15. சில்வளை சொரிந்த என்றதனால், பல்வளை எல்லாம் முன்பே கழன்றோடின; சில்வளைகள் தாமும் பின்னர்ப் போயின என்க. 17. அடர் - பொற்றகடு. உயங்கு புறம் - மெலிந்த புறம்.

**விளக்கம்:** சிறுபுறம் முயங்கி என்றது, பின்னாக மறையச் சென்று, பின்னாகவே கட்டியணைத்து, அவளை வியப்பிலாழ்த்தி இன்புறல். 'பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சிற்குச் சொல்லியது எனவும், துறைபற்றிய வேறுபாடும் உண்டு. 13. 'கதழ்ந்து வீழவிரறல்" என்பதனைக், 'கலிந்து வீழவிரறல்' எனவும் கொள்வர்.

## 20. கொடிது அறி பெண்டிர்!

**பாடியவர்:** உலோச்சனார். **திணை:** நெய்தல். **துறை:** பகற்குறிக்கண் வந்த தலைமகன் சிறைப்புறத்தான் ஆகத், தோழி, தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது.

(கானற்சோலையிலே ஒரு நாள், பகற்குறியிடத்தை நாடித் தலைவன் வந்திருக்கிறான். தனக்குமுன் வந்து அங்கிருக்கும் தோழியும் தலைவியும் ஏதோ உரையாடிக் கொண்டிருப்ப, அயலே சற்று ஒதுங்குகின்றான். அவன் வந்ததும், அவன் பக்கத்திலே மறைந்து நிற்பதும் தோழி அறிந்தாள். ஊரலரும் இற்செறிப்பும் ஏற்பட்டதனைத் தலைவிக்குக் கூறுபவள் போலத் தலைவனுக்கு உரைக்கின்றாள். அவன், விரைவிலே வந்து மணம் வேட்டல் வேண்டும் என்பது கருத்தாகும்.)

**பெருநீர் அழுவத்து எந்தை தந்த**
**கொழுமீன் உணங்கற் படுபுள் ஓப்பி,**
**எக்கர்ப் புன்னை இன்நிழல் அசைஇ**
**செக்கர் ஞெண்டின் குண்டுஅளை கெண்டி,**
**ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித் 5**

**தாழை வீழ்கயிற்று ஊசல் தூங்கிக்,**
**கொண்டல் இடுமணல் குரவை முனையின்**
**வெண்தலைப் புணரி ஆயமொடு ஆடி,**
**மணிப்பூம் பைந்தழை தைஇ, அணித்தகப்**
**பல்பூங் கானல் அல்கினம் வருதல் 10**

**கவ்வை நல்அணங்கு உற்ற, இவ்வூர்,**
**கொடிதுஅறி பெண்டிர் சொற்கொண்டு, அன்னை**
**கடிகொண் டனளே-தோழி; பெருந்துறை,**
**எல்லையும் இரவும் என்னாது கல்லென**
**வலவன் ஆய்ந்த வண்பரி,**
**நிலவுமணல் கொட்கும்ஓர் தேர் உண்டு எனவே! 15**

*தோழி! கடற்கரை மணல்மேட்டிலேயுள்ள புன்னை மரத்தின் இனிமையான நிழலிலே தங்கியிருப்போம். கடற் பரப்பினின்றும் நம் தந்தை கொணர்ந்து தந்த, கொழுமையான மீனின் வற்றலைக் கவரவரும் பறவைகளை ஓட்டியிருப்போம். சிவந்த நண்டின் ஆழமான வளைகளைத் தோண்டுவோம். புலி நகக் கொன்றையின் உயர்ந்த கிளையிலே, கயிற்றிலே கட்டித் தொங்கவிடப்பெற்ற ஊசலில் அமர்ந்து ஆடுவோம். கீழ்காற்றுக் கொணர்ந்து குவித்த மணலிலே, ஆயத்தாருடன் கூடிக் குரவையாடுவோம். இவையும் வெறுத்தால், வெண்மையான மேற்பரப்பினையுடைய கடல் நீரிலே நம் தோழியருடன் கூடிக் கடல்நீராடுவோம். அழகிய பூக்களுடன் மேவிய, பசுமையான தழை உடையினை அழகு பொருந்த உடுத்துக் கொள்வோம். பலகானற் பூக்களையும் உடைய கடற்கரைச் சோலைக்கு இப்படி நாம் அடிக்கடி விளையாட வருதலைப்பற்றி, இவ்வூரிலே அலர் கூறுதல் ஒன்றினையே அறிந்தவரான பெண்டிர்களுள் சிலர் கூறும் சொற்களை, நம் அன்னையும் கேட்டனளே!*

*கேட்டுப் பகலும் இரவும் என்றில்லாது, பாகன் ஆராய்ந்து கொண்ட அழகிய குதிரைகள் பூட்டப்பெற்று, நிலவொளி போன்ற வெண்மணலில் 'கல்' என்னும் ஒலியுடனே சுழன்று வரும் தேர் ஒன்றும் உண்டு எனவும் எண்ணினளே! நம் வீட்டினிடத்தே காவலையும் மிகுதிப் படுத்தினளே! இனி, என் செய்வோம்? எப்படி வந்து நம் காதலனைச் சந்திப்போம்?*

**சொற்பொருள்:** *1. அழுவம் - கடற்பரப்பு. 4. செக்கர் - சிவந்த. 16. கொட்கை - பரந்து திரிய விடுதல் 5-6. ஞாழலொடும் தாழையொடும் பிணித்த ஊசல் எனவும் கூறுவர். 11. கவ்வை நல்லணங்கு உறுதல் - அலராகிய பேய் பிடித்தல். இப்பாட்டலுக்குப் 'பொருந்தில் இளங்கீரனார் பாடியது' என வேறு பாடமும் உண்டு.*

**விளக்கம்:** *தலைவி தலைவனோடு பகற்குறியிடத்தே சந்திப்பதை அறிந்தபோதும், தோழி தாம் விளையாடுவதற் கெனவே வரவும், சிலர் அலர் உரைத்தனர். அவர், 'கொடிது அறி பெண்டிர்' எனக் கூறும் சொல்நயம் உணர்க. எனினும், தலைவன், தலைவியின் களவுக் கூட்டத்தை அவள் தாய் அறிந்தனள் என உணர்வன்; உணர்ந்து, வந்து வரைந்து கொள்வன் என்பதும் கருத்தாகும். 'நல் அணங்கு' என்றது, இகழ்ச்சிக் குறிப்பு.*

## 21. எழு! இனி வாழி!

**பாடியவர்:** *காவன் முல்லைப் பூதனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள் வலிக்கப்பட்டுப் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்து நின்று மீளலுற்ற நெஞ்சினைக் கழறியது.*

*(ஒரு தலைவன், பொருளாசை மீதூற முன்னர் ஒரு முறை தொலைநாடு நோக்கிச் சென்றனன். அவனுள்ளத்தே மிக்கெழுந்து அவனைச் செல்லத்தூண்டிய அந்த ஆர்வம், நெடுங்காலத்து அவன் உள்ளத்திலே நிலைபெறவில்லை. இடைவழியிலேயே அந்த நினைவு ஒழிய, அவன் காதலியின் நினைவே மிகவும் அதிகமாயிற்று. அப்போது அவன், தன் நெஞ்சிற்குச் சொல்லியதாக அமைந்தது இது.)*

**'மனைஇள நொச்சி மௌவல் வால்முகைத்**
**துணை நிரைத்தன்ன; மாவீழ், வெண்பல்,**
**அவ்வயிற்று, அகன்ற அல்குல், தைஇத்**
**தாழ்மென் கூந்தல், தடமென் பணைத்தோள்**
**மடந்தை மாண்நலம் புலம்பச், சேய்நாட்டுச்** 5

**செல்லல் என்றுயான் சொல்லவும், ஒல்லாய்**
**வினைநயந்து அமைந்தனை ஆயினை; மனைநகப்**
**பல்வேறு வெறுக்கை தருகம் - வல்லே,**
**எழுஇனி, வாழி என் நெஞ்சே! - புரிஇணர்**
**மெல்அவிழ் அம்சினை புலம்ப; வல்லோன்** 10

**கோடுஅறை கொம்பின் வீஉகத் தீண்டி**
**மராஅம் அலைத்த மணவாய்த் தென்றல்,**

**சுரம்செல்மள்ளர் சுரியல் தூற்றும்,**
**என்றூழ் நின்ற புன்தலை வைப்பில்,**
**பருந்து இளைப்படூஉம் பாறுதலை ஓமை 15**

**இருங்கல் விடரகத்து, ஈன்று இளைப்பட்ட;**
**மென்புனிற்று அம்பிணவு பசித்தெனப், பைங்கட்**
**செந்நாய் ஏற்றை கேழல் தாக்க,**
**இரியற் பிணவல் தீண்டலில், பரீஇச்**
**செங்காய் உதிர்ந்த பைங்குலை ஈந்தின் 20**

**பரல்மண் சுவல முரண்நிலம் உடைத்த**
**வல்வாய்க் கணிச்சி, கூழார், கோவலர்**
**ஊறாது இட்ட உவலைக் கூவல்,**
**வெண்கோடு நயந்த அன்பில் கானவர்**
**இகழ்ந்தியங்கு இயவின் அகழ்ந்தகுழி செத்து, 25**

**இருங்களிற்று இனநிரை தூர்க்கும்**
**பெருங்கல் அத்தம் விலங்கிய காடே!**

*'வீட்டுத் தோட்டத்து இளைய நொச்சி மரத்திலேயுள்ள முல்லையின்கண் அரும்பியிருக்கின்ற, வண்டினம் விரும்பும் வெண்மையான முல்லையரும்புகளை, ஒத்தனவாக நிரைத்து வைத்தாற்போன்ற வெண்மையான பல்வரிசையினை உடையவள்; அழகியதாக அமைந்த வயிற்றினள்; அகன்ற அல்குல் தேரினையும் உடையவள்; ஒப்பனை செய்யப்பெற்றுத் தாழ்ந்து தொங்கும் மென்மையான கூந்தலினையும் உடையவள்; மென்மையான பருத்த மூங்கிலைப்போல விளங்கும் தோள்களையும் உடையவள்; தலைவி. 'இத்தகைய நம் தலைவியின் மாண்புற்ற நலன்கள் எல்லாம் வாடுமாறு, தொலைவிலேயுள்ள நாட்டினை நோக்கிச் செல்லவேண்டாம்' என்று யான் அன்றே சொல்லவும், அதற்கு இசையாய் ஆயினை! 'நம் மனைவியின் உள்ளம் களிப்புறும்படியாகப் பல்வேறு செல்வங்களையும் ஈட்டிக் கொணர்ந்து தருவோம்' என, அன்று பிரிந்து செல்லும் செயலையே மிகவும் விரும்பி அமைந்தனை. அஃது உண்மையானால், இப்பொழுதே எழுந்து என்னுடன் வருவாயாக, என் நெஞ்சமே, நீ வாழ்க!*

*வலம் சுரிந்த பூங்கொத்துக்கள் மெல்லென மலர்கின்ற அழகிய கொம்புகள், அப் பூக்களை இழந்தனவாக வருந்துமாறு, வல்லான் ஒருவன் அக்கொம்புகளை அடித்து உதிர்த்துவிட விளங்கும் வெற்றுக் கொம்பினைப்போல, மாமரத்தை அதன் மலர்கள் முற்றும் உதிருமாறு தாக்கி வருத்தும் மணத்தை தன்னிடத்தே உள்ள தென்றல் காற்றானது, சுரநெறியிலே செல்லும் மள்ளர்களது குழன்ற மயிரிலே அம் மலர்களைச்*

சொரியும். அத்தகைய வெம்மை நிலைபெற்றிருக்கும் புன்மையான இடத்தையுடைய ஊர்களை இடையிடையே உடையது காடு.

பருந்துகள் ஈன்று காவற்படும், சிதறிய தலையினவாகிய ஓமை மரங்களையுடைய பெரிய மலையின் குகை ஒன்றிலே, ஈன்று காவற்பட்டது, மென்மையும் ஈன்றதன் அணியையும் உடைய அழகிய பெண் நாய் ஒன்று. அது பசித்ததாக, பசுமையான கண்களை உடைய அச் செந்நாயினது ஏறானது, ஆண் பன்றியினைத் தாக்கியது. அதனைக் கண்டதும் அச்சங் கொண்டு ஓடுகின்ற பெண்பன்றி மோதிச் செல்லுதலினால், பசிய குலைகளையுடைய ஈந்தினின்றும், அதன் செங்காய்கள் அறுபட்டு உதிரும். அப்படிப்பட்ட செங்காய்களுடன், பரற்கற்களும் நிறைந்த, மண்மேடாகிய வன்னிலத்தைக், கூழினை உண்ணும் கோவலராகிய கிணறு வெட்டுவோர், வலிய வாயினையுடைய குந்தாலியினால் உடைத்துக் கிணறு அகழ்ந்தனர். அகழ்ந்தும் நீர் ஊறாது போகவே, அவர்கள் கைவிட்டுச் சென்ற, தழை மூடிய அந்தக் கிணறுகள் காடுகளின் இடையிடையே விளங்கும்.

பெரிய களிற்று இனமாகிய யானைக் கூட்டம், தமது வெண்மையான தந்தங்களைக் கொள்ளவிரும்பிய இரக்கமற்ற வேட்டைக்காரர்கள், தீங்கில்லை என நினைத்துக் கருத்தின்றிச் செல்லும் வழிகளினிடையிலே, தங்களை அகப்படுத்த அகழ்ந்த மறைத்த குழிகளாக அக்கிணறுகளைக் கருதின. அவற்றைத் தூர்த்துக் கொண்டுமிருந்தன. அத்தகைய நிலைமை யினையுடைய, பெருங்கற்களையுடைய வழிகள் குறுக்கிடும், நாம் செல்லுகின்ற காடு. நின் துணையின்றி யான் அதனைக் கடந்து செல்லவியலாது! (அதனால், என்னுடன் இப்பொழுதே எழுக என்பது கருத்து).

**சொற்பொருள்:** மா - வண்டு; திருவும் ஆம். 3. அவ்வயிறு - ஐதான வயிறு. தைஇ - கை செய்து. 6. ஒல்லாய் - அதற்கு இசையாய். 7. மனை - தலைவி; நக - மகிழ; அல்லது வீடுகளிப்புற. 8. தருகம் - தருவேம். 9. புரிஇணர் - வலஞ்சுரிந்த பூங்கொத்து. புலம்ப - கொம்பு, கொம்பு மட்டுமேயாய் வாடித் தனிப்ப. 10. வல்லோன் - பூக்கொள்ள வல்லோனுமாம். சுரியல் - குழன்ற மயிர். 21. முரணிலம் - வன்னிலம். 25. இகழ்ந்தியங்கிய என்றது - இங்கோர் ஏதமும் இல்லை என்று பொருட்படுத்தாது திரியும் வழி.

## 22. நோய் தணி காதலர்!

**பாடியவர்:** வெறிபாடிய காமக்கண்ணியார். **திணை:** குறிஞ்சி. **துறை:** 1. வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்துத் தலைமகள் ஆற்றாளாகத், தோழி தலைமகனை இயற்பழிப்பத்

தலைமகன் இயற்பட மொழிந்தது. 2. தலைமகன் இரவுக்குறி வந்து சிறைப்புறத்தானாகத் தோழியாற் சொல்லெடுக்கப்பட்டுத், தலைமகள் சொல்லியது.

*(1. களவிலே கூடிவரும் காதலன் விரைவிலே திருமணம் வேட்டு வருவதாகவும், அதற்கான ஏற்பாடுகளுடன் திரும்புவதாகவும் கூறிப் பிரிந்து சென்றனன். அவனுடைய பிரிவு நீட்டிக்கவே தலைமகள் ஆற்றாமை உடையவளாயினாள். அவளுடைய வேதனையைக் காணப் பொறாத தோழி, தலைவன்பாற் சென்றனள். சென்று, அவன் செயலைப் பழித்துக் குறை கூறினள். அவன், தான் விரைவிலே வருவதாக இயற்பட மொழிந்து உறுதி கூறுகின்றனன். 2. தலைமகன் இரவுக்குறியிடத்தே வந்து சிறைப் புறத்தானாக இருப்ப, அதனைத் தோழி அறிந்தனள். தலைவியினிடம், அவனைப் பழித்துக் கூறினள். தலைமகள் அது பொறாது, அவனுடைய நேரிய காதலை உரைக்கின்றனள். இவர்கள் பேச்சினால், தலைமகன், இனியும், காலம் தாழ்த்தாது தலைவியை வேட்டுவரல் வேண்டுமென்ற எண்ணம் உடையவனாகின்றான்.)*

**அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும்**
**கணம்கொள் அருவிக் கான்கெழு நாடன்**
**மணம்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்**
**இதுஎன அறியா மறுவரற் பொழுதில்,**
**படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை** 5

**நெடுவேட் பேணத் தணிகுவள்இவள்' என,**
**முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூற,**
**களம் நன்கு இழைத்துக் கண்ணி சூட்டி,**
**வளநகர் சிலம்பப் பாடிப்பலி கொடுத்து,**
**உருவச் செந்திணை குருதியொடு தூஉய்,** 10

**முருகுஆற்றுப் படுத்த உருகெழு நடுநாள்,**
**ஆரம் நாற, அருவிடர்த் ததைந்த**
**சாரற் பல்பூ வண்டுபடச் சூடி,**
**களிற்று-இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்**
**ஒளித்து இயங்கும் மரபின் வயப்புலி போல,** 15

**நல்மனை, நெடுநகர்க் காவலர் அறியாமை**
**தன்நசை உள்ளத்து நம்நசை வாய்ப்ப,**
**இன்உயிர் குழைய முயங்குதொறும் மெய்ம்மலிந்து,**
**நக்கனென் அல்லெனோ யானே - எய்த்த**
**நோய்தணி காதலர் வர, ஈண்டு** 20

**ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே!**

நெடிய மலை உச்சிகள் தெய்வங்களை உடையன. அவ்விடத்திலே இருந்து திரளான அருவிகள் இழிந்துவரும். அவற்றையுடைய காடு பொருந்திய நாட்டிற்கு உரியவன் நம் தலைவன். அவனுடைய அகன்ற மார்பு மணம் கமழ்வது. அதனைத் தழுவப் பெறாததனால் வருந்திய வருத்தம் உடையவர் களாயினோம். அதனை இதனால் உண்டாகியதென்று அறியாதே, எம் தாயும் பிறரும் கலக்க முற்றனர்.

"வணங்காதவரைத் தேய்த்துப் பழித்த பலவாகிய புகழைக் கொண்டவன்; பெரிய கையினையுடைய நெடு வேளாகிய முருகன். அவனைப் போற்றினால் இவள் துயரம் தணிவாள் என, அவ்வேளை அவர்கள் எண்ணினர். அறிவு வாய்த்தலை உடைய முதுபெண்டிர்களும், அதுவே உண்மையாம் என்று கூறினர். ஆகவே, வெறியாடும் களம் நல்ல முறையிலே அமைக்கப்பெற்றது. வேலினை நிறுத்தி அதற்குக் கண்ணியும் சூட்டினர். வளம் பொருந்திய கோயிலிலே ஆரவாரம் உண்டாகு மாறு, வேலனின் புகழையும் பாடினர். வேலனுக்குப் பலிக் கொடையும் இட்டனர். அழகிய செந்தினையைக் குருதியுடன் கலந்தும் தூவினர். இவ்வாறு, முருகனை அவர்கள் வரவழைத் தனர். அச்சம் பொருந்திய அந்த நாளின் நடு இரவிலே -

சந்தனத்தின் மணம் வீசவும், பக்கமலையிலே உள்ள அரிய முழைஞ்சுகளிலே செறிந்துள்ள பலவகையான பூக்களை வண்டுகள் மொய்க்கும்படியாகச் சூடியும், அவன் வந்தான். களிற்று யானையாகிய தனக்கு உரிய இரையினைத் தேர்ந்தெடுக்கும் பொருட்டாக வலிமையுடைய புலியானது, அந்தப் பார்வையோடு கூடியதாகப் பதுங்கிப் பதுங்கிச் செல்வதுபோல, நமது நல்ல மனையினைக் காத்து நிற்கும் காவலர்கள் அறியாதவாறு மறைந்து மறைந்து, நாம் மெலிதற்கு ஏதுவான இந் நோயைத் தணித்தற்கு உரிய நம் காதலனும் வந்தான்!

தன்னை விரும்புதலை உடைய நம் உள்ளத்தின் விருப்பம் நிறைவேறும்படியாக, நம் இனிய உயிரும் குழையும் படியாக, அவன் முயங்கினான். அப்படி அவன் நம்மைத் தழுவுந்தொறும் தழுவுந்தொறும், இவ்விடத்து நம்மவர், ஏதும் தொடர்பில்லாத வேலனுக்கு வெறியாட்டயர்ந்து தம் நெஞ்சு உலந்தமை கண்டு, யான் உடல் பூரித்துப் பூரித்துச் சிரித்தேன் அல்லனோ!

**சொற்பொருள்:** 4. மறுவரல் - சூழ்ச்சி. 5. படியோர் - வணங்காதாராகிய அசுரர். பல்புகழ் - பலவாகிய புகழ். 11. ஆற்றுப்படுத்தல் - மனையிற் கொண்டு புகுதல்; வழிப்படுத்தல்.

**விளக்கம்:** 1. வெறியாட்டயர்ந்தும் அவள் நோய் தீராத நிலை ஏற்பட்டுப் பின் அதுதான் மற்று யாவராலே வந்தது என்று தமர் கலங்கி ஐயுறாதபடி, அவன் வரைய வந்தனன். அத்தகைய காதல் உடைய அவனைப் பொல்லாங்கு சொல்லுகின்றனையோ எனத் தலைவி இயற்பட மொழிந்தமைக்கு இயைபு படுத்துக.

2. தலைவி இயற்பட மொழிந்தனள் என்று வெறியாட்டு நிகழ்ச்சியைத் தலைவனுக்குச் சொல்லி அவனை விரைய வந்து வரையத் தூண்டுதல் பொருளாகத் தோழி இயற்பழித்தமைக்கு இயைபு படுத்துக.

இரண்டானும் பயன், அவளை விரைந்துவந்து வரைந்து கொள்ளத் தூண்டுதலேயாகும். வேலனின் வெறியாடலை இவ்வாறு நயமுடன் பாடியவர் இப்புலவர். இந்தச் சிறப்புப் பற்றியே இவர் 'வெறிபாடிய காமக் கண்ணியார்' எனக் குறிக்கப் பெற்றனர் என்பர். 'பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்' என்பதற்கு, இச்செய்யுளிலே தலைவி நகையாடிய நிலையை மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர்.

'முருகாற்றுப்படுத்தல்' என்பது, இவ்வாறு முருகனை வழிப்பட்டுத் தம்மிடத்திற்கு அழைத்துக் கொள்ளுதல் என்பதும் இதனால் அறியப்படும். முருகனிடம் மக்களை வழிப்படுத்தல் திருமுருகாற்றுப்படை; முருகனையே தம் இல்லத்திடத்து ஆற்றுப்படுத்திக் கொண்டு வேண்டிவழிபடல் இந்த வெறியாடும் பண்டைய வழிபாட்டு மரபு.

## 23. அனைய கொல் தோழி!

**பாடியவர்:** ஒரோடோகத்துக் கந்தரத்தனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(பொருள் வேட்டுத் தன் தலைவியைப் பிரிந்து சென்றான் ஒரு தலைவன். கார்காலத்துத் தொடக்கத்து வருவேன் என்றவன், அது தொடங்கியும் வந்துசேரவில்லை. கார் கலத்துத் தொடக்கத்தால் இயற்கையிலே எழும் பலப்பல நிகழ்ச்சிகளையும் காணக்காணத் தலைவியின் உள்ளத்திலே வேதனை மிக்குப் பெருகிற்று. அதனைக் காட்டித் தன் துயரைத் தன் தோழியினிடம் கூறிப் புலம்புகிறாள்.)

**மண்கண் குளிர்ப்ப வீசித் தண்பெயல்,**
**பாடு உலந்தன்றே, பறைக்குரல் எழிலி;**
**புதல்மிசைத் தளவின் இதல்முட் செந்நனை**
**நெருங்குகுலைப் பிடவமொடு ஒருங்குபிணி அவிழக்,**
**காடே கம்மென் றன்றே; அவல,** 5

**கோடு உடைந்தன்ன கோடற் பைம்பயிர்,**
**பதவின் பாவை, முனைஇ, மதவுநடை**
**அண்ணல் இரலை அமர்பிணை தழீஇத்,**
**தண்அறல் பருகித் தாழ்ந்துபட் டனவே;**
**அனையகொல் - வாழி, தோழி! - மனைய** 10

**தாழ்வின் நொச்சி, சூழ்வன மலரும்**
**மௌவல், மாச்சினை காட்டி,**
**அவஅளவு என்றார், ஆண்டுச்செய் பொருளே!**

*பறையொலிபோல இடிமுழக்கத்தினை உடைய மேகங்கள், மண்ணின் இடமெல்லாம் குளிருமாறு, குளிர்ந்த மழையைப் பெய்தன. அதனால், நிலத்தின் கோடை வருத்தமும் அடங்கிற்று. புதர்களின் மேலே, சிவல் முள்ளைப்போன்ற சிவந்த முல்லை யின் அரும்புகள் தோன்றின. நெருங்கிய குலையினை உடைய பிடாவின் அரும்புகளுடன் ஒன்றுகூடி, அச் செம்முல்லையின் அரும்புகளும் தம் பிணிப்பு அவிழ்ந்து மலர்ந்தன. அதனால், காடும் கம்மென்ற நறுமணம் உடையதாயிற்று.*

*பள்ளங்களிலேயுள்ள, சங்குகள் உடைந்தாற்போலத் தோற்றும் வெண்கோடலது பசிய பயிரோடு, அறுகங் கிழங்கையும் தின்று தெவிட்டுதலின், மேலும் மேய்தலை வெறுத்து, மதர்த்த நடையினையும் தலைமையினையும் உடைய ஆண்மானானது தான் விரும்பிக் காதலித்த தன் பெண்மானைத் தழுவியவாறே, குளிர்ந்த மழை நீரைப் பருகி ஓரிடத்தே சேர்ந்து தங்கிவிட்டது.*

*மனையினிடத்தேயுள்ள முல்லை சூழ்ந்து மலருகின்ற இடமாகிய, குறுகிய நொச்சியது கருமையான கொம்பினைச் சுட்டிக்காட்டித், தாம் வேற்று நாட்டிலே இருந்து பொருள் ஈட்டித் திரும்பி வரும் காலத்தின் எல்லை, அந்த மௌவல் பூக்கத் தொடங்கும் காலத்தின் அவ்வளவே என்றனர் அல்லவோ? தோழி, நீ வாழ்க! இஃது அந்தக் காலந் தானோ? (அதனையுங் கடந்து விட்டதனை அறிவாயாக என்பது கருத்து.)*

**சொற்பொருள்:** *1. மண்கண் - மண்ணிடம். வீசுதல் - கொடுத்தல். 2. பாடு - ஒலி. 5. கம் - அறுகரணம். 6. கோடு - சங்கு. அது பெயராகவுடைய பயிர்; கோடலைக் களையாகவுடைய வரகு முதலாயின எனினும் ஆம். 9. தாழ்ந்து படுதல் - ஓரிடத்தே சேர்ந்து தங்குதல். 12. மாச்சினை - மௌவல் சூழ்ந்த நொச்சிக் கொம்பு.*

**விளக்கம்:** *'நிலத்தின் பாடு அடங்கிற்று, ஆயின் என் பாடு அடங்கவில்லை' என்பது கருத்து. சிவல் - கவுதாரியும் ஆம். 'மழை*

பெற்ற காடு கவின் பெற்றது; அவரைப் பெறாதேனாகிய யான் இன்னும் கவின் பெற்றிலேன் என்றனள்.

## 24. கதிர் கரந்த வாடை!

**பாடியவர்:** *ஆவூர் மூலங்கிழார்.* **திணை:** *முல்லை.* **துறை:** *1. தலைமகன் பருவங்கண்டு சொல்லியது. 2. தலை மகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*(தலைமகன் வேந்தனின் படையணிகளோடு சென்று பாசறையிலே தங்கி இருக்கின்றான். இரவு வேளை; அவன் உள்ளத்திலே அவனுடைய காதலியின் நினைவு மிகுதியாக எழுந்துவிடுகிறது, கார்காலம் முடிந்த முன்பனிக்காலம் வேறு அவன் மனத்தை வாட்டுகிறது. அவனுடைய காதல் வேதனையைத் தெளிவுபடுத்தும் சிறந்த உயிர் ஓவியம்.)*

**வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த**
**வளைகளைந்து ஒழிந்த கொழுந்தின் அன்ன,**
**தலைபிணி அவிழா, சுரிமுகப் பகன்றை**
**சிதரல்அம் துவலை தூவலின், மலரும்**
**தைஇ நின்ற தண்பெயல் கடைநாள், 5**

**வயங்குகதிர் கரந்த வாடை வைகறை,**
**விசும்பு உரிவதுபோல், வியல்இடத்து ஒழுகி,**
**மங்குல் மாமழை, தென்புலம் படரும்**
**பனிஇருங் கங்குலும் தமியள் நீந்தி,**
**தம்ஊ ரோளே; நன்னுதல்; யாமே 10**

**கடிமதில் கதவம் பாய்தலின், தொடிபிளந்து**
**நுதிமுகம் மழுகிய மண்ணை வெண்கோட்டுச்,**
**சிறுகண் யானை நெடுநா ஒண்மணி,**
**கழிப்பிணிக் கறைத்தோல் பொழிகணை உதைப்பு,**
**தழங்குகுரல் முரசமொடு முழங்கும் யாமத்து, 15**

**கழித்துஉறை செறியா வாளுடை எறுழ்த்தோள்,**
**இரவுத் துயில்மடிந்த தானை,**
**உரவுச்சின வேந்தன் பாசறை யேமே!**

*யாகம் பண்ணாத ஊர்ப்பார்ப்பான், கூர்மையான அரத்தினாலே அறுத்து எடுத்த வளைகள் போக, எஞ்சிய சங்கின் தலையைப்போன்ற, கட்டுண்ட பிணிப்பு அவிழாத சுரிந்த முகத்தினை உடைய பகன்றையின் அரும்புகள், சிதறுகின்ற அழகிய மழைத்துளிகள் வீழ்தலால் மலரும். அத்தகைய குளிர்ந்த பெயல் நின்றுபோன தைத்திங்களாகிய முன்பனிக் காலத்தின் கடைநாளிலே எழுகின்ற ஞாயிறும் பனிமூட்டத்தினுள் மறைந்திருக்கும் வாடையுடன் கூடிய புலர்காலை வேளையிலே -*

இருண்டுவரும் பெருமழையானது, விசும்பு தோல் உரிவதுபோல அகன்ற வானிடத்தே இயங்கித் தென் திசைக்கண் போய்ச் சேருகின்ற பனியுடன் கூடிய கரிய இரவின் வெள்ளத்தைச் சிறந்த நெற்றியினளாகிய நம்முடைய தலைவியானவள், தமியளாகவே நீந்திக் கொண்டு தன்னுடைய ஊரினிடத்தே நம்மைப் பிரிந்து இருக்கின்றனள்.

காவலை உடைய மதிற்கதவினைக் குத்திப் பாய்தலினால் பூண் பிளக்கப்பட்டுக் கூரிய முனை மழுங்கிய மொட்டையான வெள்ளிய கோட்டினையும், சிறிய கண்ணினையும் உடைய யானையின் நீண்ட நாவினையுடைய ஒளி பொருந்திய மணியின் ஓசைகள் கேட்கும். கழிகளுடன் பிணிக்கப்பட்ட கரிய தோலாகிய கேடகத்துப் பொழியும் அம்புகள் வந்து தைத்தலால் எழுகின்ற ஓசைகள் கேட்கும். இவை முழங்கும் ஓசையினையுடைய முரசொலியுடன் சேர்ந்து சதா. ஒலித்துக் கொண்டேயிருக்கும். அத்தகைய நள்ளிரவு நேரத்திலே, உறையினின்றும் உருவி மீண்டும் உறையுள் இடாத உருவிய வாளினை ஏந்திய வலிய தோளினை உடையவனும், இரவிலே அயர்ந்து உறங்கும் சேனாவீரர்களைக் கொண்டவனுமாகிய மிக்க சினம் பொருந்திய நம் வேந்தனது பாசறையிடத்தே, யாம் அவளைப் பிரிந்து இருக்கின்றோம்! என் செய்வோம்?

**சொற்பொருள்:** 2. கொழுந்து - சங்கின் தலை. 4. சிதரலந் துவலை - சிதறுகின்ற அழகிய மழைத்துளிகள். 8. மங்குல் - இருள். 14. உதைப்பு - உதைப்பால் உளதாகிய ஓசை. கறைத்தோல் - கருங்கடகு. 16. கழித்து - உருவி. 12. மண்ணை வெண்கோடு - மழுமட்டையான கோடு.

**விளக்கம்:** வேளாப் பார்ப்பனர் என்ற ஒரு சாரார், முன்னாள் சங்குகளைப் போழ்ந்து வளையல்கள் செய்யும் தொழிலை மேற்கொண்டிருந்தனர். 'வேளாப் பார்ப்பார்' என இவரைக் குறித்தது, முத்தீ வேட்டு வாழும் பார்ப்பாரும் மற்றொரு சாரார் இருந்தமையாற் போலும்! இவரைப் பற்றிய செய்தியைச் சிலப்பதிகாரமும் கூறுதல் காண்க. 'இரவுத் துயில் மடிந்த தானை' என்றதனால், சென்ற போரினைப் பலகால் இயற்றி, வினைமுடித்தபின் அமைதியாகத் துயின்று கொண்டிருந்த தானை என்க. போர் முடிந்ததும் ஊர் திரும்ப வேண்டியவனுக்கு, அன்றொருநாள் பாசறை இருப்பும் வேதனையைத் தருகின்றது என்க. 'நீந்தி' என்றது, கரைசேர மாட்டாளாய்ச் சேரத் துடிதுடிக்கும் வேதனையுடன் கண் விழித்துக் காத்து இருக்கின்றனள் என்றற் பொருட்டு.

## 25. வருவர், வாழி தோழி!

**பாடியவர்:** ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன். **திணை:** பாலை. **துறை:** பருவம் கண்டழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. **சிறப்புற்றோன்:** பொதியிற் செல்வனான திதியன்.

*(தலைவன் வருவதாகக் குறித்துச் சென்ற பருவமும் வந்தது. அவனோ வரவில்லை. அது கண்டு தலைவி மிகவும் ஆற்றாமையுடையவளாயினாள். அவள் வருத்தத்தைக் கண்டு தோழி பருவத்தைக் காட்டி, அவன் தவறாது வருவான் என உறுதிகூறி, அவளுடைய ஆற்றாமையைப் போக்க முயலுகிறாள்.)*

**"நெடுங்கரைக் கான்யாற்றுக் கடும்புனல் சாஅய,**
**அவிர்அறல் கொண்ட விரவுமணல் அகன்துறைத்**
**தண்கயம் நண்ணிய பொழில்தொறும், காஞ்சிப்**
**பைந்தாது அணிந்த போதுமலி எக்கர்,**
**வதுவை நாற்றம் புதுவது கஞல, 5**

**மாநனை கொழுதிய மணிநிற இருங்குயில்**
**படுநா விளியா னடுநின்று, அல்கலும்,**
**உரைப்ப போல, ஊழ்கொள்பு கூவ,**
**இனச்சிதர் உகுத்த இலவத்து ஆங்கண்**
**சினைப்பூங் கோங்கின் நுண்தாது பகர்நர் 10**

**பவளச் செப்பில் பொன்சொரிந் தன்ன,**
**இகழுநர் இகழா இளநாள் அமையம்**
**செய்தோர் மன்ற குறி"என, நின்**
**பைதல் உண்கண் பனிவார்பு உறைப்ப**
**வாரா மையின் புலர்ந்த நெஞ்சமொடு, 15**

**நோவல், குறுமகள்! நோயியர், என்உயிர்!என,**
**மெல்லிய இனிய கூறி, வல்லே**
**வருவர் வாழி தோழி - பொருநர்**
**செல்சமம் கடந்த வில்கெழு தடக்கைப்**
**பொதியிற் செல்வன், பொலந்தேர்த் திதியன் 20**

**இன்இசை இயத்தின் கறங்கும்**
**கல்மிசை அருவிய காடு இறந்தோரே!**

*நீண்ட கரையினைக் கொண்ட கான்யாற்றின், வேகம் மிக்க நீரானதும் அறவே அற்றுப்போயிற்று. விளங்கும் அறலாம் தன்மையினைக் கொண்ட விரவிய மணலை யுடையவாயின. அகன்ற துறைகள். அவ்விடத்திலேயுள்ள பொழில்களில் எல்லாம், காஞ்சி மரத்தினது அழகிய தாதுக்களைக் கொண்டிருக்கின்ற பூக்கள் ஏராளமாக உதிர்ந்து கிடப்பவாயின.*

மணல்மேடுகள், மணநாற்றத்தினைப் புதிதாக வீசிக் கொண்டிருந்தன. மாவின் தாதினைக் கோதிய, நீலமணியின் நிறத்தினையொத்த கரிய குயில், நாள்தோறும் சில கூறுவன போல, முறைகொண்டு, தனது நாவின் கூவுதலால்நடுநிலை மேவி ஒலிக்கும். பூக்கள் நிறைந்த கோங்கமரத்தின் கிளைகளின் மீதிருந்து, கூட்டமாகிய வண்டுகள், அவற்றின் நுண்ணிய தாதுக்களை உதிர்க்கும். அங்ஙனம் உதிர்ந்த தாதுக்கள் இலவம் பூக்களாகிய அவ்விடத்தே உதிர்ந்து கிடக்கும். பவளச் சிமிழிலே பொற்பொடியைச் சொரிந்து வைத்தாற்போல, அப்போது இலவம் பூக்கள் விளங்கும். பிரிவினால் எய்தும் துயரங்களைப் புறக்கணித்துப் பிரிபவரும்கூட, அங்ஙனம் இகழ்ந்து பிரிந்து செல்லுவதற்கு விரும்பாத இளவேனிற் காலத்தினாலன்றோ, இவை எல்லாம் நிகழ்கின்றவாயின!

தாம் மீண்டும் வருங் காலமாக இதனையே உறுதியாக அவர் குறிப்பிட்டுச் சென்றார். அதனையே நினைந்து நீ நின் நோதலையுடைய மையுண்ட கண்களாலே நீர் வடித்துச் சொரிதல் வேண்டா. அவர் குறித்தபடி வாராமையினால் வெறுப்புற்ற நெஞ்சுடன் வருந்துதலும் செய்யாதே.

போர்புரியும் பகைவர்கள் எதிர்ந்துவரும் போரினை வென்று, அவரை அழித்த வெற்றி வில்லினைத் தன் பெரிய கையிலே உடையவன்; பொதியில் மலைக்கு உரிய செல்வன்; பொன்னால் ஆகிய தேரினை உடையவன்; திதியன் என்பவன். அவனது இனிய வெற்றி முரசினைப்போல, மலையுச்சியினின்றும் விழும் அருவிகள் ஒலிமுழங்குகிற காடுகளைத் தாண்டிப் பொருளீட்டச் சென்றோர் நம் தலைவர்!

'இளையவளே! நின்னை இங்ஙனம் துயருறச் செய்த என் உயிர் வருந்துவதாக' என்றாற் போல, மெல்லிய இனிமையான சொற்களைக் கூறிக்கொண்டு, நின் வருத்தத்தைப் போக்குவதற்கு விரைந்து வந்துவிடுவர் கண்டாய். (அதனால், நீயும் ஆற்றி இருப்பாயாக!)

**சொற்பொருள்:** 3. கயம் - மடு. 4. தாது மலர்ந்தபோது பூவுதிர்ந்த எக்கர். 7. படுதல் - ஒலித்தல். அடுநின்று - வருந்தா நின்று; நடுநிலை நின்று. 8. ஊழ் - முறைமை; பேடைகூவச் சேவல் கூவ என்க. 9. இதர் - வண்டு. 12. இகழ்ந்து பிரிவோரும் பிரிய ஒண்ணாத இளவேனிற் காலம் என்க.

**விளக்கம்:** இளவேனிற் காலத்துச் சோலைகளிலுள்ள மணல்மேடுகளில் இளையரும் கன்னியரும் இன்பமாகக் கூடி மகிழ்வர் ஆகலின், 'வதுவை மணம் கஞல' என்றனர்.

## 26. புலத்தல் கூடுமோ தோழி!

**பாடியவர்:** *பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி.* **திணை:** *மருதம்.* **துறை:** *தலைமகன் தோழியை வாயில் வேண்டி, அவளால் தான் வாயில் பெறாது, ஆற்றாமையே வாயிலாகப் புக்குக் கூடியவனின் நீக்கத்துக்கண், புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.*

*(தலைவன், ஒருகாலத்துத் தலைவி 'போதும் போதும்' எனத் தடுத்தும், அவளை அணைத்துக் கிடந்தனன். அவர்களுக்கு ஒரு செல்வனும் தோன்றினபின், அவன் பரத்தை வயத்தனாகித் திரிந்தான். ஆர்வமுடன் அவள் தழுவினால், அவள் மார்பகத்துப் பால் தன் மார்பில் படுமோ என்று அஞ்சினான். அது பொறாத அவள் தன் புதல்வனைக் கொஞ்சினாள். அவன் உள்ளம் நெகிழ்ந்தது. புதல்வனைப் போற்றும் வகையால் அவளை அணுகி அணைத்து நின்றான். தலைமகள் அந்நிகழ்ச்சிகளைத் தன் தோழியிடம் இப்படிக் கூறுகிறாள்.)*

**கூன்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற,**
**மீன்முள் அன்ன, வெண்கால் மாமலர்**
**பொய்தல் மகளிர் விழவுஅணிக் கூட்டும்**
**அவ்வயல் தண்ணிய வளம்கேழ் ஊரனைப்**
**புலத்தல் கூடுமோ - தோழி! - அல்கல்** 5

**பெருங்கதவு பொருத யானை மருப்பின்**
**இரும்புசெய் தொடியின் ஏர ஆகி,**
**'மாக்கண் அடைய மார்பகம் பொருந்தி**
**முயங்கல் விடாஅல் இவை'என மயங்கி,**
**'யான்ஓம்' என்னவும் ஒல்லார், தாம்மற்று** 10

**இவை பாராட்டிய பருவமும்உளவே; இனியே**
**புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்**
**திதலை அணிந்த தேம்கொள் மென்முலை**
**நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் அகலம்**
**வீங்க முயங்கல் யாம்வேண் டினமே;** 15

**தீம்பால் படுதல் தாம்அஞ்சினரே; ஆயிடைக்**
**கவவுக்கை நெகிழ்ந்தமை போற்றி, மதவுநடைச்**
**செவிலி கைஎன் புதல்வனை நோக்கி,**
**'நல்லோர்க்கு ஒத்தனிர் நீயிர்; இஃதோ**
**செல்வற்கு ஒத்தனம் யாம்' என, மெல்லஎன்** 20

**மகன்வயின் பெயர்தந் தேனே; அதுகண்டு**
**'யாமும் காதலம், அவற்கு'எனச் சாஅய்,**

**சிறுபுறம் கவையின னாக, உறுபெயல்**
**தண்துளிக்கு ஏற்ற பலஉழு செஞ்செய்**
**மண்போல் நெகிழ்ந்து, அவற் கலுழ்ந்தே**
**நெஞ்சுஅறை போகிய அறிவி னேற்கே!** 25

'பெரிய மதிற்கதவினைப் பாய்ந்து பிளந்த யானைகளின் தந்தங்களிலே பொருந்திய, இரும்பினால் செய்யப்பெற்ற பூணின் அழகினை உடையன, கருத்த கண்களை உடைய இவை என்று, என் மார்பகங்களைப் பாராட்டி, அவை அழுந்தப் பொருந்திக் கிடந்தனர். யான் விலக்கவும் முயங்குதலை 'விலக்கற்க' என்றனர். யான் வருந்தி 'ஒழிவீராக' என்னவும், தாம் அதற்கும் இசையாதவராகிப், பின்னும் இவைகளைப் பாராட்டிய காலங்களும் முன்பு உள்ளன.

இப்பொழுதோ, புதல்வன் உள்ளத்தைப் பிறிதொன்றின் மேற் செல்லாதவாறு தடுத்துக் கொண்டபாலொடு, எம் மார்பகங்கள் சரிந்தன; தேமலை அணிந்தவையுமாயின. இனிமை கொண்ட இம் மென்முலைகள் விம்முமாறு, அவருடைய நறுஞ்சந்தனம் அணியப்பெற்ற நன்னிறம் விளங்கும் மார்பிலே முயங்குவதனை யாமே விரும்பினேம். அங்ஙனமாகவும், தமது மார்பிலே இனிமையான பால்படுதலை அவர் அஞ்சிய வராயினர்.

அவ்விடத்து, முன்னர் அணைத்தலைச் சற்றும் நெகிழ விடாத அவரது கைகள், இப்பொழுது நெகிழ்ந்தமையை யானும் கண்டேன். செவிலித்தாயின் கையிலேயிருந்த என் புதல்வனை நோக்கினேன். 'நீவிர் நும்முடைய அழகிய பரத்தையர்களுக்கு ஒத்த விருப்பம் உடையவராவீர். இதோ, இந்தச் செல்வனுக்கு அன்பு பொருந்தியவர் யாம்' என்று அவரிடம் கூறிவிட்டு, மெல்ல என் மகனிடத்துச் சென்றேன்.

அதனைக் கண்ட அவரும், 'யாமும் அவனிடத்துக் காதல் உடையேம்' என்று கூறியவராகப் பணிந்து, என் முதுகினை வந்து அணைத்துக் கொண்டனர். மிக்க பெயலாகிய குளிர்ந்த மழையினை ஏற்றுக் கொண்ட, பன்முறை உழுதிட்ட செம்மையான வயலின் மண்ணைப்போல, என் நெஞ்சமும் அவ்வளவில், அவர்பால், என்னை வஞ்சித்துத் தான் சென்று விட்ட அறிவினை உடையவள் ஆயினேன். அத்தகைய எனக்கு,

வளைந்த முள்ளிச் செடியின் குவிந்த குலைகளினின்றும் வீழ்ந்த, மீன்முள்ளைப் போன்ற வெண்மையான காம்புகளை உடைய கரிய மலர்களை, விளையாடும் மகளிர்கள், தாம் செய்யும் விழாவுக்கு அழகு செய்வதற்காகக் கூட்டுவர்; அத்தகைய, அழகிய வயல்கள் பொருந்திய வளமிக்க ஊரனாகிய

என் தலைவனைப் புலத்தலுங் கூடுமோ? (தோழி! யான்யாது செய்வேனோ!?)

**சொற்பொருள்:** 7. தொடியின் நேரவாகி - தொடியினது அழகினை உடையவாகி. 8. அடைய - பொருந்த. 6. யானை மருப்பின் இரும்புப் பூணாவது 'கிம்புரி' என்க.9.மயங்கி - வருந்தி. 10. ஓமென்னவும் - ஒழியும் என்னவும் 13. தேங்கொள் - இடங்கொள்; பால்பற்றி இனிமையும் ஆம். 17. கவவுக்கை - அகத்தீட்டு ஒழுக்கம். நெகிழ்தல் - நழுவுதல். 18. செவிலிகை - செவிலியிடம். 19. நல்லோர் - அழகியரான பரத்தையர். 23. சிறுபுறம் - முதுகு.

**உள்ளுறை:** "முள்ளியின் பக்கலிலே தோன்றி வாழும் பூவானது, அதனைவிட்டுப் பிறர்க்கு அழகுசெய்யப் பயன் பட்டது; அதுபோல, நம்முடன் பிறந்த நெஞ்சு நம்மைவிட்டு அவருடன் செல்லலாயிற்று. யாம் புலத்தல் கூடுமோ?" என்பதாம்.

## 27. மடவை மன்ற நீயே!

**பாடியவர்:** மதுரைக் கணக்காயனார். **திணை:** பாலை. **துறை:** செலவுணர்ந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** பாண்டியர்.

*("தோழி! நம் தலைவர் கானம் கடுமையானது எனவும் கருதார். நாம் அழுமாறு 'பொருள் விரும்பிச் செல்கின்றேன்' என்றனரே" என்கிறாய். நீ மிகவும் மடமையுடையவள். நின் கண்களின் மாறுபட்ட பார்வை எங்ஙனம் அவரைப் போகவிடும்? அவர் போகார்காண்! இவ்வாறு கூறித் தேற்றுகிறாள் தலைவியின் தோழி.)*

**"கொடுவரி இரும்புலி தயங்க, நெடுவரை**
**ஆடுகழை இருவெதிர் கோடைக்கு ஒல்கும்**
**கானம் கடிய என்னார், நாம்அழ,**
**நின்றதுஇல் பொருட்பிணிச் சென்றுஇவண் தருமார்,**
**செல்ப" என்ப, என்போய்! நல்ல** 5

**மடமை மன்ற நீயே; வடவயின்**
**வேங்கடன் பயந்த வெண்கோட்டு யானை,**
**மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும்**
**கொற்கைஅம் பெருந்துறை முத்தின் அன்ன**
**நகைப்பொலிந்து இலங்கும் எயிறுகெழு துவர்வாய்** 10

**தகைப்பத் தங்கலர் ஆயினும், இகப்ப**
**யாங்ஙனம் விடுமோ மற்றே - தேம்படத்**

**தெள்நீர்க்கு ஏற்ற திரள்காற் குவளைப்**
**பெருந்தகை சிதைத்தும், அமையா பருந்துபட**
**வேந்துஅமர்க் கடந்த வென்றி நல்வேல் 15**

**குருதியொடு துயல்வந் தன்னநின்**
**அரிவேய் உண்கண் அமர்த்த நோக்கே!**

*நீண்ட மலைச்சாரலின்கண், அசையும் தண்டினையுடைய வலிய மூங்கில்கள் மேல்காற்றினால் தளர்ந்து வளையும்: அப்போது, அவற்றின் புதருட் கிடந்த வளைந்த கோடுகளை யுடைய பெரிய புலிகள் வெளிப்பட்டுத் தோன்றும். அத்தகைய காட்டுப்பாதை கொடிதென்றும் அவர் எண்ணாராயினார். அவரைப் பிரிந்து நாம் அழுதிருக்க 'ஓரிடத்தும் நிலைபெற்று இருத்தல் இல்லாத பொருளின்மீது கொண்ட பற்றினால், நம்மைப் பிரிந்து அதனை இங்கு ஈட்டிவரச் செல்வர் என்று அயலவர் கூறுகிறார்கள்' என்று சொல்லுபவளே! நீ, உறுதியாக, நல்ல மடமையினையே உடையவளாவாய்!*

*வடதிசைக்கண் உள்ள வேங்கடமலைப் பக்கத்து மன்னர்கள் திறையாகக் கொடுத்த, வெண்மையான கொம்புகளையுடைய யானைகளையுடையவர், வீரப் போரில் வல்லவரான பாண்டியர். அவர்கள் அறநெறி வழாமல் காக்கும் சிறப்புடையது கொற்கைப் பெருந்துறை. அதனிடத்தே பெறுகின்ற முத்துக்களைப் போன்று, முறுவலாற் சிறந்து விளங்கும் பற்களை உடையது நின் பவளம் போன்ற சிவந்த வாய். அது தடுத்தலால் தடைப் பட்டு அவர் தங்காராயினும் -*

*தேன் உண்டாகத் தெளிந்த நீரினை ஏற்ற, திரண்ட தண்டினை உடையவை குவளைப் பூக்கள். அவற்றின் சிறந்த அழகினை வென்று கெடுத்தன நின் கண்கள். அத்துடனும் அமையாமல், பருந்துகள் வந்து சூழ, அரசர்தம் போர்களை வென்ற வெற்றி பொருந்திய நல்ல வேலானது, இரத்தம் தோய்ந்து பிறழ்வது போன்ற, நின்னுடைய செவ்வரி பரந்த மையுண்ட கண்களின் அமர்த்த பார்வை இருக்கிறதே, அது எங்ஙனம் அவரைப் பிரிந்துசெல்ல விட்டுவிடும்? (விடாது காண் என்பது கருத்து.)*

**சொற்பொருள்:** *1. தயங்க - விளங்க. 2. கழை - தண்டு. வெதிர் - திணி மூங்கில். கோடை - மேல்காற்று. வெதிர் சாய்தலால் உள்ளே பதுங்கிக் கிடந்த புலி வெளியே தோற்றும் என்பது கருத்து. 7. வேங்கடம் பயந்த - வேங்கட மலையிலே தோன்றிய எனலும் ஆம். 16. துயல்வருதல் - அசை வருதல்.*

**விளக்கம்:** *நிலைபெறாத செல்வத்தை விரும்பி நிலைபெறும் காதன் மனைவியைக் கலங்கவிடுவாரோ? நின் வாய்தகைப்பத்*

தங்காராயினும் என்பது, நின் பேச்சுக்களால் தடுக்கப்பட்டு, அவர் தம் போக்கை நிறுத்தாராயினும் என்பதாம். இரத்தம் தோய்ந்த வேல்போல விளங்கும் நின் அமர்த்த கண்கள் நினக்கு வெற்றிதரும் என்பது குறிப்பு.

'மறப்போர்ப் பாண்டியராயினும், அவர் நாடுகாவலை மறத்தினாற் காவாது அறத்தினாற் காத்தனர்' எனக் கூறுவதனை, அறிந்து இன்புறல் வேண்டும்.

## 28. மெய்யில் தீரா மேவரு நாமம்!

**பாடியவர்:** பாண்டியன் அறிவுடை நம்பி. **திணை:** குறிஞ்சி. **துறை:** தலைமகன் சிறைப்புறத்தானாகத், தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது. இது பகலே சிறைப்புறம்.

*(காதல் மீதூறத், தன் கிளியோப்பும் பணியையும் மறந்து, அவனே நினைவாக இருந்தாள் ஒருத்தி. அவள் நிலைகண்டு பதறிய தோழி, பகற்குறியிடத்தே தலைவன் கேட்குமாறு இதனைக் கூறுகிறாள். இதனால், விரைந்து அவன் தலைவியை கேட்டுவருவான் என்பது பயனாகும்.)*

**மெய்யின் தீரா மேவரு காமமொடு**
**எய்யாய் ஆயினும், உரைப்பல் - தோழி!**
**கொய்யா முன்னும், குரல்வார்பு, தினையே**
**அருவி ஆன்ற பைங்கால் தோறும்**
**இருவி தோன்றின பலவே; நீயே,** 5

**முருகு முரண்கொள்ளும் தேம்பாய் கண்ணி,**
**பரியல் நாயொடு பன்மலைப் படரும்**
**வேட்டுவற் பெறலொடு அமைந்தனை; யாழநின்**
**பூக்கெழு தொடலை நுடங்க, எழுந்துஎழுந்து**
**கிள்ளைத் தெள்விளி இடைஇடை பயிற்றி,** 10

**ஆங்காங்கு ஒழுகாய் ஆயின், அன்னை,**
**சிறுகிளி கடிதல் தேற்றாள்இவள்' எனப்,**
**பிறர்த் தந்து நிறுக்குவள் ஆயின்,**
**உறற்கு அரிதுஆகும், அவன்மலர்ந்த மார்பே!**

ஒருவர் உடலினின்றும் ஒருவர் உடல் நீங்காதவாறு விழையும், பொருந்திய காமத்தினால் நீ வருவதை அறியாய். ஆயினும், அதனால் வரும் ஏதங்களை யான் அறிவேன். அதனை உரைப்பேன் கேட்பாயாக:

நீர் இல்லையாகிப்போன பசிய தண்டுகள் தோறும், தினைக்கதிர்கள் முதிரப் பெற்றன. அவற்றைக் கொய்வதன்

முன்னரும் அவற்றுட் பல தட்டைகளாகத் தோன்றின. நீதான், "வேறுபட்ட பல மணங்களும் கமழும், தேனொழுகும் கண்ணியினைச் சூடியவனாக வரும், விரைந்தோடும் வேட்டை நாய்களுடன் பல பல மலைகளையும் கடந்து செல்லும் வேட்டுவனை எய்தப்பெறுதல்" என்ற அளவோடு, அமைந்து விட்டனை.

நின், பூக்கள் பொருந்திய மாலையானது அசையுமாறு அடிக்கடி எழுந்து சென்று, கிளிகளை ஓட்டும் தெளிந்த ஓசைகளை இடையிடையே எழுப்பி, அங்கங்கே சென்று வருதல் வேண்டும். அங்ஙனம் நடக்காதிருந்தனையாயின், நம் அன்னை, 'சிறு கிளி ஓட்டுதலை இவள் அறியாள்' என எண்ணித், தினை காத்தலுக்குப் பிறரைக் கொணர்ந்து நிறுத்துவள். அப்படியானால், நீ விரும்பும் அவனுடைய பரந்த மார்பினைத் தழுவுவதற்கு நினக்கு வாய்ப்பதும் அருமையாகும்!

**சொற்பொருள்:** 4. அருவி - அருவிநீரும் ஆம். கால் - முதல். 21. தேற்றாள். - தெளிய அறியாள். காதலில் மூழ்கிக் கடமையை மறந்திருந்த தலைவிக்கு, இப்படி அறிவு கொளுத்துகிறாள் தோழி என்பதனை அறிக.

## 29. நெஞ்சம் நின் உழையதுவே!

**பாடியவர்:** வெள்ளாடியனார். **திணை:** பாலை. **துறை:** வினைமுற்றி மீண்ட தலைகமன், 'எம்மையும் நினைத்து அறிதிரோ?' என்ற தலைமகளுக்குக் கூறியது.

(பொருளாசையால் தன் காதலியைப் பிரிந்து, பிற நாட்டிற்குச் சென்றான் ஒருவன். அவள், அவன் நினைவினால் மெலிந்தாள். அவனும், தொழில் முடித்துப் பெரும் பொருளுடன்வீடு திரும்பினான். ஆர்வமுடன் தன் காதலி தன்னைக் கூடி மகிழ்வாள் என அவன் எதிர்பார்த்தான். அவளோ, 'எம்மை நீர் நினைந்த துண்டோ?' எனக் கேட்டு, அவனுடன் ஊடி நின்றாள். அப்பொழுது, அவன் அவள் உள்ளத்தைத் தெளிவிக்கக் கூறியது.)

**"தொடங்குவினை தவிர, அசைவில் நோன்தாள்,**
**கிடந்துஉயிர் மறுகுவது ஆயினும், இடம்படின்**
**வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த**
**தாழ்வுஇல் உள்ளம் தலைத்தலைச் சிறப்பப்,**
**செய்வினைக்கு அகன்ற காலை, எஃகுஉற்று** 5

**இருவேறு ஆகிய தெரிதகு வனப்பின்**
**மாவின் நறுவடி போலக், காண்தொறும்**

**மேவல் தண்டா மகிழ்நோக்கு உண்கண்**
**நினையாது கழிந்த வைகல், எனையதூஉம்,**
**வாழலென் யான்" எனத்தோற்றிப், பல்மாண்** 10

**தாழக் கூறிய தகைசால் நன்மொழி**
**மறந்தனிர் போறிர் எம்'எனச் சிறந்தநின்**
**எயிறுகெழு துவர்வாய் இன்நகை அழுங்க**
**வினவல் ஆனாப் புனையிழை! - கேள்இனி-**
**வெம்மை தண்டா எரிஉகு பறந்தலை,** 15

**கொம்மை வாடிய இயவுள் யானை**
**நீர்மருங்கு அறியாது, தேர்மருங்கு ஓடி,**
**அறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்**
**உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்குஅருங் கடத்திடை,**
**எள்ளல் நோனாப் பொருள்தரல் விருப்பொடு** 20

**நாணுத் தளைஆக வைகி, மாண்வினைக்கு**
**உடம்பு ஆண்டு ஒழிந்தமை அல்லதை,**
**மடம்கெழு நெஞ்சம் நின்உழை யதுவே!**

*தான் தொடங்கிய வினையைக் கைவிடாதது; தளர்ச்சி இல்லாத வன்மையான முயற்சியினை உடையது; பட்டினி கிடந்து உயிர் வருந்துவதேயானாலும், தான் வீழ்த்திய களிறு இடப்பக்கமாக வீழ்ந்தால் அதனைத் தின்னாதது புலி. அதனினும் காட்டில் மேம்பட்டதும், என்றும் தாழ்வு மனப்பான்மை என்பதே இல்லாததுமான உறுதியுடைய நும் உள்ளம் மென்மேலும் பொருள் ஆர்வத்தால் மிகுந்தது. அதன்மேல், பொருளீட்டும் வினைக்குப் போக எம்மைப் பிரிந்தும் நீர் சென்றீர். அந்தக் காலத்திலே*

*"கத்தியினால் பிளக்கப்பட்டு, இரு பிளவாக விளங்கும் வனப்புடைய மாவின் நறிய வடுவினைப்போலக், காணுந் தோறும் காணுந்தோறும் உள்ளத்திலே களிப்பு மேவுதல் குறையாத நோக்கினைப் பெற்றவை மையுண்ட நின் கண்கள். அவற்றை நினையாது கழிந்த நாளிலே வேறு வருவது தாம் யாதாயினும் யான் உயிர் வாழ்ந்திரேன் என என்னைத் தெளிவித்துப், பல மாண்புகளும் பணிவோடுங் கூறினீர். அழகு மிக்க அந்த நல்ல சொற்களை-*

*'எம்மிடத்து மறந்து விட்டவராயினீர்?' என்று, நினது சிறந்த பற்கள் விளங்கும், பவளச் செவ்வாயின் இனிய சிரிப்பும் தோன்றுதல் இல்லாது கெட நின்று, எம்மைக் கேட்பதை நீங்காத அழகிய அணிகளை அணிபவளே! இப்பொழுது, யான் சொல்லும் இதனையும் கேட்பாயாக;*

வெம்மையாற் குறையாததும், எரிபரக்கும் இயல்பினதும் ஆகிய அப்பாழிடத்தே, தம் பெருமை அனைத்தும் ஒழிந்து தளர்ந்து வழிச்செல்லுகின்ற யானையானது, நீருள்ள இடம் எதுவென அறியாமல், பேய்த்தேர் தோன்றும் இடமெல்லாம் அதனையே நீரென நினைந்து மயங்கி ஓடி, நீரற்ற ஆற்றிலே கிடக்கும் ஓடத்தைப்போல, வழியிடத்திலே வருந்திச் சோர்ந்து வீழ்ந்து கிடக்கும். நினைப்பாரையே வருத்தும், கடப்பாரின் ஊக்கமும் அரிதாகுமாறு துன்பம் விளைவிக்கும் அத்தகைய கொடிய காட்டினிடத்திலே -

பிறர் இகழ்வதனைப் பெறாது, பொருள் தேடிவரும் விருப்பத்துடன், மானமே தனக்கொரு கட்டுப்பாடாக அதன்கண் நிலைத்திருந்து, மாட்சிமையுடைய அவ்வினையின் பொருட்டாக, என் உடலானது நின்னைப் பிரிந்து அவ்விடத்துச் சென்றதே அல்லாமல், என் மடமை நிரம்பிய நெஞ்சம், நின்னிடத்திலே, இவ்விடத்துத்தானே இருந்தது! (இதனை அறியாமல் இங்ஙனம் வினவுதல் தான் முறையோ? என்கிறான்.)

**சொற்பொருள்:** 2. மறுகுதல் - வருந்ததுல். இடம் படின் - இடத்தே வீழின். 5. எஃகு - கத்தி. 6. தெரிதகு - ஆராயத்தக்க. 8. மேவல் தண்டா - பொருத்துதல் அமையா. 9. எனையதூஉம் - சிறிதும். 12. எம்மென - எம்மிடத்தென்று. பறந்தலை - பாழ்நிலம். 16. கொம்மை - பெருமை. இயவுள் - தலைமை. 18. அம்பி - ஓடம்.

**விளக்கம்:** தன் செய்வினையைத் திறம்பட நிறைவேற்று வதிலே அவன் உறுதியுடையவன் என்பது தோன்றப், "புலியின் தொடங்குவினை தவிரா, அசைவினோன்றாள் கிடந்து உயிர் மறுகுவது ஆயினும், இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலி" என்றனர். கொடிய துயர் நிறைந்த காட்டினிடத்தும் அதனை நினைந்து துயருறாது, நின்னையே நினைத்து வருந்தினேன் எனத் தனது அன்பின் மிகுதியையும் கூறினான். 'நின் கண்களின் பார்வையிலே யான் இன்பக் கிளர்ச்சி யுடையவனாயினேன்' என்று போற்றியவன், அவை கலங்கித் தம் இயல்பு கெடப் பிரிந்த வருத்தமிகுதியும் காண்க.

## 30. பெருங்களம் தொகுத்த உழவர்!

**பாடியவர்:** முடங்கிக் கிடந்த நெடுஞ்சேரலாதன். **திணை:** நெய்தல். **துறை:** பகற்குறிவந்த தலைமகனுக்குத் தோழி சொல்லியது.

(கானற் சோலையிலே, தோழியுடன் இருந்த அவளைக் கண்டான். அவள் அவனுள்ளம் புகுந்தாள். அந்தக் காதல் அவளுள்ளத்திலும் நிலைபெற்றது. அதனால் அவள் மெலிந்தாள்.

அவள் மேனிவண்ணம் கெட்டது. அவன் பெருமிதம் அவனைத் தன் குறையிரந்து காதலை வேண்டவும் விடவில்லை. இந்நிலையிலே தோழி அங்கே குறுக்கிடுகிறாள்.)

**நெடுங்கயிறு வலந்த குறுங்கண் அவ்வலை,**
**கடல்பாடு அழிய, இனமீன் முகந்து,**
**துணைபுணர் உவகையர் பரத மாக்கள்**
**இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி**
**உப்புஒய் உமணர் அருந்துறை போக்கும் 5**

**ஒழுகை நோன்பகடு ஒப்பக் குழீஇ**
**அயிர்திணி அடைகரை ஒலிப்ப வாங்கிப்,**
**பெருங்களம் தொகுத்த உழவர் போல,**
**இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி,**
**பாடுபல அமைத்துக் கொள்ளை சாற்றிக் 10**

**கோடுஉயர் திணிமணல் துஞ்சும் துறைவ!**
**பெருமை என்பது கெடுமோ - ஒருநாள்**
**மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்**
**தண்நறுங் கானல் வந்து 'நும்**
**வண்ணம் எவனோ?' என்றனிர் செலினே! 15**

அழகான வலைகள், நெடிதான கயிறு கட்டப்பெற்றுக், குறுகலான கண்களையும் உடையன. கடலின் பெருமை குறையுமாறு, அவ்வலைகளிலே, மீன் இனங்களை முகந்து பரதவர் கொணர்வர். தம் துணைவியருடன் கூடியவராகவும், மகிழ்ச்சியினை உடையவராகவும், அவர்கள், இளைஞர்களும் முதியவர்களுமாகக் குழுமி ஒன்று சேர்வர். உப்புவிற்கும் வாணிகர்கள், அரிய கடற்றுரைகளிலே ஓட்டிவரும் வண்டிகளிலே பூட்டப்பெற்றிருக்கும் வலிமையுடைய கடாக்களைக்போல், அவர்கள் செருக்குடன் கூடுவர். நுண்மணல் செறிந்த அடைகரையிலே, ஒலிமுழக்கத்துடன், மீன் நிறைந்த வலைகளை இழுத்துக் கொணர்வர். பெரிய களத்திலே தம் செயல்களின் விளைபயனான நெல்லைத் தொகுத்த உழவர்களைப்போலத் தம்மிடம் வந்து இரந்தவர்களுடைய வறிய கலங்கள் எல்லாம் நிறையுமாறு மீன்களை வாரி வாரிச் சொரிவர். எஞ்சியவற்றைப் பலபல கூறுகளாக்குவர். அந்தக் கூறுகளை விலை கூறி விற்பர். அதன் பின்னர், கரை உயர்ந்த திண்மையான மணற் பரப்பிலே கிடந்து உறங்குவர். அத்தகைய நாட்டுத் துறைவனே! கேளாய்:

ஒருநாள், தூய்மை செய்யப்பெறாத முத்துக்கள்போல அரும்புகள் அரும்பியிருக்கும் புன்னை மரங்களை உடைய, குளிர்ச்சியான நறிய கானற் சோலையிலே நீயும் வந்து, 'நுங்கள் மேனியின் வண்ணம் எத்தகையதோ?' என, எங்களை

அவ்விடத்தே வினவிவிட்டுச் சென்றாயானால், நின் பெருமை தான் என்னகெட்டுவிடுமோ!

**சொற்பொருள்:** *2. பாடு - பெருமை. 6. ஒழுகை - சகடம், வண்டி. 10. பாடு - கூறு. 15. வண்ணம் கேட்கில், வரைவர் என்பது கருத்து. புன்னை அரும்பிய என்றதனால், பகற்குறி இடையீடு கூறியது.*

**உள்ளுறை பொருள்:** *(1) நுளையா பெருங்கடலுள் கிடந்த மீனை நீக்கி, அதன் உயிரைக்கொண்டு, பலருக்கும் வழங்கி, உயிரை வருத்தினோம் என்ற எண்ணமே சிறிதும் இல்லாமல், மணற்பரப்பிலே கிடந்து உறங்குவர். அது போலப், பெருங்குலத்துப் பிறந்த இவளை, உன் வசமாக அவர்கள் குடும்பத்தினின்றும் நீக்கி வருத்தி, அதனால் அவள் கொண்ட வேறுபாட்டால் பலரும் அவளைத் தூற்றுமாறு அலராக்கி, வரைந்துகொள்ள முற்படாமல் நீயோ வாளா நின்றனை!*

*(2) களத்துக்கண் வருபவருக்கு இல்லை யென்னாது வாரி வழங்கும் உழவர்போல, நின் நாட்டுப் பரதவரும் இனமீனை வாரிவழங்குவர். யாம் நின்னை வேண்டியும், நீ எமக்கு இரங்கி அருளினாயில்லை.*

*(3) இவர்களால் அவன் ஏங்கி நலியவும், அதனை அவன்பாலே குற்றஞ்சாட்டியவராகக் கூறுதலால், மாயஞ் செப்பியதற்கு இஃது உதாரணமாயிற்று.*

## 31. சென்றார் என்பிலர்!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *'பிரிவிடை ஆற்றாள் ஆயினாள்' என்று, பிறர் சொல்லக் கேட்டு வேறுபட்ட தலைமகள், தோழிக்குச் சொல்லியது.*

*(பிரிந்து வேற்றுநாடு சென்றான் தலைவன். அவள் பிரிவினால் நலிந்து உடல் மெலிந்தாள். 'பிரிவினால் இவள், இப்படி ஆயினள்' என்று கண்ட பலரும் பழி சொல்லினர். அதனைத் தலைவி கேட்டாள், 'என்னைக் குறைகூறுகின்றனரே அல்லாமல் யான் இங்ஙனம் தவிக்கப் பிரிந்து போன அவரைக் குறை கூறுகின்றனர் இலரே' எனத் தன் தோழியிடம் கூறி வருந்துகிறாள்.)*

**நெருப்புஎனச் சிவந்த உருப்புஅவிர் மண்டிலம்**
**புலங்கடை மடங்கத் தெறுதலின், ஞொள்கி,**
**'நிலம்புடை பெயர்வது அன்றுகொல், இன்று?'என**
**மன்உயிர் மடிந்து மழைமாறு அமையத்து,**
**இலைஇல ஓங்கிய நிலைஉயர் யாஅத்து** 5

**மேற்கவட்டு இருந்த பார்ப்பினங் கட்குக்**
**கல்லுடைக் குறும்பின் வயவர் வில்இட,**
**நிணவரிக் குறைந்த நிறத்த அதர்தொறும்,**
**கணவிர மாலை அஃமூஉக் கழிந்தன்ன**
**புண்உமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்** 10

**கண் உமிழ் கழுகின் கானம் நீந்திச்,**
**'சென்றார்' என்புஇலர் - தோழி! - வென்றியொடு**
**வில்இலைத்து உண்ணும் வல்ஆண் வாழ்க்கைத்**
**தமிழ்கெழு மூவர் காக்கும்**
**மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்தே** 15

"செந்தீயைப் போலச் சிவந்து வெம்மையுடன் விளங்கும் ஞாயிற்று மண்டிலம். விளைநிலங்களிலேயுள்ள பயிர்கள் தீய்ந்து ஒழிய, அது அவற்றை எரித்து அழித்தது. அதனால், இன்று நிலவுலகமும் வளங்கெட்டுக் குறைவுற்றது. மக்கள் நிலைபெயரும் காலமும் இதுவன்றோ" என்று சொல்லும்படியாக, நிலை பெறும் உயிரினங்கள் வெப்பத்தால் மடிந்துகொண்டிருந்தன. மழை பெய்யாமற்போன அந்தக் கோடை காலத்திலே-

"இலைகளே இல்லாததாக, மிகவும் உயரமாக வளர்ந் திருந்த யாமரத்தின், மேற்கிளைகளிலே இருந்த தம் குஞ்சு களுக்குக், கற்களையுடைய சிற்றூர்களிலேயுள்ள மறவர்கள் வில்லால் அம்பினை எய்தலினால் செவ்வலரிமாலை இடப் பட்டு இறந்து கிடந்தாற்போல நிண ஒழுங்கும் புண்கள் சொரியும் குருதியும் சூழக் காயம்பட்டுக் கிடந்தோரது கண்களைக் கவர்ந்து சென்று, கழுகினம் உமிழ்ந்து கொடுக்கும். அத்தகைய கொடிய கானகத்தையும் தாண்டி -

விற்போரால் பகை கொண்டு எதிர்ப்பட்டோரை அழித்து, அவ் வெற்றியினால் எய்தும் திறைப்பொருள்களைப் பெற்றுத் துய்க்கும் வலிய ஆண்மையினை உடைய, தமிழ் நாட்டினை யாளும் மூவர்களாலும் முறையே காக்கப் பெறும், வேற்று மொழியினை உடைய தேசங்களிலுள்ள பலபல மலைகளையும் கடந்து, இவளுடைய தலைவர் சென்றனர்" என்று சொல்ல மாட்டார்களோ? ஆயின், யான் மெலிவதும் நலிவதும்பற்றி என்னையே பலரும் பழிக்கின்றனரே?

**சொற்பொருள்:** 1. சிவந்த - கோபித்த. 2. புலக்கடை - புலங்கடை என நின்றது; புலத்திடம் என்பது பொருள். மடங்க - தீய. ஞொள்கி - குறைவுபட்டு. 4. மன்னுயிர் ஆண்டு வாழும் மக்கள். மடிதல் - மரித்தல். 7. குறும்பு - குறும்பரிடம். 8. கணவிவரம் - செவ்வரலி. இடூஉக் கழிந்தன்ன - விழவிட்டு. 10. பரிப்ப - சூழ. புண் உமிழ் குருதி வாய்க்கொண்டுபோய்ப் பார்ப்பிற்கு உமிழ்ந்து

கொடுக்கும் எனலும் ஆம். 12. என்பிலர் - என்று சொல்லும் வார்த்தை அளவுகூட அன்பு இல்லாதவர்.

**விளக்கம்:** "அவர் சென்றார் என்று சொல்லமாட்டார்கள்; இவள் வருந்தி மெலிந்தாள் என்கின்றனரே" எனத் தலைவி வருந்துகிறாள். பிரிவோடு காட்டின் ஏதத்திற்கும் அவள் அஞ்சியமை இதனால் பெறப்படும்.

## 32. தோழி நான் சென்மோ!

**பாடியவர்:** நல்வெள்ளியார். **திணை:** குறிஞ்சி. **துறை:** (1) பின்னின்ற தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி, தலைமகளுக்குக் குறைநயப்பக் கூறியது. (2) தோழிக்குத் தலைமகள் சொன்னதூஉம் ஆம்.

*((1) தலைவனின் காதலுக்கு இசையாத தலைவியிடம், அவனுக்காகப் பரிந்துபேசித் தோழி வேண்டுகிறாள். (2) தன் உள்ளம் நெகிழ்ந்த நிலையைத் தோழியிடம் கூறித் தலைவி அறத்தொடு நிற்கிறாள்.)*

**நெருநல் எல்லை ஏனல் தோன்றிச்,**
**திருமணி ஒளிர்வரும் பூணன் வந்து,**
**புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள,**
**இரவல் மாக்களின் பணிமொழி பயிற்றிச்,**
**சிறுதினைப் படுகிளி கடீஇயர், பன்மாண் 5**

**குளிர்கொள் தட்டை மதன்இல புடையாச்,**
**'சூரர மகளிரின் நின்ற நீமற்று**
**யாரையோ? எம்அணிங்கியோய்! உண்கு' எனச்**
**சிறுபுறம் கவையினனாக, அதற்கொண்டு**
**இகுபெயல் மண்ணின் ஞெகிழ்பு, அஞர்உற்ற என் 10**

**உள்அவன் அறிதல் அஞ்சி, உள்இல்**
**கடிய கூடு, கைபிணி விடாஅ**
**வெரூஉம் மான்பிணையின் ஒரீஇ, நின்ற**
**என்உரத் தகைமையின் பெயர்த்து, பிறிதுஎன்வயின்**
**சொல்ல வல்லிற்றும் இலனே; அல்லாந்து, 15**

**இனம்தீர் களிற்றின் பெயர்ந்தோன் இன்றும்**
**தோலாவாறு இல்லை - தோழி! நாம் சென்மோ,**
**சாய்இறைப் பணைத்தோட் கிழமை தனக்கே**
**மாசுஇன் றாதலும் அறியான், ஏசற்று,**
**என்குறைப் புறனிலை முயலும் 20**

**அங்க ணாளனை நகுகம், யாமே!**

அழகிய மணிகள் ஒளிவீசிக் கொண்டிருக்கும் பூணினை அணிந்தவன் ஒருவன், நேற்றைப் பொழுதிலே தினைப் புனத்தினிடத்தே வந்து தோன்றினான். அரசனைப் போன்ற தனது தோற்றத்துடன் மாறுபட்டதாக, இரத்தல் செய்யும் எளிய மகனைப்போலப் பணிவான சொற்களையும் பலகாற் பேசினான். "சிறிய தினைப்பயிரிலே வந்து படியும் கிளிகளை ஓட்டுமாறு, குளிருடன் கூடிய தட்டையாகிய கிளிகடி கருவிகள் வலியில்லாதன கொண்டு பலமுறையும் புடைத்துச் சூர்அர மகளிரினைப் போல நின்ற, நீர்தான் யாவிரோ? எம்மை வருத்தியவளே? நின்னை நுகர்வேன்" என்று கூறினான். என் முதுகினை அணைத்துக் கொண்டும் நின்றான்.

அவன் உரையினையும் செயலினையும் மேற்கொண்டு, மழை பெய்யப்பெற்ற மண்ணினைப்போலே நெகிழ்வுற்று என் உள்ளமும் வருந்தியது. அந்த நிலையினை அவன் அறிந்து விடுவானோ என நான் அஞ்சினேன். என் உள்ளத்துடன் படாத கடுமையான சொற்களைக் கூறினேன். என்னை அணைத்திருந்த அவன் கைகளை அகற்றினேன். பயந்து வெருவும் மானின் பிணையினைப்போல அவன் அணைப்பினின்றும் விலகி நின்றேன். என்னுடைய வன்மையான தகைமையைக் கண்டு அவன் கூசினான். தன் ஆர்வத்தையும் உள்ளடக்கிக் கொண்டான்.

அதன்பின், என்னிடத்து ஏதும்சொல்லுவதற்கு வலிமை அற்றவனானான். மிகவும் வருந்தி அயர்ந்தான். தன் இனத்தினின்றும் ஒதுக்கப்பட்ட களிறேபோலத் தளர்வுடன் சென்றான். அவன், இன்றும் வந்து நமக்குத் தோல்வி அடையாமற் போவது இல்லை!

வளைந்த சந்தினை உடைய பணைத்த நம் தோள்களைத் தழுவுகின்ற உரிமை, குற்றமேதும் இல்லாமல் தன் ஒருவனுக்கே உள்ளது என்பதனையும் அவன் அறியான். வருந்தி, என்னால் அடையலாகும் காரியத்திற்கு, என்னையே இரந்து பின் நிற்றற்கும் முயல்வான். நம்முன் வருகின்ற, அத்தலைவனை நாமும் நகையாடி மகிழ்வோம். தோழி, நாம் செல்லுவோமோ!

**சொற்பொருள்:** புரவலன் - புரப்பவன், அரசன். தோற்றம் - பொலிவு. உறழ்கொள - மாறுகொள்ள, 6. குளிர் - ஈரம்; ஒரு கிளிகடி கருவி. மதன் - வலி. 3. உண்கென - உண்பேன் என்ன. 11. உள் அறிதல் - உள்ளத்து நெகிழ்வை அறிதல். 14. இன் - அசை. 18 சாய்இறை - வளைந்த சந்து. 18. ஏசற்று - வருத்தம் உற்று. 20. புறநிலை - பின் புறமாக நிற்றல்.

**விளக்கம்:** தோழி கூற்றாக உரைக்கும்போது, 'என் சிறு புறம் கவையினன்' என்பதைப் படைத்து மொழிதலாகவும், தலைவி கூற்றாகக் கொள்ளும்போது அறத்தொடு நிற்றலாகவும் கொள்க.

'இன்றும் தோலாவாறில்லை' என்பது, இன்றும் அவன் வருவான் என்பதாம். இதனால், தலைவனின் தகுதி மேம்பாடும் அறியப்படும்.

## 33. பிறர் நகு பொருளே!

**பாடியவர்:** மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் இடைச் சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** வெல் போர் வானவனின் கொல்லிமலை.

*(தன் உள்ளத்து எழுத்த பொருள்வேட்கையினால், தன் காதல் மனைவியையும் பிரிந்து சென்றான் ஒருவன். இடை வழியிலே, அவன் நெஞ்சம், அவளை நினைந்து நினைந்து அழிந்தது. அப்போது, அவன் தன் நெஞ்சிற்குக் கூறியது இது.)*

**வினைநன் றாதல் வெறுப்பக் காட்டி,**
**மனைமாண் கற்பின் வாணுதல் ஒழியக்,**
**கவைமுறி இழந்த செந்நிலை யாஅத்து**
**ஒன்றுஒங்கு உயர்சினை இருந்த வன்பறை,**
**வீளைப் பருந்தின் கோள்வல் சேவல் 5**

**வளைவாய்ப் பேடை வருதிறம் பயிரும்**
**இளிதேர் தீங்குரல் இசைக்கும் அத்தம்**
**செலவு அருங்குரைய என்னாது, சென்று,அவண்**
**மலர்பாடு ஆன்ற, மைஎழில், மழைக்கண்**
**தெளியா நோக்கம் உள்ளினை, உளிவாய் 10**

**வெம்பரல் அதர குன்றுபல நீந்தி,**
**யாமே எமியம் ஆக, நீயே**
**ஒழியச் சூழ்ந்தனை ஆயின் - முனாஅது**
**வெல்போர் வானவன் கொல்லி மீமிசை,**
**நுணங்குஅமை புரையும் வணங்குஇறைப் பணைத்தோள், 15**

**வரிஅணி அல்குல், வால்எயிற் றோள்வயிற்**
**பிரியாய் ஆயின் நன்றுமற் றில்ல.**
**அன்றுநம் அறியாய் ஆயினும், இன்றுநம்**
**செய்வினை ஆற்றுற விலங்கின்**
**எய்துவை அல்லையோ, பிறர்நகு பொருளே! 20**

நெஞ்சமே! பொருள் ஈட்டிக் கொணருகின்ற காரியமானது எத்துணை நன்மை தருவது என்பதனை என் உள்ளமும் அதன்பால் ஈடுபடுமாறு மிகவும் எடுத்தெடுத்துக் கூறினாய். மாண்புற்ற கற்பினை உடையவளும், ஒளிரும் நெற்றியினை

உடையவளுமான என் மனைவியோ வீட்டிலேயே தனித்து உள்ளாள்!

செவ்விய நிலையிலேயுள்ள யாமரம் ஒன்று, தளிரற்ற கிளைகளை உடையதாயிருந்தது: கப்பின்றி, ஒன்றாக மிகவும் உயர்ந்து வளர்ந்திருந்தது அதன் ஒரு கிளை. அதன் பால் வன்மையுடன் பறக்கும்திறன் உடையதும், சிள்ளென்று ஒலி செய்வதும், இரை கொள்ளுதலிலே வல்லதும் ஆன பருந்துச் சேவல் ஒன்றும் இருந்தது. அது, வளைந்த வாயினையுடைய தன் பெட்டையினைத் தன்பால் வரும்படியாக அழைத்துக் கொண்டிருந்தது. 'இளி' என்னும் இசையொலிபோன்று அதன் இனிய குரல் ஒலித்துக் கொண்டிருக்கும். அத்தகைய அரிய காட்டு வழியிலே -

செல்வதற்கு அருமையுடையது என்று அப்பொழுதே கூறாது, இத்துணையும் என்னுடன் போந்தனை! இப்போதோ, என் காதலியாகிய அவளுடைய மலரும் தன் பெருமையை இழத்தற்குக் காரணமாவது போன்ற மையுண்ட அழகிய குளிர்ச்சி பொருந்திய கண்களின் மயங்கிய நோக்கத்தினை நினைந்து விட்டனை! உளியின் வாயினைப் போன்று முனை கூர்மையான, வெம்மையினையுடைய பரற்கற்கள் பொருந்திய வழிகளையுடைய குன்றுகள் பலவற்றையும் கடந்து வந்தோம். 'யானே தனியன்' என்று, யாரும் துணையற்றவனாக ஆகுமாறு, என் உள்ளமாகிய நீயே என்னைக் கைவிட்டுப் போகவும் நினைத்தனை; நீயே இவ்வாறானால்,

சென்ற போர்களில் எல்லாம் வெற்றிமாலை சூடுகின்றவன் சேரன். அச் சேரனது பழைமையாகிய கொல்லிமலையின் உச்சியிலேயுள்ள சிறிய மூங்கிலையொத்த வளைந்த முன்கை யினை உடைய பெரிய தோள்களை உடையவள்; தேமலை அணிந்த அல்குல்தேரினை உடையவள்; வெண்மையான பற்களை உடையவள்; என் காதலி. அவளிடத்திலிருந்து, அன்றே நீ பிரியாதிருந்தனையானால், மிகவும் நன்றாக இருந்திருக்குமே!

பிரிந்து புறப்பட்ட அன்று, என் இயல்பினை நீ அறிந்தா யில்லை. இப்பொழுது, நாம் செய்யவேண்டிய இவ் வினையானது இடைவழியில் உற்ற அளவிலேயே விலக்கு கின்றனை. அங்ஙனம் விலக்கினால், பிறர் நகையாடத்தக்க இகழ்ச்சியினை நீ அடைவாய் அல்லையோ? (அதனால், அங்ஙனம் விலக்காது, என்னுடனேயே அமைவாயாக.)

**சொற்பொருள்:** 1. வெறுப்ப - மிக. 4. ஒன்று ஓங்கு உயர் சினை - கிளைகளின்றி ஒன்றாக ஓங்கிவளர்ந்த கொம்பு. 5. வீளை - சிள்ளென்ற ஓசை. 7. இளி என்னும் பண் என்றது, கேட்டார் விளிக்கும் குரல். 10. தெளியா நோக்கம் - வெருவின பார்வை.

*13. ஒழிய - ஊங்கே போக. முனா அது - பழையதாக. 16. வரி - திதலை. 19. விலங்கின் - விலக்குவையாயின்.*

**விளக்கம்:** இங்கு வந்தபின் மீளல் ஆகாது என்றான், நெஞ்சுக்கு இவ்வாறு கூறுகின்றான். பருந்துச் சேவல்கூடத் தன் பெடையை அழைக்கும்போது, யான் எங்ஙனம் அவளை மறத்தல் சாலும் என்பது குறிப்பு. உள்ளம் துறந்த வழி வேறு துணையாதுமில்லை; ஆதலால் 'யாமே எமியம் ஆக' என்றனன்.

## 34. இன்னும் வரல் உரைமோ!

**பாடியவர்:** மதுரை மருதன் இளநாகனார். **திணை:** முல்லை. **துறை:** வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகனுக்குச் சொல்லியது.

*(தன் தலைவியைப் பிரிந்து சென்று, வினை முற்றியபின் ஊர் திரும்பும் தலைவன், தேரினை விரையச் செலுத்துமாறு தன் பாகனிடம் கூறுகின்றான். அவனுள்ளத்துக் காதலின் மிகுதியை இது நன்றாக உணர்த்தும்.)*

**சிறுகரும் பிடவின் வெண்தலைக் குறும்புதல்**
**கண்ணியின் மலரும் தண்நறும் புறவில்,**
**தொடுதோற் கானவன் கவைபொறுத் தன்ன**
**இருதிரி மருப்பின் அண்ணல் இரலை**
**செறிஇலைப் பதவின் செங்கோல் மென்குரல் 5**

**மறிஆடு மருங்கின் மடப்பிணை அருத்தித்,**
**தெள்அறல் தழீஇய வார்மணல் அடைகரை,**
**மெல்கிடு கவுள துஞ்சுபுறம் காக்கும்**
**பெருந்தகைக்கு உடைந்த நெஞ்சம் ஏமுறச்;**
**செல்க, தேரே - நல்வலம் பெறுந!- 10**

**பசைகொல் மெல்விரல், பெருந்தோள், புலைத்தி**
**துறைவிட் டன்ன தூமயிர் எகினம்**
**துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பிற்,**
**செந்தார்ப் பங்கிளி முன்கை ஏந்தி,**
**'இன்றுவரல் உரைமோ, சென்றிசினோர்திறத்து' என, 15**

**இல்லவர் அறிதல் அஞ்சி, மெல்லென**
**மழலை இன்சொல் பயிற்றும்**
**நாணுடை அரிவை மாண்நலம் பெறவே!**

குளிர்ந்த நறிய முல்லை நிலம்; சிறிய கரிய பிடாவின் குறும்புதர்; பிடா மலர்ந்து விளங்கும் அந்தப் புதரானது வெண்மையான உச்சியுடன் கண்ணி சூடியிருத்தல் போலே மலர்ந்திருக்கும். செருப்பு அணிந்த பாதங்களையுடைய

வேட்டுவனானவன் கவைக்கோலைச் சுமந்தாற்போலப் பெரிய முறுக்குண்ட கொம்பினை உடையவாகப், பெருமை தங்கிய ஆண்மான்கள் அங்கே விளங்கும். அவை, இலை செறிந்த அறுகின் சிவந்த தண்டோடும் கூடிய மெல்லிய கொத்துக் களைப், பக்கத்திலே மறிகள் விளையாடிக்கொண்டிருக்கும் தன் இளைய பெண்மான்களை அருந்தச் செய்யும். தெளிந்த அறல் நீரானது தழுவிச் செல்லும் நெடிய மணல் சார்ந்த அடைகரை களிலே, அசையாடுகின்ற கவுளினை உடையனவாய் அவை துயில, அந்த இடத்தை ஆண்மான்கள் காவல் காத்தும் நிற்கும். ஆண் மான்களினுடைய அத்தகைய பெருந்தன்மை யினைக் கண்டதும், அவைபோலத் தலையளி செய்திலமே என்று என் நெஞ்சமும் தளரும். அப்படித் தளர்ந்த நெஞ்சம், மீண்டும் இன்புற வேண்டும். அதற்கு,

ஆடையிலே தோய்ந்த கஞ்சிப் பசையினைத் துடைத்து விடும் மெல்லிய விரல்களை உடையவள்; பணைத்த தோள் களையும் உடையவள்; ஆடை ஒலிப்பவள். அவள் அந்தப் பசையினைத் துறையிலே அலசிவிட்டாற்போன்ற, தூய வெண்மையான மயிரினை உடையவை அன்னங்கள். அவை, தம் பெடைகளுடன் கூடியவாய் அங்கே திளைத்திருக்கும். காவல் பொருந்திய மனையினது எல்லைக்கு உள்ளாகச், சிவப்பு மாலை அணிந்ததுபோன்ற கழுத்தினையுடைய பச்சைக்கிளியினைத் தன் முன் கையிலே ஏந்தியவளாக, இல்லத்து உள்ளவர் பிறர் அறிந்து விடுவார்களோ எனப் பயந்தவளாக, மெல்லென, 'நம்மைப் பிரிந்து சென்ற தலைவரைப் பற்றியதாக இன்று ஒன்று உரைப்பாயாயின், அவர் இன்றே வருவார் என நீ உரைப்பாயாக' என்று, மழலையாகிய இனிய மொழியினைச் சொன்னவாறு இருக்கும், நாணத்தினை உடையவள் நம் தலைவி. அத்தகைய நம் தலைவியது, மாண்புற்ற நலத்தினைப் பெறவேண்டும். தேரைச் செலுத்தும் தொழிலிலே நல்ல ஆற்றல் பெற்றுள்ள பாகனே! நின் தேர் இனியும் விரைந்து செல்வதாக!

**சொற்பொருள்:** 2. கண்ணியின் - சூட்டும் கண்ணி யைப்போல. 3. கவை - கவைக்கோல். பொறுத்தல் - சுமத்தல். 10. வலம் - கடுகச் செலுத்தவல்ல தொழில் வெற்றி. 11. கொல்லுதல் - ஆடை ஒலித்தல் 12. எகினம் - அன்னம். 13. திளைத்தல் - விளையாடல். வரைப்பு - மாளிகை. 6. 'மறியாடு மருங்கின் மடப்பிணை' - மறி வயிற்றிலே முழுகி விளையாடும் பக்கத்தினை உடைய பெண்மான்.

**விளக்கம்:** நம்மை இங்கே கலையும் பிணையும் வருத்து கின்றன; நம் ஊரிலுள்ள அவளை அன்னமும் அதன் துணையும் வருத்தும்; அதனால், தேரை விரையச் செலுத்துக என்றனன்.

## 35. மார்பு துணையாகத் துயிற்றுக!

**பாடியவர்:** அம்மூவனார். **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய நற்றாய் தெய்வத்திற்குப் பராஅயது. **சிறப்புற்றோன்:** மலையமானாட்டுத் திருக்கோவலூர் மன்னனா யிருந்த திருமுடிக்காரி.

(தன் வீட்டின் காவலைக் கடந்து, தன் காதலனுடன் சென்றுவிட்டாள் ஒரு பெண். அவள் தாய், மிகவும் மனம் வருந்தினாள். எனினும், தன் மகள் போன இடத்திலே, அவள் காதலனால் மிகவும் அன்பாகப் பேணப்பட வேண்டும் எனவும் அவளை ஆசீர்வதிக்கின்றாள்.)

**ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்,**
**வான்தோய் இஞ்சி நன்னகர் புலம்பத் -**
**தனிமணி இரட்டும் தாளுடைக் கடிகை,**
**நுழைநுதி நெடுவேல், குறும்படை மழவர்**
**முனைஆத் தந்து முரம்பின் வீழ்த்த** 5

**வில்ஏர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்**
**வல்ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார்;**
**நடுகல் பீலி சூட்டித்: துடிப்படுத்துத்,**
**தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்**
**போக்குஅருங் கவலைய புலவுநாறு அருஞ்சுரம்** 10

**துணிந்து பிறள்ஆயினள் ஆயினும், அணிந்துஅணிந்து,**
**ஆர்வநெஞ்சமொடு ஆய்நலன் அளைஇத், தன்**
**மார்பு துணையாகத் துயிற்றுக தில்ல-**
**துஞ்சா முழவிற் கோவற் கோமான்**
**நெடுந்தேர்க் காரி கொடுங்கான் முன்துறை,** 15

**பெண்ணையம் பேரியாற்று நுண்அறல்கடுக்கும்**
**நெறிஇருங் கதுப்பின் என் பேதைக்கு,**
**அறியாத் தேஎத்து ஆற்றிய துணையே!**

வான் அளாவிய மதிற்சுவரை உடைய நல்ல மாளிகை எமது. அவளின்றி, அதுவும் தனிமையுற்றுக் கிடக்கிறது. அவளைப் பெற்றுப் பேணிவளர்த்த எம்மையும் அவள் நினைத்தாளில்லை.

ஒப்பற்ற மணியானது மாறிமாறி ஒலிப்பதும், கடையாணி இட்ட காம்பினை உடையதும், கூர்மையான முனையை உடையதுமாகிய, நெடிய வேலினை உடையவர் குறும்பினை உடையவரான மழவர்கள். வெட்சியாராகிய அவர், போர் முனையிலே வென்று பசுக்களை மீட்டனர். அவ் வெட்சியாரை, வில்லாண்மையே உழவாகக் கொண்ட வாழ்க்கையினையுடைய,

சிறந்த அம்பினையுமுடைய கரந்தையாராகிய வீரர்கள், மேட்டுநிலத்திலே வீழ்த்தித் தாம் வெற்றிகொண்டனர். தங்களுடைய ஆண்மையினால், அக் கரந்தையார்கள் பதுக்கைக் கடவுள் வழிபாடு செய்ய முனைந்தனர். களத்திலே பட்ட வீரர்களுக்கு நடுகல் நட்டு, அந் நடுகல்லுக்கு மயிலின் தோகைகளைச் சூட்டினர். துடியினை அடித்தனர். நெல்லால் ஆகிய கள்ளோடு செம்மறி ஆட்டுக்குட்டியையும் பலி கொடுத்தனர். நடந்துபோவதற்கும் இயலாத கவர்த்த வழிகளையுடைய, புலால் நாற்றம் வீசும் அத்தகைய அரிய பாலைநில வழியிலே, அவளும் அவனுடன் செல்லத் துணிந்தாள். எம்மை மறந்து, யாரோ பிறள் ஒருத்தி என்பதாக அவள் தன் மனத்தும் ஆயினாளே!

முழவின் ஒலியானது என்றும் இடையறாது ஒலிக்கும் திருக்கோவலூரின் கோமான், நெடிய தேரினையுடைய திருமுடிக்காரி. அவனுக்கு உரியது கொடுங்கால் என்னும் ஊர். அவ்வூரின் முன்துறையிலேயுள்ள பெண்ணை என்னும் பேராற்றின் நுண்ணிய கருமணலைப் போன்ற, நெறிப்பட்ட கரிய கூந்தலினை உடையவள், பேதைமை உடைவளான எம் மகள்.

அவளுக்கு, அவளை அறிபவர் பிறர் எவரும் இல்லாத நாட்டிலே, அவளை அழைத்துப் போகும் துணைவன், அன்பு மிக்க உள்ளத்தோடு, அவளைப் பலகாலும் அணிந்து அணிந்து போற்றி, அவளுடைய அழகிய நலனைத் துய்த்துத் துய்த்துத், தன் மார்பே துணையாக அவளைத் துயில்விப்பானாக!

**சொற்பொருள்:** 3. தாள் - கடையாணி. கடிகை - காம்பு. 4. குறும்படை மழவர், கோட்டை வீரரும் ஆம். 5. முனை ஆ - பகைப் புலத்தவாய நிரை. விழுத்தொடை - தப்பாத அம்பு. 9. தோப்பிக்கள் - நெல்லாற் செய்யும் கள். துரு - செம்மறிக் குட்டி. 15. கொடுங்கால் என்பது ஊர்; இந்நாளில் கீழ்க் கொடுங்காலூர் என வழங்குவது.

**விளக்கம்:** 'எம்மும்' என்றது, தன்னுடன் ஆயத்தையும் பிற சுற்றத்தையும் சேர்த்துக் கூறியதாம். நெறி கூந்தல் - நெளிந்த கூந்தலும் ஆம். நடுகல் வழிபாடு பற்றிய பழைய வழக்கத்தை இங்கே உணரலாம்.

## 36. வீரர் ஆர்ப்பினும் பெரிதே!

**பாடியவர்:** மதுரை நக்கீரர். **திணை:** மருதம். **துறை:** தலைமகள், பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனொடு புலந்து சொல்லியது. **சிறப்புற்றோர்:** தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், அவன் வென்ற சேரன், சோழன், திதியன்,

எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், இயல்தேர்ப் பொருநன் என்னும் எழுவர்.

*(தலைவன், தன் மனைவியைப் பிரிந்து பரத்தை ஒருத்தியுடன் கூடியபின் வீடுதிரும்பி வந்தான். தலைவி, தலைமகனோடு அதனால் ஊடினாள், 'தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் வெற்றி விழாவிலே திளைக்கும் போர் வீரர்களின் ஆரவாரத்தினுங் காட்டில் அவனுடைய பரத்தமையால் எழுந்த ஊரலர் பெரிதாயிருந்தது' என, அவள் சொல்லுகிறாள்.)*

**பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்துக்**
**கொடுவாய் இரும்பின் கோள்இரை துற்றி,**
**ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்**
**கூம்புவிடு பன்மலர்சிதையப் பாய்ந்து, எழுந்து,**
**அரில்படு வள்ளை ஆய்கொடி மயக்கித்** 5

**தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது,**
**கயிறுஇடு கதச்சேப் போல மதம்மிக்கு,**
**நாள், கயம்உழக்கும் பூக்கேழ் ஊர**
**வருபுனல் வையை வார்மணல் அகன்துறைத்,**
**திருமருது ஓங்கிய விரிமலர்க் காவில்,** 10

**நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு**
**வதுவை அயர்ந்தனை என்ப அலரே,**
**கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்**
**ஆலங் கானத்து அகன்தலை சிவப்பச்,**
**சேரல், செம்பியன், சினம்கெழு திதியன்,** 15

**போர்வல் யானைப் பெலம்பூண் எழினி,**
**நார்அரி நறவின் எருமை யூரன்,**
**தேம்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்**
**இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன்,என்று**
**எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்** 20

**முரைசொடு வெண்குடை அகப்படுத்து, உரைசெலக்,**
**கொன்று களம்வேட்ட ஞான்றை,**
**வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே!**

பிளந்த வாயினையும், மேலே பல கோடுகளையும் உடையது வரால்மீன். அதன் பெரிய ஆண் ஒன்று, வளைந்த வாயினையுடைய தூண்டில் முனையிலிருந்த தனக்கு எமனாகிய இரையை விழுங்கிற்று. விழுங்கியதும், ஆம்பலது மெல்லிய இலையானது கிழியுமாறு மேலெழுந்து துள்ளிற்று. குவளையின் அரும்பு மலர்ந்த பல மலர்களும் சிதையும்படியாக அவற்றினூடும்

பாய்ந்தது. பிணக்கம் மேவிய, அழகிய வள்ளைக் கொடியினையும் கலக்கியது. தூண்டில் இட்ட வேட்டுவன் தூண்டிலை இழுக்கவும் வாராமல், கயிறிட்டுப் பிடிக்கும் சினமிக்க ஆனேறு திமிரிச் செல்வதுபோலச், செருக்குமிகுந்ததாக, விடியற்காலத்தே குளங்களைக் கலக்கியது. அத்தகைய பூக்கள் நிரம்பிய குளங்களை உடைய ஊரனே!

என்றும் வற்றாது நீர் வந்துகொண்டிருப்பது வையை. மிக்க மணல் பொருந்திய அதன் அகன்ற துறையிலே, அழகிய மருதமரம் உயரமாக வளர்ந்திருக்கும் விரிந்த மலர்களையுடைய சோலையிலே, நறுமணம் கமழும் கூந்தலையும், குறியதான வளையல்களையும் உடைய பரத்தையை, நீ மணம் செய்து கொண்டனை என்று, ஊரார் சொல்லுவர்.

கொய்த பிடரிமயிரினை உடைய குதிரைகள் பூட்டியதும், மகரக்கொடி எடுத்ததுமான தேரினை உடையவன் பாண்டியன் நெடுஞ்செழியன். அவன், தலையாலங்கானம் என்னும் ஊரின் அகன்ற இடமெல்லாம், பகைவீரர்களின் குறுதியால் செந்நிறம் அடையுமாறு போரியற்றினான். சேரன்; சோழன்; சினம் மிக்க திதியன்; போரிலே வல்ல யானைகளையுடைய பொற்பூண் அணிந்த எழினி; பன்னாடையினால் அரிக்கப்பெற்ற கள்ளினை யுடைய எருமையூர்க்குத் தலைவன்; மார்பிலே பூசிப்புலர்ந்த தேன்மணம் கமழும் சந்தனத்தையுடைய இருங்கோ வேண்மான்; செவ்விதின் இயன்ற தேரினையுடைய பொருநன் என்று கூறப்பட்ட, இந்த எழுவரது நல்ல ஆற்றல்களும் அறவே சாய்ந்து ஒழியுமாறு செய்தான். ஒருநாள் பகல் வேளைக்குள்ளேயே அவர்களது முரசுகளுடன், வெண்கொற்றக் குடைகளையும் அவன் கைப்பற்றினான். தன் புகழ்பற்றிய பேச்சு எங்கும் சென்று பரவுமாறு, அவர்தம் படைகளைக் கொன்று, அவன் களவேள்வியும் செய்தான். அப்பொழுது, வெற்றிகொண்ட அவன் வீரர்கள் ஆரவாரித்த ஆரவாரிப்பினும், இப்போது எழுந்த ஊரலர் பெரிதாக உள்ளதே!

**சொற்பொருள்:** 2. கோளிரை - கூற்றமாகிய இரை. 17. நார் - பன்னாடை. 4. மெல்லடை கிழிய எழுந்து குவளை மலர் சிதையப் பாய்ந்து எனக் கூட்டுக.

**உள்ளுறை பொருள்:** வேட்டுவன் தூண்டிலிற் கோத்த இரையை, இலையின் கீழ்க்கிடந்த வாரால்மீன் விழுங்கியது போல, நின் பாணனின் இனிய சொல்லிலே மயங்கி, நீ அப்பரத்தையைக் கூடினாய். அது இலைகிழிய மேலே எழுந்தாற் போல, அப்பரத்தையரின் தாய்மார் நெஞ்சு வருந்துமாறு அவ்விடத்தை விடாத அன்புடனே வெளிப் போந்தனை.

குவளைப்பூ முறியப் பாய்ந்ததுபோல, யாம் வருந்த இங்கே வந்தனை. குவளையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கியதுபோல, என்னைச் சார்ந்த சுற்றத்தினர் வருந்துமாறும் செய்தனை. நாட்காலையில் பலருங் காண, அது குளத்தைக் கலக்குவது போல, ஊரவர் காண, நீயும் அனைவரையும் கலக்க முறுமாறு செய்தனை அல்லையோ? எனக் கொள்ளுக.

**விளக்கம்:** 'நாட்காலை' என்றது, பலரும் துறைக்கு வரும் காலம் என்றதனால். அதனால், பலரும் அரிய நேர்ந்தது என்பதும் உணர்க. வரலாற்றுக் குறிப்பு உடைய சிறந்த பாடல் இது.

'வெற்றிவீரர் ஆர்ப்பினும் அலர் பெரிது' என்றது அதனை மிகைப்படுத்திக் கூறியதாகும். தலைவன் படைத்தலைவருள் ஒருவன் என்பதும் விளங்கும்.

## 37. நலம் நுகரும் துணை!

**பாடியவர்:** *விற்றூற்று மூதெயினனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *1. தலைமகள் தோழிக்கு வன்புறை எதிர் அழிந்து சொல்லியது. 2. பிரிவு உணர்த்திய தோழி சொல்லியது.*

*(இளவேனிற் காலத்தும் அவன் வராமற்போகவே, தலைவி மிகவும் உள்ளம் நைந்தாள். அவன் வராமல் இரான் என்பது உண்மையாயினும் கூடிமகிழும் காலம் வந்தாயிற்றே என்கிறாள். 'நம்மை மறந்து அவர் இரார்' எனினும், துணையுடையோருக்கு இது சிறந்த காலம் என்றதால், அவர் பிரிவைத் தோழிக்கு உணர்த்துகிறாள்.)*

**மறந்து, அவண் அமையார் ஆயினும், கறங்குஇசைக்**
**கங்குல் ஓதைக் கலிமகிழ் உழவர்**
**பொங்கழி முகந்த தாஇல் நுண்துகள்,**
**மங்குல் வானின், மாதிரம் மறைப்ப,**
**வைகுபுலர் விடியல் வைபெயர்த்து ஆட்டித் 5**

**தொழிற் செருக்கு அனந்தர்வீட, எழில்தகை**
**வளியொடு சினைஇய வண்தளிர் மாஅத்துக்**
**கிளிபோல் காய கிளைத்துணர் வடித்துப்**
**புளிப்பதன் அமைந்த புதுக்குட மலிர்நிறை**
**வெயில்வெரிந் நிறுத்த பயில்இதழ்ப் பசுங்குடைக், 10**

**கயமண்டு பகட்டின் பருகிக், காண்வரக்**
**கொள்ளொடு பயறுபால் விரைஇ, வெள்ளிக்**
**கோல் வரைந்தன்ன வால்அவிழ் மிதவை**
**வாங்குகை தடுத்த பின்றை ஓங்கிய,**
**பருதிஅம் குப்பை சுற்றிப், பகல்செல், 15**

**மருத மரநிழல், எருதொடு வதியும்**
**காமர் வேனில்மன் இது,**
**மாண்நலம் நுகரும் துணைஉடை யோர்க்கே!**

*தோழி! தம்முடைய மாண்புற்ற நலத்தினைத் துய்க்கும் துணையாயினவரைப் பிரியாத மகளிருக்கு -*

*வைகறை வேளையிலே, மிக்க களிப்புடையவரான உழவர்கள், ஆள் அழைக்கும் ஒலியினையுடைய ஆரவாரத்தை எழுப்புவர். இரவின் இருளானது புலர்கின்ற அவ்விடியலில், வைக்கோலைப் பெயர்த்துக் கடாவிட்டு அலைத்து எழுப்புவர், அவர்கள் தம் தூற்றாப் பொலியினின்றும் முகந்து தூற்ற, வலியற்ற நுண்மையான தூசுகள் மேகம்போல வானிலே படர்ந்து, திசை எங்கும் மறைக்கும். தொழிற் செருக்கினால் வந்த மயக்கம் ஒழியுமாறு. தென்றற் காற்றினால் கிளைத்த அழகின் தகைமையினைக் கொண்ட வளவிய தளிர்களையுடைய மாமரத் தின் கிளிபோன்ற பசுமையான காய்களைக், கிளைக் கொத்துக் களிலிருந்து கிள்ளி எடுப்பர். அவற்றோடு, புதுக்குடங்களிலே புளிக்கும் பதமும் சேர்த்து ஆக்கிய மிகப் பெய்த கள்ளை, வெயிலினிடத்துப் பின்புறும் தோன்ற நிறுத்தி வைத்துப் பதப்படுத்தி எடுத்ததாகிய பசிய குடைகளால் குளத்திலே மண்டிய எருமைக் கடாக்களைப் போலக் குடிப்பர். கொள்ளும் பயறும் அழகுடன் பொருந்தப், பாலுடன் கலந்து ஆக்கிய வெள்ளைக் கம்பியை ஓரளவாக நறுக்கி வைத்தாற் போன்ற, வெண்மையான அவிழ்க் கஞ்சியை வளைத்து உண்ட கை தடுக்கும்வரையும் உண்பர். அதன் பின்னர், வட்டமாய் உயர்ந்த ஞாயிறு போன்ற நெற்குவியலை, நெற்கூடாக்கிச் சுற்றுவர். அதன்பின் ஞாயிற்றின் வெப்பம் அகலுமாறு, மருதமரத்தின் நீழலிலே, தம் எருதுகளோடும் சென்று தங்கி இருப்பர். அத்தகைய, அனைவரும் விரும்பும், இளவேனிற் காலம் இதுவேயாகும்!*

*நம் தலைவர் நம்மை மறந்து அங்கே இருப்பவர் அல்லர். ஆயினும் - அந்தக் காலம் அவரின்றி வீணே கழிந்ததே நாம் பெற்றதுதான் என்னையோ?*

**சொற்பொருள்:** *1-2. கறங்கிசைக் கங்குல் - பள்ளி எழுச்சிக் காலம். ஒதை - ஆரவாரம். 3. பொங்கழி - தூற்றாப் பொலி. தாவில் - வலியற்ற. துகள் - தும்பு தூசுகள். 5. வைகு புலர்விடியல் - இராப்பொழுது வைகின இருள் புலர்கின்ற விடியல். ஆட்டி - அலைத்து. 8. வடித்தல் - கிள்ளி எடுத்தல். 9. புளிப்பதன் - மாதுளங்காய் முதலாகிய சில்பதம். 10. இதழ் - தோடு; 13. மிதவை - கூழ்.*

## 38. கூஉங் கண்ணஃது எம் ஊர்!

**பாடியவர்:** *வடம வண்ணக்கன் பேரிசாத்தனார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *1. தோழி தலைமகன் குறை கூறியது. 2. பகலே சிறைப்புறமாகத்தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பச் சொல்லியது. 3. தோழி குறிபெயர்த்திட்டுச் சொல்லியது. 4. தொல்காப்பிய உரையாசிரியரான நச்சினார்க் கினியர், 'அவன் வரம்பிறத்தல்' என்னுஞ் சூத்திர உரையிலே, இது தலைவி களஞ்சுட்டியதாகும் என உரைப்பர். 5. பாங்கி ஆடிடம் விடுத்துக் கொண்டகல்லுக்கு இதனை மேற்கோள் காட்டுவர் அகப்பொருள் விளக்க உரையாசிரியர்.*

*(பகற்குறியிலே கூடிவந்த தலைவி. திணை அறுத்தபின், அவன் வந்து தன் ஊர்க்கு அணித்தாகிய இடத்திலே, இரவுக்குறி நேர்ந்து கூடுதற்கு ஏற்றவாறு, தன் ஊர்பற்றி அவனுக்கு முன்னரே கூறாததை நினைந்து வருந்துகிறாள்.)*

**விரிஇணர் வேங்கை வண்டுபடு கண்ணியன்,**
**தெரிஇதழ்க் குவளைத் தேம்பாய் தாரன்,**
**அம்சிலை இடவதுஆக, வெஞ் செலற்**
**கணைவலம் தெரிந்து, துணைபடர்ந்து உள்ளி;**
**வருதல் வாய்வது வான்தோய் வெற்பன், 5**

**வந்தனன் ஆயின், அம்தளிர்ச் செயலைத்**
**தாழ்வுஇல் ஓங்குசினைத் தொடுத்த வீழ்கயிற்று**
**ஊசல் மாறிய மருங்கும், பாய்புஉடன்**
**ஆடா மையின் கலுழ்புஇல தேறி,**
**நீடுஇதழ் தலையிய கவின்பெறு நீலம் 10**

**கண்என மலர்ந்த சுனையும், வண்பறை**
**மடக்கிளி எடுத்தல் செல்லாத் தடக்குரல்**
**குலவுப்பொறை யிறுத்த கோல்தலை மருவி**
**கொய்துஒழி புனமும், நோக்கி; நெடிதுநினைந்து,**
**பைதலன் பெயரலன் கொலோ? ஐ.தேங்கு- 15**

**அவ்வெள் அருவி சூடிய உயர்வரைக்**
**கூஉம் கணஃது எம்ஊர் என**
**ஆங்குஅதை அறிவுறல் மறந்திசின், யானே!**

*இதழ் விரிந்த பூங்கொத்துக்களையுடைய வேங்கையின், வண்டினம் மொய்க்கும் புதுப்பூக்களாகிய கண்ணியைத் தலையிலே சூடியவன்; ஆராய்ந்து எடுத்த இதழ்களையுடைய குவளை மலர்களினால் தொடுக்கப்பெற்றுள்ள தேன்பாயும் தாரினை மார்பிலே அணிந்தவன்; அழகிய வில்லானது*

அவனுடைய இடப்பக்கத்தே விளங்கும்; வேகமாகச் செல்லக்கூடிய அம்புகளை அவற்றின் ஆற்றல் தெரிந்து எடுத்துக் கொண்டிருப்பவன், அவன்! வானளாவிய மலைமுடிகளை உடைய மலைநாடனாகிய அவனே நம் தலைவன்! அவன், தன் துணையாகிய எம்மை நினைந்து வருந்திக் குறியிடத்திற்கு வருவது உண்மையாகும்.

அங்ஙனம் அவன் வந்தான் ஆனால், அழகிய தளிர்களை உடைய அசோகமரத்தினது, தாழ்வாகவில்லாமல் உயரமாக இருக்கும் ஒரு கிளையிலே தொடுத்த, தொங்கும் கயிற்றினாலாகிய ஊசல் இல்லாது ஒழிந்த இடத்தை நோக்குவான். யாம் என் தோழியருடன் ஒருங்கு பாய்ந்து நீராடுகை இல்லாமையினால், கலங்குதல் இலவாகத் தெளிந்து நீண்ட இதழ்கள் பொருந்திய அழகிய நீலப்பூக்கள், எம் கண்களைப் போல மலர்ந்திருக்கும் சுனையையும் அவன் காண்பான். அழகான சிறகுகளையுடைய இளைய கிளியானது தூக்கிச் செல்லவும் முடியாத, பெரிய கதிராகிய வளைந்த பாரத்தை முறித்த, கோலாகிய உச்சிகளை உடைய கதிர்கள் கொய்து ஒழிந்த தினைப்புனத்தையும் நோக்குவான். எம்மை மீள நினைந்து நினைந்து துன்புற்றவனாகிப் பெயர்ந்து செல்லவும் மாட்டாதவனாக, அவன் வருந்துவான் அல்லனோ?

"சுனையினின்று வரும் வெள்ளிய அருவிகளைத் தன் உச்சியிலே கொண்டிருக்கும் உயர்ந்த மலையில், கூப்பிடு தூரத்தில் உள்ளதே உம்முடைய ஊர்" என்று, அவனோடு இறுதியாகக் கூடிப் பிரிந்த அன்று, அவனுக்கு அதனை அறிவுறுத்துதலை யான் மறந்துவிட்டேன். அத்தகைய தவறினால்தான் அவன் வாரானாயினான். அதனால், என் அழகு கெடுவேனாக!

**சொற்பொருள்:** 2. தெளிதல் - தீது கழித்தல். 4. துணை - தலைவி. படர்ந்தது உள்ளி - வருந்தி நினைந்து. 8. மாறுதல் - ஆடாது ஒழிதல். 7. வீழ் கயிறு - தாழ் கயிறு. 12. தடக்குரல் -பெரிய தினைக் கதிர். 13. குலவுப் பொறை - வளைந்த பாரம். கதிர்த்தலை போய்க் கோற்றலை ஆயிற்று தினை என்க.

**விளக்கம்:** 'வேங்கைப் பூக்களில் வண்டு மொய்க்கும்' என்று இப்பாடல் தெரிவிக்கிறது. திவாகரமோ வேங்கையை வண்டு உண்ணாத மலர்வகையுள் சேர்க்கிறது. தினைப் பயிரின் உச்சியிலே உருண்ட கொம்புபோலக் கதிர்க் காம்புகள் விளங்கும். அதனைக் 'கோல்' என்றனர். வந்தனன் ஆயின், பெயரலன், அவன் மறந்தனன் என்றும் கருதலாம்.

## 39. ஒழித்தது பழித்த நெஞ்சம்!

**பாடியவர்:** *மதுரைச் செங்கண்ணனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள் முற்றிய தலைமகன் தலைமகளைக் கண்டு கூறியது.*

*(தலைவியைப் பிரிந்து பொருளீட்டிவரச் சென்ற தலைவன் வந்துவிட்டான். பிரிவினால் வாடியிருந்த அவள், அவன் வந்ததும் அவனோடு கூடி மகிழ்தல் இயல்பு. அவளோ ஊடினாள். காரணம், பிரிவுக்காலத்து அவள் கண்ட கனவிலே வந்த அவன், அவளைத் தழுவவில்லையாம். அவனும், அதையே கூறி அவள் ஊடலைத் தணிவிக்கிறான். மிகவும் சுவையான உள்ளப் படப்பிடிப்பு இந்தப் பாடல்.)*

**'ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்து,**
**உள்ளியும் அறிதிரோ, எம்?'என, யாழநின்**
**முள்எயிற்றுத் துவர்வாய் முறுவல் அழுங்க,**
**நோய்முந் துறத்து நொதுமல் மொழியல; நின்**
**ஆய்நலம் மறப்பெனோ மற்றே? சேண்இகந்து** 5

**ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி ஒண்பொறி**
**படுஞெமல் புதையப் பொத்தி, நெடுநிலை**
**முளிபுன் மீமிசை வளிசுழற் றுறாஅக்**
**காடுகவர் பெருந்தீ ஓடுவயின் ஓடலின்,**
**அதர்கெடுத்து அலறிய சாத்தொடு ஓராங்கு** 10

**மதர்புலி வெரீஇய மையல் வேழத்து**
**இனம்தலை மயங்கிய நனந்தலைப் பெருங்காட்டு,**
**ஞான்றுதோன்று அவிர்சுடர் மான்றால் பட்டெனக்,**
**கள்படர் ஓதி! நிற்படர்ந்து உள்ளி,**
**அருஞ்செலவு ஆற்றா ஆர்இடை, ஞெரேரெனப்** 15

**பரந்துபடு பாயல் நவ்வி பட்டென,**
**இலங்குவளை செறியா இகுத்த நோக்கமொடு,**
**நிலம்கிளை நினைவினை நின்ற நிற்கண்டு,**
**'இன்னகை! இனையம் ஆகவும், எம்வயின்**
**ஊடல் யாங்கு வந்தன்று?'என, யாழநின்** 20

**கோடுஏந்து புருவமொடு குவவுநுதல் நீவி,**
**நறுங்கதுப்பு உளரிய நன்னர் அமையத்து,**
**வறுங்கை காட்டிய வாய்அல் கனவின்**
**ஏற்று ஏக்கற்ற உலமரல்**
**போற்றாய் ஆகலின், புலத்தியால் எம்மே!** 25

*வண்டினம் மொய்க்கின்ற, இயற்கையிலேயே நறுமணம் பெற்ற, கூந்தலை உடையவளே! "காதலுடையாரைப் பிரித*

லாகாது என, ஆன்றோர் ஒழித்த கொள்கையைப் பழித்த உள்ளத்துடனே, நெடுந்தொலைவு சென்றீர்; எம்மை நினைத்தும் அறிந்தீரோ" என, நின்னுடைய முள்போன்ற கூர்மையான பற்களை உடைய பவளவாயின் வழக்கமான முறுவலும் உள்ளடங்க, எனக்கு வருத்தமாகிய நோயைத் தோற்றுவித்தனை! என்பால் உண்மைக்கு மாறுபட்ட ஒன்றினைச் சொல்லி, இங்ஙனம் ஊடாதே! ஆராயப்படும் அளவுக்குச் சிறந்த நின்னுடைய அழகினை, யான் என்றேனும் மறப்பேனோ?

நெடுந்தொலை கடந்து சென்றோம். அங்கே, மூங்கில்கள் ஒன்றுடன் ஒன்று உரைசுதலால் ஒள்ளிய தீப்பொறிகளைச் சொரிந்தன. விழுந்த பொறிகளின் அருகே, மிகுதியாகக் கிடந்த சருகுகள் மறையும்படியாக நெருப்பு மூளத் தொடங்கியது. காற்றானது, நெடிய இடத்திலேயுள்ள உலர்ந்த ஊகம்புல்லின் மேலும், அந்நெருப்பைச் சுழற்றிப் பரவச் செய்தது. காட்டையே அழித்துவிடுவது போன்ற பெரு நெருப்பும் சென்றவிடமெல்லாம் பரந்தது. மேலே செல்லுவதைக் கைவிட்டுவிட்டு, வாணிகச் சாத்தும் அலறிற்று. செருக்குற்ற புலியைக் கண்டு வெருவிய மதமுடைய யானைக் கூட்டமானது, பலவிடத்தும் நிலை தடுமாறித் திரியத் தொடங்கிற்று. அத்தகைய, அகன்ற இடத்தையுடைய பெருங்காட்டிலே, ஒருநாள்:

மாலையிலே மறையும்போது, தாழ்வாக மேலை வானத்திலே தோன்றும் ஞாயிறும் மயங்கி மறைந்துவிட்டது. அரிது சென்ற செலவும் இயலாது ஒழிந்த அந்த அரிய வழியிலே, பரந்து கண்படும் பாயலின்கண்ணே, பொதுக்கென நின் நினைவிலே என் உள்ளம் சென்றது. என் பிரிவினால் மெலிவுற்றுக் கழன்று விழுகின்ற நின் வளைகளை மேலே ஏற்றிச் செறித்தவளாகத், தலைதாழ்ந்த நோக்குடன், நிலத்தைக் கால் விரல்களினாற் கீறியவாறே, பெண்மானைக் கண்டாற்போல நீ நிற்கக் கண்டேன். 'இனித்த நகையினை உடையவளே! யாம் இங்ஙனம் நின் நினைவாகவே இருப்பவும், எம்மிடத்தே நினக்கு ஊடல் எப்படித்தான் வந்ததோ?' எனச் சொல்லி, நினது பக்கம் உயர்ந்த புருவத்துடன், திரண்டு சிறுத்த நெற்றியையும் துடைத்து விட்டேன். மணம் பொருந்திய நின் கூந்தலையும் கோதினேன். அந்த நல்ல சமயத்திலே, எல்லாம் வெறுமையாகி விட்ட, அந்த வாய்மையற்ற கனவினை ஏற்று, ஏக்கற்ற வருத்தத்தினையும் யான் அடைந்தேன். அதனை, நீ நின் அறிவிற் கொள்ளாய். ஆகலின், எம்மை வெறுத்து ஊடுகின்றாயோ?

**சொற்பொருள்:** 1. ஒழிந்தது - பெண்கள் கணவருடன் வருத்தம் கொள்ளலாகாது என்று முன்னோர் கழித்தது. பழித்தல் - அதனை இகழ்தல். 6. பிசைதல் - தேய்த்தல். ஞெலி -

கடையப்பெற்ற மூங்கில். 8. முளிபுல் - ஊகம்புல். 9. ஓடுவயின் ஓடல் - காற்றோடின இடமெல்லாம் ஓடுதல். 10. சாத்து - வாணிகர் கூட்டம். 15. ஞான்று - வீழ்கின்ற போது தாழ்ந்து. கள் - வண்டு. 21. கோடு - பக்கம். குவவுதல் - திரண்டு சிறுகுதல். 20-21. புலவிதீர, அவளது அளகமும் நுதலும் நீவினான் அவன் என்க.

## 40. மார்பிற் சென்ற நெஞ்சு!

**பாடியவர்:** குன்றியனார். **திணை:** நெய்தல். **துறை:** தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழிக் கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

(தலைவன் பொருள்நாடிப் பிரிந்து சென்றான். அவ்வேளையிலே, பிரிவுத் துயருற்ற தலைவியானவள் தன் தோழிக்குச் சொல்லியது இது.)

**கானல், மாலைக் கழிப்பூக் கூம்ப,**
**நீல்நிறப் பெருங்கடல் பாடுஎழுந்து ஒலிப்ப**
**மின்ஆர் குருகின் மென்பறைத் தொழுதி**
**குவைஇரும் புன்னைக் குடம்பை சேர,**
**அசைவண்டு ஆர்க்கும் அல்குறு காலைத், 5**

**தாழை தளரத் தூக்கி, மாலை**
**அழிதக வந்த கொண்டலொடு கழிபடர்க்**
**காமர் நெஞ்சம் கையறுபு இனையத்**
**துயரம் செய்துநம் அருளார் ஆயினும் -**
**அறாஅ லியரோ அவருடைக் கேண்மை! 10**

**அளிஇன் மையின் அவண்உறை முனைஇ,**
**வாரற்க தில்ல - தோழி! - கழனி**
**வெண்ணெல் அரிநர் பின்றைத் ததும்பும்**
**தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை**
**செறிமடை வயிரின் பிளிற்றிப் பெண்ணை 15**

**அகமடல் சேக்கும் துறைவன்**
**இன்துயில் மார்பில் சென்றஎன் நெஞ்சே!**

தோழி! மாலை வேளை; கானற் சோலையிலேயுள்ள கழிகளிலே நெய்தற்பூக்கள் குவிந்தன; நீல நிறத்தையுடைய பெரிய கடலானது பேரொலியுடன் ஒலித்தது; மீனை உண்ணும் மெல்லிய சிறகினையுடைய கடற்பறவை இனம், திரட்சி பொருந்திய பெரிய புன்னை மரத்திலேயுள்ள கூடுகளில் சேர்ந்தன; அசைகின்ற வண்டுகள் ஒலிக்கின்றன; இவ்வாறு, எல்லாமே ஓய்வுகொள்ளும் காலமாகிய மாலை வேளையிலே -

தாழைகள் தளருமாறு அசைந்து, பிரிந்திருப்பவர்கள் வருந்துமாறு வந்த கீழ்க்காற்றினால், மிகவும் துன்பங் கொண்ட அழகிய நெஞ்சம் செயலற்று வருந்த, நமக்குப் பிரிதலாகிய துன்பத்தினைச் செய்தனர். மீண்டும் வந்து அவர் நமக்கு அருளார் ஆயினும், அவருடைய நட்பானது நமக்கு என்றும் ஒழியாதிருப்பதாக!

வயல்களிலே வெண்நெல்லை அரிவோரது பின்பக்கமாக நின்று ஒலிக்கப்படும் பறை ஒலியினைக் கேட்டு, நீண்ட கால் களை உடைய நாரையானது அஞ்சும், செறிந்த மூட்டு வாயினையுடைய கொம்பினைப்போல ஒலித்தவாறே சென்று, பனைமரத்தின் அகமடலிலே சென்று தங்கும். அத்தகைய கடல்துறையினை உடையவன் நம் தலைவன். அவனது இனியதும், யாம் துயிலுதற்கு உரியதுமான மார்பின் பொருட்டாக, என் நெஞ்சமானது அவனிடத்தே சென்றது. அவன் அளி செய்திலன் என்று, அங்கே தங்கியிருத்தலை விடுத்து, அது இவ்விடத்தே வாராதிருப்பதாக!

**சொற்பொருள்:** 2. பாடெழுந்து - ஒலிமிக்கு. 3. தொழுதி - தொகுதி. 4. குவை - திரட்சி. 5. அசைவண்டு - பூவுக்குப் பூ அசைந்து கொண்டிருக்கும் வண்டு. அல்குறுகாலை - எல்லாம் சென்று அடையும் அந்தி வேளை. 6. தளர - ஒல்க. தூங்கி - அசைந்து. 13. ததும்பும் - ஒலிக்கும். 15. மடை - மூட்டுவாய்.

**உள்ளுறை பொருள்கள்:** நெல் அரிபவர் தம் காரியம் செய்யப் பறை கொட்டினர். அதற்கு அஞ்சிய நாரை வேற்று நிலத்ததாகிய பெண்ணையிலே சென்று தங்கிற்று. தான் வாழ்தற்கு உரிய இடமாகிய மருதநிலத்தையும் மறந்தது. அதுபோலத், தம் காரியஞ் செய்ய நம்மை அவர் பிரிந்தார். நம்முடையதாயிருந்த நம் நெஞ்சமும் நம்மை விட்டுப் பிரிந்து, நமக்கு அயலவராகிய அவர் மார்பிலே சென்றது.

**மேற்கோள்:** 'நெய்தலுக்கு முதலும் கருவும் வந்து, உரிப் பொருளால் சிறப்பெய்தி முடிந்தது இது' என்பர், நச்சினார்க் கினியர்.

## 41. காடணி கொண்ட பொழுது!

**பாடியவர்:** குன்றியனார். **திணை:** பாலை **துறை:** தலை மகன் பொருள்வயிற் பிரிந்தவிடத்துக் கிழத்தியை நினைந்து சொல்லியது.

(பொருளாசை மிகுதியாகத் தலைவியைப் பிரிந்து வேற்று நாடு சென்ற ஒரு தலைவன் அவளை நினைந்து சொல்லியது.)

**வைகுபுலர் விடியல், மைபுலம் பரப்பக்,**
**கருநனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்**
**எரிமருள் பூஞ்சினை இனச்சிதர் ஆர்ப்ப,**
**நெடுநெல் அடைச்சிய கழனிஏர் புகுத்து,**
**குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர, 5**

**அரிகால் போழ்ந்த தெரிபகட்டு உழவர்**
**ஓதைத் தெள்விளி புலந்தொறும் பரப்பக்,**
**கோழிணர் எதிரிய மரத்த கவினிக்,**
**காடுஅணி கொண்ட காண்தகு பொழுதில்,**
**நாம்பிரி புலம்பின் நலம்செலச் சாஅய் 10**

**நம்பிரிபு அறியா நலமொடு சிறந்த**
**நல்தோள் நெகிழ, வருந்தினள் கொல்லோ -**
**மென்சிறை வண்டின் தண்கமழ் பூந்துணர்**
**தாதுஇன் துவலை தளிர்வார்த் தன்ன**
**அம்கலுழ் மாமை கிளைஇய, 15**

**நுண்பல் தித்தி, மாஅயோளே!**

நெஞ்சமே!

மென்மையான சிறகினை உடையவை வண்டினம். அவை மொய்த்துக் கொண்டிருக்கும் குளிர்ந்த மணம் உடைய பூங் கொத்துக்கள்; அந்தப் பூங்கொத்துக்களிலே உள்ள தாதுடன் கூடிய தேன்துளிகள் தளிரிலே ஒழுகினால் எப்படியோ, அப்படிப்பட்ட அழகு ஒழுகும் மாமை நிறத்திலே, இளைத்துத் தோன்றும், சிறுசிறு தேமற்புள்ளிகளை உடையவள், நம் தலைவி.

தங்கிய இருளானது புலர்கின்ற விடியற் காலத்திலே, எருமைகள் மேய்ச்சல் நிலத்திலே பரந்து செல்லும். முருக்க மரத்தின் கிளைகளில் அரும்புகள் தம் முறுக்கு நெகிழ்ந்து நெருப்பைப் போன்ற பூக்களையுடையனவாக விளங்கும். வண்டினம் அங்கே ஒலித்துக் கொண்டிருக்கும். நெடிய நெற் பயிரினை நட்டு முடிந்த வயல்களிலுள்ள ஏர்களை, உழவர் தலை குவிந்த கட்டிகளை உடைய தோட்டங்களிலே சேர்ப்பர். ஆராய்ந்த பகடுகளை உடைய உழவர்கள் சிலர், அரிதாளை யுடைய நிலத்தைப் பிளந்து, மண் பிறழும்படியாக உழுவர். அவர்களது ஏர்மங்கல ஓசையாகிய தெளிந்த ஒலியானது, இடந் தோறும் பரக்கும் அழகுற்ற செழுமையான பூங்கொத்துக்களை உடைய மரங்கள் கொண்ட காடு இது. இக்காடு அழகுபெற்றுக் காட்சிக்கு இனிதாகத் தக்கவாறு விளங்குகின்ற இக்காலத்திலே-

நம் பிரிவு என்பதனையே அறியாத இயல்பான தன் அழகினோடு, மிகவும் சிறப்புடையனவாயிருந்த தன் நல்ல

*தோள்கள், நாம் பிரிந்துவிட்ட தன்மையினால் அவ்வழகு கெட, மிகவும் மெலிந்து நெகிழ்ந்திடலால், அவள் மிகவும் வருந்தியவளாக இருப்பாளோ?*

**சொற்பொருள்:** *1. மை - எருமை. 13. வண்டின் - வண்டினை யுடைய. 15. கிளைஇய - தோற்றின. பாடியவர், சேர மானந்தையார் எனவும் உரைப்பர்.*

**விளக்கம்:** *கார்க்காலம் தொடங்கிய செய்தியை, வயலில் நடவு முடிந்த உழவர் தோட்டங்களை உழச் செல்வதும், நடாதவர் வயல்களை உழுது கொண்டிருப்பதும், மலர்கள் மலர்ந்ததும் பிறவும் உணர்த்தும். அதற்குள், வீடு திரும்ப வேண்டியவன், திரும்ப இயலாமையினால், அவளை நினைந்து இவ்வாறு கூறினான் என்க.*

## 42. உவகை பெய்தற்றே!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தலை மகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகளுக்குச் சொல்லியது.*

*(தலைமகன் தான் விரைய வந்து தலைமகளை மணந்து கொள்வதாகத் தோழியிடம் உறுதி கூறினான். இற்செறிப்பிலே இருந்த தலைவியிடம், தோழி வந்து, அந்த நல்ல செய்தியை உவப்புடன் கூறுகின்றாள்.)*

**மலிபெயல் கலித்த மாரிப் பித்திகத்துக்**
**கொயல்அரு நிலைஇய பெயல்ஏர் மணமுகைச்**
**செவ்வெரிந் உறழும் கொழுங்கடை மழைக்கண்**
**தளிர்ஏர் மேனி, மாஅ யோயே!**
**நாடுவறம் கூர, நாஞ்சில துஞ்சக்** 5

**கோடை நீடிய பைதுஅறு காலைக்**
**குன்று கண்டன்ன கோட்ட, யாவையும்**
**சென்று சேக்கல்லாப் புள்ள, உள்இல்**
**என்றூழ் வியன்குளம் நிறைய வீசிப்,**
**பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறை,** 10

**பல்லோர் உவந்த உவகை எல்லாம்**
**என்னுள் பெய்தந் தற்றே - சேண்இடை**
**ஓங்கித் தோன்றும் உயர்வரை**
**வான்தோய் வெற்பன் வந்த மாறே!**

*மாரிக் காலத்திலே பூப்பது 'பித்திகம்' என்னும் பிச்சி மலர். மிகுதியான மழை பெய்தலாலே, அங்ஙனம் தழைத்த பித்திகத்தின், கொய்தற்கும் அரிதாகுமாறு மட்டு இல்லாமல் விளங்கும், மழைக்கு எழுச்சிபெற்ற மணம் நிறைந்த அரும்பினது,*

சிவந்த பின்புறத்தைப் போன்ற, வளவிய செவ்வரி பரந்த குளிர்ந்த கண்களையும், தளிரை ஒத்த மேனியினையும், மாமை நிறத்தையும் உடையவளே!

நெடுந் தொலைவினிடத்தே உயர்ந்து தோன்றும் உயர்ந்த பக்கமலைகளையுடைய, வானளாவிய மலைக்கு உரியவனான நம் தலைவன், வரைவு மலிந்து வந்தனன். அவன் வருகை,

மழை பெய்யாது நாட்டிலே பஞ்சம் ஏற்படக், கலப்பைகள் அதனால் உழவின்றித் தூங்கக் கோடையானது நீண்ட, பசுமை அற்றுப்போன காலத்திலே, குன்றங்களைக் கண்டாற் போன்ற பெரிய கரைகளை உடையனவும், நீரில்லாமையினால் பறவை யினம் சென்று தங்குதல் இல்லாதனவும், உள்நீரும் இல்லாது வெப்பம் மிக்கனவுமாகிய அகன்ற குளங்கள் எல்லாம், நிறையு மாறு பெய்த பெரிய மழையானது பொழிந்த, இன்பமிக்க அந்த விடியற்காலத்திலே, பல்லோரும் உவந்த உவகை எல்லாம், ஒருசேர என்னுள்ளே பெய்துவைத்தாற் போலும் இருந்ததே!

**சொற்பொருள்:** 8. சேக்கல் - தங்கல். 9. வீசி - உதவி. 14. வந்தமாறு - வரையவந்தபடி. நின் மழைக்கண்ணும் தளிர்மேனியும் வேறுபட்டு விடாதபடி அவர் விரைவாக நின்னை மணக்க வந்தனர் என்க.

## 43. அளியரோ அளியர் தாமே!

**பாடியவர்:** மதுரையாசிரியர் நல்லந்துவனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

*(கார்காலம் தன் செழுமையைக் காட்டிக் கொண்டிருக்கிறது. தன்னுடைய மனைவியைப் பிரியாதிருக்கும் ஒருவன், தன் மனத்திலே பொருள் ஆசை எழத், தன் நிலைமையைத் தெளிவுபடுத்துகின்றான். அவனுடைய காதல் மிகுதியை உணர்த்துவது இச்செய்யுள்!)*

**கடல்முகந்து கொண்ட கமஞ்சூல் மாமழை**
**சுடர்நிமிர் மின்னொடு வலன்ஏர்பு இரங்கி**
**என்றூழ் உழந்த புன்தலை மடப்பிடி**
**கைமாய் நீத்தம் களிற்றொடு படீஇய,**
**நிலனும் விசும்பும் நீர்இயைந்து ஒன்றி,** 5

**குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது,**
**கதிர்மருங்கு அறியாது, அஞ்சுவரப் பாஅய்,**
**தளிமயங் கின்றே தண்குரல் எழிலி,யாமே**
**கொய்அகை முல்லை காலொடு மயங்கி,**
**மைஇருங் கானம் நாறும் நறுநுதல்,** 10

**பல்இருங் கூந்தல், மெல்இயல் மடந்தை**
**நல்எழில் ஆகம் சேர்ந்தனம்; என்றும்**
**அளியரோ அளியர்தாமே - அளிஇன்று**
**ஏதில் பொருட்பிணிப் போகித், தம்**
**இன்துணைப் பிரியும் மடமை யோரே!** 15

*கடலின் நீரை முகந்து, நிறைந்த சூல்கொண்டவைகளாயின கரிய மேகங்கள். ஒளிமிக்க மின்னலுடன், வலமாக எழுந்து சென்று அவை முழங்கின. புற்கென்ற தலையினையும் மடப்பத்தினையும் உடைய பிடியானை ஒன்று கோடைக் காலத்தே, ஞாயிற்றின் வெம்மையினால் வாட்டம் அடைந்தது. அது, இப்போது மேலே உயர்த்திய தன் துதிக்கையும் மறையத்தக்க ஆழ்ந்த வெள்ளத்திலே படிந்து, தன் களிற்றுடன் நீர்விளையாடத் தொடங்கிற்று. நிலமும் வானமும் மழைநீரால் பொருத்தப்பட்டு ஒன்று போலத் தோன்றின. குறிய நீரினை உடைய நாழிகை வட்டிலால் நாழிகையினைக் கணக்கிட்டு கூறுபவர் அல்லாமல், பிறர், ஞாயிறு இருக்கும் இடத்தினையே அறியமாட்டாதவராக அச்சங் கொண்டனர். இவ்வாறு, எங்கும் பரந்து பெய்கின்ற பெருமழையோடு, தண்ணிய இடிமுழக்கத் தைக் கொண்ட மேகங்களோடு மழை பெய்யும் கார்காலமானது விளங்கிற்று.*

*அவ் வேளையிலே, கொய்யப்படும் தழைத்த முல்லை மலர்கள் காற்றோடு சேர்ந்து மயங்குதலினால், கரிய பெருங் கானம் முல்லை மணம் நாறுவதுபோன்று, நறுமணங் கமழும் நறிய நுதலினையும், பலவகையான முடித்தலையுடைய கருமையான கூந்தலையும், மென்மையாம் தன்மையினையும் உடைய நம் தலைவியினது நல்ல அழகுடைய மார்பினைப் பிரியாது சேர்ந்திருப்பவர்களாயிருக்கின்றோம், நாம்.*

*சற்றும் இரக்கம் இல்லாதவர்களாக, காதல் வாழ்விற்கு அயலதாகிய பொருட்பற்றினாற் சென்று, தம்முடைய இனிய துணைவியரைப் பிரிகின்ற மடமையை உடையவர்கள், எக் காலத்தும் மிகவும் இரங்கத்தக்கவர்களே யாவர்!*

**சொற்பொருள்:** *2. சுடர் - ஒளி. 4. கைமாய் நீத்தம் - உயர்த்திய துதிக்கை மறையும் அளவுள்ள வெள்ளம். 6. குறுநீர் - நாழிகை வட்டிலின் அளவுபட்ட நீர். கன்னல் - கன்னலை, வட்டிலை. 7. கதிரவன் எங்குள்ளனன் என அறியாது வானம் இருண்டு கிடத்தலால் உலகம் அஞ்சிற்று என்க. 8. எழிலி - மேகம். 9. மயங்குதல் - நெருங்குதல். 10. மை - பசுமை. 12. சேர்ந்தனம் - சேர்ந்திருக்கிறோம். 13. அளியர் - அறிவற்றோர்.*

4. 'கைமாய்' என்பதற்குக் கழைமாய் என்ற பாடங் கொண்டால், ஓடக்கோலும் நிலைகொள்ளாது மறையும் பெருவெள்ளம் என்க.

**விளக்கம்:** 'பிரியும் மடமையோர் அளியர்' என்றதால், பிரிவுக்குத் தூண்டி தன் நெஞ்சைத் தடுத்தமையும்; பிடிகளிற்றோடு நீராடும் என்றதால், தானும் இன்ப விளையாட்டிலே திளைக்க விரும்பியமையையும் காணலாம்.

## 44. வினை முடித்தனன் வேந்தனும்!

**பாடியவர்:** குடவாயில் கீரத்தனார்; உறையூர்ச் சல்லியங் குமரனார் பாடியது என்ற பாடபேதமும் உரைக்கப்படும். **திணை:** முல்லை. **துறை:** வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது. **சிறப்பு:** பழையன், நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்துறை, கணையன், பெரும்பூட் சென்னி ஆகியோரும்; கழுமலம், அழும்பில், குடவாயில் ஆகிய ஊர்களும் கூறப்பெற்றன. கழுமலப் போரிலே வெற்றிபெற்ற சோழனின் பெருமையும் உரைக்கப்பட்டது.

*(போரிலே ஈடுபட்டுச் சென்ற தலைவன் ஒருவன், போர் முடிந்ததும், தன் காதலியின் நினைவு மேலெழத் தன் பாகனைத் தேரை விரைந்து செலுத்தத் தூண்டுகிறான்.)*

**வந்துவினை முடித்தனன் வேந்தனும்; பகைவரும்**
**தம்திறை கொடுத்துத் தமர்ஆ யினரே;**
**முரண்செறிந் திருந்த தானை இரண்டும்**
**ஒன்றுஎன அறைந்தன பணையே; நின்தேர்**
**முன்இயங்கு ஊர்திப் பின்னிலை ஈயாது** 5

**ஊர்க, பாக! ஒருவினை, கழிய -**
**நன்னன், ஏற்றை, நறும்பூண் அத்தி,**
**துன்அருங் கடுந்திறற் கங்கன், கட்டி,**
**பொன்அணி வல்வில் புன்றுறை என்றுஆங்கு**
**அன்றுஅவர் குழீஇய அளப்புஅருங் கட்டூர்,** 10

**பருந்துபடப் பண்ணிப், பழையன் பட்டெனக்,**
**கண்டது நோனா னாகித் திண்தேர்க்**
**கணையன் அகப்படக் கழுமலம் தந்த**
**பிணையல்அம் கண்ணிப் பெரும்பூட் சென்னி**
**அழும்பில் அன்ன அறாஅ யாணர்,** 15

**பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவை,**
**பொங்கடி படிகயம் மண்டிய பசுமிளை,**
**தண்குட வாயில் அன்னோள்**
**பண்புடை ஆகத்து இன்துயில் பெறவே!**

நம்முடைய வேந்தனும், போர்முனை கருதிவந்து, எடுத்த வினையையும் வெற்றியுடன் முடித்து விட்டான். பகைவர்களும், தாம் பணிந்து, தம்முடைய திறைகளைச் செலுத்தி, நம்மைச் சார்ந்த சிற்றரசர்களாயினர். தமக்குள் பகைமையினால் செறிவுற்றிருந்த இருபக்கத்துச் சேனைகளும், ஒரே சேனையாகப் போர் நின்றதனால் முரசறையப் பெற்றன.

நன்னனும், ஏற்றையும், நல்ல பூண்களை அணிந்த அத்தியும், பகைவர் நெருங்குதற்கு அரிய கடுமையான ஆற்றலினையுடைய கங்கன் கட்டி முதலாயினோரும், வலிய வில்லாற்றலை உடைய பொன்னணிகள் பூண்ட புன்றுறை என்பானும், என்று கூறப்பெற்ற சேரர்களின் படைத் தலைவர்களாகிய அவர்கள் அனைவரும், ஒன்றுகூடிப் போரிடுவதற்கு எதிர்த்து நின்ற, அளப்பரும் சிறப்பினையுடைய பாசறையினிடத்தே பருந்தினம் சுற்றிக் கொண்டிருக்கும்படியாகப் போர்செய்து, அதனிடையே சோழர் தளபதியாகிய பழையனும் பட்டனன்.

அதனைக் கண்டு உள்ளம் பொறாதவனாகித், திண்மை யான தேரினையுடைய கணையன் என்பான் உட்படக் கழுமலம் என்னுமிடத்தே, எதிரிகளை எல்லாம் வென்று வெற்றி தேடித் தந்தனன், கட்டிய கண்ணியினைச் சூடிய பெரும்பூட் சென்னி என்பவன்.

அவனுடைய 'அழும்பில்' என்னும் ஊரைப்போன்ற நீங்காத புது வருவாயினை உடையதும், மிக்க பழைய நெல்லினையுடையவான பல குடிப்பரப்பினை உடையதும், யானைகள் படியும் குளத்தினையும் நெருங்கி பசுமையான காவற்காடுகளையும் உடையதுமாகிய, குளிர்ச்சியான குடவாயில் என்னும் ஊரைப்போன்ற சிறப்பினள் நம் தலைவி.

அவளுடைய பண்புகள் நிரம்பிய மார்பகத்து இனிமையான துயிலினைப் பெறவேண்டும். அதற்காகப் பாகனே, முற்பட வேகமாகச் செல்லும் ஊர்தியான நின் தேரினை, இனிப் பின்னிலை பெறச் செய்யாதபடி, இச்சுரத்தினை நாம் விரைந்து கடந்து போகுமாறு, உடன்வரும் பிற தேர்களை எல்லாம் நீங்கினையாய், மேலும் விரைந்து செலுத்துவாயாக.

**சொற்பொருள்:** 2. தந்திறை - தமக்கு உறுதிப்படுத்திய திறைப் பணம். நன்னன் முதலியோர் சேரனின் படைத் தலைவர்கள். பழையன், சோழனின் படைத்தலைவன். கணையன், சேரனின் படைமுதலி. 18. குடவாயில் - ஓர் ஊர். 15. அழும்பில் - அம்பில் என வழங்கும் ஊர் எனவும், பாண்டிநாட்டு ஓரூர் எனவும் உரைப்பர். 16. பரவை - குடிப்பரப்பு. 17. பொங்கடி - யானை. மிளை - காவற்காடு. 19. பண்புடை ஆகம் - நாம் செல்லுமளவும் இறந்து படாதாயிற்றிருந்த பண்புடைய மார்பகம்.

இதன்கண், தலைவனின் பிரிவு வேந்துவினை முடித்தல் என்க. 'அழும்பில் வேள்' என்பானுக்குரிய கோநகர் அழும்பில் எனக் கூறுதலும் பொருந்தும்.

## 45. உடைமதில் ஓரரண்!

**பாடியவர்:** வெள்ளி வீதியார். **திணை:** பாலை. **துறை:** வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. **சிறப்பு:** அன்னி, குறுக்கைப் பறந்தலையிலே திதியனின் புன்னை குறைத்த போர்வெற்றி; ஆந்திமந்தியின் கதை; வானவரம்பன்.

*(தலைவன் வேற்றூர் சென்றனன். வரவில்லையே அவனென மறுகினாள் அவன் மனைவி. தோழியோ, 'அவன் குறித்த காலத்து வருவான்' என வற்புறுத்தினாள். அப்போது தலைவி, அவனுடைய பிரிவினை நினைந்து நினைந்து நொந்து கூறியது இது.)*

**வாடல் உழுஞ்சில் விளைநெற்று அம்துணர்**
**ஆடுகளப் பறையின், அரிப்பன ஒலிப்பக்,**
**கோடை நீடிய அகன்பெருங் குன்றத்து,**
**நீர்இல் ஆர்ஆற்று நிவப்பன களிறுஅட்டு**
**ஆள்இல் அத்தத்து உழுவை உகளும்** 5

**காடு இறந்தனரே, காதலர்; மாமை,**
**அரிநுண் பசலை பாஅய, பீரத்து**
**எழில்மலர் புரைதல் வேண்டும், அலரே**
**அன்னி குறுக்கைப் பறந்தலை, திதியன்**
**தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணி,** 10

**புன்னை குறைத்த ஞான்றை, வயிரியர்**
**இன்இசை ஆர்ப்பினும் பெரியதே; யானே,**
**காதலற் கெடுத்த சிறுமையொடு நோய்கூர்ந்து**
**ஆதி மந்தி போலப் பேதுற்று**
**அலந்தனென் உழல்வென் கொல்லோ - பொலந்தார்,** 15

**கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்**
**வான வரம்பன் அடல்முனைக் கலங்கிய**
**உடைமதில் ஓர் அரண்போல**
**அஞ்சுவரு நோயொடு, துஞ்சா தேனே!**

தோழி! உலர்ந்த வாகை மரத்தினிலுள்ள, முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்துக்கள், ஆடுகளத்தே கூத்தர்கள் ஒலிக்கும் பறையினைப்போல விட்டுவிட்டு ஒலித்துக் கொண்டிருக்கும். அத்தகைய கோடைத்தன்மை மிகுந்தது அகன்ற பெரிய குன்றம் ஒன்று. அதனிடத்தேயுள்ள நீரற்றுக்

கிடக்கும் அரிய சுர நெறியிலே, உயர்ந்த களிற்றினைக் கொன்ற புலிகள் திரிந்து கொண்டிருக்கும். ஆள் நடமாட்டமே அற்ற அத்தகைய காட்டினையுங் கடந்து அவர் போயினரே!

என்னுடைய மாமை நிறமானது, அவருடைய பிரிவினால், ஐதாகிய நுண்ணிய பசலை பரத்தலால், பீர்க்கின் அழகிய மலரினை ஒப்பதாக விளங்கும். ஊரிலே எழுகின்ற அலரானது, அன்னி என்பவன், குறுக்கைப் பறந்தலை என்னும் போர்க்களத்திலே, திதியன் என்பவனது பழைமையாக நிலைபெற்ற சிறப்புடைய புன்னைமரத்தின் பெரிய அடியை வெட்டித் துண்டித்த அந்தக் காலத்திலே, கூத்தர்கள் எடுத்த இன்னிசை ஆரவாரத்தினும் பெரிதாகும்.

பொன்னரி மாலையினையும், கடலிடத்தினைப் புடை பெயரச் செய்த வென்றியினையும், நல்ல வேலினையும் உடைய வானவரம்பனது, வலிபொருந்திய போர்முனையிலே கலங்கிய, உடைந்த மதில்களையுடைய ஓர் அரணைப் போல, அரணிடத்தே உள்ளார் கலங்கி அழியுமாறு போல, யானும், அச்சம் பொருந்திய பிரிவுநோயின் காரணமாக உறக்கம் அற்றவளாயினேன். அஞ்ச அஞ்ச உடன்று வருகின்ற காம நோயினை உடையவளாகி, ஆதிமந்தியைப் போலக், காதலனைக் காணாத சிறுமையினால், யானும் துன்பத்தால் வாடி வாடி உழல்வேனோ?

**சொற்பொருள்:** *1. உழிஞ்சில் - வாகை. துணர் - நெற்றின் கொத்து. 2. பறை - கரடிகை. அரிப்பன ஒலிப்ப - விட்டுவிட்டு இசைப்ப. 4. ஆர் ஆறு - போவதற்கு அரிய வழி. நிவப்பன களிறு - உயரமான களிறு. 5. உகளுதல் - திரிதல். 15. உழலல் - தேடித் திரிதல்; உழல்வேனோ என்றாள் இறந்து படுதலை நினைந்து. 16. கடல் கால் கிளர்தல் - வேலாற் கடலோட்டினான் ஆதலால். கிளர்தல் - புடை பெயர்தல். 17. வானவரம்பன் - சேரன்.*

**விளக்கம்:** *'ஆதிமந்திபோல' என்றதனால், வெள்ளி வீதியாரும் கணவனைக் காணாதாராய்ப் பலபல விடங் களினும் தேடி உழன்றனர் என்பர். 'உடைமதில் ஓரரண் போல' - பிரிவினால் கலங்கிய நெஞ்சின் உறுதிக்கு உவமம். அரண் உடையவே அரணுடைய ஊரும் அழியும்; நெஞ்சு அழியவே தானும் இறந்துபடுவள் என்க. 10. தொன்னிலை என்பது தொன்மையாக நிலைபெற்று வழி வழி வருவதான காவன் மரம் எனச் சுட்டும். 16. கடல்கால் கிளர்ந்த வெற்றி - கடற்கண் உள்ளாராகிய பகைவரை அழித்த வெற்றி. ஓரரணே உள்ளானாகிய வேந்தன் ஒருவன், அதன் மதிலும் பகைவர் பொருதலாற் சிதைந்து விழக் கண்டு, நிலை கலங்கினாற் போலத்*

தலைவியும், தனிமைத் துயரத்தினால் சிதைவுற்று நெஞ்சம் நலிவாளாயினள் என்க.

## 46. வண்டு ஊது பனிமலர்!

**பாடியவர்:** அள்ளூர் நன்முல்லையார். **திணை:** மருதம். **துறை:** வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயின் மறுத்தது. இதனை வாயின் மறுத்தது எனவும், செல்லாக் காலைச் செல்கென விடுத்தது எனவும், நச்சினார்க்கினியர் கூறுவர். **சிறப்பு:** செழியனும் அவனுடைய அள்ளூரும்.

*(தன் தலைவன் பரத்தையோடு உறவு கொண்டு தன்னைப் பிரிந்ததற்கு நொந்தாள் தலைவி ஒருத்தி. அவன் வீடு திரும்பிய பொழுது அவள் கூறுகிறாள்: 'நும் பரத்தமை பற்றி ஊரவர் கூறுவர். யாம் அதுவும் கூறோம். எம் மெலிவு எம்முடையதே யாகுக. நீர் அங்கேயே செல்க. நும்மைத் தடுப்பவர் யாருமே இலர்!' என்று. கற்புடைய அவள் நெஞ்சத்தின் குமுறல் இதனாலேயே நன்கு வெளிப்படும்.)*

**சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்**
**ஊர்மடி கங்குலில், நோன்தளை பரிந்து,**
**கூர்முள் வேலி கோட்டின் நீக்கி**
**நீர்முதிர் பழனத்து மீன்உடன் இரிய,**
**அம்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை** 5

**வண்டூது பனிமலர் ஆரும் ஊர!**
**யாரை யோ?நிற் புலக்கேம், வாருற்று,**
**உறைஇறந்து, ஒளிரும் தாழ்இருங் கூந்தல்,**
**பிறரும், ஒருத்தியை நம்மனைத் தந்து,**
**வதுவை அயர்ந்தனை என்ப; அஃதுயாம்** 10

**கூறேம்; வாழியர், எந்தை! செறுநர்**
**களிறுடை அருஞ்சமம் ததைய நூறும்**
**ஒளிறுவாள் தானைக் கொற்றச் செழியன்**
**பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னஎன்**
**ஒண்தொடி நெகிழினும் நெகிழ்க;** 15

**சென்றீ, பெரும!நிற் றகைக்குநர் யாரோ?**

தனக்கு நிற்குமிடமான கொட்டிலைச் சிவத்த கண்களை யுடைய கருத்த எருமையானது சேறாக்கிக் கொண்டது. ஊர் துயின்றிருந்த இரவின் கடையாம வேளையிலே, தனது வன்மையான தளையையும் அறுத்துக்கொண்டது. கூர்மையான முள்வேலியையும் தன் கொம்பினால் நீக்கிற்று. அதன் பின் வெளியேறி, நீர்மிகுந்த வயல்களை நோக்கிச் சென்றது.

அங்குள்ள மீன்கள் எல்லாம், அது வயலுள் புகுந்து கலக்கு தலால் கலங்கிப் பிறழ்ந்தன. அழகிய உட்டுளைவினையுடைய வள்ளைக் கொடிகள் மயங்கின. இவ்வாறு கலக்கித், தாமரையின் வண்டூதும் குளிர்ந்த மலர்களை அது நிறையத் தின்று மகிழ்ந்தது. அத்தகைய ஊர்க்கு உரியவனே!

நின்னோடு யாம் ஊடுவதற்கு நீதாம் எமக்கு என்ன உறவினையோ? நீட்சியுற்ற, மழைக்கால் வீழ்ச்சியினையும் கடந்து விளங்கும், தாழ்ந்த கரிய கூந்தலை உடையவள் ஒருத்தியை எம் மனையிற் கொணர்ந்து காட்டி, நீ வதுவை புரிந்தனை என்று, இவ்வூரவரான பிறரும் நின்னைப்பற்றி அலர் கூறினர். எம் அப்பனே! அதனையும், யாம் நின்பால் எம் வாயினாற் சொல்ல மாட்டோம். நீ வாழ்க!

பகைவரது களிறுகளைக் கொண்ட அரிய போரினைச் சிதையுமாறு கொன்றழிக்கும், ஒளிறும் வாட்படையினை உடைய வெற்றிபொருந்திய செழியனது, நெற்பொலிமிக்க அள்ளூரை யொத்த, எனது ஒள்ளிய வளையல்கள் நெகிழ்ந்து வீழ்ந்தாலும் விழ்க! பெருமானே! நீ நினைத்த இடத்திற்கே சென்று வருவாயாக! நின்னைத் தடுப்பவர் யாரோ? (யாருமில்லை என்றபடி)

**சொற்பொருள்:** 7. புலக்கேம் - புலப்பேம். 8. உறையிறந்து - மழைக்கால் வீழ்ச்சியை அடைந்து. 14. அள்ளூர் - அள்ளியூர். 15. நெகிழ்தல் - சுழலுதல். 16. சென்றீ -செல். தகைக்குநர் - விலக்குவார். ‘வண்டூது பனிமலர்’ எனவே, வைகறையும் வந்தது என்க.

13. கொற்றச் செழியன் - கொற்கைச் செழியன் எனவும் பாடம் உண்டு; இவனே, ‘வெற்றிவேற் செழியன்’ என்பர், அப்போது.

**உள்ளுறை பொருள்:** காரான் கொட்டிலைச் சேறாக்கியது போல, நீயோ நின் இல்லத்தலைவியாகிய இவளைப் பிரிவால் வேறுபடுத்தினாய். தளையை அறுத்துக் கொண்டதுபோல நின் நாணத்தையும் அறுத்துக் கொண்டாய். முள்வேலியைக் கோட்டால் நீக்கியது போலப் பரத்தைக்குக் காவலாகிய விறலியையும் பாணனாலே நீக்கினாய். மீன்கள் இரிவதுபோல அப் பரத்தையின் தோழியர் இரிவர். வள்ளைக் கொடி மயங்கியதுபோல, அவள் தாய்மார் மயங்குவர். மலர்ச்சியின்றி வண்டொடு குவிந்த தாமரையை நுகர்ந்தாற்போல, நீயே வலிந்து பெற்று அவளை நுகர்ந்தாய் என்பதாம்.

**விளக்கம்:** தொடியின் செறிவுக்குக் கொற்றச் செழியனால் காக்கப்பெற்ற அள்ளூரினது காவற் செறிவைக் கூறினாள்; அதுவும் நெகிழ்ந்ததென்றால், தானுற்ற துயரின் மிகுதியைக் கூறினாள்.

## 47. முயங்குகம் பலவே!

**பாடியவர்:** *ஆலம்பேரிச் சாத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் இடைச்சுரத்து அழிந்த நெஞ்சிற்குச் சொல்லியது.* **சிறப்பு:** *செழியனும் அவனது சிறுமலையும்.*

*(வினைமேற்சென்ற தலைமகன், இடைவழியிலே தன் காதல் மனைவியை நினைந்து நெஞ்சம் தளர்ந்தான். அவன் வினையினை முடித்து வெற்றியுடன் வீடுதிரும்ப வேண்டும் என்ற ஊக்கமும் உடையவன்; அதனால், தன் நெஞ்சிற்கு இவ்வாறு கூறுகின்றான்.)*

**அழிவில் உள்ளம் வழிவழிச் சிறப்ப**
**வினைஇவண் முடித்தனம் ஆயின், வல்விரைந்து**
**எழுஇனி - வாழிய நெஞ்சே! - ஒலிதலை**
**அலங்குகழை நரலத்தாக்கி, விலங்கு எழுந்து,**
**கடுவளி உருத்திய கொடிவிடு கூர்எரி** 5

**விடர்முகை அடுக்கம் பாய்தலின், உடனியைந்து,**
**அமைக்கண் விடுநொடி கணக்கலை அகற்றும்**
**வெம்முனை அருஞ்சுரம் நீந்திக் கைம்மிக்கு**
**அகன்சுடர் கல்சேர்பு மறைய, மனைவயின்**
**ஒண்தொடி மகளிர் வெண்திரிக் கொளாஅலின்,** 10

**குறுநடைப் புறவின் செங்காற் சேவல்**
**நெடுநிலை வியன்நகர் வீழ்துணைப் பயிரும்**
**புலம்பொடு வந்த புன்கண் மாலை**
**'யாண்டு உளர்கொல்?'எனக், கலிழ்வோள் எய்தி,**
**இழைஅணி நெடுந்தேர்க் கைவண் செழியன்** 15

**மழைவிளை யாடும் வளம்கெழு சிறுமலைச்**
**சிலம்பின் கூதளங் கமழும் வெற்பின்**
**வேய்புரை பணைத்தோள், பாயும்**
**நோய்அசா வீட, முயங்குகம் பலவே!**

*குறைக்காற்று, தழைத்த தலையினையும் அசையும் இயல்பினையும் உடைய மூங்கில்கள் ஒன்றுடன் ஒன்று உரசி ஒலிக்குமாறு தாக்கும். அதனால், அந்தப் பக்கங்களிலே கொழுந்துவிட்டு எரியும் மிக்க தீயானது எழும். அந் நெருப்புக் காட்டையே வெம்மையுறச் செய்யும். மலையடுக்குகளிலேயுள்ள வெடிப்புக்களிலும் குகைகளிலும் அந்தத் தீ பாயும். அதனால், அங்குள்ள மூங்கிற்கணுக்கள் ஒலியோடு வெடிக்கும். அதனைக் கேட்டுக் கலைமான் வட்டங்கள் வெருவி ஓடும். அத்தகைய முனைகளையுடைய, கொடிய, கடத்தற்கு அரிய சுரத்தினையும் நாம் கடந்தோம்.*

அகன்ற ஞாயிறு மேற்குமலையைச் சேர்ந்து மறையும். அவ்வேளை, ஒள்ளிய வளையணிந்த மகளிர், மனைவிளக்கு களிலே வெண்மையான திரிகளை இட்டு ஏற்றுவர். அதனால், பெரிய மனைகளினிடத்தே குறுக அடியிட்டு நடக்கும் சிவந்த கால்களையுடைய புறாவின் சேவலானது, தான் விருப்பங் கொண்டுள்ள தன் பெடையினை ஆர்வமுடன் கூவி அழைக்கும். தனிமையோடு வந்து, அளவு கடந்த துன்பத்தைத் தருவது, அம் மாலை வேளை.

நம் தலைவர் இப்போது எவ்விடத்தே உள்ளனரோ என, அவ்வேளையிலே நினைந்து ஏங்கிக் கொண்டிருப்பவள் நம் தலைவி; கலங்கி அழுது கொண்டே அவள் இருப்பாள்.

சோர்வில்லாத நம் உள்ளமானது மென்மேலும் ஊக்கத் தால் சிறப்படைந்து, நமது வினையையும் இவ்விடத்தே செய்து முடித்தோமென்றால், இழைகளணிந்த நெடுந் தேரினையும் கைவண்மையினையும் உடைய செழியனது, மேகங்கள் தவழ்ந்து கொண்டிருக்கும் வளங்கெழுமிய சிறுமலை என்னும் மலையிலே, கூதளஞ்செடி கமழுகின்ற வெற்பினிடத்தேயுள்ள மூங்கிலைப் போன்ற அவளுடைய பணைத்த தோள்களிலே படர்ந்திருக்கும் பசலை நோய் நீங்குமாறு, அவளை நாம் பன்முறையும் தழுவித் தழுவி மகிழ்வோம் அல்லவோ?

அதனால், எம் நெஞ்சமே! நீ வாழ்க! இப்போதே விரைந்து சென்று, வினைமுடித்தலின் பொருட்டு என்னுடன் எழுவாயாக.

**சொற்பொருள்:** 1. வழி வழி - மென்மேலும். 4. விலங்கு - பக்கம். 4. கடு வளி உருத்திய - சூறைவளி வெப்பமுறப் பண்ணிய. 8. முனை - போர்முனை; அதுபோற் கொடிய வெம்மை என்க. 18. தோளிடத்துப் பரந்த நோய் - பசலை. 19. அசா - நோயான் வரும் வருத்தம்.

**விளக்கம்:** மனையின்கண் மகளிர் இல்விளக்கேற்றப், புறவுச் சேவல் தன் பெடையை அழைக்க, அதனைக் கேட்ட தலைவி, தன்னையும் அங்ஙனம் அழைப்பவன் தன்னுடன் இல்லையே என நினைந்து, கலங்கி அழுபவளாவள் என்க.

'செழியனின் சிறுமலை' என்றது, இந்நாட் கொடைக் கானலைச் சார்ந்திருக்கும் மலைத் தொடருள் ஒரு பகுதியை. இங்கிருந்து கிடைக்கும் வாழைப்பழம் இன்றும் சிறப்பாகச் சிறுமலைப் பழமெனவே விளங்குகின்றது.

## 48. மற்றிவன் மகனே!

**பாடியவர்:** தங்கால் முடக்கொற்றனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** செவிலித் தாய்க்குத் தோழி அறத்தொடு நின்றது.

*இது, செவிலி கூற்றினைத் தோழி கொண்டு கூறியது என்பர் நச்சினார்க்கினியர்.*

*(தலைவியானவள் திடுமெனப் பாலும் வெறுத்து ஒதுக்கிய நிலைகண்டு, அவளுடைய செவிலித்தாய் மிகவும் உள்ளம் கலங்கினாள். தோழியினிடம் அதுபற்றிக் கேட்க, அவள், அவள் உள்ளங் கவர்ந்து சென்ற அக் காதலனைப் பற்றிக் கூறி, அறத்தொடு நிற்கின்றாள்.)*

**'அன்னாய்! வாழி! வேண்டுஅன்னை! நின்மகள்**
**'பாலும் உண்ணாள், பழங்கண் கொண்டு,**
**நனிபசந் தனள்' எனவினவுதி; அதன்திறம்**
**யானும் தெற்றென உணரேன்; மேல்நாள்,**
**மலிபூஞ் சாரல், என்தோழி மாரோடு** 5

**ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழி,**
**'புலிபுலி!' என்னும் பூசல் தோன்ற -**
**ஒண்செங் கழுநீர்க் கண்போல் ஆய்இதழ்**
**ஊசி போகிய சூழ்செய் மாலையன்,**
**பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்,** 10

**குயம்மண்டு ஆகம் செஞ்சாந்து நீவி,**
**வரிபுனை வில்லன், ஒருகணை தெரிந்துகொண்டு,**
**'யாதோ, மற்றும் மாதிறம் படர்?'என**
**வினவிநிற் றந்தோனே. அவற் கண்டு,**
**எம்முள் எம்முள் மெய்ம்மறைபு ஒடுங்கி** 15

**நாணி நின்றெனமாகப், பேணி,**
**'ஐவகை வகுத்த கூந்தல் ஆய்நுதல்**
**மைஈர் ஓதி மடவீர்!நும் வாய்ப்**
**பொய்யும் உளவோ?' என்றனன் பையெனப்**
**பரிமுடுகு தவிர்த்த தேரன், எதிர்மறுத்து,** 20

**நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்**
**சென்றோன் மன்றஅக் குன்றுகிழ வோனே!**
**பகல்மாய் அந்திப் படுசுடர் அமையத்து,**
**அவன்மறை தேஎம் நோக்கி, 'மற்றுஇவன்**
**மகனே, தோழி!' என்றனள்.** 25

**அதன்அளவு உண்டுகோள், மதிவல் லோர்க்கே.**

*அன்னையே! நீ வாழ்வாயாக! நின் மகள் துன்பம் கொண்டனள்; பாலும் உண்ணாதாளாயினள்; மிகவும் பசந்தனள்; என, என்பால் வினவுகின்றனை. யான் கூறுவதனை விருப்பமுடன் கேட்பாயாக*

அதன் திறம் யாதென யானும் தெளிவாக உணரேன். முன்பு ஒரு நாள், பூக்கள் மலிந்துள்ள மலைச்சாரலிலே, என் தோழிமாரோடு, தளைத்த கிளைகளையுடைய வேங்கையின் பூவினைக் கொய்யச் சென்றேன். அவ் வேளையிலே, 'புலி! புலி!' என்னும் ஓர் ஆரவாரம் அவ்விடத்தே தோன்றிற்று.

மகளிரின் கண்களைப் போன்ற ஒளிபொருந்திய செங்கழு நீர்ப் பூக்களை ஊசியாற் கோத்துச் சுற்றிக் கட்டிய மாலையினை உடையவனாகவும், தலையின் ஒரு பக்கத்தே வெட்சிப் பூவினாலாகிய கண்ணியைச் சூடியவனாகவும், மகளிரின் முலைகள் பாய்வதற்கு உரிய மார்பகத்தில் சிவந்த சந்தனத்தைப் பூசியவனாகவும், வரிந்து புனைந்த வில்லினை ஏந்தியவனாகவும், ஒரு கணையினைத் தெரிந்து கையிலே ஏந்திக் கொண்டிருப் பவனாகவும், ஒருவன் எம்முன் தோன்றினான். 'அந்தப் புலி சென்ற வழிதான் யாதோ?' என்று எம்மிடத்தே வினவியும் நின்றான்.

அவனைக் கண்டு, எங்களுள் ஒருவர் முதுகிலே ஒருவர் மறைந்து ஒதுங்கி, நாணியவராகப் பேசாதே நின்றோம்.

'கருத்துடன் பேணிய ஐவகையாக வகுத்த கூந்தலினையும், அழகிய நெற்றியினையும், கரிய நெய்த்த கூந்தலையும் உடைய மடந்தையர்களே! நும்மிடத்தே பொய்யும் உளவாமோ?" என்றனன் அவன்.

மலைநாட்டிற்கு உரியவனாகிய அவன், குதிரைகளின் வேகத்தை அடக்கி மெல்லெனச் செலுத்தும் தேரனாகி, நின் மகளது மையுண்ட கண்களை எதிர்மறுத்துப் பன்முறை நோக்கியவாறே, அவ்விடம் விட்டு மீண்டும் சென்றனன்.

பகற்பொழுது மாய்கின்ற அந்தியாகிய ஞாயிறுமறையும் அப்பொழுதிலே, அவன் மறைந்திடும் திசையையே நோக்கி, நின் மகள், 'தோழியே! இவன் ஒரு சிறந்த மகனே!' என்றனள். ஆராய்ந்து அறியும் அறிவு மிகுந்தவர்க்கு, அதனளவாக ஒரு கோட்பாடு உண்டன்றோ? (அதனால் நீயும் இதனை ஆராய்ந்து தெளிவாயாக.)

**சொற்பொருள்:** 1. வேண்டு - விரும்பு. 4. தெற்றென - தெளிய. 8. இதழ் - பூ. 11. குயம் - முலை. நீவி - பூசி உதிர்த்து. 12. வரி - சித்திரம்; வரிதலும்ஆம். 13. திறம் - வழி. 14. நிற்றந்தோன் - நின்றோன். 15. மெய்ம்மறைபு ஒடுங்கி - முதுகிலே மறைந்து ஒடுங்கி. 24. தேம் - திசை.

**விளக்கம்:** அவனைக் கண்டதும், 'எம்முள் எம்முள் மெய்ம்மறைபு ஒடுங்கி, நாணி நின்றனெமாக' என்று கூறும் மனச்செவ்வியை நோக்கி இன்புறுக. 'இது தலைவன் ஏத்தல்

எனவும், துணிவின்கண் ஐயம் சிறிது நினைத்தல் எனவும்' கூறுவர் நச்சினார்க்கினியர். 'புலி' என்னுங்காட்டிலே, உதவ விரைந்து முன்வந்தான்' என அவனைப் போற்றியது இது. 'வேங்கை மலர் கொய்யத் தாழ்ந்து கொடுக்கும்' என்றோர் நம்பிக்கை மலையிலே வாழ்பவரிடம் உண்டு. அவன்மேல் அவளும் காதல் கொண்டாள் என்பது குறிப்பு.

## 49. ஆடுவழி அகலேன்!

**பாடியவர்:** வண்ணப்புறக் கந்தரத்தனார்; வண்ணப் புறக் கல்லாடனார் எனவும் வேறுபாடம் உண்டு. **திணை:** பாலை. **துறை:** உடன்போயின தலைமகளை நினைந்து செவிலித்தாய் மனையின்கண் வருந்தியது.

*(அருமையாக வளர்த்த செல்வமகள்,தன் காதலனுடனே உடன்போக்கில் போய்விட்டனள். அவளது பழைய செயல்களை எல்லாம் நினைந்து புலம்பி வருந்துகிறாள் செவிலித்தாய்.)*

**'கிளியும், பந்தும், கழங்கும், வெய்யோள்**
**அளியும், அன்பும், சாயலும், இயல்பும்,**
**முன்நாள் போலாள்; இறீஇயர், என்உயிர்'என,**
**கொடுந்தொடைக் குழவியொடு வயின்மரத்து யாத்த**
**கடுங்கட் கறவையின் சிறுபுறம் நோக்கி, 5**

**குறுக வந்து, குவவுநுதல் நீவி,**
**மெல்லெனத் தழீஇயினே னாக, என்மகள்**
**நன்னர் ஆகத்து இடைமுலை வியர்ப்ப,**
**பல்கால் முயங்கினள் மன்னே! அன்னோ!**
**விறல்மிகு நெடுந்தகை பலபா ராட்டி, 10**

**வறன்நிழல் அசைஇ, வான்புலந்து வருந்திய**
**மடமான் அசாஇனம் திரங்குமரல் சுவைக்கும்**
**காடுஉடன் கழிதல் அறியின் - தந்தை**
**அல்குபதம் மிகுந்த கடியுடை வியன்நகர்,**
**செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போல, 15**

**கோதை ஆயமொடு ஓரை தழீஇத்,**
**தோடுஅமை அரிச்சிலம்பு ஒலிப்ப, அவள்**
**ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே!**

"கிளியும் பந்தும் கழங்கும் மிகவும் விரும்புபவள்; அருளும் அன்பும்; சாயலும் நற்பண்பும் உடையவள்; இவற்றுள் முன்னாட்களைப்போல் அல்லாது வேறுபட்டிருக்கின்றனள். இஃதென்னவோ? என் உயிர் கழிவதாக" என்று கூறினேன்.

மரத்தினிடத்தே, வளைந்த தொடையினையுடைய இளங்கன்றுடன் கட்டப்பெற்ற, அடிக்கடி தன் கன்றைப் பார்த்திருக்கும் தலையீற்றுப் பசுவைப்போல, அவளுடைய முதுகைப் பார்த்தேன். அவள் அருகே சென்று, வளைந்த அவள் நெற்றியைத் தடவினேன். மெல்லென அவளை அப்படியே தழுவியுங் கொண்டேன். என் மகளும், தன் மார்பகத்து முலைகளினிடையிலே வியர்வு உண்டாகுமாறு, பலமுறை என்னை நன்றாகத் தழுவிக் கொண்டனள் அந்தோ! அஃதெல்லாம் இப்போது போயிற்றே!

வானமானது வறண்டுபோக, அதனால் வருந்தித் தளர்வுற்ற இளமானின் கூட்டமானது, வற்றிய மரற்செடியினைச் சுவைக் கின்ற தன்மையுடையது காடு. அவ்விடத்தே, வலி மிகுந்த பெருந் தகையாகிய அவள் காதலன், இவளைப் பலபடியாகப் பாராட்டி, வறண்ட நிழலிலே தங்கித் தங்கி உடன்கொண்டு போதலை, யான் முன்பே அறியாமற் போனேனே! அறிந்தேனாயின்,

இவளுடைய தந்தையது, தங்கும் உணவு மிகுந்துள்ள காவல் பொருந்திய பெருமனையிலே, இவள் செல்லுமிடந்தோறும் செல்லுமிடந்தோறும், இவள் உடலின் நிழலைப் போலத் தொடர்ந்து செல்வேனே! கோதையை உடைய ஆயத்தோடு விளையாட்டினை மேற்கொண்டு, தொகுதி வாய்ந்த பரலினை உடைய சிலம்புகள் ஒலிக்க, இவள் ஆடுந்தோறும் ஆடுந்தோறும், யானும் இவளைவிட்டுப் பிரியாமலேயே இவளுடன்தானே இருந்திருப்பேனே!

**சொற்பொருள்:** 1. வெய்யோள் - விரும்புகின்ற இயல்பினள். 3. முன்னாட் போலாமை - அவனோடு கூடிய களவு ஒழுக்கத்தினால் வேறுபட்டமை. 4. கொடுந்தொடை - வளைந்தகால். 5. கடுங்கட் கறவை - தலையீற்றுப்பசுவும், ஈன்ற அணிமையுடைய நிலையினை உடையதும் ஆம். 8. இடை முலை - முலையிடை; நெஞ்சு. 'பல்கான் முயங்கினாள் பிரியப்போவதை நினைந்து; அதனை அறியாது போயினனே' என்க. 10. பாராட்டி - கொண்டாடி. 14. பதம் -சோறு. மரற்செடி - ஒருவகைக் கள்ளிச்செடி. 14. கடி - காவல்.

**விளக்கம்:** 'உண்ண உணவும், குடிக்க நீரும், தங்க நிழலும் அற்ற காட்டு வழியிலே, எம்மை எல்லாம் வெறுத்து அவள் போயினளே!' என்று செவிலித்தாய் ஏங்குகிறாள். வளர்த்த பாசம் அவளுக்கு. பிரியாராய் உடனுறையும் தோழியருக்கு 'மெய்ந்நிழல் போல' என்னும் உவமை மிக்கபொருத்தம் உடையதாகும். செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் பிரியாதே தொடருமாறுபோல, அவரும் அவனைப் பிரியாது உடனிருப்பவராவர் என்று கொள்க.

## 50. சொல்லின் எவனோ பாண!

**பாடியவர்:** கருவூர்ப் பூதஞ்சாத்தனார்; கருவூர்ப் பூதன் மகனார் கொற்றனார் எனவும் வேறு பாடம் உரைப்பர். **திணை:** நெய்தல். **துறை:** தோழி பாணனுக்குச் சொல்லியது.

"மெல்லியற் பொறையும் நிறையும்" என்னும் துறைக்கு உதாரணமாகக் காட்டி, 'இதனுள் காமமிகுதியால் கண் தாமே அழவும், கற்பிற் கரக்குமெனத் தலைவி பொறையும் நிறையும் தோழி பாணற்குக் கூறினாள், அவன் தலைவற்கு இவ்வாறு கூறுவன் எனக் கருதி" என்பர் நச்சினார்க்கினியர்.

"பிரிவாற்றாது துன்புறுங்காலை, அவ்வாற்றாமை தலை மகற்கின்றித் தானே துன்புறுகின்றாளாகச் சொல்லுதல். அவை கூட்டத்தை வெறுத்த குறிப்பாயினும், அக் கூட்டத்திற்கே நிமித்தமாகும், ஆராய்ந்து உணரின்" என்பர் பேராசிரியர்.

*(களவிலே கூடிய காதலன், பலநாட்கள் வாராது போகவே, தலைவி பாணன்மூலம் அவனுக்குத் தூது உரைக்க முயல்கின்றாள்.)*

**கடல்பாடு அவிந்து, தோணி நீங்கி,**
**நெடுநீர் இருங்கழிக் கடுமீன் கலிப்பினும்;**
**செவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்,**
**மாண்இழை நெடுந்தேர் பாணி நிற்பப்,**
**பகலும் நம்வயின் அகலா னாகிப்** 5

**பயின்றுவரும் மன்னே, பனிநீர்ச் சேர்ப்பன்.**
**இனியே, மணப்பருங் காமம்தணப்ப நீந்தி,**
**'வாராதோர் நமக்கு யாஅர்?' என்னாது,**
**மல்லன் மூதூர் மறையினை சென்று,**
**சொல்லின் எவனோ - பாண! 'எல்லி** 10

**மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்**
**துணைஒன்று பிரியினும் துஞ்சா காண்'எனக்**
**கண்நிறை நீர்கொடு கரக்கும்**
**ஒண்நுதல் அரிவை'யான் என்செய்கோ?' எனவே!**

கடல் ஒலியவிந்து கிடந்தாலும், தோணிகள் கடலில் இல்லாதிருப்பினும், மிகுந்த நீருடைய பெரிய கழியிலே சுறா முதலிய கொடிய மீன்கள் செருக்கித் திரிந்தாலும், கொடிய வாயினரான பெண்கள் அலர் எடுத்துத் தூற்றினாலும், மாட்சியுடைய இழையினைக் கொண்ட தன்னுடைய நெடுந் தேரானது தாழ்த்து நிற்க, பகற்காலத்துங்கூட நம்மிடத்தே நின்றும் அகலாதவனாகி, அடுத்தடுத்து நம் தலைவன் முன்ன

ரெல்லாம் வந்து கொண்டிருந்தனன். இப்போது, அஃதெல் லாமும் கழிந்ததே!

'களவுக் காலத்துக் கூடுதற்கு அரிய காமவேட்கையானது நீங்குதலால், தாம் சென்றிருக்கும் இடத்தினின்று இடை வழியைக் கடந்து இங்கு வராதவரான அவர், நமக்கு என்ன உறவினரோ?' என்று சொல்லாது, 'ஒள்ளிய நெற்றி யினையுடைய நின் தலைவியானவுள், இரவிலே, மனையைச் சார்ந்துள்ள பனைமரத்திலே, தம்முள் ஒன்று துணையாகக் கூடியிருப்பதனின்று பிரிந்தாலும், வளைந்த வாயினையுடைய அன்றில்கள் உறங்காதனவாதலைக் காண்பாயாக' என்று, கண் நிறைந்த நீர்கொண்டு நின் பழியை மறைப்பாள். 'இதற்கு யான் என் செய்வேன்?' என்று, வளம் பொருந்திய பழைமையான அவனுடைய ஊரினிடத்து, மறைந்து சென்று, பாணனே! நீ நம் தலைவனுக்குச் சொன்னால்தான் என்னவோ?'

**சொற்பொருள்:** கழி - கடற் குட்டம்; காயல் எனவும் வழங்குவர். கடுமீன் - சுறாமீன் முதலியன. கலித்தல் - செருக்குடன் திரிதல். 4. பாணி - தாமத காலம். 6. பயின்று - அடுத்து. 7. மணப்பருங்காமம் - களவுக் காலத்துக் கூடுதற்கு அரிய வேட்கை. 11. வடிவாய் - வளைந்தவாய். 12. ஒன்றுதல் - கூடுதல். ஒன்று துணை பிரியினும், நெடும்பிரிவின்றி இணைந்து ஒன்று தலைப் பிரியினும். துஞ்சா - இரண்டுமே உறங்கா.

**விளக்கம்:** பகலும் அகலாதிருந்தான் முன்னர்; இப்போதோ பிரிந்து இரவும் வராதிருக்கிறான் என்க. மீன் கலிப்பினும், கெளவை தூற்றினும் வந்தான்; அவை யாதும் இல்லாத இப்போது வாரானாயினான் என்க. 'மறையினை சென்று' - பிறர் அறியாவாறு சென்று.

தனிமையின் கொடுமையினாலே நலிபவள், துணை பிரியின் துஞ்சாதாய்க் கூவிக் கலங்கி உயிர்விடும் அன்றிலை நினைக்கின்றாள்; அதனைச் சுட்டி வருந்துகின்றாள் என்பது, இனியும் பிரிவு நீட்டிப்பின் அவளும் அஃதாற்றாதே இறந்து படுவாள் என வலியுறுத்துவதாம்.

## 51. மனை முதல் வினை!

**பாடியவர்:** பெருந்தேவனார்; கடுகு பெருந்தேவனார் பாடியது என்பது வேறு பாடம். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரிவு கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

(பிரிவினால் பொருள் பெறலாமாயினும், அதனினும் பிரியாமலிருந்து இல்லறக் கடமைகளை அவள் மகிழ்வுடன் ஆற்ற

உதவுவதே மாண்புடைமையாகும். இங்ஙனம் தன் நெஞ்சிற்குச் சொல்லி அமைகின்றான் ஒரு தலைவன்.)

**ஆள்வழக்கு அற்ற சுரத்திடைக் கதிர்தெற,**
**நீள்எரி பரந்த நெடுந்தாள் யாத்து,**
**போழ்வளி முழங்கும், புல்லென் உயர்சினை,**
**முடைநசை இருக்கைப் பெடைமுகம் நோக்கி,**
**ஊன்பதித் தன்ன வெருவரு செஞ்செவி 5**

**எருவைச் சேவல் கரிபுசிறை தீய,**
**வேனில் நீடிய வேய்உயர் நனந்தலை,**
**நீஉழந்து எய்தும் செய்வினைப் பொருட்பிணி**
**பல்இதழ் மழைக்கண் மாஅ யோள்வயிற்**
**பிரியின் புணர்வது ஆயிற், பிரியாது. 10**

**ஏந்துமுலை முற்றம் வீங்கப், பல்வீழ்**
**சேயிழை தெளிர்ப்பக் கவைஇ, நாளும்**
**மனைமுதல் வினையொடும் உவப்ப,**
**நினை - மாண் நெஞ்சம்! - நீங்குதன் மறந்தே.**

ஆட்கள் போக்குவரவு அற்ற சுரத்தினிடையிலே, ஞாயிற்றின் கதிர்கள் காய்தலினால் மிகுதியான வெம்மை பரவிற்று. நீண்ட அடிமரத்தையுடைய யாமரத்தின் அழகற்ற வாடிய உயர்ந்த கிளையிலே, ஊடறுத்துச் செல்லுகின்ற காற்றும் இரைச்சலிடும். அதன்கண், புலாலினை விரும்பி இருக்கின்ற தன் பெடையின் முகத்தினைப் பார்த்த, ஊன்துண்டினைப் பதித்து வைத்தாற்போன்ற அச்சந்தரும் சிவப்பான காதுகளையுடைய எருவைச் சேவலின் சிறை கரிந்து தீய்ந்துபோம். வேனிலானது அவ்வளவு மிகுந்திருக்கும், மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்திருக்கும், அகன்ற காடு அது.

நீ, அதனிடையே சென்று வருந்திச் செய்யும் வினைகளால் அடையப்படும் பொருளாகிய பிணிப்பு, பல இதழ்களையுடைய மலர் போலும் குளிர்ந்த கண்ணினளும், மாமை நிறத்தினளு மாகிய நம் தலைவியினிடத்தினின்றும் பிரிந்தால் கைகூடி வருவதே! என்றாலும்,

மாண்புடைய நெஞ்சமே! அவளை நீங்குதலை மறந்து விடு. அவளைப் பிரியாது, நிமிர்ந்த அவளது முலைப்பரப்பு விம்முமாறும், செம்மையான அவளுடைய அணிகள் ஒலி செய்யுமாறும், பன்முறையும் தழுவித்தழுவி, நாடோறும் நம் தலைவியானவள் இல்லறமாகிய வினையோடும் கலந்து மகிழும்படியாகக் கூடியிருப்பதையே இனி நினைப்பாயாக!

**சொற்பொருள்:** 1. வழக்கு - வழங்குதல்; போக்கும் வரவும். 3. போழ்தல் - ஊடறுத்தல். 5. வெறுவரு - அச்சந்தரும். 6. எருவை - பருந்து. 10-11. 'பிரியாது ஏந்து முலை' - இடைவெளியின்றி நெருங்கிப் பணைத்து எழுந்த முலைகள் என்றும் கூறலாம். 11. முற்றம் - பரப்பு. முலை முற்றம் வீங்குதல், களிப்பினால். 13. மனை முதல் - மனைவி; மனைக்கு முதலாக விளங்குபவள் ஆதலால். வினை -இல்லறம்.

**விளக்கம்:** 'இவளைப் பிரிந்து சென்றால் பொருள் கிடைக்கும் என்பது உறுதியானாலும், அதனை மறந்து, இவளுடன் கூடியிருந்து இல்லறக் கடமைகளில் திளைக்க' என்கின்றான்.

## 52. பொன்னேர் புதுமலர்!

**பாடியவர்:** நொச்சி நியமங்கிழார்; மாற்றூர்கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் எனவும் பாடம். **திணை:** குறிஞ்சி. **துறை:** 1. தலைமகள் வேறுபட்டமையறிந்த செவிலித்தாய்க்குத் தோழி அறத்தொடு நிற்குமெனத் தலைமகள் சொல்லியது.

2. 'சிறைப்புறமாக விட்டுயிர்த் தழுங்கல்' என நச்சினார்க் கினியரும்;

3. 'வாழ்க்கை முனிந்து தலைமகள் சொல்லியது' எனப் பேராசிரியரும் காட்டுவர்.

(தன் காதலனுடன் கூடிக்களித்த ஒரு கன்னி, இற்செறிக் கப்பட்டதும், அவனையடைய வழியின்றி மிகவும் நொந்தாள். அவள் வாட்டம் மிகுதியாயிற்று எனினும், தான் உற்ற வருத்தம் காமநோயினால் வந்தது எனக் கூறவேண்டாம் எனச் சொல்லுகிறாள். அவள் பெண்மையின் சிறப்பு அது.)

**'வலந்த வள்ளி மரன்ஓங்கு சாரல்,**
**கிளர்ந்த வேங்கைச் சேண்நெடும் பொங்கர்ப்**
**பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள்**
**இன்னா இசைய பூசல் பயிற்றலின்**
**"ஏகல் அடுக்கத்து இருள்அளைச் சிலம்பின் 5**

**ஆகொள் வயப்புலி ஆகும்அஃது" எனத்தம்**
**மலைகெழு சீறூர் புலம்பக், கல்லெனச்**
**சிலையுடை இடத்தர் போதரும் நாடன்**
**நெஞ்சுஅமர் வியன்மார்பு உடைத்துஎன அன்னைக்கு**
**அறிவிப் பேம்கொல்? அயிலெம் கொல்?'என 10**

**இருபாற் பட்ட சூழ்ச்சி ஒருபாற்**
**சேர்ந்தன்று - வாழி, தோழி! - 'யாக்கை**

**இன்உயிர் கழிவது ஆயினும், நின்மகள்**
**ஆய்மலர் உண்கண் பசலை**
**காம நோய்' எனச்செய்யா தீமே!**

உயரமாக ஓங்கி வளர்ந்த மரங்களையுடைய மலைச் சாரலிலே, வள்ளிக்கொடி சுற்றிப் படர்ந்திருக்கும் செழிப்போடு விளங்குமொரு வேங்கைமரத்திலே, அதன் மிகவும் உயரத்தி லிருக்கும் கிளையிலேயிருந்த, பொன்போன்ற புது மலர்களைப் பறிக்க விரும்பினாள் ஒரு குறமகள். அவளால் முடியாதாகத் துயருற்று, 'வேங்கை! வேங்கை!' எனக் கூச்சலிட்டாள். 'உயர்ந்த பாறை அடுக்குகளை உடைய, இருண்ட குகைகள் பலவாயி ருக்கும் பக்கமலைச் சாரலிலே பசுவினைக் கொல்லும் வலிமை யான புலியாகும் அஃது' என, வில்லைக் கையிலே கொண்ட வரான கானவர்கள் எண்ணினர். மனையினையடுத்துள்ள தம்முடைய சிற்றூர் தனிமையாகிக் கிடப்பக், கல்லென்ற ஒலியுடன், அவ்விடத்தை நோக்கியும் சென்றனர். அத்தகைய நாட்டையுடையவன் நம் தலைவன்.

'நம்முடைய நெஞ்சத்தை அவனுடைய அகன்ற மார்பு இடமாகக் கொண்டுவிட்டது' என்று, அறிவிப்போமா? அறிவியாமல் இருப்போமோ? இப்படி இதுவரை இருவகைப் பட்டிருந்த ஆராய்ச்சியும் ஒருமுடிவுக்கு வந்திருக்கிறது. நம் உடலிலேயுள்ள இனிய உயிரானது போவதேயானாலும், நம் தாய்க்கு, 'நின் மகளது அழகிய மலர்போன்ற மையுண்ட கண்ணில் படர்ந்த பசலையானது காமநோயினால் வந்தது' என்று மட்டும் சொல்லாதிருப்பாயாக. தோழி! நீ வாழ்க!

**சொற்பொருள்:** 1. வலந்த - சுற்றிய 2. பொங்கர் - பூக்கள் நிரம்பிய கிளை. 4. பூசல் - ஆரவாரம். பயிற்றல் - பலகால் அடுத்தடுத்துக் கூறுதல். 5. ஏகல் - மிக்க கல். 9. நெஞ்சமர் வியன்மார்பு - நம் நெஞ்சம் மேவினவனுடைய பரந்த மார்பு. 15. காமநோயென்று விளங்கச் சொல்லாது, கூட்டமினாட்டத் தாற் சொல்லு என்றார்.

**உள்ளுறை பொருள்:** வேங்கைப் பூக்கொய்பவளின் 'புலி புலி' என்ற ஆரவாரம், ஊரனைத்தும் அறியக் காரணமாயிற்று. அதுபோல, அவரை நாம் இச்சிக்கத் தொடங்கிய அளவிலேயே ஊரில் அலர் உண்டாயிற்று என்க.

**விளக்கம்:** 'யாக்கை இன் உயிர் கழிவதாயினும்' என்றது, அந்நோயைத் தன்னால் மாற்ற இயலாதென்ற நிலையை உரைத்ததுமாகும். இதனைக் கேட்டலுறும் தலைவன் தலைவியை விரைய மணந்துகொள்வதற்கு முனைவான் என்பதாம்.

## 53. பொருளே காதலர் காதல்!

**பாடியவர்:** *சீத்தலைச் சாத்தனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் கூறியது. 'பிரிதல் நிமித்தம்' என்றும், 'தலைவன்கண் நிகழ்ந்தது, தலைவி நினைந்து தோழிக்குக் கூறியது' என்றும், கூறுவர் நச்சினார்க்கினியர்.*

*(முன்னர், தலைவன் அருளுடையான், நின்னைப் பிரியான் என்றெல்லாம் சொல்லிக் கூட்டுவித்தவள் தோழி. அவனிடம் பொருள்கருதிப் பிரிகின்ற தன்மைகள் தோன்றத், தோழியிடம் தலைவி அதனை உரைக்கிறாள். அவள், மீளவும், 'அருளே அவன் இயல்பென்று' கூறத் தலைவி அவளை மறுத்துக் கூறுகிறாள்.)*

**அறியாய், வாழி, தோழி! இருள்அற**
**விசும்புடன் விளங்கும் விரைசெலல் திகிரிக்**
**கடுங்கதிர் எறித்த விடுவாய் நிறைய,**
**நெடுங்கான் முருங்கை வெண்பூத் தாஅய்,**
**நீர்அற வறந்த நிரம்பா நீள்இடை, 5**

**வள்எயிற்றுச் செந்நாய் வருந்துபசிப் பிணவொடு**
**கள்ளிஅம் காட்ட கடத்திடை உழிஞ்சில்**
**உள்ஊன் வாடிய சுரிமூக்கு நொள்ளை**
**பொரிஅரை புதைத்த புலம்புகொள் இயவின்,**
**விழுத்தொடை மறவர் வில்இட வீழ்ந்தோர் 10**

**எழுத்துடை நடுகல் இன்நிழல் வதியும்**
**அருஞ்சுரக் கவலை நீந்தி, என்றும்,**
**'இல்லோர்க்கு இல்'என்று இயைவது கரத்தல்**
**வல்லா நெஞ்சம் வலிப்ப, நம்மினும்**
**பொருள காதலர் காதல்; 15**

**'அருளே காதலர்' என்றி, நீயே.**

*தோழி! நீ வாழ்க!*

*விரைந்த செலவினையுடைய ஞாயிறானது, இரவின் இருளானது அற்றுப்போகுமாறு வானிடத்தே விளங்குவது. அதன் கடுமையான கதிர்கள் எறித்தலால் நிலங்கள் எங்கும் பிளந்தன. அப் பிளப்புக்கள் நிறையுமாறு, நீண்ட முருங்கை மரத்தின் வெண்மையானபூக்கள் உதிர்ந்து பரந்தன. நீரற்றுப் போயினதால் வறட்சியுடையதான, செல்லத்தொலையாத, நீண்ட இடத்தினையுடையது அத்தகைய பாலைநிலத்து அவ்வழி.*

*அந்தச் சுரமோ கள்ளிக்காடுகள் நிறைந்தது. அங்குள்ள வாகை மரங்களை, உள்ளிருக்கும் ஊறும் வாடிப்போன சுரித்த*

மூக்கினைப்போல விளங்கும் நத்தைகள் பொரியரையுடையது போல மூடிக்கொண்டிருக்கும். தனிமைகொண்ட அந்த நெறியிலே,

கூரிய பற்களையுடைய செந்நாயானது, பசியினால் வருந்தியிருக்கும் தன் பிணவோடுங் கூடிச், சிறந்த அம்பினரான மறவர்கள் எய்ய இறந்து போயினவருடைய, பெயரும் பீடும் எழுதியிருக்கும் நடுகற்களின் இனிய நிழலிலே சென்று தங்கியிருக்கும்.

என்றும் இல்லாது வந்து இரந்தோருக்கு, யாதும் இல்லையென்று கூறித் தன்னால் இயலுவதனைச் செய்யாது மறைப்பதற்கு வலிமையற்றது அவர் நெஞ்சம். அது வற்புறுத்துதலினால், நம்மைக் காட்டினும் பொருளின் மீதினிலேயே நம் காதலர் காதலுடையவராயினார். நீயோ, விரைந்து வந்து நமக்கு அருளுதலே நம் காதலரது பெருவிருப்பம் என்றாய். உண்மையை நீ அறியாய்காண்!

**சொற்பொருள்:** 1. இருள் அற - இரவு ஒழியுமாறு. 2,3. திகிரிக் கடுங்கதிர் - தேரூர்ந்து வரும் கடுங்கதிர் எனலும் ஆம். எறித்த - வருத்திய. விடுவாய் - வெடிப்புக்கள். 5. வறந்த - வறண்ட. 7. உழிஞ்சில் - வாகை. 8. நொள்ளை - நத்தை. 9. பொரியரை - பொரிந்த அடிமரம். 10. விழுத்தொடை - குறிதப்பாது அம்பு தொடுக்கும் ஆற்றல். 12. கவலை - கவறுபட்ட வழி. 14. வலிப்ப - வற்புறுத்த.

**விளக்கம்:** ‘நடுகல்லின் நிழலில் நிற்கும்’ எனவே வேறு நிழல் இல்லாத காடு என்க; வாகையும் நிழலற்றுப் போயிற்று என்க. வறியவர்க்கு உதவும் அருளினையுடையராய்ச் சென்ற அவர்க்கு, நம்மீது அருள் இல்லையே; பொருளார்வம் தான் இப்போது மிகுதியாய்விட்டது போலும் என்று தலைவி வருந்துகிறாள். மறவர் எய்த பிணங்களும் புதைக்கப்பட்டுப் போயினதால், ஏதும் கிடையாத பசி செந்நாய்க்கு என்றும் அறிக. ‘எழுத்துடை நடுகல்’ என்பதும் ஓர்க.

## 54. புதல்வற் பொய்க்கும் பூங்கொடி!

**பாடியவர்:** மாற்றூர்கிழார் மகனார் கொற்றங்கொற்றனார்; நொச்சி நியமங்கிழார் மகனார் எனவும் பாடம். **திணை:** முல்லை. **துறை:** வினை முடித்து மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது. ‘வேந்தன் பகைமையைத் தான் தணித்தமை கூறுதலின், அந்தணன் தூதிற் பிரிந்தமை பெற்றாம்’ என்பர் நச்சினார்க்கினியர். ‘போர் மேற்சென்ற தலைவன், பகைவர் தோற்றுத் திறைசெலுத்திய பின், இங்ஙனம் கூறினான்’ எனவும் உரைக்கலாம். **சிறப்பு:** சிறுகுடிகிழான் பண்ணன்.

*(வேந்துவினை முடித்தற் பொருட்டுத் தன் காதன் மனைவியைப் பிரிந்து சென்றான் தலைவன் ஒருவன். சென்ற வினையும் இனிதே நிறைவுற்றது. அவன் வீடு திரும்பிக் கொண்டிருக்கின்றான். மாலைவேளை; வானத்தே இளநிலா அரும்பிக் கொண்டிருந்தது. தன் வரவை எதிர் பார்த்து வாயிலே துணையாக நிற்கும் தன் காதலியை நினைந்து இப்படிக் கூறுகின்றான்.)*

**விருந்தின் மன்னர் அருங்கலம் தெறுப்ப,**
**வேந்தனும் வெம்பகை தணிந்தனன்; தீம்பெயற்**
**காரும் ஆர்கலி தலையின்று: தேரும்**
**ஓவத் தன்ன கோபச் செந்நிலம்,**
**வள்வாய் ஆழி உள்உறுபு உருளக், 5**

**கடவுக காண்குவம் - பாக!மதவு நடைத்**
**தாம்புஅசை குழவி வீங்குசுரை மடியக்,**
**கனையலம் குரல காற்பரி பயிற்றிப்,**
**படுமணி மிடற்ற பயநிரை ஆயம்**
**கொடுமடி உடையர் கோற்கைக் கோவலர் 10**

**கொன்றையம் குழலர் பின்றைத் தூங்க,**
**மனைமனைப் படரும் நனைநகு மாலைத்,**
**தனக்கென வாழாப் பிறர்க்கு உரியாளன்**
**பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்இலைப்**
**புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர் 15**

**நீர்குடி சுவையின் தீவிய மிழற்றி,**
**'முகிழ்நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்!**
**பொன்னுடைத் தாலி என்மகன் ஒற்றி,**
**வருகுவை ஆயின், தருகுவென் பால்'என,**
**விலங்கு அமர்க்கண்ணள் விரல்விளி பயிற்றித், 20**

**திதலை அல்குல்எம் காதலி**
**புதல்வற் பொய்க்கும் பூங்கொடி நிலையே!**

கோவலர்கள், வளைந்த மடிகோலிய உடையினர். அவர்கள் கொன்றைப் பழத்தினாலாகிய அழகிய குழலினை இசைத்தவராக மெத்தெனத் தமக்குப் பின்னே நடந்து வந்து கொண்டிருக்க, இல்லங்களிலே தாம்புக்கயிறுகளாற் பிணிக்கப்பட்டிருக்கும் செருக்கிய நடையினையுடைய தம் இளங்கன்றுகளினிடத்தே, பெருத்த தம் பால்மடிகள் கரை வதனை விரும்பியனவாகக் கனைக்கின்ற குரலுடன், ஒலிக்கும் மணிகள் விளங்கும் கழுத்தினவான பசுக்கூட்டங்கள், தத்தம் வீடுகளை நோக்கித் தம் கால்களை விரைவாகப் பெயர்த்து

வைத்துக் சென்றுகொண்டிருக்கும். அரும்புகள் மலரும் அத்தகைய மாலைக்காலம் இது!

புதியவராகிய மன்னர்கள் பலரும், அரிய கலன்களைத் திறையாகச் செலுத்தியதனால், நம் அரசனும் அவர்மேற் கொண்ட கொடிய பகைமை தணிந்தவனாயினான். இனிய பெயலையுடைய மேகங்களும் முழக்கமிட்டுப் பெய்யத் தொடங்கின. ஓவியத்தைப் போன்ற இந்திரகோபப் பூச்சிகள் செந்நிலத்தே தோன்றுகின்றன. உறுதிவாய்ந்த உருளைகள் பதிந்து உருளும்படியாகத் தேரினை விரையச் செலுத்துவாயாக, பாகனே!

தனக்கென்று வாழாமல், பிறருக்கே உரியவனாகத் தான் வாழ்பவனான பண்ணன் என்பானது சிறுகுடியைச் சார்ந்த தோட்டத்திலேயுள்ள, சிறிய இலைகளையும் புல்லிய வித்துக்களையுமுடைய நெல்லியினது, பசுமையான காய்களைத் தின்றவர், பின் நீர் குடிக்கும்போது பெறுகின்ற இனிய சுவையினைப்போல, இனிமையான சொற்களைப் பேசுபவன்;

அரும்பும் நிலவினைப்போல விளங்கும் இளமதிபோன்ற முகத்தினனும், பொன்னுடைய தாலியினனுமாகிய என் மகன். அவ்வேளையிலே, அவனை நினைந்தாளாக, 'இவ்விடத்தே வருவாயானால், நினக்குப் பால் தருவேன்' என, ஒருக்கணித்து நோக்கும் பார்வையினளாகத், தன் விரல்களால் அவனை அழைக்கின்றது போலத், தன் உள்ளக் கருத்தை அவனுக்குப் பொய்க்கும், தேமல் படர்ந்த அல்குலினளான, பூங்கொடி போன்ற என் காதலியின் நிலையினைச் சென்று யாம் காண்போம்!

**சொற்பொருள்:** 1. தெறுப்ப - குவிப்ப. 2. வேந்தன் - தான் துணையாகப் போன வேந்தன். 3. ஆர்கலி தலையின்று - ஆரவாரத்தோடு பெய்தது. 4. ஓவம் - சித்திரம். 5. உள்ளுறுதல் - பெயலால் நனைதல். 10. கொடுமடி - இலைபறிக்க கட்டிய மடி. 11. பின்றை - ஆயத்தின் பின். தூங்க - மெத்தென நடக்க. 12.நனைநகு மாலை - மொட்டு மலரும் மாலைக் கண்ணே. 17. முகிழ்நிலா. முகிழ்க்கின்ற நிலா. 18. பொன்னுடைத் தாலி - பொன்னாற் செய்தணிந்த புலிப்பல் தாலி. சிறுகுடி காவிரியின் வடகரை யிலுள்ள ஓர் ஊர்.

**விளக்கம்:** மகனுக்குப் பொய்த்தலாவது, தன் காதலனின் வரவை எதிர்பார்த்து நிற்குமவள், தெருவிலேயோடும் சிறுவனைப் பால்குடிக்க அழைப்பதுபோல்க் காட்டிப் பொய்த்து நிற்றல்.

*வினை முடிந்தது; கார்காலமும் தொடங்கிற்று. மாலையிலே பசுக்கள் வீடு திரும்பும் வேளையிலே என் காதலி என் வரவு பார்த்து ஏங்கி நிற்பாள். எனவே, தேரை விரைந்து செலுத்துக, பாகனே! எனக் கூட்டுக.*

*பண்ணனது பண்பைத் 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்றனன், அவ்வாறே தன் காதலியும் 'தனக்கென வாழாளாய்த் தன் தலைவனுக்கென வாழ்பவள்' என்றற்கு.*

## 55. போதல் செல்லா உயிர்!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *புணர்ந்து உடன்போன தலைமகட்கு இரங்கிய தாய், தெருட்டும் அயலிலாட்டியர்க்கு உரைத்தது.* **சிறப்பு:** *கரிகாலனோடு, வெண்ணிப் பறந்தலையிலே பொருது புண்பட்டு வடக்கிருந்து உயிர் துறந்த சேரலாதன்.*

*(தன் மகள் தன் காதலனுடன் போய்விட்டதறிந்து தாய் புலம்புகிறாள். பக்கத்து வீட்டிலுள்ளவர்கள் அவளுக்கு ஆறுதல் கூறுகின்றனர். 'யான் இன்னமும் உயிரோடு வாழ்கின்றேனே' என, அவள் பெரிதும் உள்ளம் வெதும்புகின்றாள்.)*

**காய்ந்துசெலற் கனலி கல்பகத் தெறுதலின்,**
**ஈந்துகுருகு உருகும் என்றூழ் நீள்இடை,**
**உளிமுக வெம்பரல் அடிவருத் துறாலின்,**
**விளிமுறை அறியா வேய்கரி கானம்,**
**வயக்களிற்று அன்ன காளையொடு என்மகள் 5**

**கழிந்ததற்கு அழிந்தன்றோ இலனே! ஒழிந்துயாம்**
**ஊதுஉலைக் குருகின் உள்உயிர்த்து, அசைஇ,**
**வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு**
**கண்படை பெறேன், கனவ - ஒண்படைக்**
**கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப் 10**

**பொருதுபுண் நாணிய சேர லாதன்**
**அழிகள மருங்கின் வான்வடக் கிருந்தென,**
**இன்னா இன்உரை கேட்ட சான்றோர்**
**அரும்பெறல் உலகத்து அவனொடு செலீஇயர்,**
**பெரும்பிறிது ஆகியாங்குப், பிரிந்து இவண் 15**

**காதல் வேண்டி, எற்றுறந்து**
**போதல் செல்லாஎன் உயிரொடு புலந்தே!**

*எவ்விடத்தும் காய்ந்து கொண்டே செல்லுகின்ற ஞாயிறானது மலைகளும் வெடிக்குமாறு காய்ந்தது.*

கானத்தைக் கடந்து செல்லும் பறவைகளும் வருந்துவதற்கு ஏதுவாகிய பெருவெப்பமும் உடையதாயிற்று அந்த நீண்ட வழி. உளி போன்ற வாயினையுடைய கொடிய பரற்கற்கள் அடியிற் பதிந்து வருத்துதலால், இன்னவிடத்திலே இன்ன கேடுதான் வருமென்று நடப்பவர் அறியமுடியாத, மூங்கில்களும் கரிந்தொழிந்த காடு அது. வலிய களிற்றினையொத்த காளை ஒருவனுடன், அக்காட்டுவழியாக என் மகள் கடந்து போனதற்காக யான் வருந்தினேன் அல்லேன்.

அவளை யான் பிரிந்து, உலைக்கண் ஊதும் துருத்தி போல உள்ளுயிர்த்து மெலிந்து, தீயிலே வேவதுபோலும் வெய்ய நெஞ்சமொடு, கண் துயில் பெறேனாய், அவளையே கனவிற் கண்டு கண்டு வாய்வெருவிப் புலம்புகின்றேனே!

ஒளி தங்கிய படையினையுடைய கரிகால் வளவனோடு வெண்ணிப் போர்க்களத்தே போரிட்டுக், களத்திலே புறப் புண்பட்டமைக்கு நாணினான் சேரலாதன். தான் போரிட்டுத் தோற்றழிந்த அந்தக் களத்தின் ஒரு புறத்தேயே வடக்கிருந்தான். மிகவும் துன்பந் தருவதாகிய அந்த இனிய செய்தியைச் சான்றோர் கேட்டனர். பெறுதற்கரிய துறக்கத்திற்கு அவனோடு தாமும் சென்றுவிடும் பொருட்டாகத் தாமும் தம் உயிர்களை நீத்தனர். அதுபோல,

இவ்விடத்தே காதலை விரும்பி, என்னைக் கைவிட்டுப் பிரிந்து போதலைச் செய்யாத என் உயிரோடு கிடந்தே யானும் நொந்தேன்.

**சொற்பொருள்:** 4. விளிமுறை அறியா - இன்னவிடத்திலே இன்ன கேடு வருமென்று அறியாத. 6. ஒழிந்து - விட்டிருந்தது. 13. இன்னா இன்னுரை - மரிக்கின்றான் என்ற துயரமும், புறப்புண் நாணி உயிர் விடுகின்ற சிறப்பினனாயினன் என்றலால் இனிமையும் கொண்ட உரை. 14. உலகம் - வீர சுவர்க்கம். 17. புலந்து - புலந்தேன் எனத் தன்மைவினை ஆக்குக. 9. கனவ - கனாக் கண்டு வருந்த.

**விளக்கம்:** சான்றோர் தங்களுக்கு அவன் அயலான் ஆயினபோதும், அவன் பிரிவுக்காற்றாது உயிர் நீத்தனர்; யானோ, என் உயிரனைய மகள் பிரிந்தபோதும் உயிரோடும் வாழ்கின்றேனே எனப் புலம்புகிறாள்.

'பிரிந்து, இவண் காதல் வேண்டி, என் துறந்து போதல் செல்லா என் உயிரோடு புலந்து கனவ' எனக் கூட்டி, உயிர் என்றது மகளைக் குறித்தது எனவும் கொள்ளலாம். 'உயிரனைய மகள்' ஆதலின், 'உயிர்' என்றனள்.

'கானத்துச் சென்றவள் ஏதமுற்றால் தான் வாழேன் எனக் கூறி, அவள் ஏதமுறாது இனிதே கடத்தலைத் தாய் வேண்டுகிறாள்' எனினும் ஆம்.

## 56. இம்மனை உம்மனை அன்று!

**பாடியவர்:** மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் **திணை:** மருதம். **துறை:** பரத்தை மனைக்குச் செல்லுகின்ற பாணன் தன் மனைக்கு வந்தானாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. 'பிறன் பேதைமை பொருளாக நக்கது' என்பர் பேராசிரியர்.

*(பரத்தைமை மேற்கொண்டான் தலைவன். அதன் பொருட்டு அவனுக்கு உதவிய பாணன் தெருவழியே சென்ற போது, பசு பாய்ந்துவரக் கலங்கித் தலைவியின் வீட்டினுள் புகுந்தான். அவனைச் சுட்டித் தோழியிடம் கூறுவாளாய் எள்ளி நகையாடுகிறாள் தலைவி. தோழி தலைவனை மன்னித்து ஏற்றுக் கொள்ளும்படி கூற, அவள் வாயின் மறுத்து இப்படிக் கூறுகின்றாள் என்க.)*

**நகை ஆகின்றே - தோழி! நெருநல்**
**மணிகண் டன்ன துணிகயம் துளங்க,**
**இரும்புஇயன் றன்ன கருங்கோட்டு எருமை,**
**ஆம்பல் மெல்லடை கிழியக், குவளைக்**
**கூம்புவிடு பன்மலர் மாந்திக், கரைய** 5

**காஞ்சி நுண்தாது ஈர்ம்புறத்து உறைப்ப,**
**மெல்கிடு கவுள அல்குநிலை புகுதரும்**
**தண்துறை ஊரன் திண்தார் அகலம்**
**வதுவை நாள்அணிப் புதுவோர்ப் புணரிய,**
**பரிவொடு வரூஉம் பாணன் தெருவில்** 10

**புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கிய, யாழ்இட்டு;**
**எம்மனைப் புகுதந் தோனே; அதுகண்டு**
**மெய்ம்மலி உவகை மறையினென், எதிர்சென்று,**
**'இம்மனை அன்று; அஃதுஉம்மனை' என்ற**
**என்னும் தன்னும் நோக்கி,** 15

**மம்மர் நெஞ்சினோன் தொழுதுநின் றதுவே.**

தோழி! நேற்று, இரும்பினால் செய்தாற்போன்ற கருமை யான கொம்புகளையுடைய எருமையொன்று, பளிங்குமணியைக் கண்டாற்போலத் தோன்றும் தெளிந்த குளத்து நீரைக் கலங்கச் செய்தது. அவ்விடத்து, ஆம்பலின் மெல்லிய இலைகளும் கிழியுமாறு, குவளையின் குவிதல் நீங்கிய பல மலர்களையும்

நிறையத் தின்றது. அதன்பின், கரையிலேயுள்ள காஞ்சிமரத்து நிழலில், ஈரமான தன் உடற் புறத்திலே காஞ்சியின் நுண்தாது சிந்தக் கிடந்து அசையிடும் வாயினை உடையதுமாயிற்று. அதன்பின், கொட்டிலிலே சென்று அது புகுந்தது. அத்தகைய குளிர்ந்த நீர்த்துறைகளைக் கொண்ட ஊரன், நம் தலைவனாகிய அவன்! திண்ணென்ற, தாரினை அணிந்த அவனுடைய மார்பிலே, வதுவைக் காலத்து ஒப்பனையையுடைய பரத்தையரைப் புணர்க்க வேண்டும் என்று, மிக்க பரிவோடும் வருகின்ற பாணனும் வந்தான்.

ஈன்ற அணிமையை உடையதோர் பசுவானது, தெருவிலே தன்னைப் பாய்ந்தமையாற் கலங்கித் தன் யாழினையும் கீழே போட்டுவிட்டவனாக, எம் வீட்டுள்ளும் புகுந்தான்.

அதனைக் கண்டு, என் உடல் புளகிக்க எழுந்த உவகையினை மறைத்துக் கொண்டேன். அவன் எதிரே சென்றேன். 'உங்கள் மனை இந்த மனையன்று; அஃது அப் பரத்தையர் மனையாகும்' என்றும் கூறினேன். அவன் என்னையும் தன்னையும் நோக்கினான். மயங்கிய நெஞ்சம் உடையவனானான். என்னைத் தொழுது நின்றான். அதனை நினைக்க நினைக்க எனக்குச் சிரிப்புத்தான் விளைகின்றது, தோழி!

**சொற்பொருள்:** 1. நெருதல் - நேற்றைப்பொழுது. 2. மணி - பளிங்கு 4. அடை - இலை. 5. கூம்புதல் - குவிதல். மாந்துதல் - நிறையத் தின்றல். 7. மெல்கிடல் - அசைபோடுதல். 9. வதுவை நாளணி - மணநாளிற்போடும் அழகுக் கோலம்; அது பரத்தையுடன் கூடும் முதல்நாள் என்றலால். 21. புனிற்றா - ஈன்ற அணிமையுடைய பசு.

**விளக்கம்:** "இரும்பு போன்ற கோட்டினையுடைய எருமை, காயம் கலங்க, ஆம்பல் மெல்லடை கிழியக், குவளை மலரை மாந்திக், காஞ்சி நுண்தாது ஈர்ம்புறத்து உறைப்ப, மெல்கிடு கவுளதாய்த் தங்கு நிலைக்கட் புகுதரும். இரும்பு போன்ற மார்பினையுடையவரான பரத்தையர் ஊர் முழுதுங் கலங்கத், தான் முன்கூடின பரத்தையரின் தாய்மார் கலங்க, அவர் ஆம்பற் பூப்போலக் குவியக், குவிதல்விட்ட குவளை மலர்போலும் பூப்பெய்து கொள்ளப்பட்ட பரத்தையரை நுகர்ந்து வருகின்ற காலத்து, வழியிலகப்பட்ட சேடியர் முதலாயினாரை நுகர்ந்து, பின்னுஞ் சிலரைக் கூடக் கொடி நாக்கு எறிந்துகொண்டு, நம் மனையிலே தங்குதற் பொருட்டு வருகின்றான்" என்று, தோழிக்கு வாயின் மறுத்ததும் ஆம்.

## 57. ஆனாது அழுவோள்!

**பாடியவர்:** *நக்கீரர்.* **திணை:** *பாலை.* **துறை:** *பொருள் வயிற் பிரிந்த தலைமகன் கிழத்தியை நினைந்து சொல்லியது.* **சிறப்பு:** *பாண்டியன் நெடுஞ்செழியன் முசிறியை முற்றுகையிட்டு வென்றது.*

*(வேந்தனுக்குரிய தொழில் பூண்டு தன் தலைவியைப் பிரிந்து சென்றான் ஒரு தலைவன். வினைமுடித்துத் தலைவன் திரும்பி வரும்போது, தன் காதலியை நினைந்து, தேரை விரைந்து செலுத்துமாறு தன் பாகனிடம் கூறுகின்றான்.)*

**சிறுபைந் தூவிச் செங்காற் பேடை**
**நெடுநீர் வானத்து, வாவுப்பறை நீந்தி**
**வெயில்அவிர் உருப்பொடு வந்து,கனி பெறாஅது,**
**பெறுநாள் யாணர் உள்ளிப், பையாந்து,**
**புகல்ஏக் கற்ற புல்லென் உலவைக்** 5

**குறுங்கால் இற்றிப் புன்தலை நெடுவீழ்**
**இரும்பிணர்த் துறுகல் தீண்டி,வளி பொரப்,**
**பெருங்கை யானை நிவப்பின் தூங்கும்**
**குன்ற வைப்பின் என்றூழ் நீள்இடை**
**யாமே எமியம் ஆகத், தாமே** 10

**பசுநிலா விரிந்த பல்கதிர் மதியிற்**
**பெருநல் ஆய்கவின் ஒரீஇச், சிறுபீர்**
**வீஏர் வண்ணம் கொண்டன்று கொல்லோ -**
**கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்**
**முதுநீர் முன்றுறை முசிறி முற்றிக்** 15

**களிறுபட எருக்கிய கல்லென் ஞாட்பின்**
**அரும்புண் உறுநரின் வருந்தினள், பெரிதுஅழிந்து,**
**பானாட் கங்குலும் பகலும்**
**ஆனாது அழுவோள் - ஆய்சிறு நுதலே!**

*நெஞ்சமே! சிறிய மென்சிறகினையும் சிவந்த காலினையும் உடையது வாவற்பேடை. அது, நெடிய தன்மையினையுடைய வானத்துத் தாவிப் பறந்துசெல்லும். வெயிலினால் கருகிய உடலோடு துயருற்று வந்தும் கனிகள் பெறாமல் பசியால் வருந்தும். முன்போலக் கனிகளைப் பெறும் நாளின் வளனை நினைந்து நினைந்து ஏங்கியபடியுமிருக்கும்.*

*பொலிவழிந்த கிளைகளையும், குறுகிய அடியினையும் உடையது இற்றி மரம். அதன் புல்லிய உச்சியினை உடைய நீண்ட*

விழுதானது, பெரிய சருச்சரையையுடைய உருண்டைக் கல்லைத் தீண்டும். அப்போது, காற்றும் அடிக்கவே, பெருங்கையினை யுடைய யானை தன் கையை உயர்த்து இருப்பதுபோல, அது தோன்றும்.

மலையிடத்து ஊர்களையுடைய, வெம்மைமிக்க அக் காட்டிலே, நமக்கு நாமே துணையாகத் தனித்திருக்கின்றோம்.

கொய்யப்பெற்ற பிடரிமயிர்களையுடைய குதிரைகள் பூட்டப் பெற்றுள்ளதும், கொடிபரப்பதுமான தேரினை உடையவன் பண்டியன் நெடுஞ்செழியன். அவன், பழமையான கடலின் துறைமுகத்தை உடையதான முசிறியை வளைத்து முற்றினான். ப்கைவர்களின் போர்யானைகள் மடியுமாறு கொன்றான். கல்லென்னும் பேரொலி எழுந்த அந்தப் போரிலே, அரும்புண்பட்டவர்கள் துடிப்பதனைப் போல, நம்மைப் பிரிந்திருக்கும் நம்முடைய காதலியும் பெரிதும் துடித்துக் கொண்டிருப்பாள்; நள்ளிரவிலும் பகல் வேளையிலும் ஓயாது அழுது கொண்டேயும் இருப்பாள்!

அவளுடைய சிறிய நெற்றியானது முன்னர்க் குளிர்ந்த ஒளிக்கதிர்கள் பரப்பும் பல கதிர்களையுடைய முழுமதி போன்றிருக்கும். ஆராயும் பேரழகு கொண்டும் விளங்கும். அவையெல்லாம் நீங்கிப்போக, இப்போது அது சிறிதான பீர்க்கும் பூவின் நிறத்தையும் கொண்டு விட்டதோ?

**சொற்பொருள்:** 1. சிறுபைந் தூவிச் செங்காற் பேடை என்பது வெளவாலின் பெண் ஆகும். 2. அது வாவிப்பறத்தலால் வாவுப்பறை எனப்படும். வாவல் என்பதே வெளவால் என்றாயிற்று. நெடுநீர் வானம் - நெடிதாகப் பரந்து கிடக்கும் நீர்மையுடைய வானம். 6. உலவை - கொம்பு. 8. நிவப்பு - ஓங்குதல். 9. குன்றவைப்பு - குன்றுகளை உடைய ஊர். 11. பசு நிலா - குளிர்நிலா. 15. முதுநீர் - கடல். 17. அரும்புண் - மருமத்தில் ஏற்பட்ட தீர்தற்கரிய புண்.

10. 'யாமே தமியமாக என்றது, தன் நெஞ்சம் அவள் பாற் சென்றுவிட்டதனால், தான் தனித்து நோதல்பற்றி.

**விளக்கம்:** 'நெடுநீர் வானத்து வெயிலவிர் உருப்போடு வந்தும், கனி பெறாது வருந்திப் பழையநாளினை நினைந்து ஏங்கும் வாவற் பேட்டைப்போல, நெடுநாட் சென்று பிரிவால் வருந்திக் காடு கடந்து செல்லும் யானும், பசலை படர்ந்த அவளைக் கண்டு, அவள் பழைய நலன்களை எண்ணி எண்ணி ஏங்குதல்தான் நிகழுமோ?' என்ற தலைவனின் காதன்மை ஏக்கத்தை உணர்க.

## 58. பண்பில் வாடை!

**பாடியவர்:** மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** சேட்படுத்து வந்த தலைமகனுக்குத் தலைமகள் சொல்லியது. சேட்படுத்து வருதலாவது, புறத்து வேறு வேலையில்லாதபோது, அவளை நாடி வருதல், களவியலுள், 'உயிர் மெலிந்தவிடத்துப் புணர்ச்சி நிமித்தம்' என்று கூறுவர் பேராசிரியர்.

*(தலைவன் குறித்த காலத்தே வராமற்போக வருந்தி வாடினாள் அவள். அவன் நெடுநாட் கழித்து வந்தான். அவள் ஊடி நின்றாள். 'நீர் இப்போது தழுவித் தருகின்ற இன்பத்தினும் அன்று நுமக்காகக் காத்துக் காத்து மெலிந்து நின்றேனே, அந்த நிலை எனக்கு இனிதுகாண்!' என்கின்றாள். இது அவனுடைய காலத் தாழ்ப்பினைச் சுட்டி உரைத்ததாகும்.)*

**இன்இசை உருமொடு கனைதுளி தலைஇ,**
**மன்னுயிர் மடிந்த பானாட் கங்குல்**
**காடுதேர் வேட்டத்து விளிவுஇடம் பெறாஅது,**
**வாஅதள் படுத்த சேக்கை, தெரிஇழைத்**
**தேன்நாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை, 5**

**கூதில் இல்செறியும் குன்ற நாட!**
**வனைந்துவரல் இளமுலை ஞெமுங்கப், பல்ஊழ்**
**விளங்குதொடி முன்கை வளைந்துபுறம் சுற்ற,**
**நின்மார்பு அடைதலின் இனிது ஆகின்றே-**
**நும்இல் புலம்பின்நும் உள்ளுதொறும் நலியும் 10**

**தண்வரல் அசைஇய பண்புஇல் வாடை**
**பதம்பெறு கல்லாது இடம்பார்த்து நிடி -**
**மனைமரம் ஓசிய ஒற்றிப்**
**பலர்மடி கங்குல், நெடும்புற நிலையே!**

*கூதிர்க் காலத்திலே,*

இனிய இசை முழக்கம்போல இடிமுழக்கிக் கொண்டு பெருமழையும் பெய்யும். நிலைபெற்ற உயிர்கள் அனைத்தும் துயின்றுவிட்ட அக்காலத்து நள்ளிரவிலே, ஆராய்ந்தெடுத்த அணிகளையும், தேன்மணங் கமழுகின்ற கூந்தலினையும் உடைய, இளைய குறத்தியர்களின் தந்தைமார்கள், காடுகளிலே புகுந்து, தாம் வேட்டையாடுவதற்கான விலங்குகளை ஆராய்கின்ற சமயத்திலே, துயிலும் இடம் ஏதும் பெறாததனால், தம் இல்லத்திலே வந்து புலித்தோல் விரித்த படுக்கையிலே தங்கியிருப்பர். அத்தகைய குன்ற நாடனே!

நும்மைப் பிரிந்திருக்கின்ற தனிமைக் காலத்திலே, நும்மை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் குளிர்ச்சியுடன் அசைந்து வருதலையுடைய பண்பற்ற வாடை எம்மை வருத்தாநிற்கும். அவ் வாடைக்குக் குறித்தபருவத்திலே நும் வருகையை யாம் பெற்றோமில்லை. நீர் வரும் காலத்தை நோக்கித் தாழ்ந்து, மனைமரமும் ஒடியுமாறு வலித்தும், பலரும் துயின்றுவிட்ட நள்ளிரவுகளிலும், நெடுநேரம் நுமக்காகக் காத்துக்காத்து வீட்டுப்புறத்தேயே யாம் நின்றோம். அங்ஙனம் நின்ற எமது நிலை,

வனைந்து பண்ணினாற்போலப் பணைத்து எழுந்துள்ள என் இளைய முலைகள் அமுங்குமாறு, பன்முறை பன்முறை, எம்முடைய விளங்கும் தொடிகளையுடைய முன்னங்கைகள் வளைந்து நுமது முதுகினைச் சுற்றி அணைத்துக் கொள்ள, நும் மார்பினைத் தழுவி யாம் அடையும் இன்பத்தினும் எமக்கு இனிதாயிருந்தது. (அவன் மீளவும் பிரிவானோ என்ற அச்சமே அவளை இப்படி மனங்கசந்து கூறச் செய்தது எனலாம்.)

**சொற்பொருள்:** 3. வேட்டத்து - வேட்டையிடத்து, விளிவிடம் - உறங்கும் இடம். 4. வரியதள் - புலித்தோல். 10. புலம்பின்- புலம்பால்.

**விளக்கம்:** "குறத்தியர் தந்தைமார், கூதிர்க்காலத்துக் காடுகளிலே தங்குமிடம் இல்லாதுபோயின காலத்திலே வீட்டிலே வந்து உறங்குவர். அதுபோல, நீயும் வேறு தொழில்கள் செய்யவியலாத காலத்து வந்தனையோ?" எனக் கூறி வருந்துகிறாள் தலைவி. வருந்துவார்க்கு வருத்தம் தெளிய உதவாது மேலும் வருத்துதலால், வாடை பண்பற்ற வாடையா யிற்று. மனைமரம் ஒசிய என்றது, அவள் அதனைப்பற்றி நெடுக நின்றனளாதலின். மனை வாழ்க்கையாகிய தழைத்துச் செழிக்க வேண்டிய பசியமரம், இடையே நின் பிரிவால் வலுவிழந்து ஒடிந்து போகுமாறு எனவும் கொள்க. பலர்மடி கங்குள் என்றது, தான் உறக்கம் பெறாமையையும் உணர்த்தும்.

## 59. படி ஞிமிறு கடியும் களிறு!

**பாடியவர்:** மதுரை மருதனிளநாகனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** நல்லந்துவனார் பாடிய திருப்பரங்குன்றத்து முருகனும், குருந்த மரத்தை வளைத்த கண்ணபிரானும்.

(அவன் பிரிந்து சென்றதனால் அவள் கலங்கினாள். தோழி, அவளுக்கு ஆறுதல் கூறுவாளாகத் தான் சொல்லுகிறாள். 'பிடியானையின்மீது பாசமும் காதலும் கொண்டொழுகும் களிறு;

*அதனைக் காணும் அவர் நின்னையும் நினையாரோ? நினைவர், விரைந்தும் வருவர்' என்கிறாள்.)*

**தண்கயத்து அமன்ற வண்டுபடு துணைமலர்ப்**
**பெருந்தகை இழந்த கண்ணினை, பெரிதும்**
**வருந்தினை, வாழியர், நீயே! - வடாஅது.**
**வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை,**
**அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்** 5

**மரம்செல மிதித்த மாஅல் போலப்**
**புன்தலை மடப்பிடி உணீஇயர், அம்குழை,**
**நெடுநிலை யாஅம் ஒற்றி, நனைகவுள்**
**படிஞிமிறு கடியும் களிறே - தோழி! -**
**சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்,** 10

**சினம்மிகு முருகன் தண்பரங் குன்றத்து,**
**அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை,**
**இன்தீம் பைஞ்சுனை ஈரணிப் பொலிந்த**
**தண்நறுங் கழுநீர்ச் செண்இயற் சிறுபுறம்**
**தாம்பா ராட்டிய காலையும் உள்ளார்,** 15

**வீங்குஇறைப் பணைத்தோள் நெகிழச், சேய்ந்நாட்டு**
**அருஞ்செயற் பொருட்பிணி முன்னி,நப்**
**பிரிந்து,சேண் உறைநர் சென்ற ஆறே!**

*தோழி! குளிர்ந்த நீருள்ள குளத்திலே நிறைந்திருக்கும், வண்டினம் படியும் துணைமலர்கள் போன்ற நின் கண்களின் பேரழகினையெல்லாம் இழந்துவிட்ட தன்மையளாயினை! அவனை நினைந்து நினைந்து பெரிதும் வருந்தினவளுமாயினை! வாழ்வாயாக!*

*சூரபத்மாவினை அவன் சுற்றத்தோடும் தொலைத்த ஒளி சுடரும் முனையினையுடைய நெடுவேலினையுடையவன், சினம் மிகுந்த முருகன். அச சினம் தணிந்து, அவன் அருளுடைய வனாகக் கோயில் கொண்டிருக்கும் தட்பம் வாய்ந்தது திருப்பரங்குன்றம். நல்லந்துவனார் பாடிய, சந்தன மரங்கள் செறிந்த, உயரமான அத் திருப்பரங்குன்றத்து மலையிலேயுள்ள, இனிய தீவிய பசுமைவாய்ந்த சுனையிலேயுள்ள, தண்ணிய நறிய செங்கழுநீர்ப் பூவாலியன்ற, பெரிய ஒப்பனையினாலே அழகுடன் விளங்கிய, கொண்டை அசைதலையுடைய நின் முதுகினைத் தாம் பாராட்டிய காலத்தையும், நம் தலைவர் நினைத்தனர் இல்லையே!*

*பருத்த இறையினையுடைய பணைத்த தோள்கள் மெலிவடையும் படியாகத், தொலைவிலுள்ள நாட்டிற் சென்று*

செய்யும் அருஞ்செயலாகிய பொருளீட்டலையே நினைந்தார். நம்மைப் பிரிந்து சென்று, அத் தொலைதூர நாட்டிலேயே வாழ்கின்றார். அவர் சென்ற வழியின்கண்ணே -

வடக்கின் கண்ணதாகிய நீர்வளம் அறாத யமுனையாற்றின், நெடிய மணலையுடைய அகன்ற நீர்த்துறையிலே நீராடிய ஆயர்மகளிர்கள், தண்ணிய தழையாடையினை உடுத்துக் கொள்ளுமாறு, குருந்தமரம் வளைந்திட மிதித்துத் தந்து உதவிய திருமாலான கண்ணனைப்போல, மெல்லிய தலையினையுடைய இளைய தன் பிடியானது அழகிய தளிர்களை உண்ணுமாறு, களிறானது யாமரத்தின் உயர்ந்த நிலையினையுடைய கிளைகளை வளைத்துத் தந்து, மதத்தால் நனைந்த தன் கன்னத்திலே படியும் வண்டுகளையும் ஓட்டிக் கொண்டிருக்கும். (அதனைக் காணும் அவரும் நின்னை நினைந்து உடனேயே வீடு திரும்புவர் என்பது கருத்து.)

**சொற்பொருள்:** 1. அமன்ற - நிறைந்த. துணைமலர் - ஒன்றே போல ஒத்து விளங்கும் இருமலர்கள். 2. பெருந்தகை - பேரழகு. 5. அண்டர் மகளிர் - ஆயர் மகளிர்; தேவ மகளிரே ஆயர் மகளிராக வந்து அந்நாள் தோன்றியிருந்தனர் என்று கூறுவர். 6. மாஅல் - திருமாலான கண்ணன். 10. மருங்கு - சுற்றம். 11. சினமிகு முருகன் - இதற்குச் சீர்மிகு முருகன் எனவும் பாடம் உண்டு. 12. சந்து - சந்தனம். 14. கழுநீர் - செங்கழுநீர். செண் - கொண்டை. 10. வீங்குதல் பெருத்தல். 17. அருஞ்செயல் - செயற்கரிய செயல்.

**விளக்கம்:** கண்ணன், யமுனைத்துறையிலே நீராடிய ஆயர்மகளிர் துகில்களைக் கவர்ந்து குருந்த மரத்தேறி ஒளிந்துகொண்டனன். அப்பொழுது பலதேவர் வரவும், அம்மகளிர் ஒருசேரத் தம்மை மறைத்தற்கு வேறு வழியற்றாராக வருந்தக், கண்ணன், அவர் மறையுமாறு குருந்தமரக் கொம்பினைத் தாழ்த்துத் தந்தனன் என்பர். இச் செய்யுள் கண்ணன் திருவிளையாடலைப் பற்றிய செய்திகள் பழந் தமிழகத்துப் பரவியிருந்த பெருக்கத்தினைக் காட்டும். அந்துவன் பரங்குன்றைப் பாடியது, 'மண்மிசை அவிழ் துழாய்' என்னும் எட்டாவது பரிபாடல்.

## 60. அறனில் யாயே!

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை:** நெய்தல். **துறை:** தலைமகற்குத் தோழி செறிப்பறிவுறீஇ வரைவு கடாயது. **சிறப்பு:** பொறையனின் தொண்டியும், சோழர் நாடுதரு நிதி வைத்த குடந்தையும்.

(தலைவனும் தலைவியும் களவிலே ஒழுகி வந்தனர். தலைவியின் புதுப்பொலிவு கண்ட தாய் ஐயுற்றாள். வீட்டை

விட்டுத் தலைவி அகலுதலும் கூடாதெனக் கவலும் இட்டாள். அதனைக் குறியிடத்தே வந்து நிற்கும் தலைமகனுக்குத் தோழி உரைத்து, 'ஆதலின் விரைந்து வேட்டுவந்து அவளை மணந்து கொள்ளுவாயாக' என்கிறாள்.)

**பெருங்கடற் பரப்பில் சேயிறா நடுங்கக்**
**கொடுந்தொழின் முகந்த செங்கோல் அவ்வலை**
**நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு**
**உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு**
**அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து, 5**

**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்**
**திண்தேர்ப் பொறையன் தொண்டி அன்னஎம்**
**ஒண்தொடி ஞெமுக்கா தீமோ தெய்ய;**
**'ஊதை ஈட்டிய உயர்மணல் அடைகரை,**
**கோதை ஆயமொடு வண்டல் தைஇ, 10**

**ஓரை ஆடினும் உயங்கும்நின் ஒளி'எனக்**
**கொன்னும் சிவப்போள் காணின், வென்வேற்**
**கொற்றச் சோழர் குடந்தை வைத்த**
**நாடுதரு நிதியினுஞ் செறிய**
**அருங்கடிப் படுக்குவள், அறன்இல் யாயே! 15**

தலைவனே! பெரிய கடற்பரப்பிலே இருந்த சிவந்த இறால் மீன்களும் அஞ்சி நடுங்குமாறு, மீன்களை முகக்கும் கொடிய தொழிலையுடைய நேரிய கோலையுடைய அழகிய வலையினைக் கைக்கொண்டவாறு, நீண்ட படகிலிருந்து மீன்பிடிக்குந் தொழிலிலே இறங்கிய தன் தந்தைக்கு, உப்பினை விற்றுக் கொண்ட நெல்லினால் சமைத்த மூரலாகிய வெண்சோற்றை, அயிரை மீனையிட்டு ஆக்கிய அழகிய புளிக்கறியினைச் சொரிந்து, கொழுத்த மீன் கருவாட்டுடன் அவனுடைய இளைய மகள் கொடுத்துக் கொண்டிருப்பாள். அத்தகைய இடமாகிய, திண்ணிய தேரினையுடைய சேரனது தொண்டியைப் போன்ற, எம்முடைய ஒள்ளிய வளையலைத் தழும்பு உண்டாகும்படியாக அழுத்தா திருப்பாயாக.

'வாடைக் காற்றுக் குவித்த உயர்ந்த மணல்மேடாகிய அடைகரையிலே, கோதைகள் சூடிய ஆயத்தாராகிய நின் தோழியரோடு வண்டலிழைத்து விளையாடினாலும், நின் ஒளி மேனி வாடிவிடுமே' என்று, எக்காரணமின்றியும் எம்மைச் சினந்து கொள்பவள் அறங்கருதாத எமது தாய். அவள், எம்பால் வளையல் அழுத்திய தழும்புகளைக் கண்டால், வெல்லும் வேலினையுடைய வெற்றி பொருந்திய சோழர்கள் குடந்தைக்கண்ணே பாதுகாவலுடன் சேமித்து வைத்த,

பகைவரின் நாடுகள் திறையாகக் கொடுத்த பெரு நிதிக் குவையைக் காட்டினும், காவல் அதிகமாயிருக்குமாறு, எம்மை அரிய காவற்கு உட்படுத்தி விடுவள் கண்டாய்!

**சொற்பொருள்:** 1. சேஇறால் - சிவந்த இறால் மீன். 2. கொடுந்தொழில் - உயிர்க் கொலையாகிய கொடிய தொழில். செங்கோல் - நேரிய கோல். 4. நொடைவிற்றுக் கொள்ளல். மூரல் - புளித்த பழஞ் சோறு. 3. அயிலை - அயிரை மீன். 6. மீன் தடி - கருவாட்டுத்துண்டு. 9. ஊதை - வாடை. 11. ஓரை - மகளிர் விளையாட்டு. 12. கொன்னும் - வீணே. சிவப்பு - சினம். 15. கடி - காவல். அறனில் யாய் - தன் இளமையிலே காதல் கொண்டு ஒழுகினவளாகியும், தன் மகளை இற்செறித்தலால், அறனற்றாள் என்றனள்.

**உட்பொருள்:** 'தந்தை மீன்பிடித்துக் கொணரும் முன்னேயே, தந்தைக்கு உப்புவிற்ற பொருளால் சோறும் கறியும் ஆக்கிக் கொணர்பவர் எம் இளமகளிர். அதுபோல, நீவிர் வரைந்துவந்து கொள்வதற்கு முன்பே, யாமும் அறத்தோடு நின்று முயல்வோம்' என்பதாம்.

## 61. பொதினி அன்ன வனமுலை!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பொருள்வயிற் பிரிய, வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது. 'தன் சாதிக்கு ஏற்பத் தலைவன் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலைத் தோழி கூறினாள்' என்பர். நச்சினார்க் கினியர்.

**சிறப்பு:** வேங்கட மலைக்குத் தலைவனான கள்வர் கோமான் புல்லி; அவன் வணக்கிய மழவர்நாடு; நெடுவேள் ஆவியர் கோமானின் பொதினி மலை.

*(நெஞ்சிலே பொருளார்வம் மிகுதியாகத்தன் காதலியைப் பிரிந்து வேற்றுநாட்டிற்குச் சென்றான் தலைவன். குறித்த நாளிலே அவன் வரவில்லையெனத் தலைவி கலங்கினாள். 'அவன் போன இடத்திலேயே தன்னை மறந்து தங்கி விட்டானோ?' எனப் புலம்பினாள். அவளைத் தெளிவிக்கத் தோழி கூறுகின்றாள்.)*

**'நோற்றோர் மன்ற தாமே கூற்றங்**
**கோளுற விளியார், பிறர்கொள விளிந்தோர்'எனத்**
**தாள்வலம் படுப்பச் சேட்புலம் படர்ந்தோர்**
**நாள்இழை நெடுஞ்சுவர் நோக்கி, நோய்உழந்து**
**ஆழல் வாழி, தோழி! - தாழாது,** 5

**உரும்என‌ச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்**
**வரிமாண் நோன்ஞாண் வன்சிலைக் கொளீஇ,**
**அருநிறத்து அழுத்திய அம்பினர் பலருடன்**
**அண்ணல் யானை வெண்கோடு கொண்டு,**
**நறவுநொடை நெல்லின் நாள்மகிழ் அயரும் 10**

**கழல்புனை திருந்துஅடிக் கள்வர் கோமான்**
**மழபுலம் வணக்கிய மாவண் புல்லி**
**விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்,**
**பழகுவர் ஆதலோ அரிதே - முனாஅது**
**முழவுஉறழ் திணிதோள் நெடுவேள் ஆவி 15**

**பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்னநின்**
**ஒண்கேழ் வனமுலைப் பொலிந்து**
**நுண்பூண் ஆகம் பொருந்துதன் மறந்தே.**

*மனையின் நெடுஞ்சுவரிலே, நம் தலைவன் பிரிந்து போன நாட்களை வரையிட்டு வைத்து, அவ் வரைகளையே நோக்கி நோக்கி உள்ளத்து நோயும் மிகுதியாக, மிக்க துன்பத்திலே ஆழ்ந்திடாதே! தோழி, நீ வாழ்க!*

*குறித்த இறுதி நாளிலே கூற்றம் வந்து தம் உயிரைக் கொள்ள அதனால் மரியாமல், போரிலே, பிறர் தம் உயிரைக் கொள்ளும்படியாக மரித்தவர்கள் நோன்பு இயற்றியவராவர். இங்ஙனம் எண்ணித், தம் முயற்சியிலே வெற்றி உறுவிக்கக் கருதித், தொலைவான நாட்டிற்குப் பிரிந்து சென்றுள்ளனர் நம் தலைவர்.*

*பசிய காலும் மாண்புறும் வரியும் உடைய வலிமையான வில்லானது, இடையிடையே சிறிதுகாலம் கூடத் தாழ்க்காமல் தொடர்ந்து முழங்கும் முயற்சியோடு, தம் வில்லிலே வலிய நாணினைப் பூட்டி ஒலித்தவாறே, பகைவரின் மார்புகளிலே அம்பினைப் பாய்ச்சுகின்ற இளைஞர்கள் பலர். அவருடன், தலைமையான யானையின் வெண்மையான தந்தங்களோடு கள்ளினையும் கொண்டு விற்று, அதனாற் கொண்ட நெல்லினால் தனது நாளோக்கச் சிறப்பினைச் செய்பவன் புல்லி என்பவன். அவன், வீரக்கழல் அணிந்த அழகிய திருவடிகளை உடையவன். மிகுந்த வள்ளன்மையும் உடையவன். கள்வர் கோமானாகத் திகழ்ந்தவன், மழவரை வென்று, தனக்குத் திறை செலுத்தச் செய்தவன். அவனுடைய பேரூர் திருவேங்கடம்; அதனையே பெறுவதாயினும் -*

*முழவினை யொத்த திண்மையான தோள்களை உடையவன் நெடுவேள் ஆவி. அவனுடையதும், மிகத் தொன்மை வாய்ந்ததும், பொன்மிகுந்ததுமான பொதினிமலையைப்*

போன்றன ஒளிவிளங்கும் நின் அழகிய முலைகள். அவற்றாற் சிறப்புற்ற, நுண்ணிய பூண் அணிந்த நின் மார்பகத்தைப் பொருந்துதலை மறந்து, அவர் அங்குப் பழகியிருப்பார் ஆதலே அரிதாகும்.

**சொற்பொருள்:** 1. நோற்றார் - நோன்பு செய்தவர். 2. கோளுற - கோடல் உற; முதுமைபெற்றுச் சாவதினும் விழுப்புண் பெற்றுச் சாவது சிறப்பு என்பர் வீரர்கள். தலைவன் வேந்துவினை முடித்தற் பொருட்டுச் சென்றமை இதனால் பெறப்படும். 3. தாள் - முயற்சி. 5. ஆழல் - அழுந்தாதே. மழபுலம் - மழவர் நாடு; அதியர்கள் வாழ்ந்த தமிழகப் பகுதி. 16. பொதினி - பழனிமலை. 7. 'வன்சிலை', வார்சிலை எனவும் பாடம். பழனிமலை தன் உருவொப் பால் முலைக்கு உவமையாயிற்று என்க. பொதினி - பழனி.

**விளக்கம்:** 'நாள் இழை நெடுஞ்சுவர் நோக்கி' மகளிர் நோய் உழைக்கும் நிலையினர் என்னும் செய்தியை இச் செய்யுளால் அறியலாம்.

## 62. கடவுள் எழுதிய பாவை!

**பாடியவர்:** பரணர். **திணை:** குறிஞ்சி. **துறை:** அல்ல குறிப்பட்டுழித் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. 'களஞ்சுட்டு கிளவி கிழவியதாகும்' 'என்பதனால், தலைவியால் குறிபெற்றும் தோழியை இரக்கும்' எனக் கொண்டனர் நச்சினார்க்கினியர். **சிறப்பு:** கொல்லிமலைச் சாரலிலே சேரன், கடவுள் எழுதிய பாவை சமைத்துப் போற்றியது. இதனைக் கொல்லிப் பாவை என்பர்.

(முதல்நாள், தலைவி அவனுடன் கூடிய காலத்திலே காட்டிய பெருங்கிளர்ச்சி, மறுநாள் குறியிடத்தே வந்தும் அவளைக் காணாத தலைவனின் மனத்திலே நிழலாடுகிறது. இன்றும், இனியும் வரமுடியாதெனக் கருதிப் போலும் அவள் அங்ஙனம் கலந்தனள் என, அவன் தன் நெஞ்சோடு கூறி மயங்குகின்றான்.)

**அயத்துவளர் பைஞ்சாய் முருந்தின் அன்ன**<br>
**நகைப்பொலிந்து இலங்கும் எயிறுகெழு துவர்வாய்,**<br>
**ஆகத்து அரும்பிய முலையள், பணைத்தோள்,**<br>
**மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன**<br>
**மாஇதழ் மழைக்கண், மாஅ யோளொடு** 5

**பேயும் அறியா மறைஅமை புணர்ச்சி**<br>
**பூசற் றுடியிற் புணர்வு புரிந்து இசைப்பக்,**<br>
**கரந்த கரப்பொடு நாஞ்செலற்கு அருமையின்,**<br>
**கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று**<br>
**நெடுஞ்சுழி நீத்தம் மண்ணுநள் போல,** 10

**நடுங்கு அஞர் தீர முயங்கி, நெருநல்**
**ஆகம் அடைதந் தோளே - வென்வேற்**
**களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி**
**ஒளிறுநீர் அடுக்கத்து வியல்அகம் பொற்பக்**
**கடவுள் எழுதிய பாவையின், 15**

**மடவது மாண்ட மாஅ யோளே!**

வெற்றிதரும் வேலினை உடையவன்; போர் யானைகள் மிகுதியான படையினையும் உடையவன்; பொறையனான சேரன். அவனுடைய கொல்லி மலையானது, விளங்கும் அருவி நீரினையுடைய பக்கமலைகளுடன் அகன்று கிடப்பது. அது அழகுறுமாறு, அதன்கண், அவன் கடவுள் வடிவம் எழுதிக் கொல்லிப் பாவையினை அமைத்தான். அந்தப் பாவை போன்று மடப்பத்தால் சிறப்புற்ற கருமேனி வண்ணத்தள் என் காதலி.

அவள், நீர்க்கரையிலே வளரும் பைஞ்சாய்க் கோரையின் குருத்தினைப் போன்று ஒளிசிறந்து விளங்கும் பற்கள் பொருந்திய சிவந்த வாயினள். மார்பிடத்தே அரும்பி விளங்கும் இளைய முலையினள். பணைத்த தோள்களையுடையவள். கரிய இமைகளை உடையனவும், கருந்தாளினை உடையவுமான குவளையின் மலர்களை இணையாகப் பிணைத்து வைத்தாற் போன்ற, குளிர்ந்த கருங்கண்களையும் உடையவள்.

அவளோடு, பேயும் அறியவியலாத மறைவினை உடைய களவுப் புணர்ச்சியில் ஈடுபட்டுள்ளோம். அப் புணர்ச்சியானது ஆரவாரிக்கும் துடியினைப் போலக் கூடலும் பிரிதலுமாக ஊரவரால் அலர் உரைக்கவும் படுவதாயிற்று. அதனால், இதுவரை நாம் மறைந்த மறைப்புடனே, இனியும் சென்று கொண்டிருப்பதும் அருமையாயிற்று. அதனாற் போலும்,

விரைந்தோடும் வெள்ளம் பெருகியிருக்கும் காவிரிப் பேராற்றிலே, நெடுஞ்சுழிகளையுடைய வெள்ளப் பகுதியிலே மூழ்கி மூழ்கிக் குளிப்பவளே போலத், தன்னை நடுக்கும் அலரால் விளைந்த துயரம் தீருமாறு, அவள் என்னை நேற்றுத் தழுவித் தழுவி மகிழ்ந்தனள்! என் மார்பினை விடாது பொருந்தியும் கிடந்தனள்!

**சொற்பொருள்:** 1. முருந்து - வேரின் மேற்றண்டு. 2. நகை - ஒளி. 3. பேயு மறியா மறையமை புணர்ச்சி - பேய்கள் இரவிலே நடமாடுவன; அவையும் அறியாமல் யாம் கூடிய இரவுக்குக் குறியிலே ஏற்பட்ட புணர்ச்சி. அல்லது பேயும் நடமாட்டம் ஒழிந்த நள்ளிரவுப் புணர்ச்சியுமாம். 7. புணர்வு பிரிந்திசைப்ப - கூடிய காலத்து அவள்மேனி அழகுறலாலும், பிரிந்த காலத்து வாடுதலாலும் ஊரவர் பிரிந்து பிரிந்து அலர் உரைப்பர் என்க.

பொருட்குப் புணர்தலினும், அதனால் தலவியைப் பிரிதலினும் எனவும் கொள்க. மா - கருமை. மாயோள் - கரியோள்; அல்லது மாயோளான சக்தி போன்றவள் எனலும் ஆம்; அவள் தன் தலைவனுடன் பிரியா நிலையிலே உடற்பாதியாய் உறைந்தமையும் நினைக்க.

**விளக்கம்:** பரணர் செங்குட்டுவனைப் பாடியவர்; கொல்லிமலையிலே கடவுள் எழுதிய பாவையைப் பொறையன் அமைத்ததைக் கூறுகிறார். சிலம்பிலே கண்ணகிக்குப் படிமம் அமைத்த செய்தியையும் இங்கே நினைத்துக் காண்க. இதனால் கல்லிலே கடவுளின் வடிவம் சமைத்து அமைக்கும் கற்படிமக்கலை அன்றே சிறந்திருந்தமையும் அறிக.

## 63. கன்று காணாக் கறவை!

**பாடியவர்:** கருவூர்க் கண்ணம் புல்லனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகள் புணர்ந்துடன் செல்லச், செவிலி தன் மகளுக்குச் சொல்லியது.

(தலைமகள் உடன் போக்கிலே தன் காதலனுடன் சென்று விட்டனள். அதனால் உள்ளம் நொந்தாள் செவிலித்தாய். தன் மகளிடம் சொல்லிப் புலம்புகின்றாள். 'அவன் தோள்களே துணையாகத் துயில்வித்தாலும் உறங்காது, பறையொலி கேட்டால் நடுங்கி மெலிவாளோ?' என்று கலங்குகின்றாள்.)

**கேளாய் வாழியோ மகளை! நின்தோழி,**
**திருநகர் வரைப்பகம் புலம்ப அவனொடு -**
**பெருமலை இறந்தது நோவேன்; நோவல் -**
**கடுங்கண் யானை நெடுங்கை சேர்த்தி,**
**முடங்குதாள் உதைத்த பொலங்கெழு பூழி** 5

**பெரும்புலர், விடியல் விரிந்து,வெயில் எறிப்பக்**
**கருந்தாள் மிடற்ற செம்பூழ்ச் சேவல்**
**சிறுபுன் பெடையொடு குடையும் ஆங்கண்,**
**அஞ்சுவரத் தகுந கானம் நீந்திக்.**
**கன்று காணாது, புன்கண்ண, செவிசாய்த்து,** 10

**மன்றுநிறை பைதல் கூறப், பலஉடன்**
**கறவை தந்த கடுங்கான் மறவர்**
**கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ,**
**முதுவாய்ப் பெண்டின் செதுகாற் குரம்பை,**
**மடமயில் அன்னஎன் நடைமெலி பேதை** 15

**தோள்துணை யாகத் துயிற்றத் துஞ்சாள்,**
**'வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்**

**சேக்கோள் அறையும் தண்ணுமை**
**கேட்குநள் கொல்,எனக் கலுழும்என் நெஞ்சே!**
**கேளாய் மகளே! நீ வாழ்வாயாக!**

*அழகிய நம் வீட்டின் இடமெல்லாம் புலம்புமாறு, நின் தோழியானவள், அவள் காதலனான அவனோடுங்கூடிப், பெரிய மலையினைக் கடந்தும் போயினளே! அதனைப் பற்றிக்கூட யான் அவ்வளவாக வருந்துகின்றேன் அல்லேன்.*

*அஞ்சாமையினை உடைய யானைகள், தம்முடைய நெடுங்கையினை ஒன்று சேர்த்தவைகளாகத், தம் கால்களை மடக்கி உதைக்க, அதனால் உண்டாகிய பொற்றுகள்போல நிறைந்து கிடக்கும் புழுதியிலே, பெரிய இருளானது புலர்கின்ற விடியற்காலத்திலே, வெய்யில் மிகுதியாக எறிக்கும். கரிப மாலை சூடியது போன்ற கழுத்தினையுடைய சிவந்த குறும்பூழ்ச் சேவல், அவ்வேளை, தன்னுடைய சிறிய புல்லிய பெட்டையுடன் கூடியதாக, அப்புழுதியைக் குடைந்து கொண்டிருக்கும். அச்சமுறத்தக்க அத்தகைய காட்டினையும் அவள் கடப்பாளோ?*

*விரைவு மிகுந்த கால்களை உடைய மறவர்கள் ஆநிரை களைக் கவர்ந்து வருவர். அங்ஙனம் கொணரும் அவர், தம் ஊர் மன்றுகளிலே ஒருங்கே பல கறவைகளையும் கொணர்ந்து அடைத்திருப்பர். அப்படி அடைக்கப்பட்ட அவை, தம் கன்று களைக் காணாமையால், பொலிவழிந்த கண்ணினவாய்த், தம் செவிகளைச் சாய்த்து, மன்றிலே நிறைவதனால் வந்த துன்பமும் மிகுதியாகக், கல்லென்னும் ஆரவாரத்துடனே கதறிக் கொண்டி ருக்கும். அத்தகைய சிற்றூரிலே, இரவில் அவனுடன் தங்கி,*

*முதுமை வாய்த்தலையுடைய பெண்டின் தளர்ந்த காலினைப் போல வளைந்து தோன்றும் குடிலினிடத்திலே, இளைய மயிலைப் போன்றவளான, நடையினால் தளர்ந்து போன என் பேதை மகள், அவன் தன் தோளே துணையாக அணைத்து அவளைத் துயில்விக்கவும் துயில மாட்டாளே! வேட்டம் புரியும் கள்வரது, வாரினை இழுத்துக் கட்டிய கடிய கண்ணினையுடைய, ஏறுகளைக் கவர்ந்து கொள்ளுங்கால் அறையப்படுகின்ற பறையின் ஒலியினைக் கேட்டும் அஞ்சாதிருப் பாளோ? இங்ஙனம் நினைந்து நினைந்து அழுகின்ற நெஞ்சினைக் குறித்தே யான் வருந்துகின்றேன்!*

**சொற்பொருள்:** *6. விடிந்த காலத்து வெயில் எறிக்கக் குள்ளக் குடையும் சேவல் என்க. 11. பைதல் - துன்பம். 12. கடுங்கான் மறவர் - கடிய கானத்து மறவரும் ஆம். 13. எல்லி - இரவு. 14. முதுவாய் - முதுமை வாய்த்தலை உடைய. செது கால் - தளர்ந்த கால். 18. சேக்கோள் - ஏறுகோள்.*

**விளக்கம்:** 'கறவைகளின் கதறலைக் கேட்டு நடுங்காதவள் ஏறு கொள்ளும் பறையொலிக்கு நடுங்குவாள்; எம் துயரை நினைந்து கலங்காத அவள், தன் காதலனுக்குத் துயர் நேருமோ எனக் கலங்குவாள்' என்க.

## 64. உடனிலை வேட்கை!

**பாடியவர்:** ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார். **திணை:** முல்லை. **துறை:** வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாகற்குச் சொல்லியது.

*(படைத்தலைமை பூண்டு வீரர் பலருடன் தொலைவு நாடு நோக்கிச் சென்றவன், அவ்விடத்தே வினைமுடிந்ததும் வீடு திரும்பும் எண்ணம் உடையவனாகின்றான். விரையச் சென்று தன் காதலியின் துயரைத் தணிக்க வேண்டும் என்ற அவனுடைய ஆர்வ மிகுதியால், பாகனைத் தூண்டுகின்றான்.)*

**களையும் இடனாற்-பாக! உளை அணி**
**உலகுகடப் பன்ன புள்இயற் கலிமா**
**வகைஅமை வனப்பின் வள்புநீ தெரியத்,**
**தளவுப்பிணி அவிழ்ந்த தண்பதப் பெருவழி,**
**ஐதுஇலங்கு அகல்இலை நெய்கனி நோன்காழ் 5**

**வென்வேல் இளையர் வீங்குபரி முடுகச்,**
**செலவுநாம் அயர்ந்தனம் ஆயிற், பெயல**
**கடுநீர் வரித்த செந்நில மருங்கின்,**
**விடுநெறி ஈர்மணல், வாரணம் சிதரப்,**
**பாம்புஉறை புற்றத்து ஈர்ம்புறங் குத்தி, 10**

**மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு**
**உடன்நிலை வேட்கையின் மடநாகு தழீஇ,**
**ஊர்வயிற் பெயரும் பொழுதிற், சேர்புஉடன்,**
**கன்றுபயிர் குரல, மன்றுநிறை புகுதரும்**
**ஆபூண் தெண்மணி ஐதுஇயம்பு இன்இசை 15**

**புலம்புகொள் மாலை கேட்டொறும்**
**கலங்கினள் உறைவோள் கையறு நிலையே.**

பாகனே!

உலகத்தையே கடத்தல் வல்லதுபோன்ற பறவையினைப் போல, வேகமுடன் செல்லும், பிடரிமயிரணிந்த செருக்குடைய குதிரைகளைச், செலுத்தும் வகையோடு அமைந்த அழகிய கடிவாள வாரினை நீ ஆராய்ந்து கைக்கொள்ள,

செம்முல்லையின் அரும்புகள் தம் பிணிப்பு அவிழ்ந்த குளிர்ந்த செவ்வியைக் கொண்ட பெருவழியிலே, அழகியதாக

விளங்கும் அகன்ற இலையினையும், எண்ணெய் கனியப்பெற்ற வலிய தண்டினையுமுடைய, வெற்றி பொருந்திய வேலினை ஏந்திய வீரர்கள், விரைந்து செல்லும் தம் குதிரைகளையும் நம்முடன் முடுக்கி வர, நாம், வீடுதிரும்பிச் செல்லும் செலவினை விரும்பினோமானால்.

விரைந்து செல்லும் பெருமழையின் நீர், வரி வரியாக இழைத்த செம்மண் நிலப்புறங்களிலே, தேர்விடும் நெறியிலே யுள்ள ஈரமணலைக் கானங்கோழிகள் கிளறப், பாம்புகள் வாழும் புற்றின் குளிர்ந்த மேற்புறத்தைக் குத்தி, அம் மண்ணுடன் விளங்கும் கொம்புகளையுடைய தலைமையினை உடைய ஆனேறானது, எக்காலத்தும் தன்னுடன் நிற்றலை விரும்பிய, தனது இளைய பசுவினைத் தழுவிக் கொண்டதாக, ஊரினை நோக்கிவரும் மாலைப்பொழுதிலே, கறவைகள் யாவும் ஒருங்குசேர்ந்து தம் க்ன்றுகளை அழைக்கும் குரலினவாய்த், தொழுவங்களிலே நிறையுமாறு சென்று சேரும் அவ்வேளை யிலே, அப்பசுக்கள் பூண்டுள்ள தெள்ளிய மணிகள் அழகியதாக ஒலிக்கும் இனிய ஒலியினைத், தனிமையைக் கொண்டுதான் வருந்தியிருக்கும் மாலை நேரத்திலே கேட்கும் போதெல்லாம், உள்ளங் கலங்கினவளாக இருப்பவளது, செயலற்ற நிலையினைப் போக்குவதற்கு இடமாயிருக்கும்.

**சொற்பொருள்:** 2. புள்ளியற் கலிமா - பறவைகள் போலச் செல்லும் வேகத்தினையுடைய மதர்த்த குதிரை. 3. வகை - செலுத்தும் கூறுபாடு. வள்பு - கடிவாள வார். போகின்ற கடுமையான வேகத்தினால் அற்றுப் போகாத வாரினைத் தெரிக என்க. 7. அயர்தல் - விரும்புதல். 9. வாரணம் - காட்டுக்கோழி. 11. அண்ணல் - தலைமையினை யுடைய மடநாகு - மடப்பத்தையுடைய இளைய பசு. 15. தெண்மணி - தெள்ளிய மணி. ஐதியம்புதல் - நடக்க நடக்க விட்டு விட்டு ஒலித்தல்.

**விளக்கம்:** ஏறு மடநாகு தழுவிவரக் காண்பவள், தன் காதலனை எண்ணி எண்ணி வருந்துவாள் என்க, ஈர்மணல் வாரணஞ் சிதரலும், மண்ணுடைக் கோட்டதாக ஏறு விளங்கலும் கார்காலம் வந்ததெனக் காட்டும். அவன் வருவதாகக் குறித்த காலத்திலே வராததால், அவள் பெரிதும் கலங்கி நொந்தனள் என்க.

## 65. ஈரம் சேரா இயல்பு!

**பாடியவர்:** மாமூலனார். **திணை:** பாலை. **துறை:** வேறு பட்ட தலைமகட்குத் தலைமகன் உடன்போக்கு வலித்தமை தோழி கூறியது. ‘பாராட்டெடுத்தல், மடந்தப உரைத்தல்’ என்பர்

*பேராசிரியர். 'அன்னை சொல்லும் பெண்டிர் கௌவையும் தலைவரும் விழுமம்' என்று தலைவிக்குத் தோழி கூறினாள்' என்றும், 'அம்பலும் அலரும் அஞ்சிப் போக்கு உடன்பட்டது' என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். 'உடன் போக்கு நயப்பித்தது' என்பர் இளம்பூரணர்.* **சிறப்பு:** *நாடு கண் அகற்றிய உதியஞ் சேரலாதன்.*

*(களவுப் புணர்ச்சியிலே ஈடுபட்டு இருந்தனர் ஒரு காதலனும் காதலியும். அதனால் ஊரலர் அதிகமாயிற்று. அன்னையின் சொல்லும் கடுமையாயிற்று. அவள் துடிதுடித்தாள். இந்நிலையிலே, தலைவன் அவளோடு உடன்போக்கிலே செல்லப் போவதாக முடிவு செய்துவிட்டான். அந்தச் செய்தியைக் கூறித் தலைவியோடு மகிழ்கின்றாள் தோழி.)*

**உன்னங் கொள்கையொடு உளம்கரந்து உறையும்**
**அன்னை சொல்லும் உய்கம்; என்னதூஉம்**
**ஈரம்சேரா இயல்பிற் பொய்ம் மொழிச்**
**சேரிஅம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்**
**நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்** 5

**பாடிச் சென்ற பரிசிலர் போல**
**உவஇனி - வாழி, தோழி! அவரே,**
**பொம்மல் ஓதி! நம்மொடு ஓராங்குச்**
**செலவு அயர்ந்தனரால் இன்றே - மலைதொறும்**
**மால்கழை பிசைந்த கால்வாய் கூர்எரி,** 10

**மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்,**
**வான்தோய் புணரி மிசைக்கண் டாங்கு,**
**மேவரத் தோன்றும் யாஅஉயர் நனந்தலை**
**உயவல் யானை வெரிநுச்சென் றன்ன**
**கல்ஊர்பு இழிதரும் புல்சாய் சிறுநெறிக்,** 15

**காடுமீக் கூறும் கோடுஏந்து ஒருத்தல்**
**ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம், 'பணைத்தோள்,**
**நாறுஐங் கூந்தல், கொம்மை வரிமுலை,**
**நிரைஇதழ் உண்கண், மகளிர்க்கு**
**அரியவால்' என அழுங்கிய செலவே!** 20

*பொலிவுற்ற கூந்தலை உடையவளே! எம் தோழியே! நீ வாழ்வாயாக!*

*மலைதோறும் பெரிய மூங்கில்கள் ஒன்றுடன் ஒன்று உரசிக் கொள்ளும். அதனால் எழுந்த தீச்சுடர்கள், காற்று வீசுவதனால், எங்கும் மிக்க எரிபரக்கச் செய்யும். மீன் பிடிப்பவரான பரதவர்களது வளைந்த படகிலே தோன்றும் மிக்க தீச்சுடர்கள்.*

வானளாவிய கடல் அலைகளின் மீது நெருப்புக் காணப்படுவதுபோலப் பொருத்தமாகத் தோன்றும். யாமரங்கள் உயரமாக வளர்ந்துள்ள அகன்ற இடத்திலே, பாறைகளில் ஏறியும் இறங்கியும் செல்லுகின்ற, மூங்கில்கள் சாய்ந்து கிடக்கும் சிறிய நெறியானது, பட்டினியால் மெலிந்து வருந்திய யானையின் முதுகிலே நடந்து செல்வது போலத் தோன்றும். காட்டினை மேம்பாடு உடையது என்று சொல்வதற்குக் காரணமான, நிமிர்ந்த கோட்டினையுடைய களிறுகள் பாதைகளைக் காவல் பூண்டிருக்கும். அத்தகைய கடத்தற்கரிய சுரநெறிகள், மூங்கில்போன்ற தோள்களையும், மணம் நாறும் ஐவகைக் கூறுபாடமைந்த கூந்தலினையும், திரண்ட தேமலையுடைய முலையினையும், பூப்போலும் மையுண்ட கண்ணினையும் உடைய மகளிர்க்குச் செல்லுதற்கு அரியனவாகும். இங்ஙனம் கருதி, இதுவரை தாழ்த்திருந்த போக்கினை, இப்போது நம்முடன் ஒரு பெற்றியே உடன் பட்டவராக, உடன் செல்லுதலையும் அவரே விரும்பினார்.

நம் கருத்தினை உணர்ந்துகொண்ட அறிவுடன், தன் உள்ளத்துக் கருதியவற்றை மறைத்து வாழ்கின்ற அன்னையின் கடுஞ்சொல்லினின்றும் இனித் தப்புவோம்; கொஞ்சமேனும் அருள் சேராத இயல்பினையுடைய பொய்ம்மொழியே பேசும் சேரிப்பெண்டிர்களது அலரினையும் விட்டு நீங்குவோம்.

தன் நாட்டினைத் தன் வெற்றியினால் விரிவாக்கியவன் உதியஞ் சேரலாதன். அவனைப் பாடிச் செல்லும் பரிசிலர், தாம் எதிர்பார்த்ததற்கும் மேலாகப் பெற்று இன்புற்று மகிழ்வது போல, இப்பொழுது நீயும் இன்புற்று மகிழ்வாயாக!

**சொற்பொருள்:** 1-2. உன்னங் கொள்கையோடு - நம் மனக் கருத்தையறிந்த அறிவோடே, தானறிந்தவற்றைக் கரந்து சொல்லாதே செலுத்துகிற அன்னை; அவள் அறிந்தவை - களவுக்கூட்டம் பற்றிய செய்திகள். 5. நாடு கண்ணகற்றுதல் பிறர் நாடுகொண்டு அவற்றைத் தனதாக்குதல். 10. மால் - மயக்கம்.

## 66. சிறுவர்ப் பயந்த செம்மலோர்!

**பாடியவர்:** செல்லூர்க் கோசிகன் கண்ணனார்; செயலூர்க் கோசங் கண்ணனார் எனவும் கூறுவர். **திணை:** மருதம். **துறை:** பரத்தையிற் பிரிந்து தலைமகற்கு வாயிலாப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

"தானே தன் மகனை வாயில்கொண்டு புக்கானாயினும், அதனைப் பழங்கண்ணோட்டமும் நலிதரப் பொய்யே புகுந்தானென்று மெய்யாகத் துணிந்து கோடலால், அப்பெயர்த் தாயிற்று" என்பர் பேராசிரியர்.

'தோழி வாயிலாகச் சென்றுழித் தலைவி வெளிப்படக் கூறுதலும் கொள்க' என்பர், நச்சினார்க்கினியர்.

(தன்னைப் பிரிந்து பரத்தையரின் மனைநாடிச் சென்றான் தலைவன். தன் மகனைத் தெருவிலே கண்டதும், அவனை அணைத்தான். மகனோ தந்தையை விட்டகல மறுத்தான். அதனால், வீடு புகுந்தான். அந்த நிலையிலே, மகன்பாலுள்ள அன்பினால் பரத்தையுடன் செய்தற்குரிய மணத்தையும் கைவிட்டான். 'பின் அவன் மீண்டும் பரத்தை பாற் செல்லத் தோழிமூலம் தலைவன் வாயில் வேண்டத் தலைவி கூறுகிறாள்.)

**'இம்மை உலகத்து இசையொடும் விளங்கி,**
**மறுமை உலகமும் மறுஇன்று எய்துப.**
**செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர்' எனப்**
**பல்லோர் கூறிய பழமொழி எல்லாம் 5**

**வாயே ஆகுதல் வாய்த்தனம் - தோழி!**
**நிரைதார் மார்பன் நெருநல் ஒருத்தியோடு**
**வதுவை அயர்தல் வேண்டிப், புதுவதின்**
**இயன்ற அணியன், இத்தெரு இறப்போன்,**
**மாண்தொழில் மாமணி கறங்கக், கடை கழிந்து 10**

**காண்டல் விருப்பொடு தளர்புதளர்பு ஓடும்**
**பூங்கட் புதல்வனை நோக்கி, 'நெடுந்தேர்**
**தாங்குமதி, வலவ!'என்று இழிந்தனன்; தாங்காது,**
**மணிபுரை செவ்வாய் மார்பகம் சிவணப்**
**புல்லிப் பெரும! செல்இனி, அகத்து'எனக் 15**

**கொடுப்போற்கு ஒல்லான் கலுழ்தலின், 'தடுத்த**
**மாநிதிக் கிழவனும் போன்ம்'என, மகனொடு**
**தானேபுகுதந் தோனே; யான் அது**
**படுத்தனென் ஆகுதல் நாணி, இடித்து,'இவற்**
**கலக்கினன் போலும், இக்கொடியோன்' எனச்சென்று 20**

**அலைக்கும் கோலொடு குறுகத், தலைக்கொண்டு**
**இமிழ்கண் முழவின் இன்சீர் அவர்மனைப்**
**பயிர்வன போலவந்து இசைப்பவும், தவிரான்**
**கழங்குஆடு ஆயத்து அன்றுநம் அருளிய**
**பழங்கண் ணோட்டமும் நலிய,**
**அழுங்கினன் அல்லனோ, அயர்ந்ததன் மணனே! 25**

தோழியே!

பகைவரும் விரும்பும் குற்றமற்ற அழகினையுடைய சிறுவர் களைப் பெற்ற தலைமையினை உடையோர், இவ்வுலகத்தே புகழோடும் விளக்கமுறுவர்; மறுமை உலக வாழ்வினையும் குற்றமின்றி எய்துவர். இவ்வாறு சான்றோர் பலரும் கூறிய பழமொழிகள் பல. இவையெல்லாம் வாய்மையே ஆகுதலைக் கண்கூடாக யாமும் காணப்பெற்று விட்டோம். எங்ஙனமெனில்,

மலர் வரிசையாலாகிய தாரினை அணிந்த மார்பினன் நம் தலைவன். அவன், நேற்றுப் பரத்தை ஒருத்தியோடு வதுவை அயர்தலை விரும்பினான். புதுவதாக இயன்ற ஒப்பனைகளையும் செய்து கொண்டான். இத் தெருவினைக் கடந்தும் செல்லலுற்றான்.

மாட்சியுற்ற செல்லுந் தொழிலாற் சிறந்த அவனது குதிரையின் மணியானது ஒலிக்க, அதனைக் கேட்டதும், எம்வீட்டுத் தலைவாயிலைக் கடந்து சென்று, அவனைக் காண்கின்ற விருப்பத்துடன் தளர்ந்து தளர்ந்து ஓடிய, அழகிய கண்களையுடைய எம் புதல்வனை அவன் நோக்கினான்.

'வலவனே! நீண்ட தேரினை நிறுத்துக!' என்றனன். தேர் நின்றதும், அதனின்றும் இறங்கினன். சற்றும் தாழ்க்காது, புதல்வனுடைய பவளமணி போன்ற செவ்வாய் தனது மார்பகத்தே பொருந்துமாறு எடுத்துத் தழுவிக் கொண்டான். அதன்பின், 'பெருமானே, இனி வீட்டிற்குள் செல்வாயாக என விடுவிக்கவும், புதல்வன் அதற்கு இசையானாகி அழுதனன். அங்ஙனம் தன் போக்கைத் தடுத்த மகனோடு, பெருஞ் செல்வத்துக் குரியோனான குபேரனைப் போலத் தலைவனும் மிடுக்குடன் வீட்டினுள் வந்தனன்.

யான் அதனை செய்வித்தேன் ஆகுதற்கு நாணினேன். 'இக்கொடிய மகன் இடித்து இவன் கலங்கினன் போலும்' என எண்ணினேன். அடிக்குங் கோலோடு சென்று, எம் மகனை அணுகினேன். அப்போது அவன், மகனைத் தன்பால் அணைத்துக் கொண்டான்.

வதுவை நிகழும் அப்பரத்தையர் மனையிலே, ஒலிக்கும் கண்ணினையுடைய முழவின் இனிய ஓசையானது, அவனை அழைப்பதுபோலவே வந்து இசைத்தது. அதனாலும் அவன் தன் மகனை விட்டுவிடவில்லை. முன்பு ஒருநாள், கழங்காடும் ஆயத்தாரிடையே நமக்கு அருள் செய்த பழைய கண்ணோட்டமும் அழியுமாறு, அன்று தொடங்கிய தன் புதுமணத்தையும் அவன் நிறுத்திவிட்டனன் அல்லனோ?

**சொற்பொருள்:** வாய்த்தனம் - வாய்மையெனக் கண்டனம். *13. தாங்காது - தாமதியாது. 16 - 18. தடுத்த மாநிதிக் கிழவனும்*

போலும் எனக் கண்டார் சொல்லும்படி. 18. யான் அதனைச் செய்வித்தேன். தான் மகனை வெளியே செல்ல விடுத்த செயல்.

## 67. நாணுடை மறவர்!

**பாடியவர்:** நோய்ப்பாடியார், நொய்ப்பாடியார் எனவும் உரைப்பர். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரிந்தவழி வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

'மண்டிலத்து அருமை தலைவன் கூறக் கேட்ட தோழி கூறியது' என்பார் நச்சினார்க்கினியர்.

(இன்பத்தைத் துறந்து துன்பத்தை நாடிச் செல்வபவர் எவருமே இலர். ஒரு தலைவன், தன் காதலியின் இன்பத் தைத் துறந்து, துன்பம் விளைவிக்கும் பாலை வழியூடும் பொருள் கருதிச் சென்றான். அதனை எண்ணி எ்ணணிக் கலங்குகிறாள் அவள். தோழியிடம் அவள் கூறுவது இது.)

**யான்எவன் செய்கோ? தோழி! பொறிவரி**
**வானம் வாழ்த்தி பாடவும், அருளாது**
**உறைதுறந்து எழிலி நீங்கலிற், பறைபுஉடன்,**
**மரம்புல் லென்ற முரம்புஉயர் நனந்தலை:**
**அரம்போழ் நுதிய வாளி அம்பின்,** 5

**நிரம்பா நோக்கின்; நிரயம் கொண்மார்,**
**நெல்லி நீளிடை எல்லி மண்டி,**
**நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்**
**பெயரும் பீடும் எழுதி யதர்தொறும்**
**பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்** 10

**வேல்ஊன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்**
**மொழிபெயர் தேஎம் தருமார், மன்னர்**
**கழிப்பிணிக் கறைத்தோல் நிரைகண் டன்ன**
**உவல்இடி பதுக்கை ஆள்உகு பறந்தலை,**
**'உருஇல் பேஎய் ஊராத் தேரோடு** 15

**நிலம்படு மின்மினி போலப் பலஉடன்**
**இலங்குபரல் இமைக்கும்' என்ப - நம்**
**நலம்துறந்து உறைநர் சென்ற ஆறே!**

**தோழி!**

நமது இன்பத்தைத் துறந்து, நம்மைக் கைவிட்டுப் பிரிந்து போயிருப்பவர் நம் தலைவர். அவர் சென்ற நெறியானது

"பொரிகளும் வரிகளும் உடைய வானம்பாடிப்புள் வாழ்த்திப் பாடும். அங்ஙனம் பாடியும் அதற்கு அருள் செய்யாது,

துளி பெய்தலைத் துறந்து, வன்கண்மையுடன் மேகம் நீங்கும். அதனால், தம் இலைகள் யாவும் கெட்டு ஒழிதலின், மரங்கள் பொலிவு அற்றிருக்கும். அரத்தினால் போழ்ந்து அராவப்பட்ட முனையைக் கொண்ட பற்களையுடைய அம்பினையும், கண்களை இடுக்கிக் குறிபார்க்கும் நோக்கினையும் உடையவர் களாகக், கற்குவியல்கள் உயர்ந்துள்ள அகன்ற இடமாகிய, நெல்லி மரங்களையுடைய நீண்ட இடங்களிலே, இருட்டு வேளையிலே தம் நிரைகளைக் கவர்ந்து சென்ற கள்வர்களிட மிருந்து அவற்றை மீட்பதற்காக வேண்டி, விரையச் சென்று, அவருடன் போரினைச் செய்து வென்று பட்டவர்கள், மானமிகுந்த வீர மறவர்களுள் சிலர்.

அவர்களுடைய பெயர்களையும் சிறப்புக்களையும் பொறித்து, நெறிதோறும் மயிற்பீலி சூட்டிய நடுகற்களானவை விளங்கும். ஊன்றிய வேல்களையும், சார்த்திய பலகைகளையும் உடையனவாக அந்நடுகற்கள் போர்முனை போலக் காணப்படும். வேற்றுமொழி வழங்கும் தேயத்தைக் கொள்வதனை விரும்பிச்செல்லும் மன்னர்களது, கழியாற் பிணிக்கப்பட்ட கரிய பரிசையின் நிரையினைக் கண்டாற் போன்று, மரித்தவர்களை இட்டுத் தழைகளால் மூடிய கற்குவியல்கள் விளங்கும். அத்தகைய பாழிடத்தே, உருவற்றதும் ஊர்ந்திடாததுமான பேய்த்தேருடன், நிலத்திலே பொருந்திய மின்மினிப் புழுவைப்போல, "எங்கும் விளங்கும் பரற்கற்கள் பலவும் ஒளிவிடும்" என்பர்.

யான் என்ன செய்வேனோ? (அவர் அவ்வழிச் சென்றனரே?' எனக் கலங்குகிறாள் தலைமகள்.)

**சொற்பொருள்:** 2. வானம் வாழ்த்தி - வானம்பாடிப்புள். 5. போழ்தல் - அராவுதல். வாளியம்பு - எயிற்றம்பு, 6. நிரம்பா நோக்கு - கண்ணிடுக்கிக் குறிபார்க்கும் பார்வை. நிரையங் கொண்மார் - நரகம் புகுவாரும் ஆம். 13. கழியாற் பிணிக்கப்பட்ட கருங்கடகு; மன்னர் கடகுக் காரரை அழைத்துப் படை காண்டல். 14. உவலிடு பதுக்கை கருகினவை கருங்கடகிற்கு உவமை. ஆளுதல் - ஆட்படுதல். 15. உருவில் பேய் - பேய்த் தேர்.

## 68. வருவாராயின் பருவம் இது!

**பாடியவர்:** ஊட்டியார். **திணை:** குறிஞ்சி. **துறை:** தலைமகன் இரவுக்குறி வந்தமையறிந்த தோழி, தலைமகட்குச் சொல்லியது.

'இது, 'தாயது துயிலுணர்ந்து தலைவன் வந்தமை, தோழி தலைவிக்குக் கூறியது' என்பர், நச்சினார்க்கினியர்.

*(இரவுக் குறியீட்டின்கண் ஒரு நாள்; தலைவன் வந்திருக்கின்றான். தலைவி போகத் துடிக்கிறாள். தாய் உறங்கி விட்டனளா என்று தோழி அறிந்துவந்து, அவள் உறங்கியதாகவும், அதனால் செல்லலாம் எனவும் கூறுகிறாள். களவு வாழ்விலே நிகழுகின்ற ஒரு சுவையான பகுதி இது.)*

**'அன்னாய்!வாழி, வேண்டு அன்னை! நம்படப்பைத்**
**தண்அயத்து அமன்ற கூதளம் குழைய,**
**இன்இசை அருவிப் பாடும் என்னதூஉம்**
**கேட்டியோ?வாழி, வேண்டு அன்னை! நம்படப்பை**
**ஊட்டி யன்ன ஒண்தளிர்ச் செயலை** 5

**ஓங்குசினைத் தொடுத்த ஊசல், பாம்புஎன,**
**முழுமுதல் துமிய உரும்எறிந் தன்றே;**
**பின்னும் கேட்டியோ?' எனவும், அஃது அறியாள்,**
**அன்னையும் கனைதுயில் மடிந்தனள்; அதன்தலை**
**மன்உயிர் மடிந்தன்றால் பொழுதே; காதலர்** 10

**வருவர் ஆயின், பருவம்இது' எனச்**
**சுடர்ந்துஇலங்கு எல்வளை நெகிழ்ந்த நம்வயின்**
**படர்ந்த உள்ளம் பழுதுஅன் றாக,**
**வந்தனர் - வாழி, தோழி! - அந்தரத்து**
**இமிழ்பெயல் தலைஇய இனப்பல் கொண்மூத்** 15

**தவிர்வுஇல் வெள்ளம் தலைத்தலை சிறப்பக்**
**கன்றுகால் ஒய்யும் கடுஞ்சுழி நீத்தம்**
**புன்தலை மடப்பிடிப் பூசல் பலஉடன்**
**வெண்கோட்டு யானை விளிபடத் துழவும்**
**அகல்வாய்ப் பாந்தட் படாஅர்ப்** 20

**பகலும் அஞ்சும் பனிக்கடுஞ் சுரனே.**

"அன்னையே! நீ வாழ்வாயாக! நான் கூறுவதனை விருப்பமுடன் கேட்பாயாக: நம் தோட்டத்திலேயுள்ள குளிர்ந்த பள்ளத்திலே நிறைந்திருக்கும் கூதளஞ் செடியின் தழைகளின் கண்ணே, அவை குழையுமாறு வீழ்கின்ற, இன்னிசையான அருவியொலியினைச் சிறிதேனும் நீ கேட்டனையோ?

பின்னரும்,

அன்னாய், நீ வாழ்க! நான் கூறுவதனைக் கேட்பாயாக; நம் தோட்டத்திலுள்ள, அரக்கு ஊட்டினாற் போலும் ஒள்ளிய தளிரினையுடைய அசோகினது ஓங்கிய கிளையிலே கட்டிய ஊசற்கயிற்றினைப் பாம்பு எனக் கருதி, அம்மரத்தின் பெரிய அடியும் துணிபடுமாறு இடி விழுந்தது; அதனையும் நீ கேட்டாயோ?"

என்றெல்லாம் நான் கூறவும், நம் அன்னையானவள் அதனைக் கேட்டறியாளாகப் பெருந்தூக்கத்திலேயே அழுந்தி யுள்ளனள். அதன் மேலும், ஏனைய உயிர்களும் அயர்ந்து உறங்கும் பொழுதாகவும் இது உள்ளது. தோழி! நீ வாழ்வாயாக!

'நம் காதலர் வருவாராயின், அதற்கு ஏற்ற பருவம் இதுவே யாகும், என, விட்டுவிட்டு ஒளிவிளங்கும் ஒளியுடையவளை கழன்றிடும் நம்மிடத்துப் படர்ந்தது நம்முடைய உள்ளமும். அஃது' பழுதில்லாததாக,

வானிடத்தே இடிமுழக்குடன் பெய்தலைச் செய்தன மேகக்கூட்டங்கள். நீங்குதல் இல்லாத வெள்ளமானது இடந்தோறும் மிகுந்தது. யானைக் கன்றின் கால்களைத் தளரச் செய்து இழுத்துச் செல்லும் கடுஞ்சுழிகளைக் கொண்டது கானாற்று வெள்ளம். அதனால், மெல்லிய தலையினையுடைய இளைய பெண் யானைகளின் ஆர வாரங்கள் பலவாகும். அத்துடன், வெள்ளிய கொம்புகளையுடைய களிறுகள் அவற்றை அழைத்து ஒலித்துக் கொண்டிருக்கும். இவை ஒருசேர ஒலித்துக் கொண்டிருப்பதும், அகன்ற வாயினையுடைய பாம்புகள் செறிந்த செடிகளையுடைய புதர்கள் நிரம்பியதும் ஆகிய, பகற்பொழுதினும் அஞ்சப்படும் மிக்க நடுக்கத்தினைச் செய்யும் கடுமையான சுரநெறியிலே அவரும் நடந்து, கடந்து, நம்பால் வந்துள்ளனர், காண்பாயாக!

**சொற்பொருள்:** 3. என்னதும் - ஏதேனும். 5. ஊட்டுதல் - அரக்கு ஊட்டுதல். 7. முதல் - செயலையின் முதல். 11. பருவம் இது - பொழுது 'இது. தலைத்தலை சிறப்ப - மென்மேலும் மிக. 20. பாந்தட் படார் - பாம்புச் செடியுமாம்.

**உள்ளுறை:** 'யானைகளும் கன்று காரணமாகப் பிடிகள் வருந்திய பின்னரே குரல் எடுக்க முயன்றாற்போல, அவரும் அலரானும் வழியது அருமையானும் யாமும் எம் நலனும் அழிந்த பின்னரே வரைய முயலுமல்லது, முன்பே முயலாரோ?' என்க.

## 69. நீடலர் வாழி தோழி!

**பாடியவர்:** உமட்டூர்க்கிழார் மகனார் பரங்கொற்றனார். உருஉடூர்க்கிழார் மகனார் பரங்கொற்றனார் என்பதும் பாடம். **திணை:** பாலை. **துறை:** 'பொருள்வயிற் பிரிந்து நீட்டித்தான் தலைமகன்' எனக் கவன்ற தலைமகளுக்கு, 'வருவர்!' என்பதுபடச் சொல்லித் தோழி ஆற்றுவித்தது. **சிறப்பு:** மோரியர் மலையின்கண் தேர் செல்லும் பாதை அமைத்தல்; ஆயின் கானத்துச் சிறப்பு.

*(தோழி! நின் மேனியின் வாட்டங்களை நோக்கி நீ அழல் வேண்டாம். ஈதல் இன்பம் கருதி வரைகடந்து தொலைநாடு சென்றவர் அவர். நின்னை மறவார். விரைய வருவர்; என்று தலைவியைத் தேற்ற முயலுகிறாள் தோழி.)*

**ஆய்நலம் தொலைந்த மேனியும், மாமலர்த்**
**தகை வனப்புஇழந்த கண்ணும், வகைஇல**
**வண்ணம் வாடிய வரியும் நோக்கி,**
**ஆழல் ஆன்றிசின் நீயே; உரிதினின்**
**ஈதல் இன்பம் வெஃகி, மேவரச் 5**

**செய்பொருள் திறவர் ஆகிப், புல்இலைப்**
**பராரை நெல்லி அம்புளித் திரள்காய்**
**கான மடமரைக் கணநிரை கவரும்**
**வேனில் அத்தம் என்னாது, ஏமுற்று,**
**விண்பொரு நெடுங்குடை இயல்தேர் மோரியர் 10**

**பொன்புனை திகிரி திரிதரக் குறைத்த**
**அறைஇறந்து அகன்றனர் ஆயினும், எனையதூஉம்**
**நீடலர் - வாழி, தோழி! - ஆடுஇயல்**
**மடமயில் ஒழித்த பீலிவார்ந்து, தம்**
**சிலைமாண் வல்வில் சுற்றிப், பலமாண் 15**

**அம்புடைக் கையர் அரண்பல நூறி,**
**நன்கலம் தரூஉம் வயவர் பெருமகன்**
**சுடர்மணிப் பெரும்பூண் ஆஅய் கானத்துத்**
**தலைநாள் அலரின் நாறும்நின்**
**அலர்முலை ஆகத்து இன்துயில் மறந்தே. 20**

ஆராயும் அழகு தொலைந்துபோன நின் மேனியினையும், கருமலர் போன்ற வனப்பினை இழந்த நின் கண்ணினையும், வகையற்ற வண்ணம் வாடிப்போன நின் தேமல்களையும் நோக்கி நோக்கி, நீ துயரத்திலே ஆழாதிருப்பாயாக. தோழியே! நீ வாழ்வாயாக!

ஈதலால் வரும் இன்பம் தமக்கும் உரிமையாவதை விரும்பினவராக, அது கைகூடி வருவதற்காகச் செய்யும் பொருள்மேற் சென்றவராயினர் நம் காதலர்.

'சிறு இலையினையும், பருத்த அடியினையும் உடையது நெல்லி மரம். உதிர்ந்து விழும் அதன் காய்களைக் கானத்து மரைமான்களின் இளைய கூட்டங்கள் தின்னும். அத்தகைய வெம்மைமிக்க நெறி அது' என எண்ணாதும், அவர் மயக்க முற்றனர்.

வானளாவிய நெடுமலைகளினும் தடையின்றிச் செல்லும் வலிய தேர்களையுடையவர் மோரியர். அவர்கள், தங்களுடைய பொன்னாற் புனையப்பெற்ற தேருருள்கள் தடையின்றிச் செல்லுதற்குக் குன்றங்களை வெட்டிப் பாதையமைத்தனர். அந்தப் பாதைகளையுடைய மலைகளையும் அவர் தேரூர்ந்து கடந்து சென்றனர். ஆயினும்,

ஆடும் இயல்பினை உடைய இளைய மயில்கள் கழித்துப் போட்ட பீலிகளை வகிர்ந்து, தமது ஒலிமுழங்கும் வலிய வில்லிலே சுற்றிக் கொண்டவர்; மாட்சியுற்ற பலவான அம்புகளை உடைய கையினர்; பகைவரின் அரண்கள் பலவற்றை அழித்தவர்; ஆங்குக் கொண்ட நல்ல அணிகலன்கள் பலவற்றையும் கொண்டு தம் மன்னனுக்குத் தருபவர்; வீரர்கள் பலர். அவர்களின் பெருமான், சுடரும் மணிகள் பதித்த பெரும்பூண் அணிந்த ஆய் என்பான். அவனது காட்டிலே, அன்றலர்ந்த மலரென மணக்கும் நின்னுடைய பரந்த முலையினையுடைய மார்பினிடத்தே கிடந்து துயிலும் இனிய துயிலினை அவர் மறந்து, சிறிதும் தாழ்த்திரார். (விரைவிலே வருவார் என்பது தேற்றம்.)

**சொற்பொருள்:** ஏமுற்று - மயக்கமுற்று. 4. ஆன்றிசின் - அமைக. 15. சிலை - ஒரு மரமும் ஆம்.

**விளக்கம்:** 'ஈத்து உவத்தலால் வரும் இன்பம் நாடி அத்துணை இடையூறுகளையும் பொருட்படுத்தாது சென்ற அவர், நின் நலன் அழியுமாறு கைவிடார்' என்பது கருத்து. மோரியர் மோகூர்ப் பழையனோடு போரிடச் சென்றபோது, மலையிலே வெட்டி வழியமைத்துச் சென்றனர் என்பர். மார்பின் மணம் மேனியின் நறுமணம். மோரியரின் தேர்களே செல்லக்கூடாத மலைகளையும் இவர் கடந்தனர் என்பது, பொருள் முயற்சியிலே இவர் கொண்ட பேரார்வத்தைக் காட்டுவதாம். ஆஅய் கானம் - பொதியத்தைச் சார்ந்த காடு; சண்பகமலர் இங்கே சிறப்பு.

## 70. இராமக் கவித்த ஆலம்

**பாடியவர்:** மதுரைத் தமிழ்க் கூத்தனார் கடுவன் மள்ளனார். **திணை:** நெய்தல். **துறை:** தலைமகன் வரைவு மலிந்தமை தோழி தலைமகட்குச் சொல்லியது. **சிறப்பு:** பாண்டியர்; இராமன் கதை.

(களவுக்காலத்தே எத்துணைத் தடை நேரினும் ஆர்வமுடன் வந்தவன் காதலன். அதனால், அலர் மிகுந்தது. அவன் மணம் வரைந்த பின்னரே, ஊர் அலரவிந்து அமைதியுற்றது. அதனைத் தோழி தலைவியிடம் வந்து கூறுகிறாள்.)

**கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென**
**இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்**
**குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டி,**
**கொழுங்கண் அயிலை பகுக்கும் துறைவன்**
**நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே** 5

**அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றப்,**
**பலரும்ஆங்கு அறிந்தனர் மன்னே; இனியே**
**வதுவை கூடிய பின்றைப், புதுவது**
**பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்**
**கானல்அம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்** 10

**பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்**
**விழவுஅணி மகளிர் தழைஅணிக் கூட்டும்**
**வென்வேற் கவுரியர் தொல்முது கோடி**
**முழங்குஇரும் பௌவம் இரங்கும் முன்துறை,**
**வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த** 15

**பல்வீழ் ஆலம் போல,**
**ஒலிஅவிந் தன்றுஇவ், அழுங்கல் ஊரே.**

வளைந்த படகினை உடையவர் பரதவர். அவர்க்கு மீன்வேட்டை நன்கு வாய்த்தது. பெரிய புலால் நாற்றங் கமழும் சிறிய குடிமக்களையுடைய தம்பாக்கத்திலே குறுகிய கண்களையுடைய அவ்வலையின் பயனைப் பாராட்டிப் பேசினார்கள். கொழுவிய கண்களையுடைய அயிலை மீனை யாவர்க்கும் பகுத்துக் கொண்டு மகிழ்ந்தனர். அத்தகைய கடற்கரைப் பகுதியின் தலைவன் நம் காதலன்.

அவன், நம்முடன் சேர்ந்த காதல் உறவானது, முன்னர் அலர் கூறுதலே வாயின்பயனாக உடைய பெண்டிர்கள் அம்பலாக்கித் தூற்ற, அவ்விடத்தே பலரும் அறிந்ததொன்றாகவும் ஆகியது. அதுவும், இப்பொழுது மணம் கூடிய பின்னர், கழிந்தது.

புலிநகக் கொன்றையின் புதிய பொன்னிறப் பூக்களுடன் புன்னையின் பூக்களும் உதிர்ந்து, தரையிலே ஓவியம் வரைந்தாற் போல அழகுடன் கிடக்கும், கடற்கரைச் சோலையினை யுடையன அழகிய பெருந்துறைகள். கழிகளிலுள்ள கரிய நீரிலே, பசிய இலைகளையுடையதாகித் தழைத்த திரண்ட தண்டினை யுடைய நெய்தற் பூக்களை விழாவிற்கு ஒப்பனை செய்யும் மகளிர் தங்கள் தழையுடைக்கு அழகு செய்யச் சேர்த்துக் கொண்டு மிருப்பர்.

வெற்றி வேலினையுடைய பாண்டியரது, மிக்க பழமை யினையுடைய திருவணைக்கரையின் அருகிலே, முழங்கும்

பெருங்கடல் ஒலிக்கின்ற துறைமுற்றத்திலே, போரிலே வெற்றிபெறும் ஆற்றலுடைய இராமன், இலங்கையிற் படையெடுத்தல் பற்றிய மறைகளை ஆராயும் பொருட்டாகப் புள்ளொலிகள் இல்லையாகச் செய்த, பல விழுதுகளைக் கொண்ட ஆலமரம்போல, ஆரவாரமுடைய அவ்வூரும் ஒலியடங்கப் பெற்றது. (ஆனால், அவர்தான் வரவில்லை என்க.)

**சொற்பொருள்:** 9. வரிக்கும் - சித்திரம் எழுதினாற் போல உதிர்ந்து கிடந்து அழகுசெய்யும். 13. கவுரியர் - பாண்டியர். கோடி - திருவணைக்கரை. 15. மறை - அவ்விடத்துத் தாமும் பரிகரமும் விசாரிக்கப் புக்க மறை.

**விளக்கம்:** பரதவர் தம் முயற்சியானே வேட்டை வாய்த்ததாகினும், குறுங்கண் வலையைப் பாராட்டுவர்; அவரும் தம் முயற்சியினாலே வதுவை கூடிற்றாயினும், துணை நின்ற என்னைக் கொண்டாடினர். அயிலையைக் கடலினின்றும் நீக்கி அனைவருக்கும் பகுத்துக் கொடுத்து மகிழ்வித்தாற் போல, நின்னை இச் சுற்றத்தினின்றுங் கொண்டு போய்த் தம்மூரின்கண்ணே நின்னைக் கொண்டு விருந்து புறந்தந்து தம்மூரை எல்லாம் மகிழ்விப்பர்.

'நெய்தற் பூவானது, ஞாழலும் புன்னையும் கரையிலே நின்று தரையை உதிர்த்துப் புறஞ்சூழ, நீரிடத்துத் தன்னை விடாதே அலைகள் சூழ, நடுவே நின்று செருக்கி வளர்ந்து, விழவணி மகளிர் அல்குலுக்குத் தழையாய்ப் பயன்பட்டாற் போல, இருமுது குரவர் புறங்காப்ப, ஆயவெள்ளத்தார் மெய்யை விடாதே சூழ்ந்து புறங்காப்ப, இப்படிச் செல்வத்தால் வளர்ந்த நீயும், பெருமானுடைய இல்லறமாகிய வாழ்விற்குத் துணையாகப் போகின்றாயன்றோ' என்று வியந்து கூறியவாறும் கண்டு கொள்க.

இராமன், ஆலமரத்தே ஒலிசெய்திருந்த பறவைகளின் ஒலியை அவித்த செய்தி இதன்கண் கூறப்பட்டுள்ளது.

## 71. பழங்கண் மாலை!

**பாடியவர்:** அந்தி இளங்கீரனார்; அந்தில் இளங்கீரனார் எனவும் பாடம். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரிந்தவிடத்து ஆற்றாளாய தலைமகட்குத் தோழி சொல்லியது.

'சாக்காட்டிற்கு' உதாரணமாகக் காட்டுவர் நச்சினார்க்கினியர். 'கிழக்கிடு பொருளிற்கு' எடுத்துக் காட்டுவர் பேராசிரியர்.

(பொருள் தேடிவரப் பிரிந்தனன் தலைவன். அவன் குறித்த காலமும் வந்தது. அவனோ திரும்பி வரவில்லை. அந் நிலையிலே, ஒரு மாலைவேளையிலே, தலைவி படும் வேதனை மிகுதியைக் காட்டுவது இந்தப் பாடல்.)

**நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு, குறைந்தோர்**
**பயன்இன் மையின் பற்றுவிட்டு, ஒரூஉம்**
**நயன்இல் மாக்கள் போல, வண்டினம்**
**சுனைப்பூ நீத்துச், சினைப்பூப் படர,**
**மைஇல் மான்இனம் மருளப், பையென 5**

**வெந்துஆறு பொன்னின் அந்தி பூப்ப,**
**ஐயறிவு அகற்றும் கையறு படரோடு**
**அகல்இரு வானம் அம்மஞ்சு ஈனப்,**
**பகல்ஆற்றுப் படுத்த பழங்கண் மாலை,**
**காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக, 10**

**ஆர்அஞர் உறுநர் அருநிறம் சுட்டிச்**
**கூர்எஃது எறிஞரின் அலைத்தல் ஆனாது.**
**எள்அற இயற்றிய அழல்காண் மண்டிலத்து**
**உள்ஊது ஆவியின் பைப்பய நுணுகி,**
**மதுகை மாய்தல் வேண்டும் - பெரிதுஅழிந்து, 15**

**இதுகொல் - வாழி, தோழி! என்உயிர்**
**விலங்குவெங் கடுவளி எடுப்பத்**
**துளங்குமரப் புள்ளின் துறக்கும் பொழுதே!**

செல்வம் நிறைந்தவர்களை ஆராய்ந்து அடையும் உள்ளத்தினால், செல்வங் குறைந்தோர் பயனற்றவராதலினால் அவர்பாலிருந்த பற்றினையும் கைவிட்டு, அவரை விட்டும் நீங்குவர் நடுநிலைமை இல்லாத மாக்கள். அவர்களைப் போல, வண்டினம் சுனைப்பூக்களைக் கைவிட்டு விட்டு, மரக்கிளை களிலேயுள்ள புதுப்பூக்களை அடைந்தன.

குற்றமற்ற மானினங்கள் மருண்டன. உலைக்களத்திலே நன்றாக வெந்து, பின் மெல்லமெல்ல ஆறிக் கொண்டிருக்கும் பொன்னின் நிறம் போல, அந்திவானமும் விளங்கியது. வியக்கத் தக்க அறிவினை அகற்றும் செயலற்ற துன்பத்துடன், அழகிய மேகங்கள் யாவும் அகன்ற பெரிய வானம், மீண்டும் அவற்றைத் தரவும், ஞாயிற்றைப் போக்கிய துன்பந்தரும் மாலைக்காலமும் வந்தது.

காதலரைப் பிரிந்த தனிமையினால் நாமும் நோகின்றோம். மிக்க புண்பட்டு வருந்தும் ஒருவரது மார்பினைக் குறித்துக் கூர்மையான வேலினை எறிவார்போல, இக் காலமும், நம்மை வருத்துதலை ஒழியாது துன்புறுத்துகின்றது.

இகழ்ச்சி இல்லாதவாறு இயற்றிய, உருவங் காணும் கண்ணாடியின் உட்பக்கத்தே ஊதிய ஆவியானது, முன் பரந்து பின் சிறுகச்சிறுகக் குறுகினாற்போல, என் வலிமையும் சிறிதுசிறிதாகக் குறைந்து வந்து, முற்றும் மாய்தலை வேண்டியதாகவும் நின்றது.

மிகக் கடுமையான சூறாவளியானது அலைத்தலால் அசையும் மரத்திலுள்ள பறவையினைப் போல, மிகவும் செயலழிந்து என் உயிர் என் உடலைக் கைவிட்டுப் போகும் காலமும் இதுதான் போலும்! தோழி! நீ வாழ்க!

**சொற்பொருள்:** 1. நிறைந்தோர் - செல்வம் உடையோர். 6. அந்தி - பூவுமாம். 7. ஐயறிவு - கூரறிவுமாம். 7-8. வானம் பிரிந்திருப்பவர்க்கு நோவையும் மேகத்தையும் தர. 11. சுட்டி - கருதி. 18. புட்போல, உயிர் பறந்து போம்பொழுது இதுவோ தோழி என்க.

**விளக்கம்:** 'சுனைப்பூவினை மறந்து கிளைப்பூவினை நாடும் வண்டினம் போல இல்லத்து எம்மை மறந்து பொருள்வயின் மயங்கினார்' என்க. சூறல் மரத்தைக் கலைக்கப் புட்பரப்பதுபோலத், தனிமை அவளை வருத்த, அவள் உடற்கூட்டிலேயுள்ள உயிரும் மறையும் என்க.

## 72. கொடியனும் அல்லன்!

**பாடியவர்:** எருமை வெளியனார் மகனார் கடலனார்; மோகமானக் கடலார் என வேறுபாடம். **திணை:** குறிஞ்சி. **துறை:** தலைமகன் இரவுக்குறிக்கண் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது; தோழி தலைமகட்குச் சொல்லிய தூஉமாம்.

'அவனளி சிறப்பினும்' என்ற துறைக்கு மேற்கோள் காட்டுவர் நச்சினார்க்கினியர். 'வந்தோன்' அவனளி சிறத்தல், 'தவறுடையேன்' தன்வயின் உரிமை, 'கொடியனும் அல்லன்' அவன்வயிற் பரத்தமை எனவும் அவர் கூறுவர்.

(இரவுக் குறியீட்டிலே தலைமகன் சிறைப்புறத்தானாக, இரவுக்குறியின் ஏதங்கருதிக் கலங்கிய தோழியும் தலைவியும் இவ்வாறு தலைவன் கேட்கப் பேசுகின்றனர். அவன், இதனை விடுத்து விரைவிலே மணந்து கொள்ள வேண்டும் என்பது அவர்கள் கருத்து.)

**இருள்கிழிப் பதுபோல் மின்னி, வானம்**
**துளிதலைக் கொண்ட நளிபெயல் நடுநாள்,**
**மின்னி மொய்த்த முரவுவாய்ப் புற்றம்**

பொன்எறி பிதிரிற் சுடர வாங்கிக்,
குரும்பி, கெண்டும் பெருங்கை ஏற்றை 5

இரும்புசெய் கொல்எனத் தோன்றும் ஆங்கண்,
ஆறே அருமர பினவே; யாறே
சுட்டுநர்ப் பனிக்கும் சூருடை முதலைய;
கழைமாய் நீத்தம் கல்பொருது இரங்க,
'அஞ்சுவம் தமியம்' என்னாது, மஞ்சு சுமந்து, 10

ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்,
ஈர்உயிர்ப் பிணவின் வயவுப்பசி களைஇய,
இருங்களிறு அட்ட பெருஞ்சின உழுவை
நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த
மேய்மணி விளக்கின் புலர ஈர்க்கும் 15

வாள்நடந் தன்ன வழக்குஅருங் கவலை,
உள்ளுநர் உட்கும் கல்அடர்ச் சிறுநெறி,
அருள்புரி நெஞ்சமொடு எஃகு துணையாக
வந்தோன் கொடியனும் அல்லன்; தந்த
நீதவறு உடையையும் அல்லை; நின்வயின் 20

ஆனா அரும்படர் செய்த
யானே, தோழி, தவறுஉடை யேனே!

இருளாகிய திரையைக் கிழிப்பதுபோல, மேகங்கள் மின்னலிட்டு மழைத்துளிகளைத் தம்மிடத்தே கொண்டு விளங்கும் பெயலையுடைய அக் கார்காலத்து நள்ளிரவிலே, மின்மினிகள் மொய்த்திருக்கும் முரிந்த இடத்தினையுடைய ஒரு புற்று; இரும்பினைக் காய்ச்சி அடிக்கும் போது சிதறும் பொறிகள்போல அம்மின்மினிகள் ஒளிவிடப் பெயர்த்து அப்புற்றிலே புற்றாஞ் சோற்றினைப் பெரிய கையினையுடைய ஆண்கரடி தோண்டி எடுக்கும். இரும்பு வேலை செய்யும் கொல்லனைப்போல அப்போது அது தோன்றும். அவ்விடமானது செல்லுதற்கும் அரிய தன்மையினை உடையதே.

கான்யாறோ, ஓடக்கோலும் மறையும் பெருவெள்ளம் கற்களிலே மோதி ஒலிக்கக், கருதுவோரையும் நடுநடுங்கச் செய்யும் அச்சமுடைய முதலைகளை உடையனவாகவும் விளங்கும்.

'யாமோ தமியம்; இந் நெறிகளினூடே செல்லுதற்கு அஞ்சுவோம்' என்றும் எண்ணான். மேகத்தினைத் தலைக் கொண்டு, அசையும் மூங்கில்கள் ஒலிக்கும் தெய்வங்களையுடைய பக்க மலைகளிலே, கருவுற்றிருக்கும் பெண்புலியின் வேட்கைமிக்க பசியினை நீக்கப் பெரிய ஆண்பன்றியினைக்

கொன்ற, மிக்க சினம் பொருந்திய ஆண்புலியானது, அச்சந்தரும் நல்ல பாம்பு மேய்தற்குச் செல்ல ஒளியுண்டாக உமிழ்ந்து வைத்த மணியாகிய விளக்கொளியிலே, உதிரம் தோய்ந்து காய இழுத்துச் செல்லும்; கூர்மையான கற்களையுடைமையால் வாள்முனையிலே நடப்பதைப் போலவும் விளங்கும்; செல்லுதற்கு அரிய வழியாகிய, நினைப்பவரும் நடுங்கும் கற்செறிவுடைய குறுகலான அக்காட்டு வழியிலே,

நமக்கு அருள் புரியவேண்டும் என்ற உள்ளத்துடன் வேலே துணையாக வந்த தலைவன் கொடியவனும் அல்லன். அவனைக் குறியிடத்தே கொணர்ந்து தந்த நீ தவறுடையையும் அல்லை. நின்பால் நீங்காத அரிய துன்பத்தினை ஆக்கிய யானே தவறுடையவள் ஆவேன்!

**சொற்பொருள்:** 4. சுடர - மின்மினி ஒளிவிட. 8. சூர் - பயம். 9. இரங்க - ஒலிப்ப. 12. வயவுப்பசி - வேட்கைப்பசி. மேய்மணி - மேய்தல் காரணமாக உமிழ்ந்த மணி. 16. கவலை - அருவழி. 19. அருள் - நம்மேல் அருள்.

**உள்ளுறை:** புலியானது தன் துணையின் பசியைப் போக்குவதற்குப் பிறவற்றுக்குத் தீங்கு செய்யும்; பாம்பும் அதற்குத் துணையாகும். அதுபோல, நீயும் குடியோம்பற் செய்தி காரணமாக வரைவொடு வரின், கடுஞ்சொற் சொல்லுகின்ற பலரும், இன்சொற் சொல்லி வரைவுடம் படுவர் என்க.

## 73. காணிய வம்மோ!

**பாடியவர்:** எருமை வெளியனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பொருள்வயிற் பிரிகின்றான், குறித்த பருவ வரவுகண்டு அழிந்த தலைமகட்குத் தோழி சொல்லியது.

'பிறன்கண் தோன்றிய இழவுபற்றி அவலம் பிறந்ததாம்' என்பர் பேராசிரியர்.

(தலைவியின் காதலனைப் போலவே அவள் தோழியின் காதலனும் பிரிந்தான். குறித்த பருவம் வந்தும் அவர்கள் வரவில்லை. தலைவி தானும் வருந்தினாள்; தன் தோழியின் வருத்தம் கண்டும் கலங்கினாள். அவ்வேளையிலே தோழி இங்ஙனம் கூறுகிறாள்.)

**பின்னொடு முடித்த மண்ணா முச்சி**
**நெய்கனி வீழ்குழல் அகப்படத் தைஇ;**
**வெருகுஇருள் நோக்கி யன்ன கதிர்விடுபு**
**ஒருகாழ் முத்தம் இடைமுலை விளங்க,**
**அணங்குறு கற்பொடு மடம்கொளச் சாஅய், 5**

**நின்நோய்த் தலையையும் அல்லை; தெறுவர**
**'என்ஆகுவள்கொல், அளியள் தான்?' என,**
**என்அழிபு இரங்கும் நின்னொடு யானும்**
**ஆறுஅன்று என்னா வேறுஅல் காட்சி**
**இருவேம் நம்படர் தீர வருவது** 10

**காணிய வம்மோ - காதல்அம் தோழி!**
**கொடிபிணங்கு அரில இருள்கொள் நாகம்**
**மடிபதம் பார்க்கும், வயமான் துப்பின்,**
**ஏனல்அம் சிறுதினைச் சேணோன் கையதைப்**
**பிடிக்கை அமைந்த கனல்வாய்க் கொள்ளி** 15

**விடுபொறிச் சுடரின் மின்னி அவர்**
**சென்ற தேஎத்து நின்றதால் மழையே.**

*என் அன்பு மிகுந்த தோழியே! அவர் சென்ற நாட்டி னிடத்தே.*

*கொடிகள் பின்னிக் கிடக்கும் சிறு காட்டினிடத்திலேயுள்ள இருண்ட கருநிறம் உடைய யானையானது சோர்கின்ற பதத்தைத், தினைவகையினுள் ஒன்றாகிய சிறுதினையைக் காத்திருக்கும், வலியுள்ள சிம்மம்போன்ற வலிமையுடைய பரண்மேலுள்ளவன் பார்த்திருப்பான். பிடி கையின் கண் பொருந்திதும், தீவாய் தலையிலே உள்ளதுமான கொள்ளிக் கோல் அவன் கையிலே உள்ளதாயிருக்கும். அது வீசப்படும் போது விழும் சுடர்ப்பொறிகளைப் போல, மழையானது மின்னலிட்டுக் காலூன்றிப் பெய்து நின்றது.*

*பின்புறமாக முடிந்து போட்டிருக்கும் ஒப்பனை செய்யாத கொண்டையிலே, நெய் கனிய வீழும் குழலினை ஒரு சேரக் கட்டி, வெருகுப் பூனையானது இருளிலே நோக்கினாற் போல ஒரு வடத்தாலாகிய முத்துமாலையானது முலைகளிடையிலே கதிர்விட்டு விளங்க, அருந்ததி போலுற்ற கற்பினால் மடப்பம் மிகுந்தவளாக, மெலிந்து, நின் நோயளவிலேயே நீ வருந்தி நிற்பவளும் அல்லை.*

*"அச்சமுற இரங்கத்தக்கவளாகிய இவள்தான் என்னா குவளோ?' என்று, என்னுடைய அழிவுக்கண்டும் இரங்கா நின்றனை! அங்ஙனம் இரங்கும் நின்னோடு, யானும் வருந்துதல் நெறியன்று என்று சொல்லாத, வேறுபாடற்ற காட்சியினளாவேன். நம் இருவேமுடைய வருத்தமும் தீருமாறு நம் தலைவர்கள் வருதலை எதிர்சென்று காணுதற்கு எழுந்து வருவாயாக!*

**சொற்பொருள்:** *1. பின்னுதல் - மண்ணுதல். மண்ணாமை - கை செய்யாமை. 2. நெய் - மணநெய். 5. அணங்கு - தேவமகள்;*

*அருந்ததி. 6. தெறுவர - அச்சம்வர. 12. அரில் - தூறு. நாகம் - யானை. 13. வயமான் - வலிய சிம்மம்.*

## 74. வன்புறை இன்சொல்!

**பாடியவர்:** *மதுரைக் கவுணியன் பூதனார்; மதுரைக் கவுணியன் முத்தனார் எனவும் வேறு பாடம்.* **திணை:** *முல்லை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் அழிந்த கிழத்தி, வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.*

*(அவன் பிரிவால் துயருற்று வருந்தினாள் தலைவி. அவளுக்கு அவன் வருவான் என ஆறுதல் கூறினாள் தோழி. அதற்குத் தலைவி மாலையினால் தான் அடையும் வருத்தத்தைக் கூறித் தன் இயலாமையை உரைக்கின்றாள்.)*

**வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து,**<br>
**போர்வெல் இளையர் தாள்வலம் வாழ்த்தத்,**<br>
**தண்பெயல் பொழிந்த பைதுறு காலை,**<br>
**குருதி உருவின் ஒண்செம் மூதாய்**<br>
**பெருவழி மருங்கில் சிறுபல வரிப்பப்,** 5

**பைங்கொடி முல்லை மென்பதப் புதுவீ**<br>
**வெண்களர் அரிமணல் நன்பல் தாஅய்,**<br>
**வண்டுபோது அவிழ்க்கும் தண்கமழ் புறவில்,**<br>
**கருங்கோட்டு இரலைக் காமர் மடப்பிணை**<br>
**மருண்டமான் நோக்கம் காண்தொறும், 'நின்நினைந்து** 10

**"திண்தேர் வலவ! கடவு'எனக் கடைஇ,**<br>
**இன்றே வருவர்: ஆன்றிகம் பனி'என,**<br>
**வன்புறை இன்சொல் நன்பல பயிற்றும்**<br>
**நின்வலித்து அமைகுவென் மன்னோ - அல்கல்**<br>
**புன்கண் மாலையொடு பொருந்திக், கொடுங்கோற்** 15

**கல்லாக் கோவலர் ஊதும்**<br>
**வல்லாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே!**

*நாடோறும் வருத்தத்தைத் தருவது மாலைப்பொழுது. வளைந்த கோலினை உடையவரும், தம் தொழிலன்றிப் பிற தொழில்களைக் கற்க விரும்பாதவருமான கோவலர்கள் ஊதும் வலிய வாயினையுடைய சிறு குழலின் ஓசையும், அம்மாலைப் பொழுதுடன் சேர்ந்துவந்து நம்மை வருத்தும். அங்ஙனம் வருத்தாது போனால்,*

*குளிர்ந்த மழை பொழிந்த பசுமையற்ற காலத்திலே "குருதியைப் போன்ற செந்நிறத்தினையுடைய ஒள்ளிய தம் பலப்பூச்சிகள் பெரிய வழிகள்தோறும் சிறிய பல வரிகளாக*

எங்கும் பரந்துகிடக்கும் பசிய முல்லைக்கொடியிலே, மெத் தென்ற செவ்வியையுடைய மென்பதம் வாய்ந்த புதிய மலர்கள் மிகப்பலவாக மலர்ந்திருக்கும். அவை, வெள்ளிய களர் ஆகிய அறல்பட்ட மணலில் உதிர்ந்தும் கிடக்கும். வண்டுகள் அரும்பினை மலர்விக்கும் தண்மையும் முல்லை நிலத்திலே கமழும்.

"அவ்விடத்தே. கரிய கொம்பினையுடைய ஆண்மானது அழகிய இளைய பெண்மானின் மருட்சியுற்ற பார்வையினைக் காணுந்தொறும், நின்னை அவன் நினைவான்."

"வினையை வெற்றியுறச் செய்த மேம்பாட்டுடன், மகிழ்ச்சியாற் சிறந்து, போரில் வல்ல வீரர்கள் தன்னுடைய முயற்சியின் வலிமையினை வாழ்த்திவர, அவன் வருவான்."

"பாகனே! திண்ணிய தேரினை இன்னும் விரைவாகச் செலுத்துவாயாக' எனக் கூறிச் செலுத்திக்கொண்டு, இன்றே நம் தலைவனும் வருவான். நாம் நடுக்கத்தை அமைவோம்" என்று, வன்புறையாகிய பல இனிய சொற்களைக் கூறிவரும் நின் சொல்லைக் கேட்டுத், துணிவுடன் நான் அமைந்திருப்பேன். ஆனால், மாலை வருத்துவதனால்தான் இயலாதவளா யுள்ளேன்!

**சொற்பொருள்:** 1. வினைவலம் படுத்தல் - வினையை வெற்றிப்படுத்தல். 5. சிறுபல வரிப்ப - பல வரிப்படச் சிறிய வாகிய பலவும் பரக்க. 7. தாய் - தாவ; தாவச் செய்த.

**விளக்கம்:** மான்பிணையின் மருட்சியைக் காணுந் தொறும் நின்னை நினைவன்; விரைந்தும் வருவன் என்கிறாள் தோழி. அத்துடன் காட்டினும் மழைக்காலம் வந்ததை உணர்வன் என்கிறாள். தலைவியோ, மாலையும் கோவலர் குழலும் வருத்தாவெனின், நின் பேச்சுக்கு நானும் செவி சாய்த்து அமைந்திருப்பேனே என்கின்றாள்.

## 75. பிரியச் சூழ்தலும் உண்டோ?

**பாடியவர்:** மதுரைப் போத்தனார். **திணை:** பாலை. **துறை:** 'பொருள்வயிற் பிரிவர்' என வேறுபட்ட தலைமகட்குப், 'பிரியேன்' எனத் தலைமகன் சொல்லியது: 'பிரியார்' எனத் தோழி சொல்லியது எனவும் பாடம்.

(பொருள் கருதித் தலைவன் பிரிந்து செல்லப் போகின் றனனோ எனக் கலங்குகிறாள் தலைவி. அந்தக் கலக்கத்தால் மெலியவும் செய்கிறாள். அதனை உணர்ந்த தலைமகன், அவளிடம் பிரியேன் எனக்கூறித் தெளிவிக்கின்றான்.)

"அருள் அன்றுஆக, ஆள்வினை, ஆடவர்
பொருள்" எனவலித்த பொருள்அல் காட்சியின்
மைந்துமலி உள்ளமொடு துஞ்சல் செல்லாது,
எரிசினம் தவழ்ந்த இருங்கடற்று அடைமுதல்
கரிகுதிர் மரத்த கான வாழ்க்கை, 5

அடுபுலி முன்பின், தொடுகழல் மறவர்
தொன்றுஇயல் சிறுகுடி மன்றுநிழற் படுக்கும்
அண்ணல் நெடுவரை, ஆம்அறப் புலர்ந்த
கல்நெறிப் படர்குவர் ஆயின் - நல்நுதல்,
செயிர்தீர் கொள்கை, சில்மொழி துவர்வாய், 10

அவிர்தொடி முன்கை, ஆய்இழை, மகளிர்
ஆரம் தாங்கிய அலர்முலை ஆகத்து,
ஆராக் காதலொடு தாரிடைக் குழையாது
சென்றுபடு விறற்கவின் உள்ளி, என்றும்
இரங்குநர் அல்லது, பெயர்தந்து, யாவரும், 15

தருநரும் உளரோ, இவ்உலகத்தான்?, என -
மாரி ஈங்கை மாத்தளிர் அன்ன
அம்மா மேனி, ஐதுஅமை நுசுப்பின்:
பல்காசு நிரைத்த, கோடுஏந்து, அல்குல்:
மெல்இயல் குறுமகள்! - புலந்துபல கூறி 20

ஆனா நோலை ஆக, யானே
பிரியச் சூழ்தலும் உண்டோ,
அரிதுபெறு சிறப்பின் நின்வயி னானே?'

*மாரிக்காலத்தே ஒளிரும் இண்டைச் செடியின் கரிய தளிரையொத்த, அழகிய மாமை நிறத்தையுடைய மேனியினளே! நுண்ணியதாய் அமைந்த இடையினை உடையவளே! பல மணிகள் கோத்த மேகலையினையுடைய, பக்கம் உயர்ந்த அல்குலினை உடையவளே! மென்மைத் தன்மையினையு முடைய என் குறுமகளே!*

*'எரியும் தீ பரந்த பெருங்காட்டின் புகுமிடத்தே, இலைகள் கரிந்து உதிரப்பெற்ற மரங்களே விளங்கும் காட்டின் வாழ்க்கையையுடைய, கொல்லும் புலிபோலும் வலிமையும் கட்டப்பெற்ற கழலையும் உடைய மறவர்கள் பழமையாய் வருகின்ற இயல்புடைய தமது கானத்துச் சிற்றூரிலுள்ள மன்றங்களில், நிழலிடங்களிலே படுத்து, அவ்வெம்மைக்கு ஆற்றாது உறங்குவர். பெருமையையுடைய அந்நெடுமலை யிலேயுள்ள, நீரறக் காய்ந்த கல்வழியில், 'உண்மைப் பொருளாவது அருள் அற்றதான ஆள்வினையே யாகும்" என்று*

துணிந்த பொருளற்ற அறிவினையுடைய, வலிமிக்க உள்ளத்தால் சோர்தல் இல்லாது, நம் காதலரும் செல்வாராயின்,

'நல்ல அழகிய நெற்றியினையும், குற்றமற்ற கொள்கையினையும், சிலவாகிய சொற்களையும், பவள வாயினையும், விளங்கும் வளையணிந்த முன்கையினையும் உடையவர் மகளிர்கள்; அவர்களது முத்தாரம் தாங்கிய பரந்த முலைகளையுடைய மார்பகத்து, அமையாத காதலொடு, தங்கள் தாரை இடையே குழையச் செய்யாது சென்றொழிந்த மிக்க அழகினை நினைந்து என்றும் இரங்குபவராவர்; அஃதல்லாது, "இவ்வுலகத்தே பெயர்த்தும் அவ்வழகினைத் தருபவரும் உளரோ?" என்று, இங்ஙனம் மனம் வெதும்பிப் பலவும் கூறினை; அமையாத நோயுடையையும் ஆயினை; அஃதாகவும், யான் அரிதாகப் பெற்ற சிறப்பினையுடைய நின்னிடத்தினின்றும் பிரியுமாறு கருதுதலும் உண்டாமோ? (அஃதில்லை; என்றும் இல்லை எனத் தெளிவாயாக.)

**சொற்பொருள்:** 1. ஆள்வினை - முயற்சி. பிரிவினால் தான் கேடுறுவது பற்றி அருள் கொள்ளவில்லை யாதலின், அருளன்றாக என்றனர். 2. வலித்த - துணிவித்த. 4. எரிசினம் - எரிக்கிற சினம்; சினம் - நெருப்பு. 5. கரிகுதிர் மரம் - கரிந்த குதிர் போலும் மரம். 13. குழைதல் - துவள்தல்.

**விளக்கம்:** தோழி கூற்றாயின், 'மெல்லியற் குறுமகளே! நீ பலபுலந்து கூறி நோயையாகவும், அவர் பிரியச் சூழ்தலும் உண்டோ? அவர் பிரியார்காண்' என உரைத்தனள் என்க.

## 76. காவிரிபோலக் கைவலித்தல்!

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம். **துறை:** 'தலைமகளை நயப்பித்துக் கொண்டாள்' என்று கழறக் கேட்ட பரத்தை, தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

'தலைவனின் காமக்கிழத்தியாகிய இளமைப் பருவத்தாள் ஒருத்தி, தன்பால் தலைவன் வருவதுபற்றித் தலைவி புலந்ததாகக் கேட்டவழிப், பெருமிதம் கொண்டு கூறியதாகும்' என்பர் நச்சினார்க்கினியர்.

**சிறப்பு:** 'ஆட்டனத்தியைக் கண்டிரோ' என ஆதிமந்தி பேதுற்றமை; அஃதை என்பானின் நாளோலக்கச் சிறப்பு.

('பரத்தையர் சேரியிலே ஒருத்தியின் கூத்திலே மயங்கினான் தலைவன்' எனக் கேட்டு, அப்பரத்தையைப் பழித்து அவனோடு ஊடினாள் தலைவி. அதனைக் கேட்ட அப்பரத்தை, அவன் கூத்துக்காண வந்ததற்கே என்னைத் தூற்றினளோ? இனி, அவள்,

*அவனை முற்றவும் பிரிந்து கதறியழ, நான் அவனைக் கைக்கொள்வேன்' எனச் சொல்லிச் சீறுகிறாள்.)*

**மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்,**
**தண்துறை ஊரன் எம்சேரி வந்தென**
**இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றோடு**
**நன்கலம் ஈயும் நாள்மகிழ் இருக்கை**
**அவைபுகு பொருநர் பறையின், ஆனாது, 5**

**கழறுப என்ப, அவன்பெண்டிர்; அந்தில்**
**கச்சினன், கழலினன், தேம்தார் மார்பினன்**
**வகைஅமைப் பொலிந்த, வனப்புஅமை தெரியல்,**
**சுரியல்அம் பொருநனைக் காண்டிரோ?' என,**
**ஆதி மந்தி பேதுற்று இனைய, 10**

**சிறைபறைந்து உறைஇச் செங்குணக்கு ஒழுகும்**
**அம்தண் காவிரி போல,**
**கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின், யானே!**

*மார்ச்சனை செறிந்த மத்தளத்தோடு, காண்பவருக்கு மகிழ்ச்சி பெருகுமாறு யாங்கள் கூத்தாடினோம். தண்மையான நீர்த்துறையையுடைய ஊரன், அதனைக் காண விரும்பி எம் சேரிக்கு வந்தான்! அதற்கே,*

*அவன் மனைவி, 'இனிய கடுப்பினையுடைய கள்ளினால் செருக்குற்ற அஃதை என்பானது, யானைகளோடு நல்ல பல அணிகளையும் பரிசிலர்க்கு வழங்கும், மகிழ்ச்சி பொருந்திய நாளோலக்கத்தையுமுடைய அவையிலே செல்லும், கூத்தரது பறைகள் முழங்குவனபோல, ஓயாது என்னையே இகழ் கின்றனள்' என்று கூறுகின்றனர். ஆயின்,*

*"இடுப்பிலே கச்சினையும், கால்களிலே கழல்களையும், தேனொழுகுந் தாரணிந்த மார்பினையும் உடையவன்; கூறு பாட்டின் அமைதியோடு விளங்கும் வனப்புக்கள் அமைந்த மாலைகளை உடையவன்; குழன்ற மயிரினையுடைய அழகிய கூத்தப் பொருநன், ஆட்டனத்தி. அவனைக் கண்டீரோ?" என்று, அவன் மனைவியாகிய ஆதிமந்தி மயக்கமுற்றுக் கதறியழக், கரையினை மோதிப் பரவி நேர்கிழக்காக ஓடும் அழகிய குளிர்ந்த காவிரியின் புது வெள்ளம் கைக்கொண்டு போனாற்போல, அவனையும் என்பாற் கொண்டு கைப்பற்றிக் கொள்ளுதலை யானும் கருதியிருக்கின்றேன் என்பதனையும் அவள் அறிவாளாக."*

**சொற்பொருள்:** *1. தூங்க - கூத்தாட. 6. கழறுதல் - வைதல். 9. வகை - கூறுபாடு. சுரியல் - சுருட்டையான மயிர். 9. பொருநன் - கூத்தாடுவோன். 11. சிறை - அணை; கரையுமாம். 13. கைவலித்தல் - கைக்கொண்டு தழுவிப் பிரியாதிருத்தலும் ஆம். 'ஆடற்றகை*

யானாதல், பாடற்குரலானாதல் பெற்றேன்' என்று சொல்லு வாளாயின், இனி இப்படிச் செய்கிறேன் என்றாள்.

**விளக்கம்:** காவிரி வெள்ளத்திலே தன் கணவனை இழந்து, ஆதிமந்தியானவள் அலறித் துடித்ததைப்போல, என்னிடத்தே அவனையிழத்து, அவன் மனைவியும் அலறித் துடிதுடிக்கச் செய்வேன் என்பது சூள்.

## 77. பனிவார் கண்!

**பாடியவர்:** மருதனிளநாகனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங் குவித்தது. **சிறப்பு:** சேரர் படைத்தலைவனாகிய பிட்டன் என்பானின் போர்மறம்.

(தானும், 'தன்னொத்த பிறரைப்போல வேற்று நாடு சென்று பொருள்தேடி வரவேண்டும்' என்று விரும்புகின்றான் ஒரு தலைவன். அவனுடைய குறிப்பினை அறிந்த தலைவி, கண் கலங்கி நொந்து மெலிந்தாள். அப்போது, அவன் தன் நெஞ்சுக்குச் சொல்லித், தான் போவதை நிறுத்திக் கொண்டான். அவன் சொன்னவை.)

**'நல்நுதல் பசப்பவும், ஆள்வினை தரீஇயர்,**
**துன்அருங் கானம் துன்னுதல் நன்று'எனப்**
**பின்னின்று சூழ்ந்தனை ஆயின்,நன்று இன்னாச்**
**சூழ்ந்திசின் - வாழிய, நெஞ்சே! - வெய்துற**
**இடி உமிழ் வானம் நீங்கி, யாங்கணும் 5**

**குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்,**
**கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்,**
**பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்,**
**உயிர்திறம் பெயர, நல்அமர்க் கடந்த**
**தறுக ணாளர் குடர்தரீஇத் தெறுவச், 10**

**செஞ்செவி எருவை, அஞ்சுவர இருக்கும்**
**கல்அதர் கவலை போகின், சீறூர்ப்**
**புல்அரை இத்திப் புகர்படு நீழல்**
**எல்வளி அலைக்கும், இருள்கூர் மாலை,**
**வானவன் மறவன், வணங்குவில் தடக்கை, 15**

**ஆனா நறவின் வண்மகிழ் பிட்டன்**
**பொருந்தா மன்னர் அருஞ்சமத்து உயர்த்த**
**திருந்து இலை எஃகம் போல,**
**அருந்துயர் தரும்,இவள் பனிவார் கண்ணே!**

என் நெஞ்சமே! நீ வாழ்வாயாக!

'நம் தலைவியின் அழகிய நெற்றியும் பசலையினால் அழகிழந்து போகுமாறு அவளைப் பிரிந்து, முயற்சியினால் பொருள் ஈட்டி வருவதற்குக், கடத்தற்கு அரிய காட்டினையும் கடந்து செல்லுதலும் நன்று' என நீ எண்ணினையானால், எனக்கு மிகவும் துன்பத்தினையே கருதினையாவாய்.

இடிகளை உமிழ்கின்ற வானமானது வெம்மையுற்று, மழையும் பெய்யாது நீங்கிப்போக, அதனால் எவ்விடத்தும் குடிகள் தத்தம் ஊரைவிட்டுப் பெயர்ந்து போவாராகவும் காண்கின்ற கோடைக்குச் சான்றாகப் பலரும் சுட்டிக் கூறும் வெம்மையினையுடையது, என்றென்றுமே பாழ்பட்டுக் கிடக்கும் பாலை நிலம்.

கயிற்றினால் பிணிக்கப்பட்டுள்ள குடத்துக்கண்ணே உள்ள ஆவண ஓலைகளை எடுத்துக் கொள்வதற்கு, அக் குடத்தின்மேலிட்ட இலாஞ்சினையை ஆராய்ந்து பார்த்த பின் நீக்கும் ஆவண மாக்களைப் போல,

தம் உயிரானது வேறொரு பிறவியிலே சென்று புகுமாறு மாற்றார்கள் அஞ்ச, நல்ல போரினை வென்றுபட்ட தறுகண்மையினையுடைய வீரர்களின் குடரைச், சிவந்த காதுகளையுடைய பருந்தானது, காண்பவர் அஞ்சுமாறு, அவர்கள் உடற்கூட்டினின்றும் இழுத்துப் போடும்.

கற்களுடைய கவர்ந்த வழிகளிலே சென்றால், ஆங்குள்ள சிற்றூர்களில் புல்லிய அடியினையுடைய இத்தியின் புள்ளிபட்ட நிழலிலே பெருங்காற்று அலைத்துக் கொண்டிருக்கும். அவ்விடத்தே, இருள்மிகுந்த மாலைப் பொழுதிலே,

சேரமானின் படைமறவனாகிய, வளைந்த வில்லைத் தன் பெரிய கையிலே கொண்ட, அமையாத கள்ளினது மிக்க மகிழ்ச்சியை உடையவனாகிய பிட்டன் என்பான், பகை மன்னரது அரிய போரின்கண் உயர்த்த, திருந்திய இலைத் தொழிலையுடைய் வேலினைப்போல், இவளுடைய நீர் ஒழுகும் கண்கள் என் கண்முன் தோன்றி, எனக்குப் பொறுத்தற்கும் அரிதான துயரத்தையும் தருமன்றோ!

**சொற்பொருள்:** *1. தரீயர் - பெறவேண்டி. 6. சுட்டு - பலரும் கருதிச் சொல்லப்படுதல். 7. குழிசி - குடம். பொறி - இலாஞ்சினை; முத்திரை. 13. புகர் - புள்ளி. 14. எல்வளி - பெருவளி. 15. வானவன் - சேரன். 16. பிட்டன் - சேரர் படைத்தலைவர்களுள் ஒருவன்.*

**விளக்கம்:** 'குழிசியோலை' என்பது குடவோலை; மக்களிடமிருந்து பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்க, இவ்வாறு ஊர்ஊராகக் குடவோலை இடும் முறையிலே அந்நாளில்

தெளிவு நடத்தி வந்தனர். முடிவு கூறுவோர், பானையிலிருந்து ஓலையை உருவி எடுத்தல்போலப் பருந்து குடரை உருவும் என்க, 'ஆவணமாக்கள்' என்னும் அலுவலர்களைப் பற்றிய செய்தியையும் அறிக.

## 78. உள்ளியும் அறிதிரோ?

**பாடியவர்:** மதுரை நக்கீரனார். **திணை:** குறிஞ்சி. **துறை:** களவுக்காலத்துப் பிரிந்துவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது. **சிறப்பு:** மூவேந்தரும் பாரியின் பறம்புமலையை முற்றியிருப்பக் கபிலருடன் தன் எல்லையைக் காத்த பாரியின் சிறப்பு.

(களவிலே இடையீடுபடும் பிரிவினால் வாடிமெலிந்தாள் ஒரு தலைவி. அவள் காதலனிடம், அவளுடைய மெலிவைக் கூறுதல் மூலம், அவளை வரைந்து கொள்ளத் தூண்டும் முயற்சியிலே ஈடுபடுகிறாள் தோழி.)

**'நனந்தலைக் கானத்து ஆளி அஞ்சி,**
**இனம்தலைத் தரூஉம் எறுழ்கிளர் முன்பின்,**
**வரிஞிமிறு ஆர்க்கும், வாய்புகு கடாஅத்துப்**
**பொறிநுதற் பொலிந்த வயக்களிற்று ஒருத்தல்**
**இரும்பிணர்த் தடக்கையில், ஏமுறத் தழுவ, 5**

**கடுஞ்சூல் மடப்பிடி நடுங்கும் சாரல்,**
**தேம்பிழி நறவின் குறவர் முன்றில்**
**முந்தூழ் ஆய்மலர் உதிரக், காந்தள்**
**நீடுஇதழ் நெடுந்துடுப்பு ஒசியத், தண்ணென**
**வாடை தூக்கும் வருபனி அற்சிரம், 10**

**நம்இல் புலம்பின், நம் ஊர்த் தமியர்**
**என்ஆ குவர்கொல் அளியர் தாம்?'என**
**எம்விட்டு அகன்ற சின்னாள், சிறிதும்,**
**உள்ளியும் அறிதிரோ - ஓங்குமலை நாட!**
**உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்இசை 15**

**வாய்மொழிக் கபிலன் சூழச் சேய்நின்று**
**செழுஞ்செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு,**
**தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி,**
**யாண்டுபல கழிய, வேண்டுவயிற் பிழையாது,**
**ஆள்இடூஉக் கடந்து, வாள்அமர் உழக்கி, 20**

**ஏந்துகோட்டு யானை வேந்தர் ஓட்டிய**
**நெடும்பரிப் புரவிக் கைவண் பாரி**

**தீம்பெரும் பைஞ்சுனைப் பூத்த**
**தேம்கமழ் புதுமலர் நாறும்இவள் நுதலே?**

ஓங்கி உயர்ந்த மலைநாடனே!

விளங்கித் தோன்றும் மிகுதியான வலிமையினையும், தன் இனத்தைத் தன்னுடனே கூட்டிக் கொள்ளும் இயல்பினையும், வரியினையுடைய வண்டினம் மொய்த்துக் கொண்டிருக்கும் வாய்புகு மதநீரினையும் உடைய, புள்ளிகள் பொருந்திய நெற்றியினால் அழகுற்று விளங்கும் வலிபொருந்திய யானைக்கூட்டத் தலைவனாகிய களிறானது, அகன்ற இடத்தையுடைய காட்டினிடத்தேயுள்ள ஆளியினை நினைந்து, முதற் சூலையுடைய தன் இளையபிடி அஞ்சியதாக, அதனைக் கரிய சருச்சரையுடைய தன் பெரிய கையினால் பாதுகாவலுறத் தழுவிக் கொள்ளும், அத்தகைய மலைச்சாரலிலே -

தேன் கூடுகளைப் பிழிந்து மது எடுத்துக் கொண்டிருக்கும் குறவர்களது வீட்டு முற்றங்களிலே, மூங்கிலின் அழகிய மலர்கள் காய்ந்து உதிரவும், காந்தளது நீண்ட இதழ்களையுடைய பெரிய மலர்கள் முறியவும், தண்ணென்ற வாடைக் காற்று வீசிக் கொண்டிருக்கும்; தோன்றுகின்ற பனியையுடைய அத்தகைய முன்பனிக் காலத்திலே,

எம்மைவிட்டுப் பிரிந்த சில நாட்களுக்குள்ளாகவே, நாம் இல்லாதிருக்கின்ற தனிமைத் துன்பத்தினால், தம்முடைய ஊரினிடத்தே தனித்துத் துயருறும் இரங்கத்தக்கவராகிய இவர், என்ன கதிதான் அடைவாரோ என எண்ணி, இரக்கங்கொண்டு,

உலகெங்கும் சுற்றிக்கொண்டிருக்கும் பலரும் புகழ்கின்ற நல்ல புகழினையும், வாய்மை தவறாத மொழியினையும் உடைய கபிலன் ஆராய்ந்து வினைசெய்ய, நெடுந்தொலைவினின்று வளம் பொருந்திய வயல்களிலே விளைந்த நெற்கதிர்களைக் கொண்டுவந்து, அவற்றைப் பெரிய தண்டினையுடைய ஆம்பல் மலராகிய அவியலோடு கூட்டிச் சமைத்து உண்பித்துப், பல ஆண்டுகள் கழியவும், தாம் விரும்பிய நெறியினின்றும் பிறழாமல், பகைவர் படைகளிலே புகுந்து வாட்போரிட்டு அவர்களைக் கலக்கிய, நிமிர்ந்த கொம்புகளையுடைய போர்யானைகள் மலிந்த மூவேந்தர் படைகளையும் தோற்று ஓடச் செய்த, விரைவினையுடைய குதிரையினையும் கைவண்மை யினையும் உடைய பாரிவேளின், இனிய பசுமையான சுனையிடத்தே பூத்த, தேன் மணக்கும் புதுமலர்போல மணம்நாறும் இவளது நெற்றியினைச்,

சிறிதளவேனும் நீர் நினைத்தும் அறிந்தீரோ?

**சொற்பொருள்:** 2. இனம் தலைத்தரும் - தன் இனத்தைத் தன் தலைமையின் கீழே கூட்டிக் கொள்ளும். 4. ஒருத்தல் - தலைவன். 7. தேம் - இனிமை; தேனுமாம். தேனாற் பிழிந்து ஆக்கிய மதுவென்க. 8. முந்தூழ் - மூங்கில். 10. அற்சிரம் - பனிக்காலம்.

**விளக்கம்:** 16. 'கபிலன்சூழ' என்பது, மூவரும் பறம்பினை முற்றியிருப்ப, உணவற்ற காலத்தே கிளிகளை வளர்த்துக் கதிர் கொண்டுவரச் செய்து, கபிலர் பசிபோக்கினர் என்பது.

'களிறு தன்னை அணைத்துக் காத்து நிற்பவும், பிடியானது ஆளியை நினைந்து அஞ்சி நடுங்கினாற்போல, நீயும் இவளைக் காத்துப் பேணுகின்ற இயல்பினையுடைய என்றாலும், நின் பிரிவுக்கு அஞ்சி இவள் வாடினள்' என்பது உள்ளுறை பொருள்.

'நெற்றியினை நினைத்தும் அறிதிரோ' எனக் கேட்டாள், அதன் அழகு ஒழியக் காரணமாகிப் பிரிந்து போதலின் கொடுமையைக் கூறுதற்கு.

## 79. வல்லாங்கு வருதும்!

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை:** பாலை. **துறை:** பொருள்வயிற் பிரிந்த தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** கொங்கு நாட்டார் தம் ஆக்களுக்கு நீர்தரும் பொருட்டு மலைப்பகுதிகளிலே வெட்டிய கிணறுகள்.

(உள்ளம் பொருளார்வத்தைத் தூண்டத் தலைவியைப் பிரிந்து பாலைவழியிலே சென்று கொண்டிருந்தவன், இடை வழியிலே தன் தலைவியின் எண்ணம் தம் நெஞ்சினை ஆட் கொள்ள இவ்வாறு கூறுகின்றான்.)

**தோட்பதன் அமைத்த கருங்கை ஆடவர்**
**கனைபொறி பிறப்ப நூறி,வினைப் படர்ந்து**
**கல்லறுத்து இயற்றிய வல்உயர்ப் படுவில்,**
**பார்உடை மருங்கின் ஊறல் மண்டிய**
**வன்புலம் துமியப் போகிக், கொங்கர் 5**

**படுமணி ஆயம்நீர்க்கு நிமிர்ந்து செல்லும்**
**சேதா எடுத்தசெந்நிலக் குரூஉத் துகள்**
**அகல்இரு விசும்பின் ஊன்றித் தோன்றும்**
**நனந்தலை அழுவம், நம்மொடு துணைப்ப,**
**'வல்லாங்கு வருதும்' என்னாது, அல்குவர 10**

**வருந்தினை - வாழிஎன் நெஞ்சே! - இருஞ்சிறை**
**வளைவாய்ப் பருந்தின் வான்கட் பேடை,**

**ஆடுதொறு கனையும் அவ்வாய்க் கடுந்துடிக்**
**கொடுவில் எயினர் கோட்சுரம் படர**
**நெடுவிளி பயிற்றும் நிரம்பா நீள்இடை,** 15

**கல் பிறங்கு அத்தம் போகி**
**நில்லாப் பொருட்பிணிப் பிரிந்த நீயே!**

என் நெஞ்சமே! நீ வாழ்வாயாக!

ஆடுந்தோறும் ஒலிமுழங்கும் அழகிய முகப்பினையுடைய துடியினையும், வளைந்த வில்லினையும் உடையவர் எயினராகிய பாலைநிலத்து மறவர்கள். வழிச்செல்வாரைக் கொள்ளையிடும் கருத்துடன், அவர்கள் சுரநெறியிலே எங்கணும் பரவியிருப்பர்.

பெரிய சிறையினையும் வளைந்த வாயினையும் உடைய பருந்தினது, வெண்மையான கண்களையுடைய பேடையானது, தன் சேவலை நினைந்து, நெடுங்குரல் எழுப்பிக் கூப்பிட்டுக் கொண்டே இருக்கும், நீண்ட பெருவழி அது. கற்கள் பரவிக்கிடக்கும், அந்தக் காட்டின் வழியே சென்று, ஓரிடத்திலேயும் நில்லாத இயல்பினையுடைய பொருளின் மீது கொண்ட பற்றினால், நீ எம் தலைவியையும் பிரிந்தனை!

தோளிலே தொங்கவிடும் சோற்று மூட்டையினையுடைய, வலிய கையினரான ஆடவர்கள், தொழில் செய்தலிலேயே முனைந்து, மிக்க தீப்பொறி பறக்குமாறு, பாறைகளைத் தகர்த்துத் தோண்டுதுலைச் செய்து இயற்றிய, மிக்க உவர் நீரையுடைய கிணற்றிலே, பாறையினை உடைத்த பக்கத்திலே ஊறிக்கிடக்கும் நீரினை உண்ணுதலை விரும்பியவாக, ஒலிக்கும் மணிபூண்ட ஆயமாகிய கொங்கர்களது பசுமந்தைகள், தம் தலைகளை நிமிர்த்தவாறே ஆரவாரத்துடன் சென்று கொண்டிருக்கும். வன்புலமானது தூளெழும்படியாகச் சென்று, அவை கிளப்பிய செம்மண்ணாகிய நிறம் பொருந்திய புழுதியானது, அகன்ற பெரிய வானத்தினிடத்தே மண்டித் தோன்றும். அத்தகைய இடமகன்று கிடக்கும் காட்டிலே

நம்மோடும் துணையாகக் கூடி, வல்லபடி உடன் வருவோம் என்றில்லாமல், இவ்வாறு இங்கு வந்தவிடத்திலே, அவளையே நினைந்து நினைந்து வருந்துகின்றனையே! இஃது என்னையோ?

**சொற்பொருள்:** *1. தோட்பதன் - தோளிலே தொங்கவிடும் சோற்று மூட்டை. கருங்கை - வலிய கை. 2. கனை பொறி - மிக்க பொறிகள். நூறி - வெட்டி. 3. கல்லுறுத்தல் - தோண்டுதல். வல்லுவர் - மிக்க உவர்; படு கிணறு. 4. ஊறல் - ஊறிவரும் நீர். 5. துமிய - துகள் எழ. 9 அழுவம் - காடு. 10. அல்குவர - இங்கே தங்குதல் அமைந்த. 12. வான்கண் - வெள்ளைக்கண். 8. ஊன்றித்*

தோன்றும் - மிக்குத் தோன்றும். 1. 'தோட்பயன் அமைத்த' என்று பாடமாக்கித், தோண்டுகை முன்பே நீரைச் சொரிந்தமைத்த என்றுமாம்.

**விளக்கம்:** 'எயினர் கோட்சுரம் படரப் பேடை நெடு விளி பயிற்றும்; அவ்வழிச் செல்லுதலினால் தன் தலைவியும் தன்னை நினைந்து வருந்தித் துயருறுதல் பொருந்துவதே' எனத் தலைவனின் மனம் உளைந்தது என்க.

## 80. பகல் வந்து ஈமே!

**பாடியவர்:** மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார்; நக்கீரனார் பாடியது எனவும் பாடம். **திணை:** நெய்தல். **துறை:** இரவுக்குறி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.

(நெய்தற் பாங்கிலே, தன் காதலியைச் சந்திக்க இரவு வேளையிலே வருகிறான் ஒருவன். அவனுடைய காதலியோ வழியின் கொடுமையை நினைந்து நடுங்கினாள். அதனை மறைத்துப் பகலிலே வருமாறு தோழி தலைவனிடம் கூறுகிறாள்.)

**கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்**
**இருங்கழி இட்டுச்சுரம் நீந்தி, இரவின்**
**வந்தோய் மன்ற - தண்கடற் சேர்ப்ப!-**
**நினக்குஎவன் அரியமோ, யாமே? எந்தை** 5

**பல்மீன் உணங்கற் படுபுள் ஓப்புதும்**
**முண்டகம் கலித்த முதுநீர் அடைகரை**
**ஒண்பன் மலரக் கவட்டுஇலை அடும்பின்**
**செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப**
**இனமணிப் புரவி நெடுந்தேர் கடைஇ,** 10

**மின்இலைப் பொலிந்த விளங்கிணர் அவிழ்பொன்**
**தண்நறும் பைந்தாது உறைக்கும்**
**புன்னைஅம் கானல், பகல்வந் தீமே!**

குளிர்ந்த கடற்கரையினை உடைய தலைவனே!

வளைந்த காலினையுடைய முதலைகளோடு, கொம்பினையுடைய சுறாமீன்களும் இயங்கும், உப்பங்கழிகள் நெருங்கிக் கிடக்கும், அரிய வழியினைக் கடந்து, இந்த இரவு நேரத்திலேயும் நீ வந்துள்ளனை!

நீர் முள்ளிகள் தழைத்துக் கிடக்கும் கடலின் அடைகரையிலேயுள்ள, ஒள்ளிய பலவாகிய மலர்களையுடைய, கவடு பட்ட இலைகளையுடைய அடம்பினது சிவந்த நிறமுடைய மெல்லிய கொடிகளை, நின் தேருருள்கள் அறுத்துக் கொண்டே வரும்.

ஒரே இனமாக விளங்கும் மணிகள் பூண்ட குதிரைகள் பூட்டிய நின் நெடுந்தேரினை, அங்ஙனம் செலுத்தியவனாக, ஒளிரும் இலைகளால் அழகுற்று விளங்கும் மலர்ந்த பூங்கொத்துக்கள், பொன் போலும் தன்மையான நறும்பூந் தாதுக்களைத் தம் கட்டவிழ்ந்து சொரியும், புன்னை மரங்கள் செறிந்த அழகிய கானற்சோலையிலே, இனிப் பகல்வேளையிலேயே வருவாயாக!

எம் தந்தை, பொருந்தும் அலைகளையுடைய கடல் அகத்தேயிருந்து துழாவிக் கொணர்ந்த, பலவகை மீன்களின் வற்றலிலே வந்து படியும் புட்களை, யாம் அவ்வேளை அங்கே ஓட்டியிருப்போம்.

ஆகலின், யாங்கள் நினக்கு எங்ஙனம் கூடுதற்கு அரியவர்களாவோம்?

**சொற்பொருள்:** 7. அடைகரை - கரையடியில். 11. அவிழ்தல் - மலர்தல். பகற்குறி வாயாமையாலேயே அவன் இரவுக் குறி நேர்ந்தான்; இப்போது அதுவும் மறுத்தனள் தோழி; அதனால், விரைந்து வந்து மணந்து கொள்வாயாக என்பது கருத்தாகும். 2. இட்டுச் சுரம் - குறுகிய வழியினையுடைய சுரம்.

## 81. உளியத்தின் நாளுலா!

**பாடியவர்:** ஆலம்பேரிச் சாத்தனார். **திணை:** பாலை. **துறை:** பிரிவுணர்த்திய தலைமகனுக்குத் தோழி தலைமகள் குறிப்பறிந்து வந்து சொல்லியது. **சிறப்பு:** கடலன் என்பான்.

*(பொருள்வயிற் பிரியக் கருதியவனாகிய தலைமகன், அதனைத் தலைவியினிடம் கூறுதற்குத் தோழியின் உதவியை நாடுகின்றான். அவள், அவன் கருத்தைத் தெரிவித்து, அதனைக் கேட்டத் தலைமகள் பட்ட துயரங்களை, அவனிடம் மீண்டும் வந்து சொல்லுகிறாள்.)*

**நாள்உலா எழுந்த கோள்வல் உளியம்**
**ஓங்குசினை இருப்பைத் தீம்பழம் முனையின்,**
**புல்அளைப் புற்றின் பல்கிளைச் சிதலை**
**ஒருங்கு முயன்று எடுத்த நனைவாய் நெடுங்கோடு**
**அரும்புஊது குருகின், இடந்து, இரைதேரும்** 5

**மண்பக வறந்த ஆங்கண் கண்பொரக்**
**கதிர்தெறக் கவிழ்ந்த உலறுதலை நோன்சினை**
**நெறிஅயல் மராஅம் ஏறிப், புலம்புகொள்**
**எறிபருந்து உயவும் என்றூழ் நீள்இடை**
**வெம்முனை அருஞ்சுரம் நீந்திச் - சிறந்த** 10

**செம்மல் உள்ளம் துரத்தலின், கறுத்தோர்**
**ஒளிறுவேல் அழுவம் களிறுபடக் கடக்கும்**
**மைஎழில் உண்கண் கலுழ -**
**ஐய! சேறிரோ, அகன்றுசெய் பொருட்கே? 15**

*ஐயனே! சிறந்த தலைமை வாய்ந்த நுமது உள்ளமானது எம்மைப் பிரிந்து சென்று, ஈட்டும் பொருளுக்குச் செல்லுமாறு, நும்மைத் தூண்டுதலினாலே,*

*வெகுண்டு போருக்கு எழுந்த பகைவரது, ஒளிர்கின்ற வேல்களையுடைய போர்க்களத்திலே, களிறுகள் மடியுமாறு வீழ்த்தும் ஆற்றலுடையவனும், மிக்க வண்மையுடைய வனுமாகிய கடலன் என்பவனது, விளங்கில் என்னும் ஊரினைப் போன்ற, எம்முடைய அழகிய மையுண்ட கண்ணினளான தலைவியானவள், அழுது புலம்ப,*

*தனக்குரிய இரையினைப்பற்றிக் கொள்ளுதலிலே வல்லதான கரடியானது, தன்னுடைய நாள் வேட்டைமேற் செல்லுவதற்கு எழுந்து, உயர்ந்த கிளைகளையுடைய இருப்பைமரத்தின் இனிய பழமானது வெறுத்துப் போயின தென்றால், கரையான் தன் நனைந்த வாயால் ஒருங்க கூடிப் பல கிளைகளாகக் கட்டிய, புல்லிய வளைகளையுடைய புற்றினது நெடிய உச்சியினை, இருப்பு உலையிலே ஊதும் துத்தியைப் போன்று ஊதிப் பெயர்த்து, ஆங்குள்ள புற்றாஞ்சோறாகிய இரையினை எடுத்து உண்ணும். மண்பிளவுபட கோடை எரிக்கும் வறட்சியுற்ற பாலை நிலமாகிய அவ்விடத்திலே,*

*கண்கள் கலங்குமாறு கதிரவன் எரித்தலால், நெறியின் அயலிடங்களிலேயுள்ள வெண்கடம்புகளின் கவிழ்ந்திருக்கும் காய்ந்த உச்சியினையுடைய உயர்ந்த கிளைகளிலே ஏறித், தன் இரையினைப் பாய்ந்து எடுக்கும் பருந்தும், ஏதும் கிடையாதே தனித்திருந்து வருந்தும், மிகுதியான வெப்பம் நெடுகப் பரக்கும் இடங்களாகிய வெவ்விய முனைகளையுடைய அரிய சுரத்தினைத் தாண்டி,*

*நீரும் பிரிந்தவராகச் செல்லுவீரோ? (வேண்டாங்கான் என்பது தேற்றம்.)*

**சொற்பொருள்:** *1. உலா - உலாவி. எழுந்த - எழுந்திருந்த. 5. குருகு - கொல்லன் உலையின் துருத்தி முனை. 6. கண்பொர - கண் பார்க்க முடியாதபடி கூச. 9. எறிதல் - பாய்ந்து எடுத்தல். 12. வேலழுவம் - வேற்பரப்பினையுடைய போர்க்களம்.*

**விளக்கம்:** இனிய இருப்பைப் பழத்தை வெறுத்து, வலிய முயற்சியான புற்றாஞ்சோறு எடுத்தலை மேற்கொள்ளும் வலிய கரடியினைப்போல, நீரும், இனிய நும் தலைவியைப் பிரிந்து,

*நிலையற்ற பொருளை நாடி, வலிதின் முயன்று செல்லுவீரோ என்பதாம்.*

## 82. விறலியின் தோன்றும் மயில்!

**பாடியவர்:** *கபிலர்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *தோழிக்குத் தலைவி அறத்தோடு நின்றது.*

*'தன் கருத்து வெளிப்படாது தன் மெய்க்கட்டோன்றிய புதுமையைத் தலைவி வியந்தாள் போலத் தோழிக்கு அறத் தொடு நின்றது. 'புலர்குரலேனல்...ளேனே' என்பது, கண் துயில் மறுத்தல் என்னும் மெய்ப்பாட்டிற்கு உதாரணமாயிற்று என்பர் பேராசிரியர்.*

*'அவனை ஆயத்தார் பலரும் கண்டாரென வந்தோன் முட்டியவாறும், அவருள் நெகிழ்தோளோன் யானே எனத் தானே கூறியவாறும்' காண்க, என்பர் நச்சினார்க்கினியர்.*

*(காதல் பிறக்கும் அதிசயத்தை வருணிப்பது இப்பாடல். பல பெண்கள் ஒருவனைக் கண்டபோதும், அவன்பால் ஒருத்திக்கு மட்டுமே உள்ளத்து ஈடுபாடு மிகுதியாகின்ற விசித்திரத்தை விளக்குகிறது இந்தப் பாடல். இயற்கையின் அமைதி எங்ஙனம் அதற்கு உதவுகிறதென்பதும் இதன்கண் காணலாம்.)*

**ஆடுஅமைக் குயின்ற அவிர்துளை மருங்கின்**
**கோடை அவ்வளி குழலிசை ஆக,**
**பாடுஇன் அருவிப் பனிநீர் இன்இசைத்**
**தோடுஅமை முழவின் துதைகுரல் ஆகக்**
**கணக்கலை இகுக்கும் கடுங்குரற் றூம்பொடு 5**

**மலைப்பூஞ் சாரல் வண்டுயாழ் ஆக,**
**இன்பல் இமிழ்இசை கேட்டுக், கலிசிறந்து,**
**மந்தி நல்அவை மருள்வன நோக்கக்**
**கழைவளர் அடுக்கத்து, இயலி ஆடுமயில்**
**நனவுப்புகு விறலியின் தோன்றும் நாடன்! 10**

**உருவவல் விற்பற்றி, அம்பு தெரிந்து,**
**செருச்செய் யானை செல்நெறி வினாஅய்ப்,**
**புலர்குரல் ஏனற் புழையுடை ஒருசிறை,**
**மலர்தார் மார்பன், நின்றோற் கண்டோர்**
**பலர்தில், வாழி - தோழி - அவருள், 15**

**ஆர்இருட் கங்குல் அணையொடு பொருந்தி,**
**ஓர்யான் ஆகுவது எவன்கொல்,**
**நீர்வார் கண்ணொடு, நெகிழ்தோ ளேனே?**

*தோழி! வாழ்வாயாக!*

அசைகின்ற மூங்கிலின் துளையுள்ள இடங்களிலே, அழகிய மேல்காற்றினால் எழும் ஒலியானது குழலின் இசையாகவும், இன்னொலியுடனே வீழுகின்ற அருவியின் இனிய ஓசையே தொகுதியுடைய முழவின் இசையாகவும், கலைமான்களின் கூட்டம் தாழ ஒலிக்கும் கடுங்குரல் பெருவங்கியத்தின் ஒலியாகவும், மலையத்துப் பூஞ்சாரலிலே யுள்ள வண்டுகளின் ரீங்காரமே இனிய யாழிசையாகவும், இங்ஙனம் இனிய பலவாகிய இசைகள் கானத்திலே விளங்கும். அவற்றைக் கேட்டு மந்திகளாகிய நல்ல திரள் ஆரவார மிக்கவாயின; வியப்புடனும் அவற்றை நோக்கின.

மூங்கில்கள் வளர்ந்திருக்கும் மலையடுக்குகளிலே உலாவி ஆடுகின்ற மயிலினங்கள், களத்திலே புகுந்து ஆடும் விறலி யாரைப் போலத் தோன்றும். அத்தகைய மலைநாட்டை யுடையவன் ஒரு தலைவன். புதுமலர்களாலாகிய தாரினை மார்பிலே அணிந்தவன் அவன். அச்சந்தரும் வில்லினைக் கையிலே பற்றியவனாகச், சிறந்த அம்புகளைத் தெரிந்து எடுத்துக் கொண்டு, தன்னால் அம்பு எய்யப் பெற்ற யானையானது சென்ற நெறியினைக் குறித்து வினவியவனாக, முதிர்ந்த கதிரினையுடைய தினைப்புனத்தின் வாயிலிலே, ஒருபுறமாகவந்து நின்றனன். அப்படி நின்ற அவனைக் கண்டோர், குறமகளிர் தம்முள்ளே பலராவர்.

அவர்களுள், அரிய இருள் செறிந்த இரவிலே, அணையோடு முகஞ்சேரப் பொருந்திக் கிடந்து, நீர் சொரியும் கண்ணோடு, மெலிந்த தோள்களை உடையேனாக, யான் ஒருத்தி மட்டுமே வருத்தமுறல் ஆகியதுதான் என்னையோ?

**சொற்பொருள்:** 1. குயின்ற - செய்யப்பட்ட; தாமே துளையுடையனவாகியவையுமாம். கோடை - மேல்காற்று. 3. பாடின் அருவி - ஒலியினிய அருவி. துதைவு - செறிவு. 5. இகுத்தல் - தாழ்த்தல். தூம்பு - பெருவங்கியம். குரல் - கலையினோசை. 9. இயலி - உலாவி.

**விளக்கம்:** எங்கும் இன்பம் ஒலிக்கும் நாட்டினையுடைய யான், பலரையும் விடுத்து எனக்கு மட்டுமே துன்பஞ் செய்தனன் என்று சொல்லுதலின் மூலம், தான் அவன்பால் மனம் ஈடு பட்டதனைத் தோழிக்குக் கூறி அறத்தொடு நிற்கின்றாள் தலைவி.

## 83. கூம்புவிடு நிகர் மலர்!

**பாடியவர்:** கல்லாடனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. **சிறப்பு:** கள்வர் கோமான் புல்லி, வேங்கடத்துத் தலைவன்.

(பொருள் விரும்பிச் சென்ற தலைமகன், இடைவழியிலே தன் காதலியின் நினைவு நெஞ்சிலே மிகுந்துவிட, 'நாம் பிரிந்து தொலைவிலே வந்தோமெனினும், அவள் குணங்கள் எம் மனத்துள் அகலாது நிலைத்து இருக்கின்றனவே' என்கின்றான்.)

**வலம்சுரி மராஅத்துச் சுரம்கமழ் புதுவீச்**
**சுரிஆர் உளைத்தலை பொலியச் சூடி,**
**கறைஅடி மடப்பிடி கானத்து அலறக்,**
**களிற்றுக் கன்றுஒழித்த உவகையர், கலிசிறந்து,**
**கருங்கால் மராஅத்துக் கொழுங்கொம்பு பிளந்து,** 5

**பெரும்பொழி வெண்நார் அழுந்துபடப் பூட்டி,**
**நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்,**
**நறவுநொடை நல்இல் பதவுமுதற் பிணிக்கும்**
**கல்லா இளையர் பெருமகன் புல்லி**
**வியன்தலை நல்நாட்டு வேங்கடம் கழியினும்,** 10

**சேயர் என்னாது, அன்புமிகக் கடைஇ,**
**எய்தவந் தனவால் தாமே - நெய்தல்**
**கூம்புவிடு நிகர்மலர் அன்ன**
**ஏந்துஎழில் மழைக்கண்எம் காதலி குணனே!**

நெஞ்சமே!

கல்லாத இளைஞர்கள், சுரம் எல்லாம் மணங்கமழும், வலமாகச் சுரித்த வெண்கடம்பினது புதிய பூக்களைச் சுருள் கொண்ட வளைபோன்ற மயிரினையுடைய தம் தலையிலே விளங்கும்படி அணிந்து கொள்வர். உரல்போன்ற அடியினை யுடைய பெண்யானையானது கானத்திலே அலறிக் கொண்டிருக்க, அதனுடைய களிற்றுக் கன்றினைப் பிரித்துக் கொண்டு வருவர். அந்த மகிழ்ச்சியினை உடையவர்களாகச் செருக்கு மிக்க, வலிய அடிமரத்தினையுடைய வெண்கடம்பின் வளவிய கொம்பினைப் பிளந்து, அதனின்றும் உரித்த வெண்மையான நார்க்கயிற்றினால் அக்கன்றினை அழுத்தமாகக் கட்டுவர். நீண்ட கொடிகள் அசையும் அங்காடிகளையுடைய பழமையான ஊரிலே, கள்விற்கும் நல்ல வீட்டின் வாயிலிடத்தே அதனைக் கொணர்ந்து பிணிக்கவும் செய்வர். அத்தகைய கல்லாத இளையரான வேடர்கட்குத் தலைவன் புல்லி என்பவன். அவனது விரிந்த இடத்தினையுடைய நல்ல நாட்டினிடத் தேயுள்ள, வேங்கட மலையினையும் நாம் கடந்து சென்றாலும்,

நெய்தலது பிணிப்புவிடும் ஒளி பொருந்திய மலரைப் போன்ற அழகினை ஏந்தியிருக்கும், குளிர்ந்த கண்ணினளாகிய எம் காதலியின் குணங்கள், சேய்மைக்கண் சென்றவர் என்று

கருதியும், அங்கேயே இராது, அன்பு மிகவும் செலுத்துவதாக, நாம் அடையுமாறு நம்மிடத்தேயும் அணுகவந்தன, காண்பாயாக!

**சொற்பொருள்:** 2. உளைமயிர் - தலையாட்டம் போலத் தொங்கும் மயிர். 6. பெரும்பொழி - பெரிதாக உரித்த உரி. 7. நியமம் - அங்காடி. 8. பதவு முதல் - வாயிலிடம். 13. நிகர் - ஒளி.

**விளக்கம்:** பிடியானை கதறக் கன்றினைப் பிரித்து வந்து கள்விலையாகத் தரும் கல்லா இளைஞர்கள்போல, காதலி துயருற்றுப் புலம்புமாறு பிரிந்துவந்து, பொருள் வேட்கையாற் செல்லுகின்ற அறிவற்றவன் ஆயினேன் என, அவன் தன் நெஞ்சத்தே நினைந்து வருந்தினான் என்க.

## 84. சீறூரும் பாசறையும்!

**பாடியவர்:** மதுரை எழுத்தாளன். **திணை:** முல்லை. **துறை:** தலைமகன் பாசறையிலிருந்து சொல்லியது. 'தூது கண்டு கூறியது' என்பர், நச்சினார்க்கினியர்.

(அவன் குறுநில மன்னன்; பேரரசனுக்குப் படைத்துணையாகச் சென்றிருந்தான். தலைவியைத் தான் பிரிந்த காலத்துக் 'கார் காலத்துத் தொடக்கத்து மீள்வதாக' உறுதி கூறித்தான் சென்றனன் எனினும், எதிர்பார்த்தபடி போர் முடிவு பெறாததனால், அவனாற் போக முடியவில்லை. பாசறையிலேயிருந்து, தன் மனைவிக்குத் தூதன் ஒருவனை அனுப்புகின்றான். அப்போது அவனிடம் கூறியது.)

**மலைமிசைக் குலைஇய உருகெழு திருவில்**
**பணைமுழங்கு எழிலி பௌவம் வாங்கித்**
**தாழ்பெயற் பெருநீர், வலன்ஏர்பு வளைஇ,**
**மாதிரம் புதைப்பப் பொழிதலின், காண்வர**
**இருநிலம் கவினிய ஏமுறு காலை -** 5

**நெருப்பின் அன்ன சிறுகட் பன்றி,**
**அயிர்க்கட் படாஅர்த் துஞ்சுபுறம் புதைய,**
**நறுவீ முல்லை நாண்மலர் உதிரும்,**
**புறவு அடைந் திருந்த அருமுனை இயவிற்**
**சீறூ ரோளே, ஒண்ணுதல்! - யாமே,** 10

**எரிபுரை பன்மலர் பிறழ வாங்கி,**
**அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு**
**கள்ஆர் வினைஞர் களந்தொறும் மறுகும்**
**தண்ணடை தழிஇய கொடிநுடங்கு ஆர்எயில்**
**அருந்திறை கொடுப்பவும் கொள்ளான், சினம்சிறந்து,** 15

**வினைவயின் பெயர்க்குந் தானைப்**
**புனைதார், வேந்தன் பாசறை யேமே!**

"முரசுகள் முழங்குவதுபோல இடிகள் முழங்குகின்றன. அச்சந்தரும் அழகிய வானவில்லும் மலையுச்சியிலே தோன்று கிறது. மேகங்கள் கடல்நீரை முகந்துகொண்டு, வலனாக எழுந்து, உலகினையே வளைத்துக் கொண்டுள்ளன. வானினின்று வீழும் பெருமழையானது, திசையெல்லாம் மறைய அடைத்துப் பொழிகின்றது. அதனால், பெரிய நிலப்பரப்பானது, கண்ணுக்கு இனிதாகப் பொலிவு பெற்று விளங்குகிறது. இத்தகைய கார் காலத்திலே,

நெருப்புக் கங்குகளைப்போல விளங்கும், சிறுத்த கண்களையுடையது பன்றி. அது, நுண் மணலின் கண்ணுள்ள சிறு தூறினிடத்தே கிடந்து தூங்கும். அதன் முதுகு மறையுமாறு, நறுமணமிக்க முல்லையினின்றும், அதனுடைய புதிய பூக்கள் உதிரும். காட்டைச் சார்ந்திருந்த, அரிய முனைகளையுடைய நெறியிலேயுள்ள, அச்சிறிய ஊரினிடத்தே, ஒளிபொருந்திய. நெற்றியினை உடையவளான நம் தலைவியும், நம்மைப் பிரிந்து வருந்துபவளாக உள்ளனள்.

நெல்லரிவோர், நெருப்புப் போன்ற பல வயல்மலர்களையும் மாறுபட வைத்து வலித்துக் கட்டிய, அசையும் பக்கங்களை யுடைய கதிர்க்கட்டுகளைக், கள்ளினை உண்டு களித்திருக்கும் களமரின் களந்தோறும், கொண்டு போவர். அத்தகைய மருத நிலம் சூழ்ந்துள்ளதும், கொடிகள் அசைந்து பரப்பதுமாகிய இவ்வரிய ஊரினை, இதன்கண் உள்ளவர் அரிய திறைப் பொருள்களைக் கொடுத்துப் பணிய முன் வந்தும், நம் அரசன் ஏற்றுக் கொள்ளாதானாயினான். சினமிகுந்தவனாகச் சேனை களை மென்மேலும் போரின் கண்ணேயே செலுத்துகின்றான். மார்பிலே தாரினைப் புனைந்திருக்கும், அத்தகைய நம் வேந்தனின் பாசறையினிடத்திலே, நாமோ இங்கே இருக்கின்ற வராயுள்ளோம்! (என்ன செய்வோம்?)

**சொற்பொருள்:** 1. குலைஇய-வளைந்த, உருகெழு-அச்சந்தரும், 5. ஏமம்-காவல் 10. புறவு-சிறுகாடு. 11. எரிபுரை மலர்-தாமரை, செங்கழுநீர் போல்வன. பிறழ என்றது, அரிகதிர்களைத் தலைமாற்றிக் கட்டும்போது இலையும் பிறழ்ந்து தோன்று மாதலால். வாங்கி-வலித்து. 14 எயில்-ஊர்; கோட்டையுமாம். 10. 'சீறூரோர் ஒண்ணுதல்' எனத் தூதுபோக விடுத்தற்குத் தன் வருத்தம் தோன்றக் கூறியது. புனைதார் வேந்தன்; பாடியவர் மதுரை எழுத்தாளனார். ஆதலால், வேப்பந்தாரானான பாண்டியனே என்று கருதலாம்; தார் பாண்டியனுக்கே உரியது!

**உள்ளுறை:** 'அயர்ந்துறங்கும் காட்டுப் பன்றியினை முல்லை மூடிக்கிடப்பதுபோலக், குமுறும் அவள் நெஞ்சகத்தை அவள் ஒளிநுதல் திரையிட்டுக் காட்டும்; நெற்பயன் கொள்வோர் மலர்களையும் துன்புறுத்துவது போலப், போர்த்தொழில் மேற்கொண்ட அரசனும், அவ்வீரர் தம் மனைவியரையும் பிரிவுத்துயரால் நலிவுறுமாறு வருத்துகின்றனன்' என்க.

## 85. ஆழல் வாழி தோழி!

**பாடியவர்:** *காட்டூர்க்கிழார் மகனார் கண்ணனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிய வேறுபட்ட தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.* **சிறப்பு:** *வென்வேல் திரையன்.*

*(தலைமகன் வினைமேற் பிரிந்தனனாக, அவனையே எண்ணி எண்ணி வருந்தினாள் தலைமகள். அவளுடைய நலிவினைப் போர்க்குமுகத்தால், மழைக் காலம் வந்ததெனக் காட்டித், தோழி, 'அவன் வருவான்' என்று வற்புறுத்துகின்றாள்.)*

**'நன்னுதல் பசப்பவும், பெருந்தோள் நெகிழவும்,**
**உண்ணா உயக்கமொடு உயிர்செலச் சாஅய்**
**இன்னம் ஆகவும், இங்குநத் துறந்தோர்**
**அறவர் அல்லர் அவர்'எனப் பலபுரிந்து,**
**ஆழல்-வாழி, தோழி!- 'சாரல்,** 5

**ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி,**
**கன்றுபசி களைஇய, பைங்கண் யானை**
**முற்றா மூங்கில் முளைதருபு, ஊட்டும்**
**வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை;**
**நல்நாள் பூத்த நாகுஇள வேங்கை** 10

**நறுவீ ஆடிய பொறிவரி மஞ்ஞை**
**நனைப்பசுங் குருந்தின் நாறுசினை இருந்து,**
**துணைப்பயிர்ந்து அகவும் துணைதரு தண்கார்,**
**வருதும், யாம்'எனத் தேற்றிய**
**பருவம் காண்அது; பாயின்றால் மழையே.** 15

*தோழி! நீ வாழ்வாயாக!*

*"எனது நறிய நுதலிலே பசலை படரவும், என்னுடைய பெரிய தோள்கள் மெலிவடையவும், உணவும் வெறுத்தமையால் ஏற்பட்ட துயரத்தோடு, உயிரும் உடலைவிட்டுப் போய்விடுமோ என்னுமளவுக்கு யான் மிகமிக மெலிந்துள்ளேன். நான் இந்நிலையினள் ஆகவும், இவ்விடத்தே நம்மை வாடவிட்டுப் பிரிந்து போன நம் தலைவர், இல்லற நெறியினைப் பேணுபவரே*

அல்லர்" என்று பலபல கூறித், தனிமைத் துயரிலே அழுந்தாதே கொள்!

ஈன்ற அணிமையினைக் கழிந்ததும், மெல்லென நடப்பதுமாகிய, தன் இளைய பிடியினதும் கன்றினதும் பசியினைப் போக்குவதற்குப், பசிய கண்ணினையுடைய களிறானது, மலைச் சாரலிலேயுள்ள முற்றாத மூங்கில் முளைகளைத் தேடிக் கொணர்ந்து, அவற்றை உண்பிக்கும், வெற்றி பொருந்திய வேலினையுடைய திரையனது, அத்தகைய வேங்கடமென்னும் நெடிய வரையினிடத்தே, நல்ல நாட்களிலேயே பூத்திருக்கின்ற, மிக இளைய வேங்கை மரத்தினது நறுமலர்களிலே ஆடிய, பொறிகளுடன் கூடிய வரிகளையுடைய மயிலானது, தேனையுடைய பசுமையான குருத்தமரத்தின் மணம் நாறும் கிளையிலேயிருந்து, தன் துணையை ஆர்வமுடன் அழைத்துக் கூப்பிட்டுக் கொண்டே இருக்கும். அத்தகைய குளிர்ச்சி மிகுந்த கார்காலத்திலே யாம் வந்துவிடுவோம் என நம் காதலர், நம்மிடத்தே தெளிவித்த பருவமும் இது ஆகும். அதனைப் போல அதோ மழையும் பெய்கின்றது; அதனைக் காண்பாயாக! (அவர் வருவர்; நீ ஆற்றியிருப்பாயாக என்க.)

**சொற்பொருள்:** *1. தோள் நெகிழவும்-தோள் மெலிதலால் தோள்வளை நெகிழவும், 2. உண்ணா உயக்கம்-பட்டினியால் வந்த மெலிவு. 6. நாள் உலந்த - நாள் முடிந்த. 10. நாகிள வேங்கை-மிக்க இளமையினுடைய வேங்கை. 11. ஆடிய-அளைத்தாடிய. 13. பயிர்ந்தகவும்-அழைத்தக் கூப்பிடும்: 'துணையை அழைத்தல்' பிரிவு தாளாது, தன்னைக் கூடி மகிழ்விக்க வருமாறு உருக்கத்துடன் கூவி அழைத்தல். இப்பாட்டு எதிர்காலம் நோக்கிற்று என்றறிக.*

**விளக்கம்:** வேங்கட மலையிலே, களிறு, பிடிக்கும் கன்றுக்கும் உணவுதேடித் தந்து நிற்பதையும், மயில் தன் துணையைத் தேடி அகவிக் கொண்டிருப்பதையும், வேங்கை பூத்ததால் மணம் பெறுங்காலம் வந்தது என்பதையும், அவனும் உணர்வான், அதனால் விரைந்து வருவான் என்க. இதனால், களவினிடையிலே விரைந்து பொருள்தேடி வந்து வரைந்து கொள்வேனெனப் போயினவன், வரக் காலந் தாழ்க்க வருந்திய காதலிக்குத், தோழி, 'அவன் வந்து வரைவான்' என உறுதி கூறியது என்க. களிறு பிடிக்கும் கன்றுக்கும் உணவு தந்து பேணுகின்ற நிலையும், அவனை இல்லற இன்ப நினைவிலே ஈடுபடுத்தும் என்க. காரணம், வரைந்து கொண்டன்றி அத்தகைய இணைந்த வாழ்வினைப் பெறமுடியாத நிலைமையால்.

## 86. அகமலி உவகையள்!

**பாடியவர்:** நல்லாவூர் கிழார். **திணை:** மருதம். **துறை:** வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக் கூடி இன்புற்றிருந்த தலைமகன், 'பண்டு நிகழ்ந்தது. சொல்லி' இன்புற்றிருந்ததுமாம். **சிறப்பு:** தமிழரின் பண்டைய திருமண நிகழ்ச்சிகளை முறையாகக் கூறுவது.

(திருமண நாளும் அன்றிரவு நடைபெறும் முதலிரவின் அனுபவமும் எவராலுமே என்றுமே மறக்க முடியாத அளப்பருஞ் சுவையுடையனவாகும். அந்தச் சுவையான நிகழ்ச்சிகளைத் தன் மனைவியோடு பின்னொரு நாளிற் சொல்லி மகிழுகிறான் தலைவன். 'அவள் அத்தகையள்; நீதான் மறுத்தனை' எனத் தோழியிடம் கூறியதாகவும் கொள்க.)

**உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை**
**பெருஞ்சோற்று அமலை நிற்ப, நிரைகால்**
**தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி,**
**மனைவிளக் குறுத்து, மாலை தொடரிக்,**
**கனைஇருள் அகன்ற கவின்பெறு காலைக், 5**

**கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்**
**கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென,**
**உச்சிக் குடத்தர், புத்தகன் மண்டையர்,**
**பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்**
**முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப், 10**

**புதல்வற் பயந்த திதலை!அவ் வயிற்று**
**வால்இழை மகளிர் நால்வர் கூடிக்,**
**'கற்பினின் வழாஅ, நற்பல உதவிப்**
**பெற்றோற் பெட்கும் துணையை ஆக'-என**
**நீரோடு சொரிந்த ஈர்இதழ் அலரி 15**

**பல்இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க**
**வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்,**
**கல்லென சும்மையர், ஞெரேரெனப் புகுதந்து,**
**'பேர்இற் கிழத்தி ஆக'எனத் தமர்தர;**
**ஓர்இற் கூடிய உடன்புணர் கங்குல், 20**

**கொடும்புறம் வளைஇக், கோடிக் கலிங்கத்து**
**ஒடுங்கினள் கிடந்த ஓர்புறம் தழீஇ,**
**முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப,**
**அஞ்சினள் உயிர்த்த காலை, யாழநின்**
**நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரை'என, 25**

**இன்நகை இருக்கை, பின்யான் வினவலின்-**
**செஞ்சூட்டு ஒணகுழை வண்காது துயல்வர**
**அகமலி உவகையள் ஆகி,முகன் இருத்து,**
**ஒய்யென இறைஞ்சி யோளே-மாவின்** 30
**மடம்கொள் மதைஇய நோக்கின்**
**ஒடுங்குஈர் ஓதி, மாஅ யோளே.**

உழுந்தினை நிறைக் கூட்டிச் சமைத்த, குழைவாக வெந்த, உளுத்தம் பருப்புப் பொங்கலின் பெரிய உருண்டைகளைக் கூடியிருந்தவர் உண்பது இடையறாது நிகழ்ந்து கொண்டே யிருந்தது. வரிசையாகிய கால்களிட்டு அமைத்த பெரிய பந்தரும் விளங்கிற்று. அதன்கீழ்த் தரையிலே மணலைக் கொணர்ந்து பரப்பி இருந்தனர். மனைவிளக்கினை ஒருபால் ஏற்றி வைத்திருந்தனர். எங்கும் மாலைகளைத் தொங்கவிட்டிருந்தனர்.

தீய கோள்களின் தொடர்பு நீங்கிய, வளைந்த வெண்மையான சந்திரனைக், கேடற்ற சிறந்த புகழையுடைய உரோகணி என்னும் நாள் வந்து அடைந்த, நல்ல நாள் அது. அந்நாளிலே, மிக்கிருந்த இருளும் நிங்கி எங்கும் அழகு மலரும் புலர்காலை வேளையும் வந்தது. உச்சியிலே நிறைநீர்க் குடத்தினை உடையவராகவும், கைகளிலே புதிய மண் கலயங்களை உடையவருமாக, மணத்தினைச் செய்து வைக்கும் ஆரவாரமுடைய மங்கல மகளிர்கள், கூடினர். 'முன்னே தருவனவும், பின்னே தருவனவும், அவர்கள் முறை முறையாகத் தந்து கொண்டிருந்தனர்.

மகனைப் பெற்றெடுத்த, தேமல் பொருந்திய அழகிய வயிற்றினையுடைய தூய அணிகளணிந்த மகளிர்கள் நால்வர் கூடி நின்றனர், 'கற்பினின்றும் வழுவாது, நன்றாகிய பல வகைகளினும் உதவியாக நின்று, நின்னை மனைவியாகப் பெற்ற நின் மணவாளனைப் பேணிக் காக்கும் துணைவியாக நீ ஆவாயாக!' எனக்கூறி அவளை வாழ்த்தினர். நீரோடு, குளிர்ந்த இதழ்களையுடைய பூக்களையும் நெல்வினையும் கலந்து; அவள் தலையிலே தூவினர். மிக்க கரிய அவள் கூந்தலிலே, அவை ஒருங்கே சேர்ந்து கிடந்தன. அங்ஙனம், மங்கல நீராட்டியபின், வதுவை மணமும் நிகழ்ந்து முடிந்தது. அதன் பின்னர்,

சுற்றத்தார் எல்லாரும், கல்லென்ற ஒலியினராய், விரைவோடும் வந்தனர். 'பெருமைக்கு உரிய இல்லக்கிழத்தி ஆவாய்' என, அவளை எனக்கு அளித்தனர். அதனையடுத்து, ஓர் தனி அறையிலே, நாங்கள் உடன்கூடிய புணர்ச்சிக்குரிய, முதல் இரவு வேளையும் வந்தது. அங்கே,

முதுகினை வளைத்துக் கொண்டவளாகக், கோடிப் புடவைக்குள்ளே அவள் ஒடுங்கிக்கிடந்த, மலரணையினைச் சார்ந்து, அவள் முதுகினைத் தழுவிக்கொண்டேன். அவளை அணைத்து மகிழ்கின்ற விருப்பத்தோடு, அவள் முகத்தைப் புதைத்திருந்த கைகளை மெல்லெனத் திறந்தேன். அஞ்சின வளாக, அவள், பெருமூச்சு உயிரித்தனள். அவ்வேளையிலே, 'நின் உள்ளத்திலே கருதியிருப்பதனை ஒளியாமற் சொல் வாயாக' என்று, அதன்பின் யானும் அவளை வினவினேன்.

இனிய மகிழ்வுடன் கூடிய, அம் மலரணையிலே, மாமை நிறத்தினையுடைய அவள், மானின் மடப்பத்தினைக் கொண்டதும், மதர்த்த நோக்கினை உடையதுமாகிய தன் கண்கள், குளிர்ந்த தன் கூந்தலினிடத்தே ஒடுங்கிய, சிவந்த மணிகள் பதித்த ஒள்ளிய குழை வளவிய காதின்கண் சென்று அசைய உள்ளத்திலே மிக்குப்பொங்கிய மகிழ்வினள் ஆக, முகத்தினை என் பிடியினின்றும் விலக்கி இழுத்துக் கொண்டு, ஒய்யெனத் தலைகவிழ்ந்தும் நின்றனள்!

**சொற்பொருள்:** 1. களிமிதவை-குழைதலையுடையதும் மாயமும் ஆம். 2. 'அமலை நிற்ப' என்றான், உண்பவரின் இடையறாமைபற்றி, 9. பொது-திருமணம் சமூகப் பொது விழாவாதலால், அதனை நிகழ்விப்பவராகிய பெண்டிர் என்க. 11-12. பிள்ளைபெற்ற மகளிர் நால்வர் கூடிக் குளிப்பாட்டிப் புத்தாடையணிதல் மரபு. 15. வதுவை நன்மணம்-குளித்து விட்டபின் நிகழ்வது, 20. உடன் புணர்தல்-கூடிப்புணர்தல்.

5. 'கனையிருள் அகன்ற'.... என்றது, பூர்வபட்சத்தையுடைய காலை. 21. கொடும்புறம்-நாணமிகுதியால் கூனிக்கிடந்த உடம்பு. 30. மதைஇய நோக்கு-செருக்கின நோக்கு.

**விளக்கம்:** 'எக்காலத்துமவள் என்னளவில் அன்புடைய வளே, அவளறிவது ஒன்றுண்டோ? உன் கொடுமையல்லவோ இந்த மாறுதல்?' எனத், தோழியோடு புலந்தான் எனக் கொள்ளுமாம்.

'இதனுள், வதுவைக்கு உரிய கரணங்கள் நிகழ்ந்தவாறும், தமர் கொடுத்தவாறும் காண்க. சுற்றஞ் சூழ்ந்து நிற்றலானும், தமர் அறிய மணவறை சேறலானும், களவாற் சுருங்கிநின்ற நாண் சிறந்தமையைப் பின்னர்த் தலைவன் வினாவ, அவள் மறுமொழி கொடாமையைத் தலைவன் தோழிக்குக் கூறியவாறும் காண்க. இதனானே, இது களவின்வழி நிகழ்ந்த கற்பாயிற்று என்றும், சரணத்தின் அமைந்து முடிந்தது' என்றும், நச்சினார்க்கினியர் விளக்கிக் கூறுவர்.

*பேராசிரியர், 'அகமலியுவ... யோளே' என்பது, 'சிதைவு பிறர்க்கின்மை' என்னும் மெய்ப்பாட்டிற்கு உதாரணமாகும் என்பர். இது, 'தலைமகன் அறிய மெய்ப்பட்டது என்பது' என்றும் கூறுவர். 'தமர்தர, ஓரிற்கூடி யுடன்புணர் கங்குல்' என்பது, 'தமரிற் பெறுதல்' என்றும் உரைப்பர்.*

*இந்த மணவிழாவிலே, சிலப்பதிகாரத்துப்போல 'மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிய' நிகழ்ச்சி ஏதும் இல்லை. நல்ல நாள் பார்த்தல், புத்தாடை உடுத்தல், பெருஞ் சோறளித்தல், மங்கல மகளிர் வாழ்த்தல், தமர் அளித்தல் போன்றவைகளே நிகழ்ந்துள்ளன.*

*'பண்டு நிகழ்ந்தது சொல்லி இன்புற்றது' எனும்போது, அதற்கேற்றவாறு கூட்டிப் பொருளுரைத்துக் கொள்க.*

## 87. நனி நீடு உழந்தனை!

**பாடியவர்:** *மதுரைப் பேராலவாயர்.* **திணை:** *பாலை.* **துறை:** *(1) வினைமுற்றி மீளும் தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குக் கூறியது. (2) இடைச்சுரத்து மீளலுறும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.*

*((1)வினைமுற்றி வீடுதிரும்பும் தலைமகன், தான் சுரநெறியாலும் பிரிவாலும் பட்ட துயரங்கள் தீர்ந்தன; இனிப் பிரியாது இன்புறுவோம் எனச் சொல்லுகின்றான். (2) இடைசுரத்திலே, நெஞ்சம் தன் தலைவியை நினைக்க, 'நான் இவ்வாறு வருந்தி வழிநடக்கும் காலத்து, என்னோடு துணை நிற்காமல், நெஞ்சமே, நீ அவளையே நினைத்தாயோ? அவளுடன் சேர்ந்து நீ மகிழ்வாயாக!' எனக் கூறினான் எனவும் கொள்க.)*

**தீந்தயிர் கடைந்த திரள்கால் மத்தம்**
**கன்றுவாய் சுவைப்ப, முன்றில் தூங்கும்**
**படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை,**
**நல்கூர் சீறூர் எல்லித் தங்கிக்,**
**குடுமி நெற்றி நெடுமரச் சேவல்** 5

**தலைக்குரல் விடியற் போகி, முனாஅது,**
**கடுங்கண் மறவர் கல்லெழு குறும்பின்**
**எழுந்த தண்ணுமை இடங்கட் பாணி,**
**அருஞ்சுரம் செல்வோர் நெஞ்சம் துண்ணெனக்,**
**குன்றுசேர் கவலை, இசைக்கும் அத்தம்,** 10

**நனிநீடு உழந்தனை மன்னே! அதனால்**
**உவஇனி-வாழிய, நெஞ்சே-மைஅற**

**வைகுசுடர் விளங்கும் வான்தோய் வியனகர்ச்**
**சுணங்குஅணி வனமுலை நலம்பா ராட்டித்,**
**தாம்இருங் கூந்தல்நம் காதலி** 15
**நீள்அமை வனப்பின் தோறுமார் அணைந்தே!**

நெஞ்சே! நீ வாழ்வாயாக.

இனிய தயிரைக் கடைந்த, திரண்ட தண்டினையுடைய தயிர் கடையும் மத்தானது, கன்று தன் வாயினாற் சுவைத்துக் கொண்டிருப்ப, இல்லத்து முற்றத்திலே தொங்கிக் கொண்டிருக்கும். மர நிழலாகிய பந்தரையும், புல்லால் வேயப்பெற்ற குடில் களையும் உடைய வறுமைப்பட்ட, அத்தகைய சிற்றூர்களிலே, இரவு வேளைகளிலே தங்கினோம்.

நீண்ட மரத்திலேயுள்ள, செஞ்சூடு பொருந்திய நெற்றியை உடைய சேவலின் முதற்குரல் எழுந்த விடியற் காலையிலேயே, அவ்வூர்களைவிட்டுப் புறப்பட்டு, மேற்கொண்டும் நடந்து சென்றோம்.

வன்கண்மையினையுடைய மறவர்களது, கற்கள் பொருந்திய பழைமையான காட்டரண்களிலே நின்றும் எழுந்த, தண்ணுமைப் பறையின் அகன்ற கண்ணினின்றும் பிறந்த ஒலியானது, அரிய சுரங்களின் வழியே செல்பவர்களின் நெஞ்சகங்கள் நடுங்குமாறு ஒலிக்கும். குன்றுகளைச் சார்ந்த கவர்த்த நெறிகளையுடைய, அத்தகைய காட்டினும், நெடுக நீ மிகவும் துயருற்றனை. அதனால்,

இருள் நீங்குமாறு, விடிவிளக்கு விளங்குகின்ற, வானளாவிய நம்முடைய பெரிய மாளிகையினிடத்தே, தாழ்ந்த கரிய கூந்தலையுடைய நம் காதலியின், சுணங்கு அணிந்த அழகிய முலையின் நல்லின்பத்தைப் பாராட்டி, நீண்ட மூங்கில் போன்ற அழகினையுடைய தோளினையும் அணைந்து, இனியாவது சென்று, நீயேனும் இன்புற்றிருப்பாயாக!

**குறிப்பு:** இரண்டு துறைகளுக்கும் ஏற்றவாறு கூட்டிப் பொருள் உரைத்துக் கொள்ளுக.

**சொற்பொருள்:** 3. படலைப் பந்தர்-தளைப்பரப்பாகிய பந்தர். 6. தலைக்குரல்-முதற்குரல். 13. வைகுசுடர்-விடிவிளக்கு; விடி விளக்கு வைக்கும் வழக்கம் பண்டும் உண்டு.

## 88. நன்னராளன்!

**பாடியவர்:** ஈழத்துப் பூதன்தேவனார்; ஏறத்துப் பூதன் தேவன் என்பதும் பாடம். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

(இரவுக்குறியிடத்தே, தலைமகன், தலைமகளைக் கூடிப் பிரிபவன், சிறைப்புறத்தே ஒதுங்கியிருப்பத், தோழி இவ்வாறு சொல்லுகிறாள். 'கானவர் அறிய நேரலால் களவு வெளிப்படும்' என்பதும், 'காட்டின் ஏதம் கருதித் தாம் அஞ்சினம்' என்பதும் புலப்பட, அவன் விரைந்து வந்து தலைவியை வரைந்து கொள்வதை வலியுறுத்துகிறாள் தோழி.)

**முதைச்சுவற் கலித்த மூரிச் செந்தினை**
**ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய, பாங்கர்ப்**
**பகுவாய்ப் பல்லி பாடுஓர்த்துக் குறுகும்**
**புருவைப் பன்றி வருதிறம் நோக்கி,**
**கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய** 5

**நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்து,நம்**
**நடுங்குதுயர் களைந்த நன்ன ராளன்**
**சென்றனன் கொல்லோ தானே-குன்றத்து**
**இரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்**
**கவுள்மலிபு இழிதரும் காமர் கடாஅம்** 10

**இருஞ்சிறைத் தொழுதி ஆர்ப்ப, யாழ்செத்து,**
**இருங்கல் விடர்அளை அசுணம் ஓர்க்கும்**
**காம்புஅமல் இறும்பில் பாம்புபடத் துவன்றிக்,**
**கொடுவிரல் உளியம் கெண்டும்**
**வடுஆழ் புற்றின வழக்குஅரு நெறியே!** 15

பழங்கொல்லையாகிய மேட்டு நிலத்திலே கொழுத்த செந்தினைப் பயிரானது தழைத்திருக்கும் இளமை பொருந்திய காட்டுப் பன்றியானது, அதன் உயர்ந்து வளைந்த பெரிய கதிரை உண்பதற்காகப் பிளந்த வாயினையுடைய பல்லி நல்ல பக்கத்தே ஒலித்ததான நல்ல நிமித்தத்தையும் உணர்ந்து, கொல்லையினை அணுகி வரும். வலிய கையினையுடைய கானவன், அப்படிப் பன்றி வருகின்ற வருகையினை எதிர் நோக்கியாவறு, அதனை ஓட்டுதற்குப் பரண்மீது நீண்ட பந்தங்களைக் கொளுத்தி வைத்திருப்பான். அந்தப் பந்தங்களின் ஒளியினைப் பார்த்துப் பார்த்து, நம் நடுக்கத்தைத்தரும் துயரினை ஒழித்த, நன்மை யாளனாகிய நம் தலைவனும், காட்டைக் கடந்து வந்தனன்.

குன்றின்கண் உள்ள பெரும்புலியைக் கொன்ற, பெரிய கையினையுடைய யானையினது கன்னத்தினின்று பெருகி வழியும் அழகிய மதநீரிலே, கரிய சிறகினையுடைய வண்டினம் மொய்க்கும். அதனை யாழிசை எனக்கருதிப், பெரிய மலைப் பிளவுகளிலேயுள்ள அசுணங்கள் உற்றுக் கேட்கும். மூங்கில் நிறைந்துள்ள அச் சிறுகாட்டிலே, வளைந்த விரல்களையுடைய கரடியானது, உள்ளிருக்கும் பாம்பும் இறந்துபடுமாறு, வடுக்கள்

பொருந்திய புற்றுக்களைத் தோண்டிக் கொண்டிருக்கும். அத்தகைய, செல்லுதற்கரிய நெறியின்கண்ணே, அவன் மீண்டும் சென்றனனோ?

**சொற்பொருள்:** 1. முதைச் சுவல்-தொன்மையான தினைக்கொல்லை. மூரித்தல்-கொழுத்தல். வணர்ப் பெருங்குரல்-தானிய மிகுதியால் தலைவளைத்து கிடக்கும் பெரிய தினைக்கதிர். 3. பாடு-ஒலி. 4. புருவை-இளமை. 5. கழுது-பரண். பன்றி, பல்லி நிமித்தம் பார்த்து வந்தாலும், காவலிருக்கும் கானவனுக்குத் தப்பாது என்பது கருத்து. 6. அச்சுடரே வொளியாகப் பார்த்து. 11. தொழுதி-கூட்டம்.

**விளக்கம்:** 'தினை நுகர்தற்குப் பன்றி நிமித்தம் பார்த்து வரினும், கானவன் அது வருந்திறமறிந்து சுடர் கொளுத்தினாற் போலத் தாமும் விழிப்புடன் வந்தனரேயாயினும், காவலர் அறிய, அவர் வரவும் வெளிப்படும் எனக் கருதிக் கலங்கினாள் என்க.

'மதயானையும், அசுணமும், பாம்பின் புற்றும், கரடியும் உடைய கொடுநெறியிற் செல்கின்றனனோ' என வழியின் ஏதங் கருதியும் நொந்தனள் என்க.

கேட்ட அவன், விரைந்து வரைந்து கொள்ளல் வேண்டும் என்பது பயன். 'கரடி புற்றாஞ்சோறாகிய தன் இரையினை உண்ணும் தன் காரியஞ் செய்யப், பாம்பு துயருற்றாற்போல, அவர் தம் காரியமாகிய களவின்பத்தையே நாடிவர, எழும் ஊரலரால் யாமும் துயருற்றோம்' எனவும் உரைக்க.

## 89. வல்லுநள் கொல்லோ!

**பாடியவர்:** மதுரைக் காஞ்சிப்புலவர். **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

(செல்லமாக வளர்த்த தன் மகள், தன் காதலனுடன் உடன்போக்கிலே சென்றுவிட, அதனை நினைந்து நினைந்து வருந்துகின்றாள் செவிலித்தாய். காட்டின் கொடுமைகளைத் தன் கண்முன் நிறுத்தி, 'அவள் மெல்லிய பாதங்கள் எங்ஙனம் அவ்வழியைக் கடந்து செல்லுமோ?' எனவும் கலங்குகிறாள்.)

**தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்தலின்,**
**உறுபெயல் வறந்த ஓடுதேர் நனந்தலை,**
**உருந்துஎழு குரல குடிஞைச் சேவல்,**
**புல்சாய் விடரகம் புலம்ப, வரைய**
**கல்லெறி இசையின் இரட்டும் ஆங்கண்,** 5

**சிள்வீடு கறங்கும் சிறியிலை வேலத்து**
**ஊழுறு விளைநெற்று உதிரக், காழியர்**
**கவ்வைப் பரப்பின் வெவ்வுவர்ப்பு ஒழியக்,**
**களரி பரந்த கல்நெடு மருங்கின்,**
**விளர்ஊன் தின்ற வீங்குசிலை மறவர்** 10

**மைபடு திண்தோள் மலிர வாட்டிப்,**
**பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய**
**திருந்துவாள் வயவர் அருந்தலை துமித்த**
**படுபுலாக் கமழும் ஞாட்பில், துடிஇகுத்து**
**அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தர்,** 15

**விலங்கெழு குறும்பில் கோள்முறை பகுக்கும்**
**கொல்லை இரும்புனம் நெடிய என்னாது,**
**மெல்லென் சேவடி மெலிய ஏக**
**வல்லுநள் கொல்லோ தானே - தேம்பெய்து**
**அளவுறு தீம்பால் அலைப்பவும் உண்ணாள்,** 20

**இடுமணற் பந்தருள் இயலும்,**
**நெடுமென் பணைத்தோள், மாஅ யோளே!**

*தேனைப் பெய்து அளாவிய இனிய பாலை, யான் அச்சுறுத்தியும் உண்ணாதவளாக, மணல்பரப்பிய பந்தரினுள்ளே அங்குமிங்கும் ஓடிக் கொண்டேயிருப்பவள்; நீண்ட மெல்லிய மூங்கில்போலும் தோள்களையுடைய, மாமை நிறத்தவளான எம் மகள். அவள், தான்*

*ஞாயிறானது, யாவற்றையும் பொசுக்கிடும் கடுங்கதிர்களுடன், முதுவேனிற் காலத்து இடைநாட்களிலே நிலைத்து நின்று எரித்தலால், மிக்க மழையினால் ஆகிய நீரும் வறண்டு போயின. பேய்த்தேர் ஓடும் அந்த அகன்ற இடத்தினையும் கடந்து, செல்பவளாவளோ?*

*சினத்துடன் எழுகின்ற குரலினையுடைய பேராந்தைச் சேவலானது, புல்லும் ஒழிந்த வெடிப்பிடங்கள் தனித்திடு மாறு, மலையினின்று கற்கள் உருண்டு விழும் ஓசைபோலக் கடுமையாக விட்டுவிட்டு ஒலித்துக் கொண்டேயிருக்கும் அந்த இடத்தினையும், அவள், கடந்து செல்பவளாவாளோ?*

*சிறிய இலைகளையுடைய வேலமரத்தினின்றும், முறையாக முற்றி விளைந்த நெற்றுக்கள் உதிர்ந்து கிடக்கும்; சிள்வீடு என்னும் வண்டு ஒலித்துக் கொண்டேயிருக்கும் ஆரவாரம் மிகுந்திருக்கும்; பரப்பினையுடைய இடமெல்லாம் வண்ணார்கள் வெவ்வுவர்ப்பு மண்ணினை எடுத்துப் போயினதால் களரி பரந்து கிடக்கும்; நெடுகக் கற்களைக் கொண்ட இடமாகவும் அது*

விளங்கும்; அத்தகைய காட்டு வழியினையும், அவள் கடந்து செல்பவளாவாளோ?

விசைகொண்ட வில்லினரான மறவர்கள், கொழுப்பினை யுடைய ஊனைத் தின்று, கருமை பொருந்திய தம் வலிய தோள்கள் பூரிக்கப், பாரம் மிகுந்த கழுதைகளின் நீண்ட நிரைகளைப் பின்பற்றி வரும், செப்பமுடைய வாளினைக் கொண்ட வீரர்களின் அருந்தலைகளைத் துணிப்பர். மிக்க புலால் நாற்றம் நாறும் அந்தப் போர்க்களத்திலே, தம் துடியினைத் தாழக் கொட்டியவாறே, அரிய அணிகலன்களைத் தமக்குத் திறையாகப் பெற்றுக் குவித்த, பெரிய போர்விருப் பினையுடைய வெற்றி வீரர்களான அவர்கள், விற்கள் நிரம்பிய அரணிடத்தே, அவற்றை, அவரவர் கொள்ளவேண்டிய பங்குகளாக, முறையே தமக்குள் பகுத்துக் கொள்வர்.

இடையிடையே தினைப்புனங்களையுடைய, அத்தகைய பெரிய காட்டின் வழியானது, நெடுந்தொலைவு பரந்துள்ளது என்றும் எண்ணாது, அவனோடும் அவள் கூடிச் சென்றனளே! அவளுடைய மென்மையான சிவந்த பாதங்கள் வருந்துமாறு, அவள் அதனைக் கடந்து செல்வதற்கும் வன்மையுடையவள் ஆவாளோ?

**சொற்பொருள்:** 1. வேனிற்காலத்து மாதம் இரண்டனுள் நடுவாகிய நாள் இருபது. 2. தேர் - பேய்த்தேர். 3. குடிஞை - பேராந்தை. 4. விடரகம் - மலைப்பிளவுகள். 5. இரட்டுதல் - விட்டுவிட்டு ஒலித்தல். 6. சிள்வீடு - ஒரு வகை வண்டு. கறங்கும் - ஒலிக்கும். 7. காழியர் - வண்ணார். 9. களரி - களர் நிலம். 10. விளர் - கொழுப்பு. 11. மலர - பூரிக்க. 14. ஞாட்பு - பாக்கக்காரரும் கள்ளரும் பொருத பூசற்களம். 17. கொல்லை இரும்புனம் - முன் புனமாக இருந்து கோடைக் காலத்தே காய்ந்து தரிசாகக் கிடக்கும் கொல்லைக் காடுகள்.

**விளக்கம்:** 'ஓடுதேர் நனந்தலையினையும், முட்கள் கிடக்கும் இடத்தையும், கல்லெறியிசையின் இரட்டுமவ்விடங்களையும், களறிபறந்த மருங்கினையும் உடைய, இரும்புனக் கொல்லை' எனக் காட்டிற்கு அடைவுபடுத்துக. 'செல்வமான இல்லத்தை விட்டுக் கொடிய காட்டு வழியூடும் போயினளே என வருந்தினள் செவிலித்தாய். மகளின் காதற்பெருக்கை வியந்ததுமாம்.

## 90. தளையவிழ் தாழை!

**பாடியவர்:** மதுரை மருதனிள நாகனார். **திணை:** நெய்தல். **துறை:** பகற்குறி வந்து கண்ணுற்று நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்பட்டு நின்று, இற்செறிப்பு அறிவுறீஇயது.

இது, 'பொருள் மிகக் கொடுத்தல் வேண்டும் என்கின்றது' என்பர், நச்சினார்க்கினியர். (தொல். பொருள் 114.)

('தலைவன், விரைந்துவந்து வரைந்து கொள்ளல் வேண்டுமென்பாள்' தோழி. தலைவி இற்செறிப்புற்றதும், ஊரலர் எழுந்ததும், அவளுடைய அழகினால் பலர் அவளை அடையப் போட்டியிடுவதும்' பற்றிக் கூறுகிறாள்.)

**மூத்தோர் அன்ன வெண்தலைப் புணரி**
**இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்**
**தளைஅவிழ் தாழைக் கானல்அம் பெருந்துறைச்**
**சில்செவித்து ஆகிய புணர்ச்சி அலர்எழ,**
**இல்வயிற் செறித்தமை அறியாய்; பன்னாள் 5**

**வருமுலை வருத்தா, அம்பகட்டு மார்பின்**
**தெருமரல் உள்ளமொடு வருந்தும் நின்வயின்,**
**'நீங்குக' என்று,யான் யாங்ஙனம் மொழிகோ?**
**அருந்திறற் கடவுட் செல்லூர்க் குணாஅது**
**பெருங்கடல் முழக்கிற்று ஆகி, யாணர், 10**

**இரும்புஇடம் படுத்த வடுவுடை முகத்தர்,**
**கருங்கட் கோசர் நியமம் ஆயினும்**
**'உறும்' எனக் கொள்குநர் அல்லர் -**
**நறுநுதல் அரிவை பாசிலை விலையே!**

கட்டவிழ்ந்த மடங்கள் பொருந்திய தாழைகள் செறிந்த கானற் சோலையையடுத்த, பெருந்துறையினிடத்தே, முதியவர் களைப்போல வெண்மையான தலையினை உடைய கடல் அலையானது, அக்கடற்கரையிலே, இளையவரான பெண்கள் இழைத்தாடும் வரிமனையினைச் சிதைக்கும். உங்கள் களவுக்கூட்டம், சிலர் செவிப்பட்ட மாத்திரத்தானே, அலராகி, ஊர் முழுவதும் பரவிற்று. அதனால், தாய், நின் காதலியை இல்லிடத்தே செறித்து விட்டதனையும் நீ அறிந்தாயில்லை!

பலநாளும், நின் அழகிய பெருமையுடைய மார்பகம், வளரும் முலையினையுடைய எம் தலைவியினால் முயங்கி வருத்தப் பெறாததனாற், கலங்கும் உள்ளத்தோடு வருந்தும் நின்னிடத்தே, 'அவளை மறந்துவிட்டுப் போய்விடுவாயாக' என்று, யானுந்தான் எவ்வாறு நினைக்கச் சொல்லுவேன்?

நறுநுதலினளான இவளுடைய பசிய அணிகட்கு விலையாக, அரிய வலிகொண்ட தெய்வங்களையுடைய செல்லூரின் கீழ்ப்பாலினதாகப், பெருங்கடல் முழக்கத்தினை உடைத்தாகிய படைக்கலம் இடம்படச் செய்திட்ட வடுக்களை யுடைய முகத்தினரான, அஞ்சாமையையுடைய கோசர்களது,

புதுவருவாயினையுடையதாகிய நியமம் என்னும் ஊரினையே கொடுத்தாலும், அஃது அமையும் எனக் கொள்பவர் அல்லரே, இவளுடைய பெற்றோர்!

**சொற்பொருள்:** *2. வரிமனை - பண்ணின சிற்றில். 4. சில் செவித்தாகிய புணர்ச்சி. 6. வருமுலை வருத்தா... வருந்தும் நின்வயின் என, வருத்தத்தை அவன்மீது ஏற்றியும் கொள்க. 9. அருந்திறற் கடவுள் செல்லூர் - அருந்திறற் கடவுள்கள் பலிபெறுதலையுடைய செல்லூர் என்க. 11. இரும்பிடம் படுத்த வடு - போரிலே முகத்திற்பெற்ற புண்களாகிய வடு. 13. கொள்குநர் அல்லர் - கொள்ளமாட்டார் ஆதலால், அவர் அன்பைப் பெறுக என்றாள். தாங்கள் அறத்தொடு நிற்றலால் அது கைகூடுவதாம் என்று சொல்லியதாகவும் கொள்க.*

**உள்ளுறை பொருள்:** *'மூத்தோர் இளையோரை வருத்தார். அது செய்யாது, புணரி இளையோர் மனைகளைச் சிதைக்கும். அதுபோலப், பெரிய அறிவுடைய நீர் சிறியேமாகிய எங்களை இங்ஙனம் வருத்துதலும் தக்கதன்று!' என்றனளாம்.*

*'களவினை மூத்தோர் சிதைத்தனர்; எனவே, வரைந்து மணந்து கொள்க; யாமும் அறத்தொடு நிற்றலால், அது எளிதிற் கைகூடுவதேயாம்' என்றனள்.*

## 91. நின் மாணலம் மறந்தே!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை மெலிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.* **சிறப்பு:** *குட்டுவன் புரந்த குடநாடு கோடையிலும் வளமிகுந்த நாடாயிருக்கும் என்பது.*

*('பொருள்மேற் காடும் கடந்து செல்லும் தலைவன். குடநாட்டையே பெறுவதாயினும். நின்னைப் பிரிந்து வாழ்வதை விரும்பான்; விரைவிலே நின்பால் வந்து சேர்வான்' என்று, தலைவிக்குத் தேறுதல் கூறுகிறாள் தோழி)*

**விளங்குபகல் உதவிய பல்கதிர் ஞாயிறு**
**வளம்கெழு மாமலை பயம்கெடத் தெறுதலின்,**
**அருவி ஆன்ற பெருவரை மருங்கில்**
**சூர்ச்சுனை துழைஇ நீர்ப்பயம் காணாது,**
**பாசி தின்ற பைங்கண் யானை** 5

**ஒய்பசிப் பிடியொடு ஒருதிறன் ஒடுங்க,**
**வேய்கண் உடைந்த வெயில்அவிர் நனந்தலை**
**அரும்பொருள் வேட்கையின் அகன்றனர் ஆயினும்,**

**பெரும்பேர் அன்பினர் - தோழி! - இருங்கேழ்**
**இரலை சேக்கும், பரல்உயர் பதுக்கைக் 10**

**கடுங்கண் மழவர் களவுஉழவு எழுந்த**
**நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்,**
**விசிபிணி முழவின் குட்டுவன் காப்பப்,**
**பசிஎன அறியாப் பணைபயில் இருக்கைத்,**
**தடமருப்பு எருமை தாமரை முனையின், 15**

**முடமுதிர் பலவின் கொழுநிழல் வசதியும்,**
**குடநாடு பெறினும், தவிரலர் -**
**மடமாண் நோக்கி!நின் மாண்நலம் மறந்தே!**

*தோழி! உலகமானது விளக்கமுறுவதற்குக் காரணமாகப் பகலினைத் தந்து உதவிய பல கதிர்களையுடைய ஞாயிறானது, வளம் கெழுமிய பெரிய மலைச்சாரல்களும் தம் பயன்கெட்டு ஒழியுமாறு, காய்ந்தது. அதனால், அருவிகள் ஏதும் இல்லை யாகிப்போன பெரிய மலைச்சாரல்களிலே, அச்சமூட்டும் சுனைகளைத் துழாவியும், அவற்றுள் யாதொன்றினும் நீர்ப்பயனைக் காணாது, பாசியினைத் தின்றது, பசிய கண்ணினையுடைய ஆண் யானை ஒன்று. வயிற்றிலே முடுகும் பசியோடு, அயலே அயர்ந்து கிடந்த தன் பிடியுடன்,'அதுவும் ஒரு பக்கத்தே ஒடுங்கிக் கிடக்கும். மூங்கில்களின் கணுக்கள் வெடித்துப் போகுமாறு, வெயில் எரித்துக் கொண்டிருக்கும் அகன்ற அப்பாலை நிலத்தினூடே, அரிய பொருள் வேட்கையின் காரணமாக, நம் தலைவர் நம்மை அகன்றும் போயினர். ஆயினும், அவர், நம்மீது பெரிதும் பேரன்பு உடையவரே ஆவர்!*

*கருநிறமான கொம்புகளையுடைய ஆண்மான்கள், உயர்ந்த கற்குவியல்கள் விளங்கும் பரல்களிலே தங்கிக் கிடக்கும், வன்கண்மையினையுடைய மழவர்கள் தம் களவாகிய உழவிற்கு எழுகின்ற இடம் அது. நீண்ட அடிமரத்தினையுடைய, ஆசினி மரங்கள் செறிந்த ஒடுங்காட்டிற்கு அப்பால், இறுகப் பிணித்த முழவினையுடைய குட்டுவன் என்பான் காத்து வருதலால், பசி என்பதனையே அறியாத, மருதவளம் மிக்க ஊர்கள் பல உள்ளன. வளைந்த கொம்புகளையுடைய எருமையானது, தாமரை மலர் களை உண்ணலை வெறுத்தால், வளைவுமிக்க முதிர்ந்த பலாவினது கொழுவிய நிழற்கண்ணே, அவ்விடத்துக் கிடந்து உறங்கும். அத்தகைய குடநாட்டினையே பெற்றாலும், மடமானைப் போன்ற நோக்கினையுடைய, நின்னுடைய மாட்சியுற்ற நலத்தினை மறந்துகை விடுபவர் அல்லர், அவர் (அதனால், நீயும் ஆற்றியிருப்பாயாக.)*

**சொற்பொருள்:** 1. பகல் உதவிய ஞாயிறு மலையின் பயனும் கெடத் தெறுதலின் எனக் கூட்டுக. நினக்கு அளி செய்த தலைவன், நின்னைப் பிரிந்து வருத்தலும் செய்தனனாயினன் என்பது கருத்து. 3. ஆன்ற - ஒழிந்த. 4. சூர்ச்சுனை - தெய்வங்களையுடைய சுனையுமாம். 5. பாசி - சுனையடியிலே பாசிபடர்ந்திருக்கும் சேறு. 6. ஒய்பசி - முடுகி வருத்தும் பசி. 9. இரு'கேழ் இரலை - கரிய நிறமுடைய ஆண்மானும் ஆம். 11. மழவர் - வீரர்; மழவர் என்னும் இனத்தவரும் ஆம். 10. பதுக்கை - கற்குவியல்; களத்திற் கண் பட்டாரைப் புதைத்து எழுப்பிய கற்குவியல்களுமாம். 12. ஒடுங்காடு - ஓர் ஊர்; உடைமரக் காடும் ஆம். 14. பணைபயில் இருக்கை - மருதவளஞ்சார்ந்த ஊர்; பெண்ணை செறிந்த கடற்கரையூரும் ஆம். 25. 'தாமரை முனையின் பலவின் கொழு நிழல் வசதியும்' என்றலால், குறிஞ்சியை அடுத்த மருத நிலம் அஃதென்க. 17. குடநாடு - சேரர் நாடுகளுள் எட்டனுள் ஒன்று.

**உள்ளுறை:** உண்ணும் உணவற்ற காலத்தும், களிறு பிடியைப் பிரியாது ஒருங்கிருக்கும். நிலையற்ற பொருள் நாடி நாம் தலைவியைப் பிரிந்தனமே என, அவனும் அழுங்குவான் என்க. மழவர் களவுழ எழுந்த ஒடுங்காட்டுக்கு உம்பர், வளநாடான குடநாடு விளங்குவது போலப், பிரிவுக்குப் பின்னால் நாமும் இன்புறுவோம் என்றனளே போலக், 'குடநாடு பெறினும்' என்றனள். 'அத்துணைப் பெருஞ் செல்வம் அடையப் பெற்றாலும்' என்றதாம்.

## 92. வாரல், வாழியர், ஐயா!

**பாடியவர்:** மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார். **திணை:** குறிஞ்சி **துறை:** இரவுக்குறி சென்று தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனைப், பகற்குறி நேர்ந்த வாய் பாட்டால், தோழி வரைவு கடாயது.

(இரவுக் குறியிலே வந்து ஒழுகும் தலைமகன், அதனையே நெடிதும் விரும்பக் கண்ட தோழி பெரிதும் கலங்கினாள். அதனால், 'நாளைப் பகலிலே இன்ன இடத்திற்கு வந்தால் இவளைக் கூடப் பெறுகுவை' எனப் பகற்குறி நேர்கிறாள். அஃது அருவிக்கரை ஆதலினாலும், பலரும் நீராட வருவாராதலாலும், காந்தளில் பூக்கொய்பவர் செறிவாராதலாலும், இடி முழக்கினாற் கார்காலம் தொடங்க, மகளிர் புனங்காவலுக்கு வர ஏதுவில்லாமையாலும், பகற்குறி மறுத்தலுமாகும்.)

**நெடுமலை அடுக்கம் கண்கெட மின்னிப்,**
**படுமழை பொழிந்த பானாட் கங்குல்,**
**குஞ்சரம் நடுங்கத் தாக்கிக், கொடுவரிச்**

**செங்கண் இரும்புலி குழுமும் சாரல்**
**வாரல் - வாழியர், ஐய! நேர்இறை** 5

**நெடுமென் பணைத்தோள் இவளும் யானும்**
**காவல் கண்ணினம் தினையே; நாளை**
**மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்**
**ஒண்செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்**
**தண்பல் அருவித் தாழ்நீர் ஒருசிறை,** 10

**உருமுச் சிவந்து எறிந்தஉரன்அழி பாம்பின்**
**திருமணி விளக்கிற் பெறுகுவை -**
**இருள்மென் கூந்தல் ஏமுறு துயிலே!**

*ஐயனே! நீ வாழ்வாயாக! நெடிய மலையடுக்குகளிலே எல்லாம் காண்பவர் கண்ணொளி கெடுமாறு, மின்னல்களும் ஒளிர்கின்றன. மிக்க மழையும் பொழிந்து கொண்டிருக்கிறது. இத்தகைய அடைமழை நாளில், நள்ளிரவிலே, யானையானது நடுங்குமாறு, அதனைத் தாக்கி வருத்திய, வளைந்த கோடுகளையும் சிவந்த கண்களையும் உடைய பெரும்புலிகள் முழங்குகின்ற, மலைச்சாரலின் வழியாக, இனியும் நீ இவ்விடம் கருதி வராதிருப்பாயாக.*

*அழகிய முன்கையினையும், நீண்ட மெல்லிய மூங்கிலை யொத்த தோளினையும் உடைய, நின் தலைவியாகிய இவளும் யானும், இனித் தினைப்புனம் காத்தலைக் கருதியிருக்கின்றோம். அதனால்,*

*நாளைப் பகல்வேளையிலே, மந்திகளும் ஏறி அறிய மாட்டாத உயர்மரங்கள் செறிந்த இருண்ட காட்டிலே, ஒள்ளிய செங்காந்தள் மலரவிழ்ந்திருக்கும் அவ்விடத்தே, குளிர்ந்த பல அருவிகள் வீழ்கின்ற தன்மையுடைய இடத்தின் ஒரு புறத்தே, இடி சினந்து தாக்கினதனால் வலியிழந்து கிடக்கும் பாம்பினது, அழகிய தலை மணியாகிய விளக்கொளியிலே, இருண்ட மெல்லிய கூந்தலினளான இவளிடத்தே, இன்பம் உறும் துயிலினையும் நீ அடைவாய். (அதனால், ஐயனே, இனிப் பகலிலேயே வருக.)*

**சொற்பொருள்:** *1. கண்கெட மின்னுதல் - மின்னலின் ஒளி கண்களைப் பறிக்கும் என்றலால். 2. படுமழை - அடை மழை. பானாள் - பாதி நாள். 4. குழுமும் - முழங்கும்; கூடித் திரியும் எனலும் ஆம். 5. நேர் இறை - இலக்கண நேர்மையுடைய அழகிய முன்னங்கை. 7. கண்ணினம் - கருதினம். 8. இறும்பு - அடர்ந்த காடு. 10. தாழ்நீர் - சுனையும் ஆம். 14 - 12. பாம்பின் திருமணி - நாகரத்தினம். 14. ஏமுறுதல் - இன்புறுதல்.*

## 93. முயங்குகம் சென்மோ!

**பாடியவர்:** *கணக்காயனார் மகனார் நக்கீரனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *வினைமுற்றி மீளலுறும் தலைமகன், இடைச்சுரத்துத், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.*

*'வணிகர் பொருள்வயிற் பிரிந்தவாறு' என்றும், 'புறத் திணைத் தலைவர் பலராய் அகத்திணைக்கண் அளவி வந்தது' என்றும், நச்சினார்க்கினியர் இதனைக் கூறுவர்.*

*"தன் ஆள்வினைக்குத் தக்க, 'பெண்மையான் அவள் ஆற்றியிருந்தாள்' என்பதூஉம், கருதிய கருத்தினாற் காமக் குறிப்புப் பிறந்தமை" என்பர், பேராசிரியர்.*

*(சென்ற வினைமுடித்துத் தன் இல்லத்தை நோக்கி விரைந்து வந்து கொண்டிருக்கின்றான் ஒரு தலைவன். இடை வழியிலே, அவன் நெஞ்சம் தன் அழகு மனைவியிடத்தே தாவிச் செல்லுகின்றது. தான் வினைமுடித்து வரும்வரையும், அவள் ஆற்றியிருந்த பிரிவுத்துயரம் நீங்க, ஆன் பொருநை மணலினும் பலவாக அவளைத் தழுவுவோம் என்று, தன் நெஞ்சிற்குள் சொல்லுகின்றான்.)*

**கேள்கேடு ஊன்றவும் கிளைஞர் ஆரவும்,**
**கேள்அல் கேளிர் கெழீஇயினர் ஒழுகவும்,**
**ஆள்வினைக்கு எதிரிய ஊக்கமொடு புகல்சிறந்து,**
**ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்**
**அறம்கெழு நல்அவை உறந்தை அன்ன** 5

**பெறல்அரு நன்கலம் எய்தி நாடும்**
**செயல்அருஞ் செய்வினை முற்றினம் ஆயின்,**
**அரண்பல கடந்த, முரண்கொள் தானை,**
**வாடா வேம்பின், வழுதி கூடல்**
**நாள்அங் காடி நாறும் நறுநுதல்** 10

**நீள்இருங் கூந்தன் மாஅ யோளொடு,**
**வரைகுயின் றன்ன வான்தோய் நெடுநகர்,**
**நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை**
**நிவந்த பள்ளி, நெடுஞ்சுடர் விளக்கத்து,**
**நலம்கேழ் ஆகம் பூண்வடுப் பொறிப்ப,** 15

**முயங்குகம் சென்மோ - நெஞ்சே! வரிநுதல்**
**வயம்திகழ்பு இழிதரும் வாய்புகு கடாஅத்து,**
**மீளி மொய்ம்பொடு நிலன்எறியாக் குறுகி,**
**ஆள்கோள் பிழையா, அஞ்சுவரு தடக்கைக்,**
**கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை** 20

**திருமா வியனகர்க் கருவூர் முன்துறைத்,**
**தெண்நீர் உயர்கரைக் குவைஇய**
**தன்ஆன் பொருநை மணலினும் பலவே!**

உறவினர்களுக்கு நேர்கின்ற கேடுகளை, நீக்கி, அவர்களைத் தாங்குதல் வேண்டும்; இளைஞர்களாயுள்ளவர் வயிறார உண்ணுதல் வேண்டும்; கேளிரும் அல்லாராய்ப் பிற வகையிலே உறவுடையாரும் கெழுதகைமையுடையவராக ஒழுகிவருமாறு செய்தல் வேண்டும்; இந்த எண்ணங்களால், பொருளீட்டும் முயற்சிக்குத் தூண்டிய ஊக்கத்துடன் நெஞ்சிலே விருப்பமும் மிகுந்தது.

ஆத்திமாலை, சூடும் அடும் போராற்றலினை உடைய சோழர்களது அறங்கெழுமிய நல்ல அவையினரை உடைய உறையூரைப்போன்று, பெறுதற்கரிய நல்ல கலன்களை அடைந்து, 'யாவரும் விரும்பும் செயற்கரிய செய்வினையினை முடித்தலும் வேண்டும்' எனவும் கருதினோம். அங்ஙனம் முடிக்கவும் செய்தோம். ஆயின், இனிப் பகையரண்கள் சென்று பலவற்றையும் வென்றிகொண்ட முரண்மிகுந்த தானையினை யுடையவனும், வாடாத வேப்பந்தாரினை உடையவனுமான பாண்டியனது, மதுரைநகரின் காலைக் கடைவீதியினைப்போல மணக்கும் நறிய நுதலையும், நீண்ட கருங்கூந்தலையும், மாமை நிறத்தையும் உடையவளாகிய நம் தலைவியுடன் சென்று சேர்வோம்.

மலையைக் குடைந்து இயற்றியதுபோன்ற வானளாவிய நெடுமனையினிடத்தே, நுரையை முகந்து அமைத்தாற் போன்ற மென்மையான மலரணையினையுடைய உயர்ந்த கட்டிலினி டத்தே, நெடிய விளக்கின் ஒளியிலே, நன்மை பொருந்திய நம் மார்பிலே, நம் தலைவியின் மார்பகத்துப் பூண்கள் வடுப்படுத்துமாறும், இறுகத் தழுவுவோம்.

வரிபொருந்திய நெற்றியினையும், வலிமை திகழ்தலால் முழக்கமிடும் தன் வாயிற்புகும் மதத்தினையும், கூற்றின் வலிமையுடன், நிலத்தின்கண்ணே சுருட்டி எறிந்து நெருங்கி வந்து ஆட்களைப் பற்றிக் கொல்லுதலைத் தப்பாத, அச்சம் வருகின்ற பெருங்கையினையுமுடைய, கூடிய பெரிய யானைப் படை யினையும், நெடிய தேர்ப்படையினையும் உடையவன் சேரமான். அச் சேரமானது, செல்வமிகுந்த சிறந்த அகன்ற நகரமாகிய கருவூரின் துறைமுன்னால், தெளிந்த நீரினையுடைய தண்ணிய ஆன் பொருநை என்னும் ஆற்றின் உயர்ந்த கரைகளிலே குவிந்துள்ள மணலினும் பலவாக, யாம் அவளைத் தழுவித்தழுவி மகிழ்வோம். அதனால், விரைந்து அவளிடத்தே செல்வாயாக, எம் நெஞ்சமே!

**சொற்பொருள்:** 2. கேளல் கேளிர் - ஏதிலார். 4. ஆரங் கண்ணி - ஆத்திமாலை. 8. முரண் - வெற்றிச் செருக்கு. 10. நாளங்காடி - பகற் கடைத்தெரு. 12. குயின்று - குடைந்து. 14. நிவத்தல் - உயர்தல். 17. வயம் - வலம். 18. மீளி - கூற்றுவன். 20. கடும்பகட்டுயானை - கடுமையான பெரிய யானை. 23. ஆன் பொருநை - பேராறு.

## 94. அன்பும் ஆர்வமும்!

**பாடியவர்:** நன்பலூர்ச் சிறுமேதாவியார். **திணை:** முல்லை. **துறை:** 1. வினைமுற்றி மீளும் தலைமகன் தன் தேர்ப்பாகனுக்குச் சொல்லியது; 2. தலைமகன் தன் பாங்கற்குச் சொல்லியது.

*(வினைமுற்றித் தன் இல்லம் நோக்கி மீளும் தலைமகன், தன் தேர்ப்பாகனுக்குத், தன்னுடைய உள்ளத்தின் நிலைமையைக் கூறித், தேரை விரையச் செலுத்துமாறு ஏவுகின்றான்.)*

**தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய**
**குவைஇலை முசுண்டை வெண்பூக் குழைய,**
**வான்எனப் பூத்த பானாட் கங்குல்,**
**மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்**
**தண்கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ, 5**

**வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன்,**
**ஐதுபடு கொள்ளி அங்கை காயக்,**
**குறுநரி உளம்பும் கூர்இருள் நெடுவிளி**
**சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய,**
**முதைப்புனம் காவலர் நினைத்திருந்து ஊதும் 10**

**கருங்கோட்டு ஓசை யொடு ஒருங்குவந்து இசைக்கும்**
**வன்புலக் காட்டநாட் டதுவே - அன்புலந்து**
**ஆர்வம் சிறந்த சாயல்,**
**இரும்பல் கூந்தல், திருந்திழை ஊரே!**

*அன்பினாலே உள்ளம் கலந்தவள்; என்னுடன் கூடி மகிழும் ஆர்வத்திலே சிறந்தவள்; நல்ல சாயலையும், கரிய பலவாகிய கூந்தலையும், திருந்திய இழையினையுமுடையவள், நம் தலைவி.*

*தேனடைகள் பொருந்திய மலையுச்சிகளின் பக்கலிலே, செறிந்த குவிந்த இலைகளையுடைய முசுண்டைச் செடியின் வெண்மையான பூக்கள், வானமானது விண்மீன்களைப் பூத்திருப்பது போலக் குழையப் பூத்து விளங்கும், நடு இரவின் இருளிலே, ஆட்டுக்குட்டிகளைச் சேரத் தொகுத்து வைத்துள்ள, ஓலைப்பாயை முதுகிற் கொண்டுள்ள இடையன், தண்மையான மணம் கமழும் முல்லைப் பூவினைத் தோன்றிப் பூவுடன் இணைத்து, வண்டு மொய்க்கும் நீர்வார்கின்ற கண்ணி யினனாகச், சுழன்று எரியும் கொள்ளியின் தீயிலே தன்*

உள்ளங்கைகளை வெதுப்பியவனாகக் கிடைகாத்திருப்பான். அவன், மிக்க இருளிலே ஆடுகளைக் கவரவரும் குரு நரிகளை அலைத்தோட்டும் நீண்ட ஒலியானது,

சிறு கண்களையுடைய பன்றிகளின் பெருங்கூட்டத்தை ஓட்டுவதற்கு, முற்றிய தினைப்புனங்களைக் காத்திருப்போர், அவை வருங்காலத்தை எண்ணியிருந்து ஊதும் பெரிய கொம்புகளின் ஒலியோடு, ஒருங்கே வந்து இசைக்கும், வன்புலமாகிய காட்டுநாட்டது அவளுடைய ஊர். ('பாக! விரைந்து தேரைச் செலுத்துவாயாக!' எனப் பாகற்கும், 'பாங்கனே சென்று தூது உரைத்து வருவாயாக' எனப் பாங்கற்கும் இயைபுபடுத்துக.)

**சொற்பொருள்:** தேம் - தேன். சிமயம் - மலையுச்சி. பம்பிய - செறிந்த. 2. குவையிலை - குவிந்த இலை. 4. மறித்துரூஉத் தொகுத்த - மறிகளைக் குடில்களிலே தொகுக்கும். பறி - பாய். 7. ஐதுபடுகொள்ளி - சுழன்று எரியும் நெருப்பு. 15 இரும்பல் கூந்தல் - பலவகையாக ஒப்பனை செய்யப்படும் கூந்தல்.

**விளக்கம்:** 'இச் செய்யுள் இருத்தல் நிமித்தமாம்; இக் காலம் வருந்துணையும் ஆற்றினாள், எனத்' தான் வருந்துதலின் என்பார், நச்சினார்க்கினியர்.

களவிற் பிரிவாதலால் இரவுக்குறியிலே தான் செல்லுதல் அலர் எழக் காரணமாகும் எனற்பொருட்டு, நரி ஓட்டும் இடையனையும், பன்றி கடியும் கானவனையும் கூறினன்; பாங்கன் துணையை நாடினன் என்க. பாகற்கு உரைத்ததாகக் கொள்ளின், அப்போதும் உறங்காது விழித்திருப்பவள் அவள் எனத் தொடர்பு படுத்துக.

## 95. பையபயப் பசந்தன்று!

**பாடியவர்:** ஒரோடோகத்துக் கந்தரத்தனார். **திணை:** பாலை. **துறை:** போக்குடன்பட்ட தலைமகள், தோழிக்குச் சொல்லியது.

(களவினால் ஊரலர் எழுந்தது. அன்னையோ, தெய்வத்தால் வந்தது எனத் தெய்வம் பராவி, இற்செறிப்பும் செய்தனள் கூட்டம் அருமையாகவே அவள் மெலிந்தாள். அதனைக் கூறித், தான் உடன்போக்கிற்குத் துணிந்தமையைத், தோழிக்குச் சொல்லு கிறாள். தலைவி.)

**பையப்பயப் பசந்தன்று நுதலும்; சாஅய்,**
**ஐதுஆ கின்று,என் தளிர்புரை மேனியும்,**
**பலரும் அறியத் திகழ்தரும் அவலமும்;**

**உயிர்கொடு கழியின் அல்லதை; நினையின்**
**எவனோ? - வாழி, தோழி! - பொரிகாற் 5**
**பொருகுட்டுஅரை இருப்பைக் குவிகுலைக் கழன்ற**
**ஆலி ஒப்பின் தூம்புடைத் திரள்வீ,**
**ஆறுசெல் வம்பலர் நீள்இடை அழுங்க,**
**ஈனல் எண்கின் இருங்கிளை கவரும்**
**சுரம்பல கடந்தோர்க்கு இரங்குப என்னார், 10**
**கௌவை மேவலர் ஆகி,'இவ் ஊர்**
**நிரையப் பெண்டிர் இன்னா கூறுவ**
**புரைய அல்ல,என் மகட்கு'எனப் பரைஇ,**
**நம்உணர்ந்து ஆறிய கொள்கை**
**அன்னை முன்னர், யாம்என், இதற்படலே? 15**

*தோழி! நீ வாழ்க! என் நெற்றியும் மெல்ல மெல்லப் பசந்துவிட்டது. தளிரையொத்த என் மேனியும், தளர்வுற்று, நாளுக்குநாள் மெலிந்து நுண்ணிதாகின்றது. என்துயரமும், பலரும் கண்டறியுமாறு விளங்கித் தோன்றுகிறது. இவை எல்லாம், என் உயிரைக் கொண்டு போவனவேயல்லாது, நினைத்துப் பார்த்தால், வேறு என்னதான் செய்வனவோ?*

*பொரிந்த அடியினையும், கொட்டைகளையுடைய அரையினையுமுடைய இருப்பையினது குவிந்த குலையினின்றும் கழன்ற, பனிக்கட்டிபோலும் உட்டுளையினையுடைய திரண்ட பூக்களை, வழிச் செல்வோரான புதியவர்கள், அந் நெறியிடத்தே மேற்செல்லுதலை அஞ்சிப் போக்கினைத் தவிருமாறு, ஈன்ற கரடிகளின் பெருங்கூட்டம் கவர்ந்து உண்டு கொண்டிருக்கும். அத்தகைய பல சுரங்களையும் கடந்து செல்லும் தலைவர்களின் பொருட்டுத், தலைவியர் இரங்குவது இயல்பே என்றும், அவர் எண்ணாராயினர்.*

*ஊரலர் தூற்றலையே விரும்புபவராகி, இவ்வூரிலே நிறைந்திருக்கும் அலவற் பெண்டிர்கள் இன்னாத சொற்கள் பலவும் கூறுவர். என் மகட்கு அவை பொருந்துவனவே அல்ல என்று கூறித், தெய்வத்தினைப் பராவி, நம் களவு ஒழுக்கத்தினை உணர்ந்தும், அமைதியுற்றிருக்கும் கொள்கையினை உடையவள், நம் அன்னை! அவளின் முன்னர், யாம், மேலும் இக்களவொழுக்கத்திலேயே ஈடுபட்டிருத்தல்தான் எங்ஙனம் இயலும்? (அதனால், அவனுடன் போகத் துணிந்துவிட்டேன் என்கிறாள் தலைவி.)*

**சொற்பொருள்:** *1. பையப்பய - மென்மெல. சாஅய் - தளர்வுற்று. 8. வம்பலர் - புதியவர். 9. எண்கு - கரடி. 13. புரைய - மேன்மையுடையன.*

**விளக்கம்:** 'சுரம்பல கடந்தோர்க்கு இரங்குவோம்' என்னார், இவ்வூர் நிரையப் பெண்டிர் கௌவை மேவலராகி இன்னா கூறுவர். புரைய அல்ல என் மகட்கெனப் பரைஇ, நம்முணர்ந்து ஆறிய கொள்கை அன்னை முன்னர், யாம் இதற்கண் படுதல் என்னவோ?' எனத், தோழி உடன்போக்கினைத் தடுக்க முயன்றதாகவும் கொள்ளலாம்; கௌவை - பழிச் சொல்.

## 96. பலர் வாய்ப்பட்ட அலர்!

**பாடியவர்:** மருதம் பாடிய இளங்கடுங்கோ. **திணை:** மருதம். **துறை:** தோழி வாயின்மறுத்தது. **சிறப்பு:** அஃதை தந்தையராகிய சோழர்; பருவூர்ப் பறந்தலைப் போர்.

*(பரத்தையுடன் கூடியபின், வீடு நாடிவரும் தலைவன், தோழியின் மூலம் கூட்டத்தை நாடுகின்றான். அவளோ, அவன் செயலால் ஏற்பட்ட ஊரலரை உரைத்து, வாயில் மறுத்து நிற்கின்றாள்.)*

**நறவுண் மண்டை நுடக்கலின் இறவுக்கலித்துப்,**
**பூட்டுஅறு வில்லிற் கூட்டுமுதல் தெறிக்கும்**
**பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்**
**அரவாய் அன்ன அம்முள் நெடுங்கொடி**
**அருவி ஆம்பல் அகல்அடை துடக்கி,** 5

**அசைவரல் வாடை தூக்கலின், ஊதுஉலை**
**விசைவாங்க தோலின், வீங்குபு ஞெகிழும்**
**கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர!**

**'ஒண்தொடி ஆயத் துள்ளும்நீ நயந்து**
**கொண்டனை' என்ப'ஓர் குறுமகள்'; அதுவே-** 10

**செம்பொற் சிலம்பின், செறிந்த குறங்கின்,**
**அம்கலுழ் மாமை, அஃதை தந்தை,**
**அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்,**
**வெண்ணெல் வைப்பின் பருவூர்ப் பறந்தலை,**
**இருபெரு வேந்தரும் பொருதுகளத்து ஒழிய,** 15

**ஒளிறுவாள் நல்அமர்க் கடந்த ஞான்றை,**
**களிறுவர் கம்பலை போல,**
**அலர்ஆ கின்றது, பலர்வாய்ப் பட்டே!**

*கள் உண்ணும் மொந்தைகளைப் பொய்கைகளிலே கழுவுதலால், அந்நீருட் கிடக்கும் இறால் மீன்கள் செருக்குடைய வாகிப், பூட்டிய நாண் அறுபடும் வில் தெறிப்பது போலத் தெறித்துக், கரைகளிலேயுள்ள நெற்கூடுகளின் அடிப்புறங் களிலே வீழ்ந்து கிடக்கும், மருதநிலத்துப் பொய்கையின்*

அடைகரையிலேயுள்ள, அரத்தின் வாய் போன்ற கூர்மையான முட்களையுடைய பிரம்பினது நீண்ட கொடியானது, அருவி யிடத்துள்ள ஆம்பலது அகன்ற இலையினைச் சுற்றிக் கொள்ள, அசைந்துவரும் வாடைக் காற்று அவ்விலையைத் தூக்கலின், கொல்லன் உலையிலே ஊதப் பெறும், விசைத்து இழுத்துவிடும் தோலினைப்போல, அவ்விலை புடைத்துப் புடைத்துச் சுருங்கும். அத்தகைய வயல்களையும் தோட்டங்களையும் உடைய, காஞ்சி மரங்கள் செறிந்த ஊரையுடைய, தலைவனே!

'ஒள்ளிய தொடியினையுடைவராகிய பரத்தையர் கூட்டத்தினுள்ளே, நீ ஓர் இளைய மகளை விரும்பி மணந்து கொண்டனை' என்று, ஊரரர் சொல்வார்கள்!

செம்பொன்னாலாகிய சிலம்பினையும், குறங்குசெறி பூட்டிய தொடைகளையும், அழகொழுகும் மாமை நிறத்தினையும் உடையவள், அஃதை என்பவள். அவள் தந்தையர், பெருமை தங்கிய யானைகளையும், வெல்லும் பேராற்றலையு முடைய சோழர்கள். வெண்ணெல் விளையும் இடங்களையுடைய பருவூர்ப் போக்களத்திலே, 'சேர பாண்டியராகிய இருபெரு வேந்தரும், தம்முடன் போரிட்டுக் களத்திலேயே வீழ்ந்துபட, ஒளிரும் வாளினால் நல்ல போர் வெற்றியும் அவர்கள் பெற்றனர். அப்போது, தோல்வியுற்றாரின் களிறுகளை அவர்கள் கவர்ந்து கொண்டபோது எழுந்த ஆரவாரம் போலப், பலராலும் பேசப்பட்டு, நின் செயலும் ஊரலராகின்றதே! (அதனைக் காண்பாயாக)

**சொற்பொருள்:** 1. மண்டை - கலயம், மொந்தை. இறவு - இறால் மீன். கலித்தல் - துள்ளுதல். 3. பழனம் - மருத நிலம். 7. வீங்குபுஞெகிழும் - புடைத்துச் சுருங்கி நெகிழும். 10. குறுமகள் - இளைய மகள். 17. கம்பலை - ஆரவாரம். 18. பலர் வாய்ப்படல் - பலராலும் சுட்டிப் பேசப்படுதல், அலர்.

**உள்ளுறை:** 'நறவுண்ட இறால்கூட்டுமுதல் தெறிக்கும்' அதுபோல, நின் பாணனால் இசைவிக்கப் பெற்ற பரத்தை யானவள், தான் இருந்த மனையையும் விட்டு, நின் போதையினால் செருக்கி, எமக்கும் போட்டியாகத் திகழ் கின்றாள் என்க.

'பிரப்பங் கொடியினால் சுற்றப்பட்ட ஆம்பல் இலை வாடை அசைத்த வழியெல்லாம் அலைவதுபோல, நீயும் நின் பாணனால் சூழப்பட்டுப் பரத்தைமைகொண்டு அலை கின்றனை' என்க.

## 97. ஆழேல் என்றி தோழி!

**பாடியவர்:** *மாமூலனார். ஔவையார் எனவும், குடவுழுந்தனார் எனவும் பாடங்கள்.* **திணை:** *பாலை.* **துறை:** *வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் கூறியது.*

*('தலைவன் வந்துவிடுவான், நீ வருந்தி மெலியாதே' என்று, தலைவியைத் தேற்ற முயல்கிறாள் தோழி. அவளோ, இளவேனிற் பருவத்தையும், மாம்பூக்களைக் கோதும் குயிலின் குரலினையும் சுட்டி, "எப்படியும் என் கண்ணீரை என்னால் நிறுத்த முடியும்?" என்கிறாள். காதலியின் உள்ளத்துயரைக் காட்டும் சிறந்த பாடல் இது.)*

**'கள்ளிஅம் காட்ட புள்ளிஅம் பொறிக்கலை**
**வறன்உறல் அம்கோடு உதிர, வலம்கடந்து,**
**புலவுப்புலி துறந்த கலவுக்கழிக் கடுமுடை**
**இரவுக்குறும்ப அலற நூறி, நிரைபகுத்து,**
**இருங்கல் முடுக்கர்த் திற்றி கெண்டும் 5**

**கொலைவில் ஆடவர் போலப், பலவுடன்**
**பெருந்தலை எருவையொடு பருந்துவந்து இறுக்கும்**
**அருஞ்சுரம் இறந்த கொடியோர்க்கு அல்கலும்,**
**இருங்கழை இரும்பின் ஆய்ந்துகொண்டு அறுத்த**
**நுணங்குகட் சிறுகோல் வணங்குஇறை மகளிரொடு 10**

**அகவுநர்ப் புரந்த அன்பின் கழல்தொடி,**
**நறவுமகிழ் இருக்கை, நன்னன் வேண்மான்**
**வயலை வேலி வியலூர் அன்னநின்**
**அலர்முலை ஆகம் புலம்பப்பல நினைந்து,**
**ஆழேல், என்றி - தோழி! யாழஎன் 15**

**கண்பனி நிறுத்தல் எளிதோ - குரவுமலர்ந்து,**
**அற்சிரம் நீங்கிய அரும்பத வேனில்**
**அறல்அவிர் வார்மணல் அகல்யாற்று அடைகரைத்**
**துறைஅணி மருது தொகல்கொள ஓங்கிக்,**
**கலிழ்தளிர் அணிந்த இருஞ்சினை மாஅத்து 20**

**இணர்ததை புதுப்பூ நிரைத்த பொங்கர்ப்**
**புகைபுரை அம்மஞ்சு ஊர,**
**நுகர்குயில் அகவும் குரல்கேட் போர்க்கே?**

*"கள்ளிகள் நிறைந்த அழகிய காட்டினிடத்தே, புள்ளிகளாகிய அழகிய பொறிகளையுடைய கலைமானை, வறட்சியுற்ற அதன் அழகிய கொம்புகள் உதிருமாறு, அதனைத் துரத்திக் கொன்று தின்ற, புலால் நாற்றமுடைய புலியானது கைவிட்டுப்*

போன, மூட்டுவாய் கிழிந்த கடுமையான் நாற்றத்தையுடைய, தசை கிடக்குமிடத்திலே,

பெருந் தலையினையுடைய எருவைகளோடு, பருந்துகள் பலவும் உடன்வந்து, இரவிலே காட்டரண்களிலேயுள்ளார் அலற, அவர்களைக் கொன்று, தாம் கைப்பற்றிக் கொண்ட ஆநிரைகளைத் தமக்குள் பகுத்துக் கொண்டு, பெரிய கற்பாறையின் முடுக்கரிலே தசையினைத் தின்று கொண்டிருக்கும். கொலை வில்லினையுடைய நிரைகவர்ந்த வீரர்களைப் போலச் சூழ்ந்திருக்கும், கடத்தற்கரிய அத்தகைய சுரநெறியைக் கடந்து சென்ற, கொடியோரின் பொருட்டாக, நாள்தோறும்

பெரிய மூங்கில்களையுடைய சிறு காட்டிலே, ஆராய்ந்து கொண்டு அறுத்த சிறிய கணுக்களையுடைய சிறு மூங்கிற் கோலைக் கொண்ட, வளைந்த முன்கையினையுடைய மகளிர்களோடு, பாடிவரும் பாணர்களைப் புரந்திடும் அன்பினையும், கழலும் தொடியினையும், கள்ளுண்டு மகிழும் இருக்கையினையுமுடைய நன்னன் வேண்மானது, வயலைக் கொடிகள் சூழவும் வேலிபோற் படர்ந்து கிடக்கும் வியலூரினைப் போன்ற, நினது பரந்த முலைகளையுடைய மார்பகம், பசலையால் உண்ணப்பட்டு வருந்தப், பலவும் நினைந்து நினைந்து ஆழ்ந்திடாதே" என்றனை. தோழி! இஃது என்னையோ?

குரவம் மலர்ந்து, முன்பனிக் காலமும் நீங்கிப்போயின. அரிய செவ்வியையுடைய இளவேனிற் காலம் இது. அறல் விளங்கும் நீண்ட மணலையுடைய, அகன்ற ஆற்றின் கரையிடத்தே, துறைக்கு அணிசெய்யும் மருதமரங்களுடன், தொகுதிப்படும்படியாக உயர்ந்து அழகு ஒழுகும் தளிர்களைக் கொண்டிருக்கும் பெரிய கிளைகளையுடைய மாமரத்திலே, கொத்துக்களாகப் புதுப் பூக்கள் செறிந்திருக்கும் சோலைகளிலே, புகையினைப் போன்ற வெண்மேகங்கள் தவழ, அப்பூக்களை நுகர்ந்து கொண்டிருக்கும் குயில்கள், தம் துணைகளை விரும்பியவாக அகவிக் கொண்டிருக்கும். அக் குரலினைக் கேட்போருக்குத் தம் கண்களிலே வடியும் நீரை நிறுத்துதலும் எளிதாகுமோ? (கூறுவாயாக.)

**சொற்பொருள்:** 2. வறனுறல் அங்கோடு - உறுதியுற்ற அழகிய கோடும் ஆம். 4. குறும்பு - காட்டரண். 5. முடுக்கர் - சந்து. திற்றி - உணவு. கெண்டும் - உண்ணும். 8. அல்கலும் - நாடோறும். 9. இறும்பு - சிறுகாடு. 10. நுணங்கு கண் - சிறுகண். 11. அகவுநர் - பாணர். அற்சிரம் - முன் பனிக் காலம். 19. தொகல் கொள - தொகுதி கொள்ள. பாணரும் விறலியரும் கையிலே மூங்கிற்

சிறுகோலை உடையவராயிருப்பர். இருவகை வேனிலும் வந்த் பாடல் இது.

## 98. ஆடியபின்னும் வாடியமேனி!

**பாடியவர்:** *வெறிபாடிய காமக்கண்ணியார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *1. தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது. 2. தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.*

*(தன் மேனியின் வாட்டங்கண்டு, அன்னை வெறியாடலுக்கு வேண்டுவன செய்யத், தலைவி இவ்வாறு கூறி வருந்துகிறாள். கேட்ட தலைவன், அவளை அவ்விடர்ப் பாட்டினின்றும் நீக்கக் கருதியவனாக, வந்து மணந்து கொள்வான் என்பது கருத்து.)*

**பனிவரை நிவந்த பயம்கெழு கவாஅன்**
**துனிஇல் கொள்கையொடு அவர்நமக்கு உவந்த**
**இனிய உள்ளம் இன்னா ஆக,**
**முனிதக நிறுத்த நல்கல் எவ்வம்**
**சூர்உறை வெற்பன் மார்புஉறத் தணிதல் 5**

**அறிந்தனள் அல்லள், அன்னை; வார்கோல்**
**செறிந்துஇலங்கு எல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்,**
**கையறு நெஞ்சினள் வினவலின், முதுவாய்ப்**
**பொய்வல் பெண்டிர் பிரப்புஉளர்பு இரீஇ,**
**'முருகன்ஆர் அணங்கு' என்றலின், அதுசெத்து 10**

**ஓவத் தன்ன வினைபுனை நல்இல்**
**'பாவை அன்ன பலர்ஆய் மாண்கவின்**
**பண்டையின் சிறக்க,என் மகட்கு'எனப் பரைஇ,**
**கூடுகொள் இன்இயம் கறங்கக்,களன் இழைத்து,**
**ஆடுஅணி அயர்ந்த அகன்பெரும் பந்தர், 15**

**வெண்போழ் கடம்பொடு சூடி, இன்சீர்**
**ஐதுஅமை பாணி இரீஇக், கைபெயராச்,**
**செல்வன் பெரும்பெயர் ஏத்தி, வேலன்**
**வெறிஅயர் வியன்களம் பொற்ப வல்லோன்**
**பொறிஅமை பாவையிற் றூங்கல் வேண்டின், 20**

**என்ஆம் கொல்லோ? - தோழி! - மயங்கிய**
**மையற் பெண்டிற்கு நொவ்வல் ஆக**
**ஆடிய பின்னும், வாடிய மேனி**
**பண்டையிற் சிறவாது ஆயின், இம்மறை**
**அலர்ஆ காமையோ அரிதே, அஃதான்று, 25**

**அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி,**
**வெறிகமழ் நெடுவேள் நல்குவ னேயெனின்,**
**'செறிதொடி உற்ற செல்லலும் பிறிது' எனக்**
**கான்கெழு நாடன் கேட்பின்,**
**யான்உயிர் வாழ்தல் அதனினும் அரிதே!** 30

*தோழி!*

*பனிமேகங்கள் தவழும், உயர்ந்த வளம்பொருந்திய பக்க மலையிடத்தே, வெறுப்பில்லாத கொள்கையுடன், மன்னர் நமக்கு உவந்த அவரது இனிய உள்ளம், இப்போது இன்னாவாக ஆயினமையின், நாம் சினங்கொள்ளுமாறு, நம்மிடத்தே அவர் நிலைபெறுத்திய அருள், 'வருத்தம்' ஒன்றேயாகும்.*

*தெய்வம் வாழுகின்ற மலையினை உடையவனாகிய, அவன் மார்பு உறுவது ஒன்றினாலேயே நம் நோய் தணிவதாதலை, நம் அன்னையும் அறிந்தனள் அல்லள்.*

*நீண்ட கோற்றொழில் அமைந்த, நெருங்கி விளங்கும் ஒளி பொருந்திய தோள்வளைகள், நெகிழ்வுற்ற நிலையினைப் பார்த்தாள். செயலற்ற உள்ளத்தினளாயினாள்; குறி கேட்கவும் தொடங்கினாள்.*

*முதுமை வாய்ந்தவரும், பொய் கூறலிலே வல்லவருமாகிய, கட்டுவிச்சியரான பெண்டிர்கள், பிரப்பரிசியைப் பரப்பிவைத்து, 'இது முருகனது செயலால் வந்த வருத்தம், என்று கூறலின், அதனையே வாய்மையாகவும் கருதினள்.*

*'ஓவியத்தைப் போலப் புனைந்த தொழிற்றிறங்களையுடைய நல்ல மனையிலே, பாவையைப் போலப் பலராலும் ஆராயப்பெறும் மாண்புற்ற அழகானது, என் மகளுக்குப் பண்டைய நாளிற்போலச் சிறப்புறுக' என்று, தெய்வத்தை வேண்டியும் பராவினள்.*

*இணைந்த பலவாய இனிய இயங்கள் ஒலிக்க, வேலனுக்கு வெறியாடும் களனை இழைத்து, ஆடுதற் கேற்றவாறு அழகு செய்த, அகன்ற பெரிய பந்தலே,*

*'வெள்ளிய பனந்தோட்டினைக் கடப்பமலரோடும் சூடியவனாக, இனிய சர் அழகியதாக அமைந்த தாளத்துடனே பொருந்தி, அடியவரைக் கைவிடாத முருகக் கடவுளின் பெரும் பெயர்களை ஏத்தித் துதித்து, வேலன் வெறியாடும் பெரிய களம், அழகு பெறுமாறு, 'வல்லோன் பொறியமைத்து ஆட்டுவிக்கும் பாவையைப்போல' ஆடுதலையும் விரும்பினால், என்ன ஆகுமோ?*

*வெறியாடுங் களத்திலே வந்து கூடிய, மயக்கம் பொருந்திய பெண்களுக்குத் துன்பம் உண்டாக, வேலன் ஆடிய பின்னரும்,*

என்னுடைய வாடிய மேனி முன்போலச் சிறந் திடாமற் போமாயின், இக் களவொழுக்கம், பலரும் தூற்றுமாறு வெளிப்படாதிருத்தலோ அரிதாகுமே!

அஃதல்லாமலும்,

அறிவுடையவராகிய நம் தலைவர் நமக்கு உறுவித்த அல்லலைக் கண்டு, அருள் கொண்டவனாகி மணம் கமழும் நெடுவேளாகிய வேலன், நம் முன்னைய அழகினைத் தந்தனன் என்றாலோ, 'செறிந்த தொடியுடையாள் உற்ற துன்பமும் பிறிதொன்றாற் போலும்?' எனக், காடுகெழுமிய நாடனாகிய தம் தலைவன் கேட்பானாயின், முற்கூறிய துன்பத்தினும் பெரிதாக யான் உயிருடன் வாழ்தலே அரிதாகி விடுமே!

**சொற்பொருள்:** 1. பனிவரை - குளிர்ந்த மலையும் ஆம். கவா அன் - பக்கம். 2. துனி - துன்பம். 4. முனிதக - சினங்கொள்ளுமாறு; வருந்துமாறு. நல்கலும் எவ்வமே என்க. 9. பிரப்புளர்பு இரீஇ - குறி சொல்வோர் பலபகுதியாகக் கூடையிலே அரிசியை முருகனுக்குப் பலியாக இட்டு வைத்தல். 14. கூடுகொள் - இணைந்து கொள்ளும் இயம் என்க. 16. வெண் போழ் - போழப்பட்ட பனந்தோடு. சீர் - தாள இறுதி. 19. வல்லோன் - பாவை செய்வதிலே வல்லவன். 20. பொறியமை பாவை - சூத்திரப் பாவை. 22. மையற் பெண்டிர் - மயங்கிய பெண்டிர்.

**விளக்கம்:** இது தலைவி கூற்றாதலே பொருத்தம் உடையதாகும். தோழி கூற்றாயின், 'தலைவிக்கு உறும் வருத்தம் தனக்கு உற்றதுபோலத் தோழி மேற்கொண்டு' கூறினாள் எனல் வேண்டும்.

## 99. நயவரும் கானம்!

**பாடியவர்:** பாலை பாடிய பெருங்கடுங்கோ. **திணை:** பாலை. **துறை:** உடன்போகிய தலைமகளைத் தலைவன் மருட்டிச் சொல்லியது.

(தன் தலைவியோடு உடன்போக்கிலே செல்லலுற்ற தலைவன், தன் காதலிக்கு வழிநடை வருத்தம் தெரியாதிருக்கக், காட்டின் அழகினைக் கூறி, அவளுக்குத் தெம்பு ஊட்டுகின்றான்.)

**வாள்வரி வயமான் கோளஉகிர் அன்ன**
**செம்முகை அவிழ்ந்த முள்முதிர் முருக்கின்**
**சிதரார் செம்மல் தாஅய், மதர்எழில்**
**மாண் இழை மகளிர் பூணுடை முலையின்**
**முகைபிணி அவிழ்ந்த கோங்கமொடு அசைஇ,நனை 5**

அதிரல் பரந்த அம்தண் பாதிரி
உதிர்வீ அம்சினை தாஅய், எதிர்வீ
மராஅ மலரொடு விராஅய்ப் பராஅம்
அணங்குடை நகரின் மணந்த பூவின்
நன்றே, கானம்; நயவரும் அம்ம, 10

கண்டிசின் வாழியோ - குறுமகள்! நுந்தை
அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பின்,
பிடிமிடை களிற்றின் தோன்றும்
குறுநெடுந் துணைய குன்றமும் உடைத்தே!

எம் குறுமகளே! நீ வாழ்வாயாக!

வாள்போலும் கோடுகளையுடைய வலிய புலியினது கொல்லும் நகத்தைப்போல, முள் நிறைந்த முருக்க மரத்தின் சிவந்த முனைகள் இதழ் விரிந்தன. அவற்றில் வண்டு மொய்க்க, வாடிய பூக்கள் கீழே உதிர்ந்தன. கதிர்த்த எழிலையும், மாண்புள்ள அணியினையுமுடைய மகளிரது, பூணிட்டு விளங்கும் முலையினைப்போல, முகைகள் அலர்ந்த கோங்கின் பூக்களோடு, கொத்துக்களாகிய புனலிப் பூக்களும் கூடிக் கலந்துகிடந்தன.

பரவிய அழகிய தண்மையான பாதிரியினது, அழகிய கிளையினின்றும் உதிர்ந்த பூக்களோடு தாவி மாறுபட்ட பூக்கள், மீண்டும் வெண்கடப்பம் பூக்களோடு விரவித்தாவின. பரவுக்கடன் பூண்ட அணங்குடைய கோயிலினிடத்தே கலந்து கிடக்கும் பூக்களைப்போல, இக்காடும், நல்ல அழகுடன், நமக்கு விருப்பமூட்டுவதாகத் திகழ்கின்றதனையும் காண்பாயாக.

மற்றும், நின் தந்தை பகைவரை அடும் போர்க்களத்துப் பாய்ந்து, தன் பூண்சிதைந்த கோட்டினை உடையவும் பிடிகள் சூழப் பெற்றனவுமாகிய களிறுகளைப் போலத் தோன்றும், சிறியவும் பெரியவுமாகிய அளவினையுடைய குன்றங்களையும் இஃது உடைத்தாயிருக்கின்றது! அதனையும் காண்பாயாக!

**சொற்பொருள்:** 1. வாள் வரி - ஒள்ளிய கோடும் ஆம். கோள் உகிர் -இரையைக் கொன்று குருதியிலே தோய்ந்த உகிரும் ஆகும். 3. மதர் எழில் - மதர்த்த எழில். பூரித்துப் பொங்கும் அழகு. 6. அதிரல் - புனலிப்பூ. 9. அணங்கு - தெய்வம். 10. நயவரும் - விருப்பந்தரும். 11. குறுமகள் - இளைய நங்கை. 12. அடுகளம் - போர்க்களம். தொடி - களிற்று மருப்பின் பூண். 14-15. பிடிமிடை களிற்றில் தோன்றும் குறுநெடுந் துணைய குன்றம் - பிடிபோற் குறுமையும், களிறுபோல் நெடுமையும் கொண்டு அடுத் தடுத்தாக நெருங்கியிருக்கும் பலவாகிய குன்றங்கள் என்க.

**விளக்கம்:** 'நுந்தை அடுகளம் பாய்ந்த' என்றதால், உடன்போக்கிலே சென்றவள் குறுநில மன்னன் மகள் என்றும், அவன் அரச குலத்து இளைஞன்' எனவும் உணரலாம்.

## 100. நாரை ஒலித்தன்ன அம்பல்!

**பாடியவர்:** உலோச்சனார். **திணை:** நெய்தல். **துறை:** தோழி வரைவு கடாயது. **சிறப்பு:** புறந்தைப் பெரியன்.

(இரவுக்குறி வந்து, கூடிப் பிரியும் தலைவனிடம், தோழி, ஊரலர் எழுந்ததையும், அதனால் தலைவி இற் செறிக்கப்படுவாள் என்பதையும் கூறி, அவனை விரைந்து வந்து தலைவியை வரைந்து மணந்து கொள்ளத் தூண்டுகின்றாள்.)

**அரையுற்று அமைந்த ஆரம் நீவிப்,**
**புரையப் பூண்ட கோதை மார்பினை,**
**நல்லகம் வடுக்கொள முயங்கி,நீ வந்து,**
**எல்லினில் பெயர்தல் எனக்குமார் இனிதே!**
**பெருந்திரை முழக்கமொடு இயக்குஅவிந் திருந்த** 5

**கொண்டல் இரவின் இருங்கடன் மடுத்த**
**கொழுமீன் கொள்பவர் இருள்நீங்கு ஒண்சுடர்**
**ஓடாப் பூட்கை வேந்தன் பாசறை**
**ஆடுஇயல் யானை அணிமுகத்து அசைத்த**
**ஓடை ஒண்சுடர் ஒப்பத் தோன்றும்** 10

**பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்,**
**பரியுடை நற்றேர்ப் பெரியன், விரிஇணர்ப்**
**புன்னைஅம் கானற் புறந்தை முன்துறை**
**வம்ப நாரை இனன்ஒலித் தன்ன**
**அம்பல் வாய்த்த தெய்ய - தண்புலர்** 15

**வைகுறு விடியற் போகிய எருமை**
**நெய்தல்அம் புதுமலர் மாந்தும்**
**கைதைஅம் படப்பைஎம் அழுங்கல் ஊரே!**

நறுமணம் கூட்டி அரைக்கப்பெற்று அமைந்த சந்தனத்தைப் பூசி, உயர்வறமாலையினைப் பூண்ட மார்பினையுடையவனாக, நீ இரவினிலே வந்து, நினது நல்ல மார்பகம் வடுக்கொள்ளுமாறு எம் தலைவியை முயங்கிப், பின்னர்ப் பெயர்ந்து போகுதல், எமக்கும் மிக இனிதேயாகும். ஆனால்,

பெரிய கடலானது, தனது முழக்கத்துடன் அலைகளின் அசைவும் ஒய்ந்து கிடந்த, மேகஞ் சூழ்ந்த இரவிலே, கரிய கடலிலே மடுத்த கொழுவிய மீனைக் கொணர்பவர், தம் படகு முனையிலே கட்டியிருக்கும் இருள்நீங்குதற்குக் காரணமாகிய

ஒளிபொருந்திய விளக்கம், புறமுதுகிடாத மேற்கோளினையுடைய வேந்தனின் பாசறைவிடத்தேயுள்ள, அடுதல் வல்ல யானையின் முகத்திலே பிணித்த ஓடையினது, ஒள்ளிய சுடர்போலத் தோன்றும், அத்தகைய இடமாகிய,

பாடி வருவாரைத் தன்னிடத்தேயே வளைத்துக் கொள்ளும், கைவண்மை வாய்ந்த கோமானாகிய, குதிரைகள் பூண்ட நல்ல தேர்களையுடைய பெரியன் என்பானது, மலர் விரிந்த பூங்கொத்துக்கள் நிரம்பிய புன்னை மரங்களையுடைய, அழகிய சோலை சூழ்ந்த புறையாற்றின் கடற்றுரையின் கண்ணுள்ள, புதிய நாரைக் கூட்டம் ஒலித்தாற் போல, ஊரலரும் எழுந்ததே.

'தண்ணென்று' பொழுது புலர்ந்திடும், இருள் தங்கிய விடியற்காலத்திலே வெளிச்சென்ற எருமையானது, நெய்தலின் புது மலர்களைத் தின்னும், தாழை வேலிகளையுடைய அழகிய தோட்டங்களையுடைய, எமது ஆரவாரமிக்க ஊரின்கண்ணே, அலரும் அங்ஙனம் எழுந்தனவே!

**சொற்பொருள்:** *1. ஆரம் - சந்தனம். 2. புரைய - உயர்வாக. 4. ஆர் - அசை. 6. கொண்டல் - மேகம். 8-10. படகு முனை விளக்கம் - யானைமுகத்துப் பொன் ஓடை போலத் தோன்றும் என்க. 13. புறந்தை - பொறையாறு என இந்நாளிலே வழங்கும். 14. வம்பநாரை - புதிய நாரை. 15. அம்பல் - அலர். 18. கைதழை - தாழை.*

**விளக்கம்:** *'மீன் கொள்வார் கொள்ளக், கடலும் ஒலி யவிந்திரக்க, வம்ப நாரை அலரும், அதுபோல, நீ இவளைக் களவலேகூட, இவள் பெற்றோரும் அறியாது வாளாயிருக்க, வம்ப மாக்கள் அலர் உரைக்கின்றனரே' என்க.*

## 101. முனிதகு பண்பு!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச் சொல்லியது. தோழி கிழத்திக்குச் சொல்லிய தூஉமாம்.*

*(தன் காதலன் தன்னைப் பிரிந்து சென்றுவிட மனங்கலங்கி வாடும் தலைவியின் நினைவுகள் பலபடியாகச் சுழல்கின்றன. அவற்றுள் ஒன்று இது என்றும் அவனுக்கு இன்பந் தந்தனமே யன்றி, 'அவன் வெறுக்கத்தக்கன யாதும் செய்தறியோமே? அவன் நம்மைக் கைவிட்டுப் போயினது தான் ஏனோ?' என்று சொல்லித் தோழியுடன் வருந்துகிறாள்.)*

**அம்ம வாழி, தோழி! 'இம்மை**
**நன்றுசெய் மருங்கில் தீதுஇல்' என்னும்**

**தொன்றுபடு பழமொழி இன்றுபொய்த் தன்றுகொல்?-**
**தகர்மருப்பு ஏய்ப்பச் சுற்றுப் சுரிந்த**
**சுவல்மாய் பித்தைச் செங்கண் மழவர் 5**

**வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்**
**தீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி,**
**நுரைதெரி மத்தம்கொளீஇ, நிரைப் புறத்து,**
**அடிபுதை தொடுதோல் பறைய ஏகிக்,**
**கடிபுலம் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர், 10**

**இனம்தலை பெயர்க்கும் நனந்தலைப் பெருங்காட்டு,**
**அகல்இரு விசும்பிற்கு ஓடம் போலப்,**
**பகலிடை நின்ற பல்கதிர் ஞாயிற்று**
**உருப்புஅவிர்பு ஊரிய சுழன்றுவரு கோடைப்,**
**புன்கான் முருங்கை ஊழ்கழி பன்மலர்? 15**

**தண்கார் ஆலியின், தாவன உதிரும்**
**பனிபடு பன்மலை இறந்தோர்க்கு,**
**முனிதகு பண்புயாம் செய்தன்றோ இலமே!**

*அம்ம! தோழி! வாழ்க!*

*'இம்மையிலே நல்லனவே செய்யுமிடத்து அவர்க்கு என்றுமே தீது வருவதில்லை' என்று சொல்லப்படும் தொன்றுதொட்டு வழங்கிவரும் பழமொழியும், இந்நாளிலே பொய்யாகிப் போயினது போலும்!*

*செம்மறியாட்டுக் கிடாயின் கொம்பினைப் போலச் சுருண்டு கடை சுரிந்த, பிடரியை மறைக்கும் தலைமயிரினையும், சிவந்த கண்களையும் உடையவர் மழவர்கள். அவர்கள், தம் வாயினின்று எழும் பகையினை, எழாமல் தடுக்கும் பொருட்டாகப் புற்று மண்ணைத் தம் வாயிலே அடக்கிக் கொள்வர். கடுமையான சக்திவாய்ந்த, நெருப்புண்டாக்கும் சிறிய அம்பினை, வில்லிலே தொடுத்துக் கைப்பற்றியவராகச் செல்வர். சென்று, வெண்ணெயை வெளிப்படுத்தும் தயிர்கடையும் மத்தினைக் கவர்ந்து கொள்வர். ஆநிரைகள் உள்ளவிடத்திலே, தம் காலடித் தடங்களை மறைக்கும் செருப்புக்கள் ஒலிக்குமாறு சென்று, காவல் மிகுந்த தொழுவங் களிலேயுள்ள கன்றுகளுடன் கூடிய பசுக் கூட்டங்களைக் கொள்ளையிடுவர். அப்படிக் கொள்ளையிட்ட ஆனினங்களை, அவர், தம்மிடத்திற்கு ஓட்டிக் கொண்டு போகும், அகன்று கிடக்கும் இடத்தையுடையது பெரிய காடு. அதன் கண்,*

*அகன்ற பெருவானாகிய கடலினைக் கடத்தற்குரிய ஓடத்தைப்போலப், பகல் வேளையிலே, வானிடையே*

நிலைபெற்றிருக்கின்ற பல கதிர்களையுடைய ஞாயிற்றின் வெப்பமானது விளங்கிப் பரக்கச், சுழன்றுவரும் மேல் காற்றினால், புல்லிய அடிமரத்தினையுடைய முருங்கை யினின்றும் முதிர்ந்து கழியும் பல பூக்கள், குளிர்ந்த கார் காலத்திலே விழும் ஆலங்கட்டியினைப்போலப் பரந்தனவாக, உதிர்ந்து கொண்டிருக்கும்.

நடுக்கமுண்டாக்கும் அவ்வழியினூடே, பன்மலையடுக்கு களையும் கடந்து சென்ற நம் தலைவனுக்கு, வெறுக்கத்தக்க பண்பு யாதும், நாம் செய்தோமில்லையே?

**சொற்பொருள்:** மருங்கில் - மறுமையிலுமாம். இவ்விடத்துப் பின்னாளில் என்க. 4. தகர் - செம்மறிக்கிடாய். 5. சுவல் - பிடரி. பித்தை - ஆணின் மயிர். மழவர் - மழவராகிய ஓரினத்தார். 6. வாய் பகை - இருமல் தும்மல் முதலியன 7. தீப்படு சிறுகோல் - கைப்பந்தமும் ஆம். 8. நுரை - வெண்ணெய்த் துளிர்கள். 9. தொடுதோல் - செருப்பு; தொடுக்கப்பட்ட தோல் என்க. பறைய - இரைச்சலிட. 10. கடிபுலம் - காவலுடைய இடம். 11. நனந்தலை - பரந்த இடம். 14. உருப்பு - வெம்மை. 17. பனிபடு - நடுக்கத்தைப் படுவிக்கும். 18. முனிதகு பண்பு - வெறுக்கத்தக்க, செய்யத்தகாத செயல்.

**விளக்கம்:** மலையிறந்தோர்க்கு முனிதகு பண்பு யாம் செய்தறியோம்; அங்ஙனமாகவும் அவர் வரைவினை நீட்டிக் கச்செய்து, நம்மை வருத்தமுறச் செய்கின்றார்; அதனால், 'நன்று செய் மருங்கில் தீதுஇல்' என்னும் பழமொழி இந் நாள் பொய்த்தது போலும் எனத் தலைவி கூறி வருந்தினாள் என்க. தோழி கூற்றாகக் கொள்வதானால், இப்படியே நாம் செய்திலமே எனக் கூறினளாம்.

## 102. முயங்கிப் பெயர்த்தனன்!

**பாடியவர்:** மதுரை இளம்பாலாசிரியன் சேந்தங்கூத்தன்; மதுரைப் பாலாசிரியர் எனவும் பாடம். **திணை:** குறிஞ்சி. **துறை:** இரவுக் குறிக்கண் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்லு வாளாய்த் தலைமகள் சொல்லியது.

'இது மனையகம் புக்கது' என்பர் நச்சினார்க்கினியர்.

(இரவுக் குறியிடத்தே, பலப்பல இடர்ப்பாடுகளையும் கடந்து வந்து, களவிலேகூடி மகிழ்ந்தவன், தன் சொற்படி வந்து தன்னை வரைந்து கொள்ளாமையினால், உள்ளம் வருந்துகிறாள் தலைவி. 'அன்று இன்சொல் அளைஇப் பெயர்ந்தனன்; தோழி, இன்று எவன்கொல்லோ கண்டிகும்?' என்ற ஏக்கத்தின் பெருக்கத்தை ஊன்றி உணர்க.)

**உளைமான் துப்பின், ஓங்குதினைப் பெரும்புனத்துக்**
**கழுதில் கானவன் பிழிமகிழ்ந்து வதிந்தென,**
**உரைத்த சந்தின் ஊரல் இருங்கதுப்பு**
**ஐதுவரல் அசைவளி ஆற்றக், கைபெயரா,**
**ஒலியல் வார்மயிர் உளரினள், கொடிச்சி** 5

**பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்**
**குரலும் கொள்ளாது, நிலையினும் பெயராது,**
**படாஅப் பைங்கண் பாடுபெற்று, ஒய்யென**
**மறம்புகல் மழகளிறு உறங்கும் நாடன்;**
**ஆர மார்பின் வரிஞிமிறு ஆர்ப்பத்,** 10

**தாரன் கண்ணியன், எஃகுடை வலத்தன்,**
**காவலர் அறிதல் ஓம்பிப், பையென**
**வீழாக் கதவம் அசையினன் புகுதந்து,**
**உயங்குபடர் அகலம் முயங்கித், தோள்மணந்து**
**இன்சொல் அளைஇப், பெயர்ந்தனள் - தோழி! -** 15

**இன்றுஎவன் கொல்லோ கண்டிகும் - மற்றுஅவன்**
**நல்கா மையின் அம்பல் ஆகி,**
**ஒருங்குவந்து உவக்கும் பண்பின்**
**இருஞ்சூழ் ஓதி ஒண்நுதற் பசப்பே!**

*தோழி! சிங்கம் போன்ற வலிமையினை உடைய கானவன், பெரிய தினைப்புனத்தின்கண் உயரமாக இடப்பட்டுள்ள பரணிலே, கள்ளுண்டு களித்து இருந்தனன். பூசிய மயிர்ச் சாந்தினையுடைய பரந்த கருங்கூந்தலை, மெல்லென அசைத்து வரும் காற்றுப் புகுந்து புலர்த்த, தழைத்து நீண்ட அக் கூந்தலைத் தன் கையினால் பெயர்த்துக் கோதியவளாக, அவன் மனைவியானவள், பெரிய வரைப்பக்கத்தே குறிஞ்சிப்பண் பாடினள். அதனைக் கேட்டுத் தான் கொண்ட தினைக்க திரினையும் உட்கொள்ளாது, நின்ற நிலையினின்றும் பெயராது, துயில்வரப் பெறாத தன் பசிய கண்களினும் துயில்வரப் பெற்று, வீரத்தின் புகலிடமாக விளங்கும் இளங்களிறு, ஒய்யென அவ்விடத்தேயே உறங்கிவிடும், அத்தகைய நாட்டையுடையவன் நம் தலைவன்!*

*சந்தனம் பூசிய மார்பிலே அழகிய வண்டுகள் மொய்க்கத் தாரனும், கண்ணியனும் வேலேந்திய வலக்கையினனுமாகக், காவலாளர் அறிதலையும் இயலாது கரந்து, தாழிடாத கதவைத் திறந்துகொண்டு, மெல்லென வீட்டினுள் வந்தான். யான்வருந்தும் துன்பம் நீங்கிப்போகத் தோளினைத் தழுவித் அணைத்துக் கூடினான். இனிமையான சொற்களைப் பேசி, அளவளாவி விட்டுப் பிரிந்தும் சென்றான்.*

இன்றோ, அவன், தான் சொன்னதுபோல வந்து நமக்கு அருளாமையினால், மகிழ்ச்சியைத் தரும் பண்பினையுடைய, கருங்கூந்தல் சூழ்ந்த ஒள்ளிய நுதலிலே, பசப்பும் ஒருங்கே வந்துசேர, அதனால் அலரும் ஆயிற்று. நாம் அவனோடு கூடிக் கண்டதுதான் என்னையோ?

**சொற்பொருள்:** 1. உளைமான் - சிங்கம். துப்பு - வலிமை. 2.கழுது - பரண். பிழி - கள். 3. உரைத்த சந்து - சந்தனச் சாந்து. 5. உளரினள் - கோதினள். கொடிச்சி - கானவர் மகள்; கானவனின் மனைவி. 6. குறிஞ்சி - குறிஞ்சிப் பண். 8. பாடுபெறுதல் - உறங்கப் பெறுதல். 9. மறம் புகல் மழகளிறு - வீரம் புகலிடமாக அமைந்த இளங்களிறு. 12. அறிதல் ஓம்பி - அறியாமல் தன்னைக் காத்த. 13. வீழாக் கதவம் - தாழ் வீழ்த்தாத கதவம். 19. இருஞ்சூழ் ஓதி - இரும் ஓதி சூழ் எனக்கூட்டுக.

**உள்ளுறை:** காவலை மறந்து, கள்ளுண்டு மயங்கினான் கானவன். அவன் பிரிவாற்றாது, அவனை நினைந்து பாடினாள் அவன் மனைவி. அவன், அதனைக் கேளாது கிடக்கவும், தினை கவர வந்த களிறு, அதனைக் கேட்டுத் தன் செயல் மறந்து உறங்கிக் கிடந்தது.

காவலைக் கடந்து நம்மை இன்புற்றுக் களித்தான் நம் தலைவன். அவனை நினைந்து நாம் புலம்புகின்றோம். அவனோ அதனை நினையானாயினான். ஆயின், அலர் உரைக்கும் பெண்டிரோ, தம் பிற வினைகளையும் மறந்து, அதனை எடுத்துப் பேசத் தொடங்கிவிட்டனர். இதனால், தலைவன் விரைந்து வேட்டு வருபவனாவான் என்பது குறிப்பு.

## 103. தம்மொடு சென்ற நலன்!

**பாடியவர்:** காவிரிப்பூம்பட்டினத்துச் செங்கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொன்னது.

*(அவர்தான் அருளின்றி நம்மைப் பிரிந்து போயினார். பசலையை எனக்குத் துணையாக வைத்துவிட்டு, என் அழகை யெல்லாம் தம்முடன் கொண்டுபோய் விட்டாரே; அதனையாவது எனக்கு அவர் மீண்டும் தாராரோ?' என்று, புலம்புகிறாள் தலைவி.)*

**நிழல்அறு நனந்தலை, எழில்ஏறு குறித்த**
**கதிர்த்த சென்னி நுணங்கு செந்நாவின்,**
**விதிர்த்த போலும் அம்நுண் பல்பொறிக்,**
**காமர் சேவல் ஏமம் சேப்ப;**
**முளிஅரில் புலம்பப் போகி, முனாஅது 5**

**முரம்பு அடைத் திருந்தமூரி மன்றத்து,**
**அதர்பார்த்து அல்கும் ஆகெழு சிறுகுடி**
**உறையுநர் போகிய ஓங்குநிலை வியன்மலை;**
**இறைநிழல் ஒருசிறைப் புலம்புஅயா உயிர்க்கும்**
**வெம்முனை அருஞ்சுரம் நீந்தித், தம்வயின்,** 10

**ஈண்டுவினை மருங்கின் மீண்டோர் மன்னள,**
**நள்ளென் யாமத்து உயவுத்துணை ஆக**
**நம்மொடு பசலை நோன்று, தம்மொடு**
**தானே சென்ற நலனும்**
**நல்கார் கொல்லோ, நாம் நயந்திசி னோரே?**

*தோழி! நம்மால் விரும்பப்பட்டவரான நம்முடைய தலைவரானவர்,*

*நிழலே அற்றுப்போயின பாலையின் பரந்த இடத்திலே, புல்லூற்றினால் கௌவிக் கொள்ளுதலைக் குறிக்கப்பட்ட பெரிய தலையினையும், நுணுகிய சிவந்த நாவினையும், தெளித்து விட்டது போலும் நுண்மையான அழகிய பல புள்ளிகளையும் உடைய, அழகான குறும்பூழ்ச் சேவலானது. பாதுகாவலான வேறு இடத்திற்குச் செல்லுவதற்கு எண்ணித், தானிருந்து காய்ந்துபட்ட சிறுபுதல் தனித்தொழிய, வெளியேறிப் போகும். அப்படிப் போயின அது,*

*வன்னிலத்தை அடுத்திருந்த பழைமையான பெரிய மன்றிலே, ஆறலைக்க வழியையே பார்த்தவாறு கள்வர் பதுங்கியிருக்கும், பசுக்கள் பொருந்திய சிற்றூரினிடத்தே, அதன்கண் தங்கியிருப்போர் விட்டுப்போன உயர்ந்த நிலை யினையுடைய பெரிய மனையிலே, இறைப்பு நிழலின் ஒரு பக்கத்தே தங்கியிருந்து, தனிமையால் பெருமூச்செறிந்திருக்கும், கொடிய முனை இருப்புக்களையுடைய அத்தகைய அரிய சுரத்தினைக் கடந்து, தம்மிடத்தே வந்துற்ற பொருள் ஈட்டும் வினையினிடத்தே, அவர் மீண்டும் செல்லுதலுற்றார்.*

*அவர், நள்ளென்ற யாமத்தும், நமது வருத்தத்திற்குத் துணையாகும் பொருட்டு, நம்மிடத்தே பசலையை இருக்க விட்டுவிட்டுத், தம்மோடு தானே உடன் சென்றுவிட்ட, நம்முடைய பழைய நலனையேனும், நமக்குத் திரும்பத் தந்தருளாரோ?*

**சொற்பொருள்:** *1. எழால் - புல்லூறு. ஏறு குறித்தல் - வௌவுதல் குறித்தல். 2. கதிர்த்த - ஒளிவிடும் தலையுமாம். முரம்பு - வன்னிலம்.*

**விளக்கம்:** 'அதர் பார்த்திருக்கும் ஆறலை கள்வர் போல, அவர் பிரியும் அமையம் பார்த்திருந்து, பசலை என் நலனைக் கவர்ந்தது' என்க. 'குறும்பூழ்ச் சேவல் தூறை விட்டுச் சென்று, மனையிறையினின்றும் தன் துணையை நினைந்து வருந்தும் என்பதுபோல, அவரும், 'அவ்விடத்தே நம்மை நினைந்து வருந்துவாரோ?' என்பதும் குறிப்பு.

## 104. இனிது செய்தனையால் எந்தை!

**பாடியவர்:** மதுரை மருதனிளநாகனார். **திணை:** முல்லை. **துறை:** வினைமுற்றி மீளும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

*(வேந்துவினை முடிக்கத் தன் காதலியைப் பிரிந்து சென்ற தலைவன், சென்ற தன் வினையைச் செவ்வனே முடித்து விட்டவனாக, மீண்டும் வருகின்றான். அப்பொழுது, அவனை எதிர்ப்பட்ட தோழி, அவனை உளமாற வாழ்த்து கின்றாள்.)*

**வேந்துவினை முடித்த காலைத், தேம்பாய்ந்து**
**இனவண்டு ஆர்க்கும் தண்நறும் புறவின்**
**வென்வேல் இளையர் இன்புற, வலவன்**
**வள்புவலித்து ஊரின் அல்லது, முள்உறின்**
**முந்நீர் மண்டிலம் ஆதி ஆற்றா** 5

**நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்**
**வாங்குசினை பொலிய ஏறிப்; புதல**
**பூங்கொடி அவரைப் பொய்அதள் அன்ன**
**உள்இல் வயிற்ற, வெள்ளை வெண்மறி,**
**மாழ்கி யன்ன தாழ்பெருஞ் செவிய,** 10

**புன்றலைச் சிறாரோடு உகளி, மன்றுழைக்**
**கவைஇலை ஆரின் அங்குழை கறிக்கும்**
**சீறூர் பலவிறக்கு ஒழிய, மாலை**
**இனிதுசெய் தனையால் - எந்தை! வாழிய!-**
**பனிவார் கண்ணள் பலபுலந்து உறையும்** 15

**ஆய்தொடி அரிவை கூந்தற்**
**போதுகுரல் அணிய வேய்தந் தோயே!**

எம் தலைவனே!

வேந்தனின் ஏவலை நிறைவேற்றி முடித்தனை. அக் காலத்தே, வெற்றிபொருந்திய வேலினையுடைய வீரர்கள் இன்புறுமாறு, பாகன் கடிவாளத்தினை இழுத்துப் பிடித்துச் செலுத்தினால் அல்லாது, முள்ளினால் குத்தப் பெற்றால், கடல் சூழ்ந்த உலகமே அவற்றின் ஓட்டத்திற்கு இறுதியாகும்

எனும்படி, செலவிற்குப் போதாத, கடுமையாகச் செல்லக்கூடிய குதிரைகளுள், நல்லவைகளாக நன்கு பூட்டப்பெற்ற தேரிலே, வளைந்த கொடிஞ்சி பொலிவுற, ஏறியும் அமர்ந்தனை.

தேன் பாய்ந்து வண்டினம் ஆரவாரிக்கும் குளிர்ந்த நறிய முல்லை நிலத்தே, புதர்களிலே பூத்துக் கிடக்கும் கொடிய வரையினிடத்தே, பொய்த்தோல் போன்ற உள்ளீடில்லாத வயிற்றினவும், மயங்கிக் கிடந்தாலொத்த தாழ்ந்து தொங்கும் பெரிய செவியினவும் ஆகிய வெள்ளாட்டின் வெண்மையான குட்டிகள், புற்கென்ற குடுமியினையுடைய சிறுவர்களோடு குதித்துச்சென்று, மன்றின் கண்ணே சுவையான இலையினை யுடையதாயிருக்கும் ஆத்திமரத்தின் அழகிய தளிரைக் கடித்துக் கொண்டிருக்கும் சிற்றூர்கள் பலவும் பிற்பட்டு ஒழியுமாறு, அவற்றையும் கடந்து வந்தனை.

இம் மாலைக் காலத்திலேயே, நீர்வடியும் கண்ணினளாகப், பலவற்றையும் எண்ணி எண்ணித், தனிமையுற்று வாடியிருக்கும், ஆராய்ந்த தொடியணிந்த நின் தலைவியானவள் அணிந்து கொள்ளுமாறு, அவளுடைய கொத்தான கூந்தலிலே, மலரையும் கொணர்ந்து சூட்டினை! இனிதான ஒன்றைச் செய்தனை! எம் தலைவனே! நீ வாழ்வாயாக!

**சொற்பொருள்:** 1. தேம் - திசையுமாம். இளையர் - இளையராகிய வீரர். அவரும் தத்தம் வீடு திரும்ப என்ற படி. முள் - குதிரையைச் செலுத்தும் சமுதாடு; தாற்றுக் கோலும் ஆம். 7. சினை - கொடிஞ்சி. 10 மாழ்குதல் - மயங்குதல். 12. ஆர் - ஆத்தி. 17. குரல் - தினைக் கதிர் போல விளங்கும் கொண்டை.

**விளக்கம்:** 'இதனுள் வினைமுடித்த காலைத் தேரிளையர் செலவிற்கேற்ப ஊராது, கோலூன்றின் உலகிறந்தன செலவிற்குப் பற்றாத குதிரைத் தேரேறி, இடைச்சுரத்திலே தங்காது, மாலைக் காலத்து வந்து பூச்சூட்டினை; இனிது செய்தனை; எந்தை வாழிய!' என, மேற்கோள் காட்டி உரைத்தனர் நச்சினார்க் கினியர்.

## 105. முகைதலை சிறந்த வேனில்!

**பாடியவர்:** தாயங்கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** மகட்போக்கிய தாய் சொல்லியது. **சிறப்பு:** எழினி என்பான்.

(செல்வத்துடன் வளர்ந்த தன் மகள், தங்களையெல்லாம் வெறுத்துத் தன் காதலனுடன் உடன்போக்கிலே சென்று விட்டதறிந்து, இங்ஙனம் புலம்புகிறாள், அவளைப் பெற்றெடுத்த தாய். 'யாங்குவல்லுநள்கொல்?' என்ற சொற்களிலே, தாய்மையின் அரிய பாசம் ஒளிரக் காணலாம்.)

அகல்அறை மலர்ந்த அரும்புமுதிர் வேங்கை
ஒள்இலைத் தொடலை தைஇ, மெல்லென
நல்வரை நாடன் தற்பா ராட்ட
யாங்குவல் லுநள்கொல் தானே - தேம்பெய்து,
மணிசெய் மண்டைத் தீம்பால் ஏந்தி, 5

ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள்,
நிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமும் உள்ளாள், பொய்ம்மருண்டு
பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச்
சில்பரிக் குதிரை, பல்வேல் எழினி 10

கெடல்அருந் துப்பின் விடுதொழில் முடிமார்,
கனைஎரி நடந்த கல்காய் கானத்து
வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின், முனைகடந்து
வீங்குமென் சுரைய ஏற்றினம் தரூஉம் 15

முகைதலை திறந்த வேனிற்
பகைதலை மணந்த பல்அதர்ச் செலவே!

மணிகள் இழைத்துச் செய்த பொற்கலத்திலே, இனிய பாலோடு தேனும் கலந்து ஏந்தியவராகச் செவிலித்தாயர் ஊட்டவும் உண்ணாது, அடம் பிடித்தவள் என் மகள். நிழலினிடத்தேயுள்ள குளத்தைபோலக், குளிர்ச்சி பொருந்திய நெடிய மாளிகையிடத்தேயுள்ள, எமது பெருஞ் செல்வத்தையும் இப்போது கருதாதவளாயினாள்.

அகன்ற பாறையிடத்தே, அரும்பு முதிர்ந்து மலர்ந்த வேங்கையின், ஒள்ளிய இலை விராவிய மாலையினை அணிந்து, மெல்லென, நல்ல மலைநாடனாகிய தலைவன் தன்னைப் பாராட்டி வர, அவன் சொல்லிய பொய்மைகளினாலே, உள்ளமும் மயங்கினாள்.

பந்தின் புடைப்பைப் போன்ற தாளத்துடன் கூடிய பல அடியீட்டினையும், சிலவகைச் செலவினையுடைய குதிரை களையும், பல வேற்படையினரையும் உடைய, கெடுதலில்லாத வலிமை பொருந்திய எழினி என்பவன் ஏவிவிட்ட தொழிலை முடிப்பதற்காக, மிக்க எரிபரந்து கிடக்கும் பாறைகளும் கொதிக்கும் கானத்திலே, போர்த்திறம் வாய்ந்த அம்பின் கை குறிதப்பாது தொடுத்தலையுடைய மறவர்கள், பிழிந்த தேனாற் சமைத்த நறிய கள்ளினை உண்டு, அம் மகிழ்ச்சியினாற் பகைவரின் போர்முனைகளை எளிதாக வென்று, பருத்த மெல்லிய மடியினையுடையவும், ஏறுகளோடு கூடியவுமாகிய

ஆனினத்தைக் கவர்ந்து வரும், பகைவருடன் பொருதல் அமைந்த, பலபடக் கிடக்கும் நெறிகளிலே, மலை முழைஞ்சுகளும் வெடித்துப் போவதற்கேதுவாகிய வேனிற்காலத்தே, அவள் செல்லவும் துணிந்தனளே!

அவ்விடத்தைக் கடந்து செல்லுவதற்கு, அவள் எங்ஙனம் வல்லவள் ஆவாளோ?

**சொற்பொருள்:** 1. அகலறை - பாறையிடுக்குகள். அரும்பு முதிர் வேங்கை - மலர்ந்த வேங்கை. 2. தொடலை - தழையுடை. 6. ஈனாத்தாயர் - செவிலித்தாயர். 7. பந்து புடைப்பன்ன பாணி - பந்துகளை அடிக்கும்போது அவை துள்ளித் துள்ளிச் செல்வது போன்ற பாணி. 11. துப்பு - வலிமை. 12. கல்வாய் - கல்லும் காயும். 15. சுரை - பால்மடி.

## 106. வயிறு அலைஇயர் சென்மோ!

**பாடியவர்:** ஆலங்குடி வங்கனார். **திணை:** மருதம். **துறை:** தலைமகள் தன்னைப் புறங்கூறினாளாகக் கேட்ட பரத்தை, அவட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

'தலைவிக்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது' என்பர் பேராசிரியர்.

(பரத்தை ஒருத்தியை, அவளுடன் தன் கணவன் உறவு கொண்டிருப்பதாக ஒரு மனைவி சந்தேகப்பட்டு, அவளையும் அவனையும் சேர்த்துப் பழித்தாளாம். அதனால் குமுறுகிறாள். 'வாருங்களடி! நம்மைப் பார்த்து அவள் வயிற்றிலே அறைந்து கொள்ளும்படியாக, அந்தப் பக்கமாகவே சென்று உலவி வருவோம்' என்கிறாள் அவள்.)

**எரிஅகைந் தன்ன தாமரைப் பழனத்துப்,**
**பொரிஅகைந் தன்ன பொங்குபவல் சிறுமீன்,**
**வெறிகொள் பாசடை, உணீஇயர், பைப்பயப்**
**பறைதபு முதுசிரல் அசைபுவந்து இருக்கும்**
**துறைகேழ் ஊரன் பெண்டுதன், கொழுநனை** 5

**நம்மொடு புலக்கும் என்ப - நாம்அது**
**செய்யாம் ஆயினும், உய்யா மையின்,**
**செறிதொடி தெளிர்ப்ப வீசிச், சிறிதுஅவண்**
**உலமந்து வருகம் சென்மோ - தோழி! -**
**ஒளிறுவாட் டானைக் கொற்றச் செழியன்** 10

**வெளிறுஇல் கற்பின் மண்டுஅமர் அடுதொறும்**
**களிறுபெறு வல்சிப் பாணன் எறியும்**
**தண்ணுமைக் கண்ணின் அலைஇயர், தன் வயிறே!**

நெருப்புக் கப்புவிட்டு எரிந்தாற்போலும், செவ்விய தாமரைப் பூக்களையுடையன வயல்கள். அவ்விடத்தே, நெற்பொறிகள் தெறித்துக் கிடப்பனபோலப், பலப்பல சிறிய மீன்கள் விளங்கும். அவற்றை உண்ணும்பொருட்டு, மணங் கொண்ட பசிய இலையிலே, பறத்தல் ஒழிந்த முதிய கிச்சிலிப் பறவையானது, பையப்பைய அசைந்தபடி வந்திருக்கும். அத்தகைய துறைகள் பொருந்திய ஊரனின் மனைவியானவள், தன் கணவனை, நம்மோடும் கூட்டி வெறுத்துப் பேசுகின்றனள் என்பர்.

நாம் அதற்கேதுவாகியது ஒன்றும் செய்யாதேம். ஆயினும், அவள் கூறும் பழியினின்றும் உய்யாமையினாலே,

ஒளிறும் வாட்படையினையுடையவன் வெற்றி பொருந்திய செழியன்; குற்றமற்ற படைப்பயிற்சியோடு கூடிய நெருங்கிய போர்களிலே, அவன் அடுந்தோறும் களிறாகிய உணவினைப் பெறும் பாணன் அடிக்கும் மத்தளத்தின் கண்போல, அவள், தன்வயிற்றிலே அறைந்து கொள்ளும்படியாக,

செறிந்த வளைகள் ஒலிமுழங்கக் கைகளை வீசிச், சிறிது பொழுது அவ்விடத்தே சென்று, நாமும் உலவிவருதற்குச் செல்வோமா?

**சொற்பொருள்:** 1. அகைதல் - கொழுந்துவிட்டு எரிதல். 3. வெறி - மணம். 4. முதுசிரல் - கிழடாய்ப்போன சிரல். 8. தெளிர்ப்ப - ஒலிக்க. 9. உலமந்து - உலாவி. 11. கற்பின் மண்டமர் - போர்க்குரிய மரபுகள் வழுவாமல் செய்யும் கடும்போர். 12. களிறு வல்சியாவது - பரிசாகத் தரப்படுவதனால்.

**உள்ளுறை:** 'முதுசிரல், மீனுக்கு அருகே பாசடை மீதிருந்தும், அதனை நுகரமாட்டாது, இளஞ்சிரல்கள் பற்றி நுகர்வதற்கும் பொறுக்காது புலம்புதல்போல, முதுமையால் எழுச்சியற்ற தலைவி, தலைவன் தன் வீட்டிலேயே இருந்தும், அவனை வளைத்துத் தன்பாற் கொள்ள முடியாமலும், ஏனைய இளம்பெண்டிர் அவனைத் தழுவுவதனைக் கண்டு பொறாமலும் புலம்புகின்றாள்' என்கின்றனள். இதனால், தலைவியின் முதுமையைச் சுட்டிப் பழித்தவாறும், அவன் தன்பால் எளிதிற் சிக்குவோன் எனத்தான் தன் அழகாற் செருக்குற்றவாறும் காணலாம்.

## 107. மணமனை கமழும் கானம்!

**பாடியவர்:** காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார். **திணை:** பாலை. **துறை:** தோழி குறிப்பறிந்து தலைமகற்குச் சொல்லியது. **சிறப்பு:** கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர்.

*(தலைவன் இரவுக் குறியும் பகற்குறியும் பெற இயலாதவனாயினான். இற்செறிப்பினால் தலைவியும் பிரிவாற்றாது நொந்தாள். இந்நிலையிலே, தன்னுடன் தலைவியை உடன்போக்கிலே கொண்டுபோக விரும்புவதாகத் தோழி மூலம் தகவல் அனுப்புகிறான். தோழி அவனிடம் மீண்டு வந்து, தலைவியின் இசைவைச் சொல்லுகிறாள்.)*

**நீசெலவு அயரக் கேட்டொறும், பலநினைந்து,**
**அன்பின் நெஞ்சத்து, அயாஅப் பொறைமெலிந்த**
**என்அகத்து இடும்பை களைமார், நின்னொடு**
**கருங்கல் வியல்அறைக் கிடப்பி, வயிறுதின்று**
**இரும்புலி துறந்த ஏற்றுமான் உணங்கல் 5**

**நெறிசெல் வம்பலர் உவந்தனர் ஆங்கண்,**
**ஒலிகழை நெல்லின் அரிசியொடு ஒராங்கு**
**ஆன்நிலைப் பள்ளி அளைசெய்து அட்ட**
**வால்நிணம் உருக்கிய வாஅல் வெண்சோறு**
**புகர்அரைத் தேக்கின் அகல்இலை மாந்தும் 10**

**கல்லா நீள்மொழிக் கதநாய் வடுகர்**
**வல்லாண் அருமுனை நீந்தி, அல்லாந்து,**
**உகுமண்ஊறு அஞ்சும் ஒருகாற் பட்டத்து**
**இன்னா ஏற்றத்து இழுக்கி,முடம் கூர்ந்து,**
**ஒருதனித்து ஒழிந்த உரனுடை நோன்பகடு 15**

**அம்குழை இருப்பை அறைவாய் வான்புழல்**
**புல்உளைச் சிறாஅர் வில்லின் நீக்கி,**
**மரைகடிந்து ஊட்டும் வரையகச் சீறூர்**
**மாலை இன்துணை ஆகிக், காலைப்**
**பசுநனை நறுவீப் பரூஉப்பரல் உறைப்ப, 20**

**மணமனை கமழும் கானம்**
**துணைஈர் ஓதிஎன் தோழியும் வருமே!**

*"நீ அவளையும் உடன் கொண்டு செல்வதனை விரும்பியதைக் கேட்குந்தோறும், நின்பால் அன்பினையுடைய தன் நெஞ்சத்திலே பலப்பலவும் நினைந்து, வருத்தத்தைத் தாங்குதலால் மெலிந்துபோன, என்னிடத்துற்ற துன்பத்தினை நீக்கும் பொருட்டாக,*

*கருங்கல்லான அகன்ற பாறையினிடத்தே, பெரிய புலியானது, தன் வயிறு நிறையத் தின்றுவிட்டுக் கைவிட்டுப் போன மானேற்றின் காய்ந்த தசையை, வழிச்செல்பவர்களாகிய புதியவர்கள் கண்டு மகிழ்வர். அவ்விடத்தே, தழைத்த மூங்கில்*

நெல்லின் அரிசியோடு ஒருங்கே கூட்டி, ஆயர் சேரியிலிருந்து கொண்ட தயிரினைப் பெய்து சமைத்த, வெள்ளிய நிணத்தினை உருகச் செய்த, வெண்மையான சோற்றினைப், புள்ளி பொருந்திய அடியினையுடைய தேக்கினது அகன்ற இலையிலே வைத்து உண்பவரும், கல்வியறிவற்ற நெடுமொழிகளைக் கூறுபவரும், சினமிக்க நாய்களையுடையவருமான வடுகரது, வலிய ஆண்மை விளங்கும் அரிய போர் முனையினைக் கடந்து சென்று,

இடிந்து வீழும் மண்ணினால் விளையும் ஊறினுக்கு அஞ்சும் ஒரே துறையினையுடைய ஓடையிலுள்ள, இன்னாத தாகிய ஏற்றத்திலே வழுக்கி விழுந்து, மிக்க முடம்பட்டுத் தன்னந்தனியே ஒழிந்து கிடக்கும், வலிமை வாய்ந்த மெலிந்த பகட்டினை,

புல்லிய குடுமியினையுடைய சிறுவர்கள், அழகிய தளிரை யுடைய இருப்பையின், அற்றவாயினையும் வெள்ளிய உட்டுளை யினையுமுடைய பூவை, வில்லினால் உதிர்த்து, அவற்றைத் தின்னவரும் மரைமான்களை வெருட்டிவிட்டு, உண்பிப்பர். வரையகத்தேயுள்ள, அத்தகைய சிற்றூர்களிலே, மாலைக் காலத்தே, நினக்கு இனிய துணையாகித் தங்கிக், காலை வேளைகளிலே புதிய தேனையுடைய நறும் பூக்கள் உதிர்ந்து கிடத்தலால், மணம் கமழும் மனைபோன்று மணநாறும் காட்டிலே,

நின்னுடன், கடையொத்த குளிர்ந்த கூந்தலையுடைய என் தோழியும், உடன் வருவதற்கு இசைந்தனள் காண்!

**சொற்பொருள்:** 2. அயாஅ - வருத்தம். 5. உணங்கல் - காய்ந்த தசை, . ஆனிலைப்பள்ளி - ஆயர் சேரி. அளை - தயிர். 11. கதநாய் - சினமிக்க நாய். 12. வல்லாண் அருமுனை - வல்லாண்மையுடைய அருமுனை. 13. மண் ஊறு - சரிந்து விழும் மண்ணினால் வரும் ஊறு.

**உள்ளுறை:** 'ஓடை நீருண்டு இன்புற்றபின், அதனின்றும் கரையேற மாட்டாது முடம்பட்ட, உரனுடைய பகட்டினைப் போலத், தலைவியுடன் களவின்பத்திலே ஈடுபட்டு, அதனை விட்டு அவளை வரைந்து கொள்ள மாட்டாது போயினை. பகட்டிற்கு, இருப்பைப் பூவை உதிர்த்து, மானினங்களை வெருட்டிச், சிறுவர் உணவூட்டுவது போலத் தலைமகளைச் சுற்றத்தினின்றும் பிரித்து, அயலார் வரைவினையும் மாற்றி, நின்னுடன் உடன்போக்கிற்கு, யானோ உடம்படுத்தி நிற்கின்றேன்' என்றனளாம்.

## 108. அருளால் ஒத்தன்று மன்னால்!

**பாடியவர்:** *தங்கால் பொற்கொல்லனார்.* **திணை:** *குறிஞ்சி* **துறை:** *தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது.*

*(தலைவன் தலைவியை மணந்துகொள்ளும் முயற்சிகளிலே ஈடுபடாது, இரவுக்குறி நேர்தலிலேயே மனஞ் செலுத்துகின்றான். அவன் கடந்து வரவேண்டிய வழியின் துன்பங்களை எண்ணித் தலைவி நடுங்குவாள். அதனை அவனுக்கு அறிவுறுத்தி, விரைந்து மணம் வேட்டு அவள் துயரைப் போக்குமாறு செய்வதற்குத் தோழி இங்ஙனம் உரைக்கின்றாள்.)*

**புணர்ந்தோர் புன்கண் அருளலும் உணர்ந்தோர்க்கு**
**ஒத்தன்று மன்னால்! எவன்கொல்? முத்தம்**
**வரைமுதற் சிதறிய வைபோல், யானைப்**
**புகர்முகம் பொருத புதுநீர் ஆலி**
**பளிங்குசொரி வதுபோற் பாறை வரிப்பக்,** 5

**கார்கதம் பட்ட கண்அகன் விசும்பின்**
**விடுபொறி ஞெகிழியிற் கொடிபட மின்னி,**
**படுமழை பொழிந்த பானாட் கங்குல்,**
**ஆர்உயிர்த் துப்பின் கோள்மா வழங்கும்**
**இருளிடைத் தமியன் வருதல் யாவதும்** 10

**அருளான் - வாழி தோழி! - அல்கல்**
**விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ அரவின்**
**அணங்குடை அருந்தலை பைவிரிப் பவைபோற்,**
**காயா மென்சினை தோய நீடிப்**
**பல்துடுப்பு எடுத்த அலங்குகுலைக் காந்தள்** 15

**அணிமலர் நறுந்தாது ஊதும் தும்பி**
**கைஆடு வட்டின் தோன்றும்**
**மைஆடு சென்னிய மலைகிழ வோனே!**

*தோழி! வாழ்க! வருத்தத்தைச் செய்யும் பாம்பினது அரிய நஞ்சினையுடைய தலைகள், புள்ளிகள் விரவிக்கிடக்கும் மயிலினைக் கண்டு அஞ்சி விரியும். அதுபோலக் காயாவின் மெல்லிய கொம்புகள் தோய்தலால், நீண்டு தூக்கிய பல துடுப்புக்களைப் போன்ற, அசையும் குலைகளையுடைய காந்தள்கள், அழகிய மலர்களை உடையவாயின. அவற்றின்கண், நறிய தாதினைக் குடைந்துண்ணும் வண்டுகள், மகளிர் கையின்கண் வைத்து ஆடும் வட்டுக்களைப் போலத் தோன்றும்,*

மேகங்கள் தவழும், அத்தகைய உச்சிகளையுடைய மலைக்கு உரியவன், நம் தலைவன்.

பாறைகளின் முகட்டிலே முத்துக்கள் சிதறிக் கிடப்பதைப் போல, யானைகளின் முகம் புள்ளிகளுடன் விளங்கும். அவற்றிலே மோதி வீழ்ந்த புதிய ஆலங்கட்டிகள், பளிங்கினைச் சொரிந்து வைத்தாற்போலப் பாறைகளை அழகு செய்யும். மேகங்கள் சினந்து எழுந்த இடமகன்ற வானிலே, பொறிவிடுகின்ற கொள்ளியினைப்போல மின்னல்கள் ஒழுங்குபடத் தோன்றும். படுமழை பொரிந்த அக்காலத்து நள்ளிரவிலே, அரிய உயிர்ப்பொருளாகிய உணவினையுடைய கொல்லும் விலங்குகள் திரிந்துகொண்டிருக்கும் இருளிடையே, நாடோறும் தனியாக வருதலினாலே, அவன், நமக்கு யாதும் அருள்பவனே யல்லன்.

தம்மைப் புணர்ந்தோரின் துன்பங்களைப் போக்கி அருளு தலும், அறிவுடையவர்களுக்குப் பொருத்தம் உடைய தாகுமே! நம் தலைவன் அங்ஙனம் செய்யாததுதான் என்னையோ, தோழி?

**சொற்பொருள்:** 1. புன்கண் - துன்பம். உணர்ந்தோர் - உணர்ந்த அறிவுடையோர். 5. வரிப்ப - கோலம் செய்ய. 6. கார் - கார்மேகம். கதம்பட்ட - சினந்து முழங்கிய. 7. நெகிழி - கொள்ளி. கொடிபட - ஒழுங்குபட. 9. ஆருயிர்த் துப்பின் கோண்மா - ஆருயிர்களையே தமக்கு உணவாகக் கொன்று தின்னும் கொடு விலங்குகள். 15. அலங்குகுலை - அசையும் குலை. 17. கையாடு வட்டில் - கழங்காடு காய். 18. மையாடு சென்னி - மேகந் தவழும் மலைமுகடுகள்.

**உள்ளுறை:** 'மயிலுக்கு அஞ்சிப் பாம்பு படம் விரித்தாற் போலக் காந்தள் மலர் இதழ்விரியும் என்றது, விருப்பந்தரும் தலைவனின் வருகையும், அவன் வருகின்ற சூழ்நிலை காரணமாக அச்சந் தருவதாயிற்று' என்றதாம்.

## 109. அறனில் வேந்தன்!

**பாடியவர்:** கடுந்தொடைக்காவினார். **திணை:** பாலை. **துறை:** இடைச்சுரத்துத் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(தலைவியைப் பிரிந்து வினைமேற் சென்றனன் ஒரு தலைவன். பல காடுகளையும் கடந்து சென்றபின் அவன் நினைவு தலைவியின்பாற் சென்றது. அங்கிருந்து, அவள் இருக்கும் ஊரைத் தன் மனக்கண்முன் கொண்டுவருகிறான். அப்போதுதான், அவன் கடந்துவந்த காட்டின் கொடுமை, அவனுக்குத் தோன்றுகிறது.)

**பல்இதழ் மென்மலர் உண்கண், நல்யாழ்**
**நரம்புஇசைத் தன்ன இன்தீம் கிளவி,**

**நலம்நல்கு ஒருத்தி இருந்த ஊரே-**
**கோடுழு களிற்றின் தொழுதி ஈண்டிக்**
**காடுகால் யாத்த நீடுமரச் சோலை** 5

**விழைவெளில் ஆடும் கழைவளர் நனந்தலை;**
**வெண்நுனை அம்பின் விசைஇட வீழ்ந்தோர்**
**எண்ணுவரம்பு அறியா உவல்இடு பதுக்கைச்**
**சுரம்கெழு கவலை கோட்பாற் பட்டென,**
**வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்,** 10

**கைப்பொருள் இல்லை ஆயினும், மெய்க்கொண்டு**
**இன்உயிர் செகாஅர் விட்டுஅகல் தப்பற்குப்**
**பெருங்களிற்று மருப்பொடு வரிஅதள் இறுக்கும்**
**அறன்இல் வேந்தன் ஆளும்**
**வறன்உறு குன்றம் பலவிலங் கினவே.** 15

*பல இதழ்களையுடைய மென்மலர்போன்ற மையுண்ட கண்ணினாள்; நல்ல யாழின் நரம்பினை இசைத்தாற் போன்று மிகவும் இனிக்கின்ற மொழியினாள்; விரும்பும் நலனெல்லாம் தருகின்ற ஒப்பற்றவள்; அவள் நம் காதலி. அவள் இருக்கும் ஊரானது,*

*தம் கொம்பினால் குத்திப், போர்க்களத்தே பகைவரை உழுகின்ற களிற்று யானைகளின் கூட்டம் கூடியது. அதனால், கடுங்காட்டைப்போல விளங்கியது நெடிய மரச் சோலை. ஒன்றையொன்று விரும்பிய அணில்கள் ஆடிக் கொண்டிருக்கும், மூங்கில்கள் வளர்ந்திருக்கும் இடத்திலே நடந்த போரில், வெள்ளிய முனைகளுடைய அம்பினை வேகமாகச் செலுத்த வீழ்ந்தோர் கணக்கற்றோர் ஆயினர். எண்ணினாலும், எண்ணின் வரம்பினை அறியாதபடி, தழையிட்டு மூடிய பதுக்கைகளும் எழுந்தன. சுரத்தின்கண் பொருந்திய அத்தகைய கவர்நெறிகள் எல்லாம் ஆறலைக் கள்வர் பகுதியிற் கொள்ளப்பட்டன. வழிப்போவார் எவரும் இல்லையாகி மடிந்த அச் சுரநெறியே,*

*வந்தோரிடத்தே கைப்பொருள் யாதும் இல்லையானாலும், அவர் உடலைக் காணிக்கையாகப் பற்றிக் கொண்டு, உயிரினைப் போக்காதபடியாக விட்டுவிட்டு வந்த தவறுக்காகப், பெரிய களிற்றின் கொம்போடு, கோடு பொருந்திய புலித்தோலையும் தண்டமாக விதிக்கும், அறனற்ற வேந்தன் ஆள்கின்ற, வறட்சியுற்ற குன்றுகள் பலவும் குறுக்கிட்டுள்ளனவே! அதற்கும், அப்பால் உள்ளதே, அவர் ஊர் என்க.*

**சொற்பொருள்:** *இன்தீங்கிளவி - மிக்க இனிமையுடைய சொல். 3. நலம் நல்கு ஒருத்தி - நலம் தரும் ஒப்பற்ற காதலி. 4. தாமுதி - கூட்டம். 6. விழைவு - விருப்பம். வெளில் - அணில்.*

*7. வெண்ணுனை - தீட்டி. வெண்மையாகத் தோன்றும் முனை. வெந்நுனை பாடமாயின் வெம்மையுடைய நுனை என்க. 8. உவல் - கற்குவியல். 10. மடிந்த - இல்லாதுபோன. 13. வரியலர் - புலித்தோல்.*

**விளக்கம்:** இத்துணைய பல கொடுவழிகளும் கடந்து வந்தனமாதலின், இனி இடைவழியிலே திரும்புதல் ஆகாது; வினைமேற்செல்வோம் எனத் தன் நெஞ்சிற்குக் கூறினான்.

## 110. கடுஞ்சூள் தருகுவல்!

**பாடியவர்:** *போந்தைப் பசலையார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தோழி செவிலித்தாய்க்கு அறத்தொடு நின்றது.*

*(தலைவியின் களவு உறவுபற்றி ஊரிலே அலர் எழத் தோழியைச் செவிலி வினவுகிறாள். அவள், ஒருநாள் கடற்கரையிலே நடந்த நிகழ்ச்சியைக் கூறி, அவனைத் தலைவி காதலிக்கின்றாள் எனக், குறிப்பாக உணர்த்துகிறாள்.)*

**அன்னை அறியினும் அறிக; அலர்வாய்**
**அம்மென் சேரி கேட்பினும் கேட்க;**
**பிறிதுஒன்று இன்மை அறியக் கூறிக்,**
**கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்,**
**கடுஞ்சூள் தருகுவன், நினக்கே; கானல் 5**

**தொடலை ஆயமொடு கடல்உடன் ஆடியும்,**
**சிற்றில் இழைத்தும், சிறிசோறு குவைஇயும்,**
**வருந்திய வருத்தம் தீர யாம்சிறிது**
**இருந்தன மாக எய்த வந்து**
**'தடமென் பணைத்தோள் மடநல் லீரே! 10**

**எல்லும் எல்லின்று; அசைவுமிக உடையேன்;**
**மெல்இலைப் பரப்பின் விருந்துஉண்டு, யானும்இக்**
**கல்லென் சிறுகுடித் தங்கின்மற்று எவனோ?'**
**எனமொழிந் தன்னே ஒருவன்; அவற்கண்டு,**
**இறைஞ்சிய முகத்தேம் புறம்சேர்பு பொருந்தி, 15**

**'இவைநுமக்கு உரிய அல்ல; இழிந்த**
**கொழுமீன் வல்சி' என்றனம்; இழுமென**
**'நெடுங்கொடி நுடங்கும் நாவாய் தோன்றுவ**
**காணாமோ?' எனக் காலின் சிதையா,**
**நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும் 20**

**என்னே குறித்த நோக்கமொடு 'நன்னுதால்!**
**ஒழிகோ யான்?'என அழிதகக் கூறி,**
**யான்'பெயர்க' என்ன நோக்கித், தான்தன்**

**நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி,**
**நின்றோன் போலும் இன்றும்என் கட்கே!** 25

*மாலைபோன்று நெருங்கிய தோழியரோடு, கடலிலே ஒருங்கு சேர்ந்து விளையாடியும், கடற்கானலிலே சிற்றில் இழைத்தும், சிறுசோறு ஆக்கிக் குவித்தும், வருந்திய களைப்புத் தீர, யாம் சிறிதே இளைப்பாறி இருந்தோம்.*

*ஒருவன் எம்மருகே வந்தான். 'பெரிய மென்மையான மூங்கில்போலும் தோள்களையும், மடப்பத்தையும் உடைய நல்ல பெண்களே! பகலும் ஒளியிழந்தது. மிகவும் தளர்ச்சி உடையேன். மெல்லிய இலைப்பரப்பிலே நீங்கள் இடும் விருந்தினை யானும் உண்டு, கல்லென்ற ஆரவாரமுடைய இந்தச் சிறுகுடியிலே தங்கிச் சென்றால் என்னவோ?' என்றும் சொன்னான்.*

*அவனைக் கண்டு, தலைகவிழ்ந்த முகத்தினர்களாக, ஒருவர் முதுகுப்பின் மற்றொருவராக ஒளிந்து கொண்டோம். இழும் என்னும் மெல்லிய குரலிலே, 'இவை நுமக்கு உரியன அல்ல; இழிந்த கொழுமீனாலாகிய உணவு' என்றோம்.*

*'நீண்ட கொடிகள் அசைந்து பறக்கும் நாவாய்கள் தோன்றுகின்றன. அவற்றைக் காண்போமா?' என்று கூறி, எம் சிற்றிலைக் காலாற் சிதைத்துவிட்டு, அங்கு நில்லாது ஓடிப் பெயர்ந்தவன், பலருள்ளும், என்னையே குறிப்பிட்டுப் பார்க்கும் பார்வையோடு, 'நல்ல நுதலினையுடையவளே! யான் போகின்றேன்' என்று, என் நெஞ்சம் அழிந்திடக் கூறினான்.*

*யானும், 'நீ போவாயாக' என்றேன். என்னலும், என்னை நோக்கியவனாகத், தனது தேரின் கொடுஞ்சியினைப் பற்றிக் கொண்டவனாக, அவனும் நின்றான். இன்றும் என் கண்ணுள், அவன் அன்று நின்ற நிலை நிற்பது போலிருக்கிறதே!*

*இதனை அன்னை அறியினும் அறிவாளாக! அலர் கூறும் வாயினரான இம் மெல்லிய சேரியினர் கேட்பினும் கேட்பாராக! 'இஃதன்றிப் பிறிதொன்றும் இல்லாததனை நீ அறியுமாறு கூறிக், கொடுஞ்சுழிகள் மேவிய புகாரிடத்துள்ள தெய்வத்தை நோக்கி, நினக்குக் கடிய சூளும் யான் செய்து தருவேன்!*

**சொற்பொருள்:** *5. கடுஞ்சூள் - கடுமையான சபதம். 6. தொடலை - தழைமாலை. 12. எல்லும் எல்லின்று - பகலும் ஒளியிழந்தது; பொழுது மாலையாயிற்று என்க. அசைவு - தளர்ச்சி. 15. இறைஞ்சிய முகம் - கவிழ்ந்த முகம். 21. என்னே - என்னையே. 22. அழிதக - அழியும் தகைமையாக. 24. கொடிஞ்சி - தேர்ச்சீலை. 15. 'என்று மென் மகட்கே' பாடமாயின், 'அவனே என்றும் என் மகளுக்குக் காதலன் போலும்' எனத் தாய் கூற்றாகக் கொள்க.*

## 111. புண் தேர் விளக்கு!

**பாடியவர்:** *பாலைபாடிய பெருங்கடுங்கோ* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண் தோழி தலைமகனை ஆற்றுவித்தது.*

*(தலைமகன் பொருளார்வமுற்றுத் தலைவியைப் பிரிந்து சென்றனன். அதனால் கலக்கமுற்று வாடி மெலிந்த தலைவிக்கு, அவன் விரைய வருவான் எனக் கூறித் தேறுதல் கூறுகிறாள் தோழி.)*

**உள்ஆங்கு உவத்தல் செல்லார், கறுத்தோர்**
**எள்ளல் நெஞ்சத்து ஏஎச்சொல் நாணி**
**வருவர் - வாழி, தோழி! -அரச**
**யானை கொண்ட துகிற்கொடி போல,**
**அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி** 5
**ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர**
**மழைஎன மருண்ட மம்மர் பலஉடன்**
**ஓய்களிறு எடுத்த நோயுடை நெடுங்கை**
**தொகுசொற் கோடியர் தூம்பின் உயிர்க்கும்**
**அத்தக் கேழல் அட்ட நற்கோள்** 10

**செந்நாய் ஏற்றைக் கம்மென ஈர்ப்பக்,**
**குருதி ஆரும் எருவைச் செஞ்செவி,**
**மண்டுஅமர் அழுவத்து எல்லிக் கொண்ட**
**புண்தேர் விளக்கின், தோன்றும்**
**விண்தோய் பிறங்கல் மலைஇறந் தோரே!** 15

*தோழீ! நீ வாழ்வாயாக!*

*தமக்கு வாய்த்த செல்வம், உள்ள அளவிலே அதனை நுகர்ந்து, மகிழ்வுடன் வாழ்தல் இலராக, அதனைப் பொறுக்காத பகைவர் சிலர், இகழ்ச்சியாகப் பேசும் உள்ளத்துடன் கூறுகின்ற, அம்பு போலும் கொடுஞ்சொற்களுக்கு நாணினவராயினார்.*

*பட்டத்து யானையானது, தன்மேற் கொண்டிருக்கின்ற துகிற் கொடியினைப் போல, ஓடை என்னும் குன்றத்தேயுள்ள. காய்ந்த தலையினையுள்ள ஞெமை மரத்தின்மீது, சிலம்பியானது வலையினைப் பின்னியது. மேற்காற்றால், அவ்வலையும் அசைந்து கொண்டிருந்தது.*

*அதனை மேகம் எனக் கருதி, ஒருங்கே மருட்சியுற்றன மயக்கத்தினையுடைய இளைத்த களிறுகள் பலவும். வருத்தத்தை யுடையனவாக அவை உயர்த்த நெடுங்கைகள், புகழினைத் திரட்டிக் கூறும் கூத்தரது தூம்பினைப்போலத் தோன்றி ஒலிக்கும். அத்தகைய காட்டிலுள்ள - செந்நாயின் ஏற்றையானது, தன் இரையினை நன்கு பற்றிக் கொள்ளும் திறனுடையது. அஃது,*

*ஆண் பன்றி ஒன்றைக் கொன்று, விரைவாக அதனை இழுத்துச் சென்றது. அதனால் வழிப் புறத்திலே ஒழுகிய குருதியினைப் பருகிய எருவையின் சிவந்த செவிகள், மிக்க போர்க்களப் பரப்பிலே வீரர்களது மருமத்துப் புண்களை ஆராயும் இராப்பொழுதிலே கைக்கொண்ட விளக்குகளைப் போன்று தோன்றும். வானைத் தழுவும் விளக்கத்தையுடைய, அத்தகைய மலையினைக் கடந்தும், பொருள் ஈட்டச் சென்றனர் நம் தலைவர். அவர் விரைந்து வருவார் தோழி!*

**சொற்பொருள்:** *1. கறுத்தோர் - பகைவர். ஏஅச் சொல் - கொடுஞ் சொல்; ஏச்சு. 5. அலந்தலை - காய்ந்த தலை. ஓடைக்குன்றம் - ஓடைமரக் குன்றமும் ஆம். 7.மம்மர் - மயக்கம். 8. ஒய்களிறு - இளைத்த களிறு. 9. தொகுசொல் - தொகுத்த புகழ்ச்சொற்கள். கோடியர் - கூறுவோர். தூம்பு - முழக்கும் கொம்பு போன்ற வாத்தியம். 13. எல்லி - இரா. 15. பிறங்கல் - விளக்கம்.*

**உள்ளுறை:** *சிலம்பியின் அசையும் கூட்டினை மேகமெனக் கருதிய யானைத்திரள் போலப், பொருளல்லவற்றைப் பொருளாகக் கருதி காடுபல கடந்து இளைத்தனர் தலைவர்; அதனால் அவர் விரைவிலே வருவர் என்றனள்.*

## 112. பெண்கோள் ஒழுக்கம்!

**பாடியவர்:** *நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர் கிழார்.* **திணை:** *குறிஞ்சி.* **துறை:** *இரவுக்குறி வந்த தலைமகனை எதிர்ப்பட்டு நின்று, தோழி சொல்லி, வரைவுகடாயது.*

*(இரவுக்குறியிலே இடர்ப்பாடுகள் பல உள்ளன. நின் பால் பெருங்காதல் உடைய தலைவியோ, நீ அதனைக் கடந்து வருவதனால் வரும் ஏதங்களை நினைந்து நினைந்து வருந்துகிறாள். ஆகவே, விரைந்து வந்து, மணந்து கொள்வாயாக என்கிறாள்.)*

**கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி**
**சிதலை செய்த செந்நிலைப் புற்றின்**
**மண்புனை நெடுங்கோடு உடைய வாங்கி,**
**இரைநசைப் பரிக்கும் அரைநாட் கங்குல்**
**ஈன்றுஅணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி**
**ஒளிறுஏந்து மருப்பின் களிறுஅட்டுக் குழூஉம்**
**பனிஇருஞ் சோலை எமியம் என்னாய்**
**தீங்குசெய் தனையே, ஈங்குவந் தோயே;**
**நாள்இடைப் படின்,என் தோழி வாழாள்;**
**தோளிடை முயக்கம் நீயும் வெய்யை; 10**

**கழியக் காதலர் ஆயினும், சான்றோர்**
**பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்;**
**வரையின் எவனோ? - வான்தோய் வெற்ப!**
**கணக்கலை இருக்கும் கறிஇவர் சிலம்பின்**
**மணப்புஅருங் காமம் புணர்ந்தமை அறியார், 15**

**தொன்றுஇயல் மரபின் மன்றல் அயரப்**
**பெண்கோள் ஒழுக்கம் கண்கொள நோக்கி,**
**நொதுமல் விருந்தினம் போல,இவள்**
**புதுநாண் ஒடுக்கமும் காண்குவம், யாமே!**

*வானளாவும் வெற்பினை உடைய தலைவனே! கூனல் முதுகினையும். குறுக அடியிட்டுச் செல்லும் நடையினையும் உடைய கரடிகளின் கூட்டமானது கரையான் கட்டிய சிவந்த நிலையினையுடைய புற்றினது, மண்ணாற் புனைந்த நீண்ட உச்சிகள் உடையுமாறு பெயர்த்திட்டுப், புற்றாஞ்சோறாகிய இரை யினை விரும்பித் திரிந்து கொண்டிருக்கும், நடுநாள் இரவிலே,*

*குட்டியை ஈன்ற அணிமையையுடைய பெண் புலியானது பசித்ததென்று, ஆண்மையுடைய ஆண்புலியானது, ஒளி வீசுகின்ற ஏந்திய கோட்டினையுடைய ஆண்யானையைக் கொன்று முழங்கும்; அத்தகைய குளிர்ந்த இருள் படர்ந்த சோலையிலே, 'யாமே தமியம்' என்றும் நினையாயாய், ஈங்குக் கடந்து வந்தனையாதலின், தீங்கே எமக்குச் செய்தனையாவாய்!*

*நீ வாராது ஒருநாள் இடைப்படினும், என் தோழியோ உயிர் வாழமாட்டாள். அதேபோல, அவளுடைய தோளிடத்துத் தழுவுதலை நீயும் விரும்புதலுடையை! சான்றோராவார் மிக்க காதல் கொண்டனரேயானாலும், பழியுடன் கூடியதாக வருகின்ற இன்பத்தினை ஒருபோதும் விரும்பவே மாட்டார்கள். ஆகவே, நீயும் முறையாக வரைந்து கொள்வதனால் வரும்குறைவுதான் என்னையோ?*

*கலைமான் கூட்டம் தாழ ஒலிக்கும், மிளகுக் கொடி படர்ந்த மலைச்சாரலிலே, எய்துதற்கு அரிய காமத்தால் நீவிர் களவிலே கூடியமையை அறியாத எமர், தொன்றுதொட்டு வரும் முறைமைப்படி, நுமக்கு வதுவை நிகழ்த்திட,*

*நீ இவளை வரைந்து பெண்கொள்ளும், அவ்வொழுக்கத் தினைக் கண்ணார நோக்கி, யாம், அயலேமாகிய புதியேம் போல, இவளுடைய புதிய நாணத்தாலாகிய ஒழுக்கத்தினையும், அதுகாலைக் காண்பேமன்றோ!*

**சொற்பொருள்:** *1. கூனல் எண்கின், கூரல் எண்கின், கூருகிர் எண்கின் எனவும் பாடங்கள். தொழுதி - கூட்டம், சிதலை - கரையான். 3. வாங்கி - பெயர்த்து. வயவுப்பிண - உணவு*

*வேட்கையினையுடைய பெண்புலி. 6. குழுமும் - முழங்கும். 10. வெய்யை - விரும்புவை. 11. கழியக் காதலர் - மிகுதியான காதலுடையவர். 14. கணக்கலை - கலைக்கணம். 17. பெண்கோள் ஒழுக்கம் - திருமண நிகழ்ச்சிகள். 'கழியக் காதலராயினும் சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்' என்பது, புகழ்பற்றிப் பிறந்த பெருமிதம் என்பர் பேராசிரியர்.*

**உள்ளுறை:** *'கரடி புற்றினைச் சிதைத்து, உள்ளிருக்கும் புற்றாஞ்சோற்றை உண்ணலை விரும்பியே திரிந்து கொண்டிருந் தாற்போல, நீயும், இவள் குடிப்பெருமையைச் சிதைத்து இவளைக் களவிற்கூடி இன்புறுதலையே நாடினாய்' என்றனள்.*

## 113. செலீஇயர் என் உயிரே!

**பாடியவர்:** *கல்லாடனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *தலைமகன் பிரிவின்கண், தலைமகள் தோழிக்குச் சொல்லியது.* **சிறப்பு:** *பல்வேற் கோசரின் நன்னாடும், பாணன் என்பானின் நாடும்.*

*(தலைமகன் பிரிந்துபோக, வருந்திய தலைவியானவள், தன் உயிர் அவனை நோக்கிச் சென்றுவிடத், தன்னுடல் மட்டும் அங்கே அழாது கிடக்கும் எனப் புலம்புகின்றாள்.)*

**நன்றுஅல் காலையும் நட்பின் கோடார்,**
**சென்று வழிப்படூஉம் திரிபுஇல் சூழ்ச்சியிற்,**
**புன்தலை மடப்பிடி அகவுநர் பெருமகன்**
**அமர்வீசு வண்மகிழ் அஃதைப் போற்றிக்,**
**காப்புக் கைந்நிறுத்த பல்வேற் கோசர் 5**

**இளங்கள் கமழும் நெய்தல்அம் செறுவின்**
**வளம்கெழு நன்னாடு அன்னஎன் தோள்மணந்து,**
**அழுங்கன் மூதூர் அலர்எடுத்து அரற்ற,**
**நல்காது துறந்த காதலர், 'என்றும்**
**கல்பொரூஉ மெலியாப் பாடின் நோன்அடியன் 10**

**அல்கு வன்சுரைப் பெய்த வல்சியர்**
**இகந்தன ஆயினும், இடம்பார்த்துப் பகைவர்**
**ஓம்பினர் உறையும் கூழ்கெழு குறும்பிற்**
**குவைஇமில் விடைய வேற்றுஆ ஒய்யும்**
**கனைஇருஞ் சுருணைக் கனிகாழ் நெடுவேல் 15**

**விழவுஅயர்ந் தன்ன கொழும்பல் திற்றி**
**எழாஅப் பாணன் நன்னாட்டு உம்பர்,**
**நெறிசெல் வம்பலர்க் கொன்ற தெவ்வர்**
**எறிபடை கழீஇய சேயரிச் சின்னீர்**
**அறுதுறை அயிர்மணற் படுகரைப் போகிச், 20**

**சேயர்' என்றலின், சிறுமை உற்றஎன்**
**கையறு நெஞ்சத்து எவ்வம் நீங்க,**
**அழாஅம் உறைதலும் உரியம் - பராரை**
**அலங்கல் அம்சினைக் குடம்பை புல்லெனப்**
**புலம்பெயர் மருங்கிற் புள்எழுந் தாங்கு, 25**

**மெய்இவண் ஒழியப் போகி,அவர்**
**செய்வினை மருங்கிற் செலீஇயர்,என் உயிரே!**

நன்மை அல்லாமற் போய்க், கேடே வந்துற்ற காலையினும், தம்முடைய நட்புத் தன்மையிலே நின்றும் கோணாதவர்கள், அந் நட்பினர்பால் சென்று, அவர் வழிப்பட்டிருக்கும் உள்ளத்திலே, திரிபில்லாத அறிவுடைமையுடையவர்கள். கூத்தர்களைப் புறக்கும் பெருமகனாய், அவர்கட்குப் புல்லிய தலையினையுடைய இளைய பிடியானைகளை, அமரின்கண் அளிக்கும் வண்மை யாலாகிய மகிழ்வுடையவனாக விளங்கிய, அஃதை என்பானைப் பாதுகாத்து, அவனைக் காவல் மிகுந்த இடத்திலே நிலைநிறுத்திய, பல வேற்படையினை யுடையவர்கள், கோசர்கள்.

அவர்களது, புதிய கள் கமழும்; நெய்தலஞ்செறு வென்னும், வளம் பொருந்திய நல்ல நாட்டைப் போன்ற, என் தோளினைக் கூடி, ஆரவாரமுடைய பழைய ஊர் அலர் எடுத்து அரற்றவும், நமக்கு அருளாது, நம்மைக் கைவிட்டுப் போயினர், நம் காதலர்.

எந்நாளும் கல்லைப் பொருது, மெலிவுறாத, இனிய வலிய அடியினையுடையவனும், மிக்க வலிய மூங்கிற் குழாயிலே பெய்த உணவினை உடையவனும், தன் நாட்டெல்லையைக் கடந்து தொலைவிலுள்ளதே யாயினும், கவரும் செவ்வி பார்த்துப், பகைவர் ஆக்களைப் பாதுகாத்து உறையும் உணவுமிக்க அரண்களிலே சென்று, திரண்ட திமிலையுடைய ஏறுகளுடன் கூடிய பகைப்புலத்து ஆக்களைக் கவர்ந்து செலுத்துபவனும், செறிந்த கரிய பூணையும் நெய் கனிந்த தண்டையுமுடைய நீண்ட வேலினையும், விழாச் செய்தாலொத்த கொழுமையாகிய பலப்பல உணவுகளையுமுடையவனுமாகிய, பகைவர்க்குப் புறமுதுகிடாத, பாணன் என்பானது, நல்ல நாட்டிற்கு அப்பாற்பட்ட, வழியிலே செல்லும் புதியவர்களைக் கொன்ற ஆறலைப் போராகிய கள்வர்கள், தாங்கள் எறிந்த படைக்கலங்களைக் கழுவிய, சிவந்த நிறமுடைய, அரித்தோடும் சின்னீரையுடைய, மக்களியக்கம் அற்ற, நுண்மணல் பொருந்திய கரையினைத் தாண்டிச் சென்று அவர் தொலைவிடத்தே யுள்ளனர். இப்படிப் பலரும் சொல்லுவதனால், நோயுற்றுச் செயலற்ற என் நெஞ்சத்தின் துயரங்கள் நீங்குமாறு,

பருத்த அடிமரத்திலே கிளைத்த, அசையும் அழகிய கிளையிலேயுள்ள தன் கூடானது தனித்து ஒழியத், தான்

*பெயர்ந்துபோக எண்ணிய புலத்திடத்தினை நோக்கிப், பறவையானது புறப்பட்டுச் சென்றாற்போல, என்னுடலானது இவ்விடத்தே கிடந்து தனித்து ஒழியுமாறு கைவிட்டு, என் உயிரானது, அவர் வினைசெய்து கொண்டிருக்குமிடத்திற்கே புறப்பட்டுப் போவதாக! அதனால், யாம் அழாதே பொறுத்திருத்தலுக்கும் உரியவர் ஆவோமே!*

**சொற்பொருள்:** *1. நன்றல்காலை - துயருற்ற காலை. 5. காப்புக்கை நிறுத்தல் - பாதுகாவலாக வைத்துக் காத்தல். 6. நெய்தலம் செரு - கடல் சார்ந்த நாடு. 8. அபங்கல் - ஆரவாரம். 11. சுரை - மூங்கில்; சுரைக்குடுவையுமாம். 13. குறும்பு - சிறு காட்டரண். 15. சுருணை - பூண். 23. பராரை - பருத்த அரை. 24. குடம்பை - கூடு.*

**விளக்கம்:** *பாணன், தமிழ் நாட்டின் வடபாலிருந்த நாட்டின் தலைவன். இவன் வரலாறு பிற்சேர்க்கையில் காண்க. வாய்மை தவறாது நட்பினைப் பேணிக்காத்த கோசரைப்போலத், தலைவனும், நம் துயரத்து எல்லைக்கண் வந்து அருளாத தேனோ? என்பது குறிப்பு. அதனால், தன் உயிர் போய்விடும் என்றாள், பிரிவுத் துயரந் தாழாதாளாக.*

## 114. அணங்குசால் அரிவை!

**பாடியவர்:** .......... **திணை:** *முல்லை.* **துறை:** *வினை முற்றி மீளும் தலைமகன், தேர்ப்பாகனுக்குச் சொல்லியது.*

*(வினை முடித்து ஊர் நோக்கித் திரும்பி வருபவனான தலைவன், தன் தேர்ப்பாகனை நோக்கித் தேரை விரையச் செலுத்த வேண்டுகிறான். தன்பால் ஊடல் கொண்டிருக்கும் தலைவியை மனக்கண்முன் கண்டு கூறி, விரைவுபடுத்துகிறான்.)*

**கேளாய், எல்ல! தோழி! வேலன்**
**வெறிஅயர் களத்துச் சிறுபல தாஅய்**
**விரவுவீ உறைத்த ஈர்நறும் புறவின்,**
**உரவுக்கதிர் மழுங்கிய கல்சேர் ஞாயிறு,**
**அரவுநுங்கு மதியின், ஐயென மறையும் 5**

**சிறுபுன் மாலையும் உள்ளார், அவர்என**
**நப்புலந்து உறையும் எவ்வம், நீங்க**
**நூல்அறி வலவ! கடவுமதி, உவக்காண்**
**நெடுங்கொடி நுடங்கும் வான்தோய் புரிசை,**
**யாமம் கொள்பவர் நாட்டிய நளிசுடர் 10**

**வானக மீனின் விளங்கித் தோன்றும்,**
**அருங்கடிக் காப்பின், அஞ்சுவரு மூதூர்த்**
**திருநகர் அடங்கிய மாசுஇல் கற்பின்,**

**அரிமதர் மழைக்கண், அமைபுரை பணைத்தோள்,**
**அணங்குசால், அரிவையைக் காண்குவம் -** 15

**பெலம்படைக் கலிமாப் பூண்ட தேரே!**

*குதிரைகளைச் செலுத்தும், இலக்கண மரபினை நன்கு அறிந்தவனாகிய பாகனே!*

*(ஏடி தோழி! கேட்பாயாக. வேலன் வெறியாடும் களத்திலே பரந்த பலவாக விரவிக் கிடக்கும் சிறு பூக்களைப் போலப் பூக்கள் உதிர்ந்து கிடக்கும் குளிர்ச்சி பொருந்திய கரிய முல்லை நிலத்திலே, வெம்மையான கதிர்களும் மழுங்கிய மலையினைச் சென்று சேரும் ஞாயிறானது, பாம்பு விழுங்கும் திங்களைப் போல, மெல்ல மெல்ல மறைகின்ற சிறுமையினையுடைய, புல்லிய மாலைக் காலத்திலேயும், நம்மை அவர் நினையார்' என்று தோழியிடம் கூறியவளாக, நம்மை வெறுத்து உறையும், நம் தலைவியின் துன்பம் நீங்குமாறு,*

*நெடுங் கொடிகள் அசைந்தாடும் வானளாவிய மதிலின் கண், இராப்பொழுதைக் காத்திருப்போர் நாட்டிய விளக்கு களின் நெருக்கம், வானத்திடத்தே விளங்கும் விண்மீன்களைப் போல விளங்கித் தோன்றும், அரிய காவல் திறனையுடைய, பகைவர்க்கு அச்சத்தைத் தரும் மூதூரிலேயுள்ள, செல்வ மிகுந்த மாளிகையிலே அடங்கியுள்ள, குற்றமற்ற கற்பினையும், செவ்வரி பட்ர்ந்த மதர்த்த குளிர்ந்த கண்களையும், மூங்கிலையொத்த பணைத்த தோள்களையும் உடைய, தெய்வமகள் போன்ற சிறந்த நம் தலைவியைச் சென்று நாம் காண்போம்)*

*பொன்னாலாகிய சேணத்தினைப் பூண்ட செருக்குடைய குதிரைகள் பூட்டப்பெற்ற, நின் தேரினை, அவ்விடத்தே விரையச் செலுத்துவாயாக!*

**சொற்பொருள்:** *1. எல்ல - ஏடீ. 2. தாஅய - சொரிந்து பரந்த. 3. விரவுவீ - கலந்து கிடக்கும் பூக்கள். உறைத்த - உதிர்ந்த. 5. நுங்குதல் - விழுங்குதல். 13. அடங்கிய - தன் எழுச்சி குன்றியவளாகச் சோர்ந்து இருந்த. 16. கலிமா - விரையச் செல்லும் குதிரைகள்.*

## 115. காதலர் நோயிலர் ஆக!

**பாடியவர்:** *மாமூலனார்.* **திணை:** *பாலை.* **துறை:** *பிரிவிடை வற்புறுக்குந் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.* **சிறப்பு:** *குடநாட்டுச் செழிப்பும், எவ்வியும்.*

*(தன்னைப் பிரிந்துசென்ற காதலன், வருவதற்குக் குறிப்பிட்ட காலத்தினும் வாராமையால், பெருந்துயரம் உற்றனள் தலைவி. அவன் விரைந்து வருவான் எனத் தோழி அவளை ஆற்றுவிக்க*

*முயல, அவள் மனம் நொந்து, 'அவராவது நோயிலராக இருப்பாராக' என வாழ்த்துகின்றனள்.)*

**அழியா விழவின், அஞ்சுவரு மூதூர்ப்**
**பழிஇலர் ஆயினும், பலர்புறங் கூறும்**
**அம்பல் ஒழுக்கமும் ஆகியர், வெஞ்சொல்**
**சேரிஅம் பெண்டிர் எள்ளினும் எள்ளுக;**
**நுண்பூண் எருமை குடநாட் டன்னஎன்** 5

**ஆய்நலம் தொலையினும் தொலைக; என்றும்**
**நோய்இல ராக,நம் காதலர் - வாய்வாள்**
**எவ்வி வீழ்ந்த செருவில் பாணர்**
**கைதொழு மரபின்முன் பரித்துஇடூஉப் பழிச்சிய**
**வள்உயிர் வணர்மருப்பு அன்ன, ஒள்இணர்ச்** 10

**சுடர்ப்பூங் கொன்றை ஊழுறு விளைநெற்று**
**அறைமிசைத் தாஅம் அத்த நீளிடைப்,**
**பிறைமருள் வான்கோட்டு அண்ணல் யானை,**
**சினம்மிகு முன்பின், வாமான், அஞ்சி**
**இனம்கொண்டு ஒளிக்கும் அஞ்சுவரு கவலை** 15

**நன்னர் ஆய்கவின் தொலையச் சேய்நாட்டு**
**நம்நீத்து உறையும் பொருட்பிணிக்**
**கூடா மையின், நீடி யோரே!**

*என்றும் அழிவில்லாத விழவுப் பெருக்கத்தினையுடைய பகைவர்க்கு நினைப்பினும் அச்சம் விளைக்கும் மூதூர் இது. இதன்கண், ஏதொரு பழியும் அற்றவர்களேயாயினும், அவர் பலரையும் புறஞ்சொற் கூறுதலாகிய அம்பல் ஒழுக்கத்தினையும், வெம்மையான சொற்களையும் உடையவர், சேரிப் பெண்டிர் களுட் சிலர். அவர்கள், எம்மை எள்ளி நகையாடினாலும் எள்ளுக.*

*நுண்மையான தொழிற்பாடமைந்த பூணினையுடைய எருமைகள் மலிந்த, வளமிக்க குடநாட்டைப் போல்வதாகிய, என்னுடைய அழகிய நலமெல்லாம், தொலைந்து போயினும் போவதாக!*

*வெற்றி வாய்த்தலையுடைய வாளினையுடையவன் எவ்வி என்பான். அவன் வீழ்ந்துபட்ட போர்க்களத்திலே, பாணர்கள், கையாற்றொழுகின்ற முறைமையோடு முன்பெல்லாம் அவனைப் போற்றிப் பராவிய, வளம் பொருந்திய ஒலியை யுடைய, தம் யாழின் வளைந்த கோட்டினையே மனம் வெறுத்து முறித்துப் போட்டனர். அதைப்போல, ஒள்ளிய பூங்கொத்துக் களையுடைய சுடரும் பூக்கள் மலிந்த கொன்றையினது, முறையாக விளைந்த நெற்றுக்கள், பாறைகளின் மேலாக அற்று வீழ்ந்து கிடக்கும். சுரத்தின் நீண்டு கிடக்கும் நெறியியிலேயுள்ள,*

பிறையினையொத்தாற் போல வளைந்த, வெண்மையான கோட்டினையுடைய தலைமையான யானையானது, சினமிக்க ஆற்றலையுடைய சிங்கத்திற்கு அஞ்சித் தன் இனத்தை ஒருசேர அழைத்துக் கொண்டு மறைந்திருக்கும்; அத்தகைய, அச்சம் விளைவிக்கும் கவர்ந்த நெறிகளிலே,

நன்றாகிய, நம்முடைய ஆராயத்தக்க அழகனைத்தும் தொலையுமாறு, நம்மைக் கைவிட்டுப் பிரிந்து, தொலைவிலுள்ள நாட்டினிடத்தே சென்ற நம் தலைவர், அவ்விடத்தே வாழுதற்குக் காரணமாகிய பொருளின்மீதுள்ள பற்றானது, உரிய காலத்தில் நிறைவுராமையினாற் போலும், காலம் நீட்டித்திருப்பவராயினர்! அத்தகைய நம் காதலர், அவ்விடத்தே, என்றும் நோயின்றியே இருப்பாராக!

**சொற்பொருள்:** 5. நுண்பூண் எருமை - எருமைக் கொம்புகளை அறுத்து இடப்பட்ட பூண் எனக் கொள்ளின் நுண்பூண் எருமைகளையுடைய மருதவளம் மிக்க குடநாடு என்க. அன்றி, எருமை குறுநிலத் தலைவன் பெயராகக் கொள்ளின் நுண்பூன் எருமையின் குடநாடு என்க. இதே மாமூலனார் குடநாட்டு வேந்தனாகக் குட்டுவனை முன்னர்க் குறிப்பிடலால், எருமைகள் மலிந்த குடநாடே பொருத்தமாவதாகும். 14. சினமிகு முன்பின் வாமான் அஞ்சி எனக் கொண்டு, சினமிக்க வலிமையையும், தாவும் குதிரைகளையுமுடைய அஞ்சி என்பான் எனவும் உரைப்பர். அஞ்சி மழவர் கோமான். மழவர் ஆநிரைக்கவர்தலை மற்றும் செய்யுட்களிலும் காணலாம்.

'நம்மை அறனன்றித் துறத்தலின் தீங்கு வருமென்று அஞ்சி வாழ்த்தியது' என்பர், நச்சினார்க்கினியர்.

**உள்ளுறை:** 'தம்மை இன்புறுத்திய எவ்வியின் துயர் கண்டு வெதும்பிய, பாணர்க்குள்ள உள்ளங்கூடத் தலைவனிடம் இல்லை; இனம்பேணும் களிற்றின் பாசம்கூட அவனிடம் இல்லை; அவன் வாழ்க!' என வாழ்த்தினள்!

## 116. புனல் அயர்ந்தனை என்ப!

**பாடியவர்:** பரணர். **திணை:** மருதம். **துறை:** தோழி தலைமகனை வாயில் மறுத்தது. **சிறப்பு:** செழியன் இயற்றிய கூடற் பறந்தலைப் போர்.

'தலைவி, பிறர் அலர் கூறியவழிக் காமஞ்சிறந்து புலந்தவாறு' என்று, நச்சினார்க்கினியர் கூறுவர்.

(பரத்தையுடன் புனல் விளையாட்டு அயர்ந்து வீடு திரும்பினான் தலைவன். தலைவியோ ஊடி நின்றாள். தோழிமூலம் அவன் ஊடலைத் தீர்க்க முயல, அவள், அவன் செயலைப் பழித்துக்கூறி, வாயில் மறுத்து உரைக்கின்றாள்.)

**எரியகைந் தன்ன தாமரை இடைஇடை**
**அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்**
**கட்கொண்டு மறுகும் சாகாடு அளற்றுஉறின்,**
**ஆய்கடும்பு அடுக்கும் பாய்புனல் ஊர!**
**பெரிய நாண்இலை மன்ற; பொரிஎனப்** 5

**புன்குஅவிழ் அகன்துறைப் பொலிய, ஒள்நுதல்,**
**நறுமலர்க் காண்வரும் குறும்பல் கூந்தல்,**
**மாழை நோக்கின், காழ்இயன் வனமுலை,**
**எஃகுடை எழில்நலத்து ஒருத்தியொடு நெருநை**
**வைகுபுனல் அயர்ந்தனை' என்ப; அதுவே,** 10

**பொய்புறம் பொதிந்துயாம் கரப்பவும் கையிகந்து**
**அலர்ஆ கின்றால் தானே; மலர்தார்,**
**மையணி யானை, மறப்போர்ச் செழியன்**
**பொய்யா விழவின் கூடற் பறந்தலை,**
**உடன்இயைந்து எழுந்த இருபெரு வேந்தர்** 15

**கடன்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி,**
**இரங்குஇசை முரசம் ஒழியப், பரந்துஅவர்**
**ஓடுபுறம் கண்ட ஞான்றை,**
**ஆடுகொள் வியன்களத்து ஆர்ப்பினும் பெரிதே!**

*நெருப்புக் கப்புவிட்டு எரிவது போன்ற தாமரைப் பூக்களின் இடையினிடையே, செந்நெல் தாளினை அரிந்து குவிப்பவர் நெல்லரிவோர். தங்கட்குக் கள்ளைக் கொண்டு பலகாலும் வருகின்ற வண்டியானது சேற்றிலே பதிந்திட்டால், சிறந்த கரும்புகளை வெட்டிச் சேற்றிலே அடுக்கி, அதனைப் போக்குபவர் அவர். அத்தகைய, பாயும் புனல்வளம் மிக்க ஊரனே! உறுதியாக, நீ பெரிதும் நாணமில்லாதவனே யாவாய்.*

*பொரிபோலப் புன்கம்பூவானது மலர்ந்திருக்கும், அகன்ற நீர்த்துறைகள் பொலிவுறுமாறு, ஒளிபொருந்திய நெற்றியினையும், நறிய மலர்கள் காண்பதற்கு அழகியதாகச் சூட்டிய குறிய பலவாகிய கூந்தலினையும், மாவடுப்போன்ற கண்ணினையும், முத்து வடங்கள் அசையும் அழகிய முலைகளையும், நுண்ணிய அழகின் பிற நலங்களையுமுடைய பரத்தை ஒருத்தியுடன், நேற்று, இடையறாது ஒழுகிவரும் புனலிலே, நீ புனல் விளையாட்டயர்ந்தனை எனப் பலரும் கூறுவர்.*

*மலர்ந்த பூமாலையினையும், தலையிலே மை அணிந்த யானையினையும் உடைய, மறம் பொருந்திய போரிலே வல்லவன் பாண்டியன். அவன், என்றும் நீங்காத விழவினையுடைய கூடல் போர்க்களத்திலே, தம்முடன் ஒருங்கு இயைந்து எழுந்த சோழ, சேர அரசர்களது கடல் அனைய பெரும் படைகளைக் கலங்கியழியுமாறு தாக்கினான். ஒலிக்கும்*

ஒலியினையுடைய முரசங்களைக் களத்திலேயே ஒழியவிட்டு, அவர் பரந்து சிதறியோடும் புறக்கொடையையும் கண்டான். அந்த நாளிலே, வெற்றி கொண்டாடிய பெரிய களத்தின்கண் எழுந்த ஆரவாரத்தினும் பெரிதாக, நின் செயல் குறித்து ஊரிலேயும் அலர் ஆரவாரம் பெரிதாகின்றதே!

அதுதான், அதனைப் பொய்யென்று புறத்தே மூடி மறைக்க யாம் முயன்றாலும், எம் கைகடந்தும் எழுகின்றதே!

**சொற்பொருள்:** 3. மறுகுதல் - பலகாலும் வந்து போதல். சாகாடு - வண்டி. 6. புன்கு - புன்க மரம். 8. மாழை - மாவடு. இளமை - அழகு. 9. எஃகுடை எழில் நலம் - எஃகு நெஞ்சத்தையும் உடைக்கும் எழில் நலம் எனவும் கூறலாம். 10. வைகு புனல் - இடையறாது ஒழுகிவரும் புனல்.

**உள்ளுறை:** 'நெல்லரிவோர் தம் தொழிலை விடுத்துக் கள்வண்டியின் ஆழ்ச்சியைப் போக்குதற்குச், சிறந்த கரும்பினைச் சிதைப்பர். அவர்போல, நீயும் இல்லறமாகிய நின் கடமையை மறந்து, இழிந்த பரத்தையின் இன்பத்தையே விரும்பிச், சிறந்த தலைவியைச் சிதைவுறச் செய்தனை' என்றனள்.

## 117. சிலம்பு நகச் சென்றனள்!

**பாடியவர்:** ............ **திணை:** பாலை. **துறை:** மகட் போக்கிய செவிலித்தாய் சொல்லியது. **சிறப்பு:** பண்ணன்.

*(வீட்டின் இற்செறிப்பையும் கடந்து, தன் காதலனுடன் உடன் போக்கிலே சென்றுவிட்டாள் ஒரு தலைவி. அவளை நினைந்து புலம்பு கிறாள் செவிலித்தாய். அவள் மகளின் கூந்தலை ஒப்பனை செய்யும் காட்சியை நினைத்துக் கூறுவது, மிக்வும் நயமுடைய பகுதியாகும்.)*

**மௌவலொடு மலர்ந்த மாக்குரல் நொச்சியும்,**
**அவ்வரி அல்குல் ஆயமும் உள்ளாள்,**
**ஏதிலன் பொய்ம்மொழி நம்பி, ஏர்வினை**
**வளம்கெழு திருநகர் புலம்பப் போகி,**
**வெருவரு கவலை ஆங்கண், அருள்வரக், 5**

**கருங்கால் ஓமை ஏறி, வெண்தலைப்**
**பருந்து பெடைபயிரும் பாழ்நாட்டு ஆங்கண்,**
**பொலந்தொடி தெளிர்ப்ப வீசிச், சேவடிச்**
**சிலம்புநக இயலிச் சென்றஎன் மகட்கே -**
**சாந்துஉளர் வணர்குரல் வாரி, வகைவகுத்து, 10**

**யான்போது துணைப்பத், தகரம் மண்ணாள்,**
**தன்ஓ ரன்ன தகைவெங் காதலன்**
**வெறிகமழ் பன்மலர் புனையப் பின்னுவிடச்**
**சிறுபுறம் புதைய நெறிபுதாழ்ந் தனகொல் -**
**நெடுங்கால் மாஅத்து ஊழுறு வெண்பழம் 15**

**கொடுந்தாள் யாமை பார்ப்பொடு கவரும்**
**பொய்கை சூழ்ந்த, பொய்யா யாணர்,**
**வாணன் சிறுகுடி வடாஅது**

*தீம்நீர்க் கான்யாற்று அவிர் அறல் போன்றே!*

*முல்லையோடு சேர்ந்து மலர்ந்திருக்கும் கரிய கொத்தினை யுடைய நொச்சியையும், அழகிய வரி பொருந்திய அல்குலினை யுமுடைய தன் ஆயத்தினரையும், நினையாளாயினள்!*

*மயிர்ச்சாந்து பூசிய, வளைந்த கொத்தாகிய கூந்தலை வாரி, வகை வகையாக வகுத்து, யான் மலர்களை இணைக்கப் போக, அதற்கு உடன்பட்டுத், தகரச் சாந்தினைப் பூசிக் கொள்ளவும், மறுத்தனள்.*

*எவனோ ஒருவனின், பொய்ம்மையான சொற்களை நம்பி, அழகிய தொழில்நலம் வாய்ந்த, வளம் பொருந்திய, செல்வ மிக்க மாளிகையும் தனித்தொழியப் போயினள்.*

*அஞ்சத்தக்க கவர்த்த நெறிகளையுடைய அவ்விடங்களிலே, வெண்மையான தலையினையுடைய பருந்தானது, கரிய அடியினையுடைய ஓமை மரத்தின்மீது ஏறி, அருள் உண்டாகத் தன் பேடையைப் பலகால் அழைத்திருக்கும். பாழ்பட்ட நாட்டுப் பகுதியாகிய அவ்விடங்களிலே, பொற்றொடிகள் ஒலிக்கத் தன் கைகளை வீசியும், சிவந்த அடிகளிலே சிலம்புகள் ஒலிக்கவும், அவள் அசைந்தசைந்து சென்றனள். அத்தகைய என் மகளுக்கு,*

*தன்னையே ஒப்பான தகைமையையும் விருப்பத்தினையு முடைய அவள் காதலன், மணம் கமழும் பல மலர்களைத் தலையிலே சூடுவதற்கு, அவள் தலையைப் பின்னிவிட, அதுதான்,*

*நெடிய அடியினையுடைய மாமரத்தினது, முறையாக முற்றி விழுந்த ஒளியுடைய பழத்தினை, வளைந்த காலினையுடைய யாமையானது, தன் பார்ப்போடு அமர்ந்துண்ணும் அத்தகைய பொய்கைகள் சூழ்ந்த, என்றும் பொய்யாத புதுவருவாய்களை யுடைய, பண்ணனது சிறுகுடி என்னும் ஊர்க்கு வடக்கின் கண்ணுள்ள, இனிய நீரினையுடைய காட்டாற்றின்கண் விளங்கும் அறல்போல, அவளுடைய பிடர் மறையுமாறு, நெறியுற்றுத் தொங்குகின்றவோ!*

**சொற்பொருள்:** *1. மௌவல் - முல்லை. மாக்குரல் - கரிய கொத்து. 2. அவ்வரி - அழகிய வரி. ஆயம் - ஆய மகளிர். 4. திருநகர் - செல்வமிக்க மாளிகை. 8. தெளிர்ப்ப - ஒலிசெய்ய. 9. சிலம்புநக - சிலம்பு முழங்க. 10. வணர் குரல் - வளைந்த கூந்தல். 11. தாரம் - ஒரு வாசனைப் பொருள். 13. பின்னுவிட - பின்னிவிட. 15. ஊழுறு*

ஊழுற்று முதிர்ந்து வீழ்ந்த. 17, 18 - பாணன் வாணன் என்றும் பாடம் உரைப்பர். சிறுகுடிகிழான் பண்ணன் முன்னரும் கூறுப் படுவது கொண்டு, பண்ணனே இங்கும் கொள்ளப் பட்டது.

## 118. இயல் முருகு ஒப்பினை!

**பாடியவர்:** கபிலர். **திணை:** குறிஞ்சி. **துறை:** செறிப்பறிவுறீஇ இரவும் பகலும் வாரலென்று வரைவு கடாஅயது.

*(தினை முற்றிவிடப், பகற்குறியிடத்திலே காதலர் கூடுதலும் நின்றது. தலைவி இற்செறிக்கப்பட்டனள். அவனோ இரவுக்குறி நேர்ந்தான். இரண்டையும் மறுத்து, அவளை மணந்து கொள்ளுதலே முறையாகும் என அறிவுறுத்துகின்றாள், தோழி.)*

**கறங்குவெள் அருவி விளங்குமலைக் கவாஅன்,**
**தேங்கமழ் இணர வேங்கை சூடித்,**
**தொண்டகப் பறைச்சீர்ப் பெண்டிரொடு விரைஇ,**
**மறுகில் தூங்கும் சிறுகுடிப் பாக்கத்து,**
**இயல்முருகு ஒப்பினை, வயநாய் பிற்படப்,** 5

**பகல்வரின், கவ்வை அஞ்சுதும்; இகல்கொள,**
**இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்,**
**பெருங்கை யானைக் கோள்விழைத்து, இரீஇய**
**அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்**
**தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்;** 10

**என்ஆ குவள்கொல் தானே? பல்நாள்**
**புணர்குறி செய்த புலர்குரல் ஏனல்**
**கிளிகடி பாடலும் ஒழிந்தனள்;**
**அளியள் தான்,நின் அறிஅலது இலளே!**

ஒலிக்கும் வெண்மையான அருவிகள் விளங்கும், மலைச் சாரலின் பக்கங்களிலே, தேன் கமழும் கொத்துக்களையுடைய வேங்கைப் பூக்களைச் சூடித், தொண்டகம் என்னும் பறையின் தாளத்திற்கு இசையப், பெண்டிரோடும் கூடித் தெருக்களிலே கலந்தாடி, எம் சிறுகுடிப் பாக்கத்தின் கண்ணே இயங்கும் முருகனை ஒப்பவனாகி, வலிய நாய் நின் பின்னாலே வந்து கொண்டிருக்கப், பகற்பொழுதிலே நீ வந்தாயானால், அதனால் எழும் ஊரலர்க்கு யாமும் அஞ்சுவோம்!

கரிய தன் பிடியோடும் கன்றோடும் கலந்து வந்த அகன்ற வாயினையும் பெரிய கையினையுமுடைய யானையைக் கொள்ள முயன்று, தவறவிட்டு, அதனால் யானையினம் பகைகொள்ள, மறைந்திருக்கும் கொடிய புலிகள் திரியும், அரிய இருள் சூழ்ந்த நள்ளிரவிலே, நீ தனிமையாகி வருதலை நினைந்தால், அதனைக் காட்டினும் பெரிதாகவே அஞ்சுகிறோம்!

பலநாளும் புணர்தற்குக் குறியாகக் கொண்ட, முற்றிய கதிரையுடைய தினைப்புனத்திலே, கிளிகடிகின்ற பாடலினையும் அவள் கைவிட்டனள். இனி என்ன ஆகுவளோ? இரங்கத் தக்கவள்! நின் அருள் இல்லாமற்போனால், அவளும் இல்லையாகி இறந்தே போவாளே! (அவளுக்கு அருளாயோ?)

3. இகல் முருகு பாடமாயின், பகைவரோடு மாறுபாடு கொண்ட முருகன் என்க.

**சொற்பொருள்:** 1. கறங்குதல் - ஒலித்தல். பிறங்கு மலை - விளங்கும் மலை. கவாஅன் - பக்கம். 3. முருகு - முருகன். 5 வயநாய் - வலிய வேட்டை நாய். 6. கவ்வை - ஊரலர். 7. இரும்பிடி - பெரிய பிடியும் ஆம். 8. கோள் - கொள்ளுதல். 9. வழங்கும் - திரியும்.

**விளக்கம்:** பகலிற் கவ்வை அஞ்சுதும் என்றதனால், பகற்குறி விலக்கினாள். இரவில் வருதல் அஞ்சுதும் என்றதனால், இரவுக்குறி விலக்கினாள். கிளிகடி பாடல் ஒழிந்தனள் என்றதனால், செறிப்பறிவுறுத்தினாள். நின் அளியலது இவள் என்றதனால், வரைவு கடாயினாள் என்றறிக.

## 119. துணைப்பத் துணிகுவர் கொல்லோ!

**பாடியவர்:** குடவாயிற் கீரத்தனார். **திணை:** பாலை. **துறை:** செலவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது; தோழி தலைமகட்குச் சொல்லியதுமாம்.

(வேந்துவினை முடிக்கப் பிரியப்போகின்றவன், செய்தியைத் தோழி மூலம் தலைவிக்கு அறிவிக்கத் தலைவி, தன்னையும் உடன் அழைத்துப் போகுமாறு இங்ஙனம் கூறுகின்றாள்.)

**'நுதலும், தோளும், திதலை அல்குலும்,**<br>
**வண்ணமும், வனப்பும், வரியும் வாட**<br>
**வருந்துவள், இவள்'எனத் திருந்துபு நோக்கி,**<br>
**'வரைவுநன்று' என்னாது அகலினும், அவர்-வறிது,**<br>
**ஆறுசெல் மாக்கள் அறுத்த பிரண்டை,** 5

**ஏறுபெறு பாம்பின் பைந்துணி கடுப்ப,**<br>
**நெறியயல் திரங்கும் அத்தம்; வெறிகொள,**<br>
**உமண்சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில்,**<br>
**நோன்சிலை மழவர் ஊன்புழுக்கு அயரும்**<br>
**சுரன்வழக்கு அற்றது என்னாது, உரஞ்சிறந்து,** 10

**நெய்தல் உருவின் ஐதுஇலங்கு அகல்இலைத்**<br>
**தொடைஅமை பீலிப் பொலிந்த கடிகை,**<br>
**மடைஅமை திண்சுரை, மரக்காழ் வேலொடு**<br>
**தணிஅமர் அழுவம் தம்மொடு துணைப்பத்,**<br>
**துணிகுவர் கொல்லோ தாமே - துணிகொள** 15

**மறப்புலி உழந்த வசிபடு சென்னி**
**உறுநோய் வருத்தமொடு உணீஇய மண்டிப்,**
**படிமுழம் ஊன்றிய நெடுநல் யானை**
**கைதோய்த்து உயிர்க்கும் வறுஞ்சுனை,**
**மைதோய் சிமைய, மலைமுதல் ஆறே!** 20

*தோழி! நம் தலைவராகிய அவர், வரைந்து கொள்வதே நல்லது என்று கருதாதே அகன்றனரேனும், 'நெற்றியும் தோளும் தேமலுடைய அல்குலும் நிறமும் அழகும் வரியும் வாட வருந்து வளே இவள்' எனத், தம் பிழையினைத் திருத்திய வராகவும் கருதுவர்.*

*மறத்தையுடைய புலியுடனே போரிட்டு உழந்தமையினால், பிளவுபட்ட சென்னியினால் உற்ற நோயாகிய வருத்தத்துடன், நீர் உண்ணுதற்கு விரையச்சென்று, மண்ணிலே முழங்காலை மடித்து ஊன்றி, நெடிய நல்ல யானையானது, தனது கையால் சுனையினடியைத் தோய்த்து, நீரின்மையால் பெருமூச்செறியும், வறிய சுனைகளையுடைய, மேகம் படியும் உச்சியினையுடைய, மலையிடத்துச் செல்லும் வழிகள்தாம், அத்தன்மையன.*

*அவ்வழியினூடே செல்லும் மக்கள், அறுத்துப் போட்ட பிரண்டைக் கொடியானது, இடியால் தாக்கப்பட்டுத் துணி பட்டுக் கிடக்கும் பாம்புத் துண்டங்களைப்போல, வழிப் பக்கங்களிலே, பயனற்று வதங்கிக் கிடக்கும் காட்டுவழி அது.*

*'உப்பு வணிகர் விட்டுப்போன கல் அடுப்பிலே, வலிய வில்லினையுடைய மழவர்கள், நாற்றங்கொண்ட ஊனைப் புழுக்கியுண்ணும் இடங்களையுடைய சுரமானது, பெண்டி ரோடு கடந்து செல்லுவதற்கும் உரியதாகாது' என்று, இங்ஙனமெல்லாம் நினையாது,*

*உள்ளத்திலே ஊக்கம் சிறந்து, நெய்தற் பூப்போலும் உருவினையும், அழகியதாகத் தோன்றும் அழகிய இலை யினையும், தொடுத்தலமைந்த மயிற்றோகையால் விளக்கமுற்ற காம்பினையும், மூட்டுவாய் அமைந்த திண்ணிய சுரையினையும், கரிய தண்டினையும் உடைய வேலே துணையாகப், பகையைத் தணிவிக்கச் செல்லும் போர்க்களத்திற்குத் தம்மோடு யாமும் துணையாகச் செல்லவும், அவர் துணிவாரோ?*

**சொற்பொருள்:** *3. திருந்துபு - மீளவும் திருத்தமாக. 6. ஏறுபெறு பாம்பு - இடியால் தாக்குண்ட பாம்பு. 7.திரங்கும் - வாடிக் கிடக்கும். 9. நோன்சிலை - வலிய வில். 16. உழந்த - போரிட்டு வருந்திய. 18 படிமுழம் ஊன்றுதல் - முழங்காலிடல். 19. வறுஞ்சுனை - வறண்ட சுனை.*

**உள்ளுறை:** *'வழிச்செல்வோரால் அறுத்துப் போடப் பட்ட பிரண்டை வறிதே வாடுவதுபோல, அவரால் கைவிடப்பட்ட யானும் வாடுவேன். என் அழகும் பயனின்றிக் கழியும்.*

*உமண்சாத்துக் கைவிட்ட அடுப்பு, மழவர்க்கு ஊன் புழுக்கு அடுதற்குப் பயன்பட்டதுபோலத், துறக்கப்பட்ட யானும், அலர் கூறுவோர்க்கு இலக்காவேன்' எனவும்,*

*'புலியோடு உழந்து வடுப்பட்ட யானை, நீருண்ணக் கை தோய்த்து நீர் பெறாது நெட்டுயிர்த்தாற்போல, அம்பற் பெண்டிரின் அலராலும், அன்னையின் கடுஞ் சொல்லாலும், நெஞ்சம் புண்ணுற்று வாடும் யாம், அது தீருமாறு தலைவனை வேண்டியும், அருள்பெறாமல் உயிர்க்கின்றோம். ஆகவே, உடன்போக்கிலேனும் அவனுடன் செல்வோம் எனவும் கொள்க.*

## 120. அழல் தொடங்கினளே!

**பாடியவர்:** *நக்கீரனார்.* **திணை:** *நெய்தல்.* **துறை:** *தோழி பகற்குறிக்கண், தலைமகளை இடத்துய்த்து வந்து தலைமகனை எதிர்ப்பட்டு நின்று சொல்லியது.*

*(மாலை வேளையிலே, தலைவியைக் களவுக்குக் குறித்த இடத்திலே சேர்த்துவிட்டு வரும் தோழி எதிரே வந்த தலைவனுடன் இவ்வாறு சொல்லுகிறாள். நெய்தலிற் களவுக் கூட்டம் இது.)*

**நெடுவேள் மார்பின் ஆரம் போலச்,**
**செவ்வாய்வானம் தீண்டி மீன் அருந்தும்**
**பைங்காற் கொக்கினம் நிரைபறை உகப்ப,**
**எல்லை பைப்பயக் கழிப்பிக், குடவயின்**
**கல்சேர்ந் தன்றே, பல்கதிர் ஞாயிறு -** 5

**மதர்எழில் மழைக்கண் கலுழ, இவளே**
**பெருநாண் அணிந்த நறுமென் சாயல்**
**மாண்நலம் சிதைய ஏங்கி, ஆனாது**
**அழல்தொடங் கினளே - பெரும; அதனால்**
**கழிச்சுறா எறிந்த புண்தாள் அத்திரி** 10

**நெடுநீர் இருங்கழிப் பரிமெலிந்து; அசைஇ,**
**வல்வில் இளையரொடு எல்லிச் செல்லாது**
**சேர்ந்தனை செலினே சிதைகுவது உண்டோ -**
**பெண்ணை ஓங்கிய வெண்மணற் படப்பை**
**அன்றில் அகவும் ஆங்கண்,** 15

**சிறுகுரல் நெய்தல்எம் பெருங்கழி நாட்டே!**

*முருகக் கடவுளின் மார்பினிடத்தே விளங்கும் ஆரத்தைப் போலச் செவ்வானத்திலே பொருந்தி மீனை அருந்தும் பசிய கால்களையுடைய கொக்கினம், வரிசையாகப் பறத்தலை விரும்பி மேலெழுந்திடப், பகற்பொழுதை மெல்ல மெல்லக் கழித்துப், பல்கதிர் ஞாயிறும் மேற்றிசையிலே மலைவாயிலிற் சென்று சேர்ந்துவிட்டது.*

பெருநாணத்தை அணியாகக் கொண்ட, சிறு மென் சாயலுடைய இவள், தனது மாட்சியுடைய நலம் சிதையுமாறு, ஏக்கமுற்று, மதர்த்த அழகினையுடைய குளிர்ந்த கண்கள் கலுழ, ஓயாது அழுதலையும் தொடங்கிவிட்டனள்.

பெருமானே! உப்பங் கழியிலேயுள்ள சுறாமீன் தாக்குதலால் உற்ற புண்பட்ட காலினையுடைய கோவேறு கழுதை, நீண்ட நீரினையுடைய கரிய கழியிலே செல்லுதற்கு இயலாது மெலிந்தது. ஆகவே, வலிய வில்லினரான நின் இளையரோடு, இவ்விரவிலே செல்லாது, இளைப்பாறப்,

பனைமரங்கள் ஓங்கிய வெண்மணல் செறிந்த தோட்டங் களிலே, அன்றில்கள் அகவிக்கொண்டிருக்கும் அவ்விடத்திலே, சிறிய பூங்கொத்தினை உடைய எம் பெருங்கழி நாட்டின்கண் வந்தனையாய், நீதான் சிறிது பொழுது தங்கிச் சென்றால் சிதைகுவதுதாம் யாதுமுண்டோ?

**சொற்பொருள்:** *1. நெடுவேள் - முருகன். ஆரம் - வெண்கடப்ப மாலை என்க. 2. செவ்வாய் வானம் - செக்கர் வானம். 3. பறையுகப்ப - பறத்தலை விரும்ப. 10. எறிதல் - தாக்கி வருத்தல். புண் + தாள் - புட்டாள். அத்திரி கோவேறு கழுதை. 11. பரி - செலவு. 12. உளையர் ஏவலர். 16. குரல் - இங்கே பூங்கொத்து.*

**மேற்கோள்:** 'தோழி தலைவனை வேளாண் பெருநெறி வேண்டிக் கொள்ளுதலுக்கு' இதனைக் காட்டுவர் இளம் பூரணர்.

**விளக்கம்:** 'இரவிலுந் தங்கிச் செல்க' என்பாள், 'தலைவி இரவிலே அவனை நினைந்து நினைந்து படுகின்ற பிரிவுத் துயரைக் கூறினாள்' என்க.

நக்கீரனாரின் பெயராலே வழங்கிவரும் இச் செய்யுளிலும், அவர், 'நெடுவேள் மார்பின் ஆரம் போலச் செவ்வாய் வானம் தீண்டி, மீன் அருந்தும் பைங்காற் கொக்கினம், என, செவ்வேட் பெருமானைச் செவ்வானத்துக்கும், அதன் கண்ணே வளைவாக நிரையிட்டுப் பறக்கும் கொக்கினத்தை, அவன் மார்பின் வெண்கடப்ப மாலைக்கும்அல்லது முத்தாரத்துக்கும் உவமித்து, நம்மை மகிழ்விக்கின்றனர்.

'முருகன் நற்போர் நெடுவேள் ஆவி' என மாமூலனாரின் முதற் செய்யுளுள் முருகனைக் குறிக்க, இக் கடைச் செய்யுளும் அதனைக் குறிப்பிட்டு நின்றது, களிற்றியானை நிரையைக் கவினுறுத்துவதும் காணலாம்.

திருமுருகாற்றுபடையிலே உதயத்துக் கதிரைப் பெருமான் திருமேனிக்கு உவமித்துப் போற்றியவர், இங்கே மாலைச் செஞ்ஞாயிற்றின் ஒளியிலும் அவனது செம்மேனிக் கவினையே கண்டு போற்றுகின்றனர்.

அகநானூற்றைத் தொகுத்தவர்கள் எத்துணை நுட்பமாகச் செய்யுட்களை ஆய்ந்து தேர்ந்து நிரற்பட வைத்துள்ளனர் என்றறிவதற்கும் இஃது ஒரு நல்ல சான்றாகும்.

சுறாமீன் எதிர்பட்டுத் தாக்குதலாலே, தனக்கு இயல்பான செலவினின்றும் மெலிவுற்றுத் தளர்ந்த கோவேறு கழுதை யானது, கழியிடத்துத் தங்கினாற் போல,

நீதான் எதிர்ப்பட்டதனாலே, தலைவியும் தனக்கே இயல்பாகப் பெற்றிருந்த நாணம் முதலான பெண்மைக் குணங்கள் எல்லாமும் தன்னிடத்திருந்தே நீங்கிப்போக, நின் வழியினளே ஆகினாள் என்று, தோழி, இறைச்சியாற் கூறுகின்ற நயத்தையும் அறிந்து இன்புறலாம்.

'அன்றில் அகவும் ஆங்கண்' எனத் தன்னது ஊரிலுள்ள இடத்தைச் சுட்டியது, அதுதான் தன் பெடையை அழைய நிற்கும் அத் தன்மை போல, நீதானும், நினக்காகக் காத்திருப்பாளான தலைவியை விரும்பிச் சென்று மகிழ்விப்பாயாக என்று உரைத்ததாகும்.

இது, நெய்தலிற் களவு ஆதலால், களவு உறவு எல்லாத் திணைகளினும் நிகழ்தலுறும் என்பதும் அறியப்படும்.

நெய்தற்கு எற்பாடு வந்ததற்கு, 'வைகுறு விடியல் மருதம்; எற்பாடு செய்தல் ஆதன் மெய் பெறத் தோன்றும்' என்னும் சூத்திர உரையினும் -

'இரவிலும் பகலிலும் நீவரல் என்றதும்' என்பதன் மேற்கோளாக, 'வல்வில் இளையரோடு எல்லிச் செல்வது நாட்டே' என்பதனையும்,

'தேரும், யானையும் குதிரையும் பிறவும் ஊர்ந்தனர் இயங்கலும் உரிய' என்பதற்கு, 'கழிச்சுறா வெறிந்த புட்டாள் அத்திரி' என்பதனையும்,

நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டுவனவும் இச் செய்யுளின் சிறப்பைக் காட்டுவனவாம்.

**அகநானூறு களிற்றியானை நிரையும்**
**புலியூர்க் கேசிகன் உரையும் முற்றுப்பெற்றன.**

## பிற்சேர்க்கை - 1

# பாடினோர் வரலாறு

(நக வளைவுக்குறியினுள் குறிக்கப்பட்டுள்ள எண்கள் இந் நூலின்கண்ணுள்ள செய்யுட்களைக் குறிக்கும்.)

**அந்தி இளங்கீரனார் (71)**

'அந்தில் இளங்கீரனார்' எனவும் இவரைக் குறிப்பிடுவர். பணக்காரர்களை ஒட்டி வாழ்ந்து, அவரிடம் பணங்குறைந்தால், அடுத்தவரிடம் சென்று வாழ்கின்ற மக்களை, 'நயனின் மாக்கள்' என்று கூறும் இவர் வாக்கு சிந்திக்கத்தக்கது. கோவை மாவட்டத்துள் 'அந்தியூர்' என்ற ஊரும், 'அந்தி நாடு' என்று திருவாங்கூர்க் கொச்சியிலே ஒரூரும் உள்ளது. இவ்வூர்களுள் யாதாயினும் ஒன்றைச் சேர்ந்தவராகவும் இவர் இருக்கலாம். ஆனால், இவருடைய பாடலுள், 'வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப' என்று கூறிய நயத்தை ஒட்டியே, இப்பெயரைப் பெற்றனர் எனவும் கூறுவர் (அகம் 71). இளங்கீரனார் என்பாரும் உள்ளனராதலின், இவர்க்கு இந்த அடைமொழி தந்தனர். 'கீரர்' என்போர் சங்கறுக்கும் குலத்தினர்; நக்கீரனார்போல இவரும் அக் குடியினரேயாவர். இவர் பாடியதாகக் கிடைத்துள்ளது இவ்வொரு பாடலே.

**அம்மூவனார் (10, 35)**

அகநானூற்றுள் 6 பாடல்களும், ஐங்குறுநூற்றுள் நெய்தல்பற்றிய (101-200) நூறு பாடல்களும், குறுந்தொகையுள் 11 பாடல்களும், நற்றிணையுள் 10 பாடல்களும் இவர் பாடியனவாகக் கிடைத்துள்ளவை. பெரும்பாலும் நெய்தல் திணையினையே இவர் விதந்து பாடியுள்ளனர் எனலாம். சேரன், பாண்டியன் ஆகியோராலும்; திருக்கோவலூர் மலையமான் திருமுடிக்காரியாலும் ஆதரிக்கப்பெற்றவர் இவர் என்றும் கருதலாம். இவரால் சிறப்புடன் பாடப் பெற்ற பட்டினங்கள், தொண்டி, மாந்தை, கொற்கை, கோவலூர் என்பவையாம். 'கடலினும் நட்புப் பெரியது' (ஐங். 184) என்ற இவரது கருத்தின் சிறந்த நயம் காண்க. மிகவும் சுவையமைந்த சிறந்த பாடல்கள் இவர் பாடியவை அனைத்தும். 'அம்மு' என்ற பெயர் இந் நாளிலும் சேர நாட்டிலே வழக்கிலிருப்பது கொண்டு, இவரையும் சேர நாட்டவர் எனச் சிலர் கருதுவர். இந் நூலுள் இவர் பாடியன நெய்தல்பற்றிய பத்தாவது செய்யுளும், பாலை பற்றிய 35 ஆவது செய்யுளும் ஆகும். இரண்டினுள்ளும் வளங்கெழு தொண்டியினைப் பெண்ணின் நலனுக்கும்

(10), பெண்ணையம் பேரியாற்று நுண்அறலினைக் கூந்தலுக்கும் (35) உவமைகளாகக் கூறியுள்ளனர். ‘ஆர்வ நெஞ்சமொடு ஆய்நலன் அளைஇத், தன் மார்பு துணையாகத் துயிற்றுக தில்ல’ எனத், தன் மகளைக் காதலன் பேணுதலை விரும்பும் தாய்மையுள்ளம் (35) இவரால் நன்றாக விளக்கப்பட்டுள்ளது.

**அள்ளூர் நன்முல்லையார் (46)**

பாண்டிநாட்டுச்சிவகங்கைக்கு அருகிலுள்ள அள்ளூரினர் இவர். முல்லை என்பது இவரது பெயர். பெயரைக்கொண்டு இவர் பெண்பாற்புலவர் என்பர். இவர் பாடியவை குறுந்தொகையுள் 9, அக. 1, புறநா. 1. ஆகியவை. இந்நூலுள் இவர் பாடியது மருதத்திணை பற்றிய பாடலாகும். இந்தப் பாடலுள், இவரே அள்ளூரினைச் சிறப்பித்துள்ளதுடன், அது கொற்றச் செழியனைச் சேர்ந்தது எனவும் கூறுகிறார். ஊரவர் தன் தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்தைக் கூறித் தூற்றின போதும், தான் தன் வாயாற் சொல்லவிரும்பாத மனைவியின் கற்புப் பெருந்தகுதியினை இப்பாடலுள் காணலாம். பெண்மையின் தனிச்சிறப்பு இதுவே! குலமகளிர் பண்பும் இதுவேயாகும்.

**ஆர்க்காடுகிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார் (64)**

வடாற்காடு மாவட்டத்து ஆர்க்காடு என்னும் ஊரினர் இவர். வெள்ளைக் கண்ணத்தனார் இவரின் பெயர். அத்தனார் பெயர் எனவும், வெள்ளைக்கண் உறுப்பின் சிறப்பால் அமைந்தது எனவும் கொள்வர். இந்தச் செய்யுள் ஒன்றே இவர் பாடியதாகக் கிடைத்துள்ளது. ‘ஏறு உடனிலை வேட்கையினால் மடநாகு தரீஇ ஊர்வயிற் பெயரும்’ இனிய காட்சியை இதனுள் காணலாம். மழைக் காலத்து, புற்றுக்களின் நனைந்த மண்ணினைத் தம் கொம்புகளால் குத்திக்கிளைத்து, மண்ணுடைக் கோட்ட வாக ஏறுகள் தோற்றும் நிலையினையும் காணலாம். ஆக்கள் வீடு திரும்பும்போது, கன்று பயிர் குரலவாக’ வருவதும், இன்றும் காணக்கூடியதே. இவ்வாறு மெய்க் காட்சிகளுடன் அமைந்து மன நெகிழ்வை விளக்குவது இவருடைய இச் செய்யுள்.

**ஆலங்குடி வங்கனார் (106)**

இவர் பாடல்களுட் பலவும் மருதத்திணை பற்றியனவே, நற்றிணையுள் மூன்றும், குறுந்தொகையுள் இரண்டும், அகத்தில் ஒன்றும், புறத்தில் ஒன்றும் ஆக இவர் பாடியவை ஏழு செய்யுட்கள். வங்கனார் இவர் இயற்பெயராக இருக்கலாம் என்பர். இப் பாடலுள் கொற்றச் செழியனின் போராற்றலையும், அவன் பாணர்க்குக் களிறுகளைப் பரிசிலாக வழங்கும் சிறப்பினையும் கூறியுள்ளார். பெண்மையின் இயல்பு, இளைய

பரத்தையின் வாயிலாக மிகவும் நுட்பமாக இதன்கண் உரைக்கப் பெற்றுள்ளது. 'ஆலங்குடி' என்னும் ஊரினர் இவர். இது சோழநாட்டின் கண்ணுள்ள ஒரு சிவத்தலம். கல்வெட்டுக்களில், 'இரும்பூளை' என்று காணப்படும். புதுக்கோட்டைப் பகுதியிலும், நெல்வேலிச் சீமையிலும் ஓர் ஆலங்குடி இருக்கிறது. 'வங்கன்' என்ற பெயர், இவர் வங்கத்துச் சென்றுவரும் வணிகராயிருக்கலாம் என்ற எண்ணத்தையும் தருகிறது.

**ஆலம்பேரிச் சாத்தர் (47, 81)**

இவர் மதுரையைச் சார்ந்த ஆருலவிய நாட்டு ஆலம்பேரி என்னும் ஊரினர். நெய்தலும் பாலையும் சிறப்புறப் பாடியவர். கடலனது விளங்கில் என்னும் ஊரையும், வானவன் மறவன் பிட்டன் என்பானின் குதிரைமலையையும், நெடுஞ்செழியன் வென்ற தலையாலங்கானத்துப் போரையும், 'நேமியன்' என்னும் ஒரு வள்ளலையும் பாடியுள்ளார். அவர்கள் காலத்தவரா யிருக்கலாம். இவர் பாடியவை, அகம் 4, நற்றிணை 4. ஆக 8 பாடல்கள். இந்நாலுள், 'இழையணி நெடுந்தேர்க் கைவண் செழியனின் மழைவிளையாடும் வளங்கெழு சிறுமலையினையும் (47), மாவண் கடலனின் விளங்கிலையும் (81), இவர் போற்றி யுள்ளார். இந்த விளங்கில் மதுரை மாவட்டத்து விளாம் பட்டியோ, அல்லது இராமநாதபுரத்து விளாங்குளத்தூரோ என்பது ஆராய்தற்கு உரியதாகும்.

**ஆவூர் மூலங்கிழார் (24)**

'ஆமூர்' என்பதே ஆவூர் என்றாயிற்று எனவும், அது சோழ நாட்டினது எனவும் உரைப்பர். ஆக்கள் மலிதலால் 'ஆவூர்' என்றும் கருதலாம். இவர் வேளாண் மரபினர். மூல ஓரையிலே பிறந்தவர் ஆதலின் மூலங்கிழார் எனப்பெற்றனர். அகநானூற் றுள் 3, புறநானூற்றுள் 8, ஆக 11 செய்யுட்கள் இவர் பாடியன. இவராற் பாடப்பெற்றோர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கீரஞ்சாத்தன், மல்லிகிழான் காரி ஆதி, சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயன் என்போராவர். இந்நூலுள் வரும் இவரது பாடலுள் (24), 'வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை' என்று, தமிழகத்துக் 'கீரர்' என்னும் பார்ப்பன மரபினர் சங்கறுக்கும் தொழில் செய்து பிழைத்து வந்ததையும், அவர்கள் வேதவேள்வியில் ஈடுபடாதவர் என்பதையும் குறிப்பிடுகிறார். 'விசும்பு உரிவது போல மழை பொழிந்தது' என்ற உவமை நயமும் காணலாம். இவர் கூறியுள்ள பாசறை, எந்தப் போர்க்களத்தது என்று அறியுமாறில்லை.

**ஈழத்துப் பூதன் தேவனார் (88)**

இவர் ஈழத்திலிருந்து வந்து மதுரையிலே தங்கியிருந்தவர். அதனால், மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் எனவும் குறிப்பிடப் பெறுவர். பசும்பூட் பாண்டியன் இவரால் பாடப் பெற்றவன். 'வடபுல வாடைக்குப் பிரிவோர் மடவர் வாழி இவ்வுலகத் தானே!' என்பன போன்ற செறிவுள்ள தொடர்கள், இவருடைய புலமையைக் காட்டுவன. அக நானூற்றுள் மூன்று பாடல்களும், குறுந்தொகையுள் மூன்று பாடல்களும், நற்றிணையுள் ஒன்றும் இவர் பாடியனவாக உள்ளன. பல்லி சொல்லுவதிலே பலன் கருதும் நம்பிக்கை (அக. 88), மூங்கிலிலே குருவி கூடு கட்டியிருப் பது (நற். 366) ஆகியவற்றையும் இவர் பாடல்களாற் காணலாம்.

**உமட்டூர்க்கிழார் மகனார் பரங்கொற்றனார் (69)**

இவர் பாடியது இந்த ஒரே செய்யுள். இதன்கண், மோரியர் தமிழகத்துப் படையெடுத்து வந்தபோது, மலைச் சாரல்களிலே, தேர்கள் செல்லுவதற்கு இயலாத இடங்களில் பாறைகளைப் பிளந்து தடங்களமைத்த செய்தி கூறப் பெற்றுள்ளது. 'ஆஅய்' வள்ளலின் கானத்துச் சிறப்பையும் இதன்கண் பாடியுள்ளனர். இவர் தந்தையார் பெயர் உமட்டூர்க் கிழார். இவர் உமட்டூர் என்ற ஊரினர். பரங்கொற்றனார் இவரது பெயர். கொற்றனார் என்ற பெயருடையார் பலருள் இவரும் ஒருவர். உமட்டியர் - உமணச் சாதிப் பெண்கள். அதனால், இவ்வூர் நெய்தலைச் சார்ந்ததா யிருக்கலாம். மோகூர்ப் பழையன் மாறனுடன் மோரியர் படை போரிட்ட செய்தியே இவர் குறிப்பதுமாகலாம். 'ஆ அய் அண்டிரனின்' சிறப்பைப் பாடியமையால், அவனுடைய ஆதரவு பெற்றவரும் ஆகலாம்.

**உரோடகத்துக் கந்தரத்தனார் (23, 95)**

அகத்துள் 3, குறுந்தொகையுள் 1. நற்றிணையுள் 4, ஆக எட்டுப் பாடல்களைப் பாடியவர். செங்கற்பட்டு மாவட்டத்து ஓரகடம் இவரது ஊர் என்பர். 'கடனறி மன்னர் குடை நிழல்போலப், பெருந்தண் ஏன்ற மர நிழல்' என்றும் (நற். 146), 'தீமை கண்டோர் திறத்தும் பெரியோர் தாமறிந்துணர்க' என்றும் (நற். 166) சிறந்த அறநெறிகளைச் சிறப்பாகக் கூறியவர் இவர். கந்தரத்தனார் என்பது இவருடைய பெயர்; சிவனின் பெயர். கந்தரின் அத்தனாகிய பெருமானார் என்க. காவிரிப் பூம்பட்டினத்துக் கந்தரத்தனாரினும், வண்ணப்புறக் கந்தரத் தனாரினும் வேறுபடுத்துக் காட்ட, இவர் உரோடகத்துக் கந்தரத்தனார் எனப் பெற்றனர். 'இந்நூலுள், தலைவன் காட்டிய அடையாளத்தைச் சுட்டித் தலைவி கலங்குவதும் (23)', 'நம் உணர்ந்து ஆறிய கொள்கை அன்னை (95)' என, அன்னையரின் மனப்பாங்கும் நயமுடன் கூறப்பெற்றுள்ளன.

**உலோச்சனார் (20, 100)**

இவர் பாடியவை குறு. 4, நற். 20. அகநா. 8. புறநா. 3. ஆக 35 பாடல்கள். இவர் நெய்தல் நிலத்தைச் சிறப்பித்துப் பாடியவர். கடலில் உப்பு எடுத்தலை, 'வானம் வேண்டா உழவு' என்று சிறப்பித்துக் கூறுகிறார். பொறையாற்றுப் பெரியன் என்பானையும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியையும் இவர் சிறப்பித்துப் பாடியுள்ளார். இவர் சமணர் என்பர் டாக்டர். சாமிநாதய்யர் அவர்கள். நெய்தல் நிலப் பெண்களின் விளையாட்டுக் களையும் (20). புறந்தைப் பெரியனின் பாசறைச் சிறப்பினையும் (100), இவர் இந்நூலுட் பாடியிருப்பக் காணலாம். 'புறந்தை' தஞ்சை மாவட்டத்துக் கடற்கரையூராகிய பொறையாறு என்பர். இப் புலவர் சோணாட்டினர்; பெரியனால் ஆதரிக்கப் பெற்றவர்.

**உறையூர்ச் சல்லியன் குமரனார் (44)**

உறையூர்ச் சல்லியன் மகனார் இவர். குறுந்தொகை 309 ஆவது செய்யுள் இவர் பாடியது 'வயலில் பூத்த நெய்தலைக் களை பறிப்பார் களைந்து வரப்பில் போட்டாலும், அது மீண்டும் மீண்டும் அதன்கண் முளைப்பதுபோல, யாமும் நின்னால் ஒதுக்கப்பட்டாலும், நின்பால் என்றும் மாறா அன்புடையோம்' என, இவர் கூறும் உவமை சிறப்புடையது. இவர் இந்நூலின் 44 ஆவது பாடலைப் பாடியவர் என்று ஒரு பாடமும் வழங்குகிறது. சோழ நாட்டு அரிசிலாற்றையும், அதனருகேயுள்ள அம்பல் என்னும் ஊரையும், கிள்ளிவள வனையும் இவர் நற்றிணை 141 ஆவது பாடலுள் குறித்துள்ளனர்.

**ஊட்டியார் (68)**

இவர் பாடியவை இந்தச் செய்யுளும், அகநானூற்றின் 388-வது செய்யுளும் ஆகும். இரண்டும் குறிஞ்சித் திணைச் செய்யுட்கள். 'ஊட்டியன்ன ஒண்தளிர்ச்செயலை (60) எனவும், ஊட்டியன்ன ஊன்புரள் அம்பொடு (388), எனவும் இவரது இரு செய்யுட்களுள்ளும் வரும் தொடர்களைக் கொண்டு, இவர் 'ஊட்டியார்' எனப் பெற்றனர். இரவுக் குறிக்குச் செல்லும் கன்னியர், தம் அன்னையர் உறங்கிவிட்டனரா எனக் காணுகின்ற தன்மையினை இப்பாடலுள் காணலாம்.

**எயினந்தை மகனார் இளங்கீரனார் (3)**

இவர் இளங்கீரனார் எனத் தனியாகவும் குறிப்பிடப் பெற்றுள்ளனர். பொருந்தில் இளங்கீரனார் என்பவரினின்றும் வேறுபடுத்த, இவரை 'எயினந்தை மகனார்' என்ற அடைமொழியிட்டு வழங்கினர் போலும். இவர் வேட்டுவக் குடியினர். மக்களின் பழக்கவழக்கங்களை ஊன்றியுணர்ந்து தம் பாடல்களுள் அமைத்தவர். இவர் தந்தையாராகிய எயினந்தை

யாரும் சிறந்த புலவரே. இவர் பாடியவை அக நானூற்றுள் 9-ம், குறுந்தொகையுள் ஒன்றும், நற்றிணையுள் 6-ம் ஆகப் பதினாறு பாடல்களாகும். இவர் பாடல்களுள் குறுந்தொகைப்பாடல் 116 மட்டுமே குறிஞ்சி. பிறவெல்லாம் பாலைத் திணைப் பாடல்களே. இவர் பாடல்களுள் உதியன், பொறையன் ஆகிய சேரர்களைப் பாடியிருக்கக் காண்கின்றோம். சிறுவர்கள் நெல்லி வட்டாடும் வழக்கம் இவரால் (நற். 3) குறிக்கப் பெற்றுள்ளது. 'திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்' (நற். 62) எனப் பெண்கள் நெற்றிக்குத் திலகமிடும் வழக்கமும் இவராற் பாடப் பெற்றள்ளது. 'உதியன்' என்பான் இவராற் சிறப்பிக்கப் பெற்றிருப்பது கொண்டு, 'வெளியன் வேண்மான் ஆய் எயினன்' நாட்டைச் சேர்ந்தவர் இவர் எனக் கருதலாம். பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதலின் மனைவியார் வெளியன் வேண்மாள் நல்லினியாராவர் என்பதும் நினைக்க. இதனால், இவர் நற்றிணைப் பாடலுள் (114) குறிப்பிடும் உதியனின் போர்ச் செயலும், பெருஞ்சோற்று உதியனையே குறிப்பதாகலாம். கொல்லிப் பொறையன் (நற் 346) கருவூரிலிருந்து ஆண்ட இரும்பொறை மரபினருள் ஒருவனைக் குறித்ததாம்.

**எருமை வெளியனார் (73)**

இத்துடன், புறநானூற்றுள் 273, 303 பாடல்களையும் பாடியவர் இவர். எருமையூர் நாட்டைச் (மைசூர் நாடு) சேர்ந்தவர். வெளியனார் இவர் பெயர். இவர் மகன் கடலனார். புறநானூற்றுள் 'குதிரை மறம்' துறையில் இவர் பாடிய பாடல்கள் மிக்க நயம் உடையனவாகும். வீரை வெளியனாரினும் வேறுபடுத்திக் காட்ட, இவர் எருமை வெளியனார் எனப் பெற்றனர். 'எருமையூரன் வடுகர் பெருமகன்' எனக் குறிக்கப் பெறுகின்றான். 'வெருகு இருள் நோக்கியன்ன ஒரு காழ் முத்தம் (அகம். 73)' என்ற உவமையின் நயத்தைக் காண்க.

**எருமை வெளியனார் மகனார் கடலனார் (72)**

அகநானூற்று 73, புறநானூற்று 273, 303 - வது பாடல்களைப் பாடிய எருமை வெளியனாரின் மகனார் இவர். இவர் பாடியது இந்த ஒரு பாடலே. தலைவன், தலைவி, தோழி ஆகியோருக்கு இடையிலே நிலவுகிற அன்புப் பிணிப்பை இது உணர்த்தும். குரும்பி கெண்டும் பெருங்கை ஏற்றை இரும்புசெய் கொல் எனத் தோன்றும்.' 'நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த மேய்மணி விளக்கு.' 'வாள் நடந்தன்ன வழக்கருங் கவலை,' 'உள்ளுநர் உட்கும் கல்லடர்ச் சிறுநெறி' என வரும் காட்டியல்புகள் இன்புறத் தக்கன.

**ஒக்கூர் மாசாத்தனார் (14)**

இவர் பாடியவை அகம் 14, புறம் 284 ஆகியவை. ஒக்கூர் பாண்டி நாட்டுத் திருக்கோட்டியூருக்கு அண்மையிலுள்ள ஒரூர்.

பாங்கன் தன் தோழர்களிடம் தலைவியினுடைய பிரிவாற்றாமையைக் கூறும் இந்தப் பாடல் மிகவும் உருக்கமாக உள்ளது. இவரது புறநானூற்றுப் பாடலும் கொழு தனை இழந்த மனைவின் நிலையையே உருக்கமாகக் கூறுகின்றது.

**ஒல்லையூர் தந்த பூதப்பாண்டின் (25)**

அகநானூற்றுள் இந்தப் பாடலும், புறநானூற்றுள் 71-வது பாடலும் இவர் பாடியவை. புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள ஒலியமங்கலமும் அதைக் சூழ்ந்த நாடும் 'ஒல்லையூர் நாடு' எனப் பெறும். பேராலவாயர் முதலிய புலவர்கள் இவனைப் பாராட்டியுள்ளனர். இவன் தேவியும் சிறந்த புலமை உடையவராவர். அவர் பாடியது புறம் 246-வது செய்யுள். பாண்டி நாட்டு மாவன், ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதன் அழிசி, பொதியில் திதியன், இயக்கன் ஆகியோர் இவனுடைய நண்பர்கள். இவன் பெயரால் பூதப்பாண்டி என்ற ஊர் ஒன்றும் நாஞ்சிற் பகுதியில் நிலவுகிறது. அவ்வூரன் இவன் எனவும், ஒல்லையூர் நாட்டை வென்றவன் எனவும் சிலர் உரைப்பர். இவனுடைய புறப்பாட்டு (புறம் 71) அன்றைய அரச உள்ளத்தின் பேராண்மையைத் தெளிவுபடுத்தும் அறிவுக் கருவூலமாகும். இவன் இறந்தபோது, இவன் மனைவியும் தீப்பாய்ந்து உயிர் நீத்தனள். இது இவரது இல்லற மேன்மைச் சான்றாகும்.

**ஔவையார் (11)**

களிற்றியானை நிரையின் 97-வது பாடலும் இவர் பாடியதே என்பர். இவர் பாணர் மரபினர். அதியமான் நெடுமான் அஞ்சியிடம் நெருங்கிய நட்புக்கொண்டிருந்தவர். நாஞ்சில் வள்ளுவன், தொண்டைமான், சேரமான் உக்கிரப் பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி ஆகியோரையும் பாடியுள்ளனர். அகநானூற்றுள் 4 பாடல்களும், குறுந்தொகை யுள் 15 பாடல்களும், நற்றிணையுள் 7 பாடல்களும், புறநானூற்றுள் 33 பாடல்களும் ஆக 59 பாடல்கள் இவர் பாடியன. சேரமான் பெருமாள் காலத்து ஔவையாரும், ஆத்திச்சூடி முதலியன பாடிய ஔவையாரும், தனிப்பாடல்கள் பலவற்றைப் பாடிய வரும் இவரின் வேறாவர். பெண்பாற் புலவர்களுள் சிறந்த புலமை முதிர்ச்சியுடையார் பலருமே ஔவையார் என்று அழைக்கப் பட்டனர். அதனாற் போலும் இவரெல்லாம் ஒருவரேயென மயங்கும் நிலையும் உண்டாயிற்று. அரசியல் தூதராகவும், ஆலோசகராகவும், அரசர் பலரும் போற்றும் சிறப்புடன் திகழ்ந்தவர் இவர்.

**கடுந்தொடைக் காவினார் (109)**

இந்த ஒரே பாடல்தான் இவருடையதாகக் கிடைத்துள்ளது. 'கைப்பொருள் இல்லையாயினும், மெய்க் கொண்டு, இன்னுயிர்

செகாஅர் விட்டகல் தப்பற்குப் பெருங்களிற்று மருப்பொடு வரியதள் தண்டம்' விதிக்கும், கொடிய வேந்தனைப்பற்றி இவர் குறிப்பிடுகிறார். இவ்வாறு கடுமையான செய்தியைத் தொடுத்துக் கூறியமையால் இவர் இப்பெயர் பெற்றனர் போலும். 'காவினார்' என்ற சொல்லும், மேற்காட்டிய இவர் வாக்கும் இவர் கானப் பகுதியினைச் சார்ந்தவர் எனக் காட்டுவன.

**கணக்காயனார் மகனார் நக்கீரனார் (93)**

நக்கீரனார் என்ற பகுதியிற் காண்க.

**கபிலர் (2, 12, 18, 42, 82, 118)**

இவர் வேள்பாரியின் சிறந்த நண்பராக விளங்கியவர். பதிற்றுப்பத்துள் ஏழாம்பத்தைப் பாடிச் சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் பெரும்பரிசில் பெற்றவர். பத்துப் பாட்டின் குறிஞ்சிப்பாட்டும், கலித்தொகையுள் குறிஞ்சிக் கலியும், ஐங்குறுநூற்றுள் குறிஞ்சிபற்றிய நூறும், இவர் இயற்றியவை. பரணர், இடைக்காடர் ஆகியோர் இவரது உற்ற நண்பர்கள். அகுதை, இருங்கோவேள், ஓரி, சேரமான் மாந்தரஞ் சேரல் இரும்பொறை, நள்ளி, காரி, விச்சிக்கோன், பாரி, பேகன் ஆகிய பலர் இவராற் பாடப் பெற்றவர். அந்தணாளன் கபிலன்' எனலால், இவர் அந்தணர் மரபினர் எனலாம். இவர் வேறு; தொல் கபிலர் வேறு. 12ஆம் பாடல் தொல்கபிலர் பாடியது எனவும் பாடம் உரைப்பர். இவர் பாரிவேளின் சிறந்த நட்பினராயிருந்து, அவன் இறந்தபின் அவன் மக்களைப் பேணி மண முடித்து வைத்துப், பின் வடக்கிருந்து உயிர்நீத்த, நட்புப் பெருஞ்சிறப்பும் உடையவர்.

**கயமனார் (7, 17)**

இவர் பாடியன அகத்துள் 12, குறுந்தொகையுள் 4, நற்றிணையுள் 6, புறத்துள் 1, ஆக 23 பாடல்களாகும். குறுந்தொகையின் ஒன்பதாவது செய்யுளிலே,

> **'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்**
> **இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்**
> **கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்'**

என்றுரைத்த உவமை நயம்பற்றிக் கயமனார் எனப்பட்டனர். இவர் பாடல்களுள், புலம்பலே மிகுதியாகக் காணப்பெறும். அன்னி என்பவன் குறுக்கைப் பறந்தலையிலே வெற்றிகொண்டு, திதியனின் காவன்மரமாகிய புன்னையை வெட்டினான் என்ற செய்தி (அகம் 145-வது பாடலுள்) இவராற் குறிக்கப் பெற்றுள்ளது. பொதுவாகப் பாடல்கள் அனைத்துமே நேர்முகமாகக் கூறுவனபோல அமைந்து விளங்குவதனால்,

மிகவும் உள்ளம் உருக்குவனவாக உள்ளன. தாய்மையின் பாசம் மிகவும் சிறப்பாக இவர் பாடல்களுள் மிளிரக் காணலாம். பெண்கள் பந்தாடுதல், உமணர் பகடுபூட்டிய வண்டியிற் செல்லுதல், ஊர்களில் விழாக்கள் நடத்தல், முதலிய பல அக்காலத்துச் செய்திகளையும் காணலாம்.

**'பால்பெய் வள்ளம் சால்கை பற்றி**
**என்பாடு உண்டனை யாயின் ஒருகால்**
**நுந்தை பாடும் உண்ணென்று'**

மகளுக்குச் சோறூட்டும் தாயன்பினை எங்ஙனம் போற்றுவது!

முதுகுயவர்கள் அம்மன் கோயில் பூசாரிகளாக விளங்கிய செய்தியைக் (நற்றிணை 293 ஆம் பாடலுள்) குறித்துள்ளார். இந்நூலினுள் (7 - வது பாடல்) பெண்கள் பேதைப்பருவங் கடந்து பெதும்பைப் பருவத்துக் கால்வைக்கும் மலர்ச்சியை அழகுடன் கூறியுள்ளார்.

**கருவூர்க் கண்ணம் புல்லனார் (63)**

இவர் பாடியவை அகம். 68, நற். 159 ஆக இரண்டு செய்யுட்கள். கண்ணன் தந்தை பெயர். புல்லன் இவர் பெயர். கருவூரினர் இவர். கள்ளிக்குடிப் பூதம் புல்லனார், பூதம் புல்லனார், மதுரைக் கொல்லன் புல்லன் எனப் புல்லன் என்ற பெயருடையார் இவரோடு நால்வர். இப்பாடலுள், 'கன்று காணாது புன்கண்ண' என்று வரும் தொடரால் இவர் இப்பெயர் பெற்றனர் எனவும் கருதலாம்.

**கருவூர்ப் பூதஞ்சாத்தனார் (50)**

சேரர் கோநகராகிய கருவூரினர் இவர். கருவூர்ப் புலவர்கள் பலர். கருவூர்ச் சேரமான் சாத்தன் வேறு, இவர் வேறு. 'சாத்தன்' என்ற பெயருடைய புலவர் பலருள் இவரும் ஒருவர். சாத்தனார் இவர் பெயராகவும், 'பூதன்' இவர் தந்தை பெயராகவும் கொள்ளலாம். இந்நூலுள் இவர் பாடிய பாடல் நெய்தல் பற்றியது. 'மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில் துணை ஒன்று பிரியினும் துஞ்சாகாண்' எனக், கண்நிறை நீர்கொடு சுரக்கும் தலைவியின் கசிந்த உளத்தினை இதனுட் காணலாம்.

**கல்லாடனார் (9, 83, 113)**

அகநானூற்றுள் 7-ம், குறுந்தொகையுள் 2-ம், புறநானூற்றுள் 5-ம் ஆக, இவர் பாடியவை 14 பாடல்கள், இவராற் பாடப்பெற்றோர் அம்பர்கிழான் அருவந்தை, முள்ளூர் மன்னன் காரி, ஓரி, அஃதை, பாண்டின் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், வேங்கட மலைத் தலைவனான கள்வர் கோமான் புல்லி, பொறையாற்றுக்கிழான் பெரியன்,

*நன்னன், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் ஆகியோராவார். தொல்காப்பியத்துக்கு இவரோர் உரை செய்தனர் என்பர். பன்னிரு பாட்டியலுள் இவர் செய்தனவாகச் சில சூத்திரங்கள் உள்ளன. கல்லாடம் என்ற நூலைச் செய்தவர் பிற்பட்ட ஒரு கல்லாடர். இவர் மாமூலனாருடன் நட்புக் கொண்டு, 'கபிலபரணர்' என்றார்போலக் 'கல்லாட மாமூலனார்' என்றும் சான்றோரால் அழைக்கப்பெற்றனர். இந்நூலுள் வரும் இம்மூன்று பாடல்களும் பாலைத்திணைப் பாடல்களாகும். பதினோராம் திருமுறையுள் வரும் பாடல்களைச் செய்தவர் வேறு ஒரு கல்லாடர் ஆகலாம்.*

**காட்டூர்க்கிழார் மகனார் கண்ணனார் (85)**

*கண்ணனார் என்ற பெயருடன் விளங்கியவர் பலராதலால், இவர் தந்தையாரான காட்டூர்க்கிழாரின் பெயரடையிட்டு வழங்கப் பெற்றனர். இவர் வேளாளர். 'வென் வேற்றிரையனின் வேங்கட நெடுவரை' இவரால் சிறப்பிக்கப் பெற்றுள்ளது. இந்தத் திரையன் தொண்டைமான் இளந்திரையன் ஆவன். 'காட்டூர்' என்ற பெயருடன் தமிழகத்திற் பல ஊர்கள் வழங்குவனவாம். அவற்றுள் யாதாயினும் ஒன்றினைச் சேர்ந்தவர் இவர் என்க.*

**காவல்முல்லைப் பூதனார் (21)**

*அகத்துள் 5, குறுந்தொகையுள் 2, நற்றிணையுள் 1, ஆக 8 பாடல்கள் இவர் பாடியவை. இவருடைய இயற்பெயர் பூதனார். 'காவன் முல்லை' புறத்திணைத் துறைகளுள் ஒன்று. அதனைப் பாடுவதில் வல்லவராதல் பற்றி இவ் வடைமொழி பெற்றனர். ஆனால், இவர் பாடிய புறப்பாட்டுக்கள் எவையுமே நமக்குக் கிடைத்தில. காவல் குறிச்சி, காவல்பட்டி, காவல்காடு என்பனபோலக், காவல் முல்லையும் ஓர் ஊராயிருத்தல் பொருந்தும். நற்றிணை 29ஆவது பாடலைப் பாடிய பூதனார் என்பவரும் இவரே என்பர் சிலர். இப்பாடலுள் (அக.21) இவர் கோவலர் முல்லை நிலங்களிலே கிணறு தோண்டுவதையும், அவர்கள் கூழுணவு உண்பதையும் குறிப்பிடுகிறார். யானைக்குக் குழியிட்டுப் பிடிக்கும் வழக்கமும் உணர்த்தப் பெறுகின்றது.*

**காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் (107)**

*இவர் வாணிக மரபினராவர். இவர் திருமால் அடியவர் எனவும் சிலர் கூறுவர். இவராற் பாடப்பட்டோர் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன், பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி, பிட்டங்கொற்றன் ஆகியோர். இவரியற்றிய பாடல்கள் 8. (அக. 2, புறம். 5. குறு. 1)*

**காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார் (103)**

அகத்துள் இந்தப் பாடலும், நற்றிணையுள் 122 - வது பாடலும் இவர் பாடியுள்ளவை. காவிரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்தவர். காரிக்கண்ணனாரின்றும் வேறுபடுத்த இவரைச் செங்கண்ணனார் என்றனர். இது உறுப்பு நலன் கருதி அமைந்த பெயர். 'தம்மொடு தானே சென்ற நலனும் நல்கார் கொல்லோ. நாம் நயந்திசினாரே?' என, தலைவி பிரிவாற்றாமையினாற் கூறுவதாகச் சொல்லும் இவரது தொடர்கள் மிகவும் நயமுடையனவாகும்.

**குடவாயிற் கீரத்தனார் (44, 60, 79, 119)**

குடவாயில் சோழநாட்டுப் பேரூர்களுள் ஒன்று. ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன், வழுதி, அத்தி, எவ்வி, பெரும்பூட் சென்னி, பொறையன், கங்கன், கட்டி, கணையன், நன்னன், பழையன், புன்றுறை ஆகியோரை இவர் பாடியுள்ளார். மற்றும், தொண்டி, கொற்கை, உறையூர் ஆகியவையும் இவராற் பாடப் பெற்றுள்ளன. குறு. 2, அக. 10, நற். 4, புறம். 1. ஆக 17 பாடல்கள் இவர் பாடியவை. உறையூர்ச் சல்லியங் குமரனார் பாடியது எனவும், அக. 54 - வது பாடலுக்குப் பாடபேதம் உரைப்பர். 'கீரத்தனார்' என்ற சொல்லினால், இவர் கீரர் குடியினர் என்க. கழுமலப்போர் இவராற் பாடப்பெற்றிருக்கிறது. சோழர் குடந்தைக்கண் வைத்த பெருநிதியும் பிறவும், இவராற் குறிக்கப் பெற்றுள்ள செய்திகள்.

**குறுங்குடி மருதனார் (4)**

மருதன் இவரது இயற்பெயர். திருக்குறுங்குடி என வழங்கும் பாண்டி நாட்டு ஊரினர். அகநானூற்று நான்காவது பாடலும், குறுந்தொகை 344 - வது பாடலும் இவர் பாடியன. இவ்விரு பாடல்களும் முல்லைத்திணைப் பாடல்களே. இன்றும் இவ்வூரிலே ஆயர்கள் மிகுதியாயிருக்கக் காணலாம். 'மருதன்' சிவனின் பெயர் என்பர், மருதவாணன் என்றாற்போல. 'கறங்கிசை விழவின் உறந்தை' என, உறையூரையும் இவர் சிறப்பித்துள்ளார். (4) 'தாதுண்பறவை பேதுறல் அஞ்சி மணிநா ஆர்த்த மாண்பினைத் தேரன்' என, இவர் காதலனின் உள்ளச் செவ்வியைப் புலப்படுத்தியிருக்கின்றமை காண்க.

**குன்றியனார் (40, 41)**

இவர் மலைநாடாகிய சேரநாட்டைச் சார்ந்தவர். மேலைக் கடற்கரை நகரமாகிய தொண்டியை இவர் வருணிக்கின்றார். 'தலைவனது தேர் வாராதாயினும், தேர் வருவது போன்ற ஓசை காதுகளிலே ஒலித்துக் கொண்டேயிருக்கும்' என்று தலைவியின் மூலமாகக் கூறும் உள்ள நெகிழ்வு மிகவும் சுவையுடையது. இவர்

பாடியவை குறு.6., நற். 2, அகநா 2 ஆகப் பத்துப் பாடல்கள். வயல் களிலே நெல்லரிவோர் தண்ணுமை முழக்கத்துடன் வேலையில் ஈடுபடுவர் என்ற செய்தியையும், இவர் தம் பாடலுள் கூறுகின்றார். 'யானும் காதலென், யாயும் நனி வெய்யள், எந்தையும் கொடீஇயர், வேண்டும் அம்பலூரும், அவனொடு மொழிமே' எனவும் (குறு. 51), 'வாராதமையினும் அமைக, சிறியவும் உளவீண்டு விலைஞர்கை வளையே' (குறு.117) எனவும், 'ஒண்டொடி மகளிர் வண்டலயரும்' (குறு. 238) எனவும், நயமான உள்ள நெகிழ்வுகளை இவர் பாடல்களுட் காணலாம்.

**சாகலாசனார் (16)**

அகநானூற்றுள் இந்தப் பாடலும், 270-வது பாடலும் இவர் பாடியவை. இந்தப் பாடலுள் இவர் காட்டும் குடும்பச் சித்திரம் மிகவும் சுவையுடையதாகும். கழுமலத்துள் குட்டுவன் இயற்றிய போரினைப் பற்றியும் இதன்கண் இவர் குறித்துள்ளனர். இவர் பற்றிய வேறு செய்திகள் எவையும் கிடைத்தில. இந்தப் பாடலுள், இல்லாள் தன் மகனைப் பரத்தையின் மகன் எனக் கூறியதாகக் கூறும் ஊடல்நலம் காணலாம்.

**சீத்தலைச் சாத்தனார் (53)**

மணிமேகலைக் காப்பியத்தை இயற்றியவராகக் கருதப் படுபவரும், மதுரை நெடுஞ்செழியன், சேரன் செங்குட்டுவன் காலத்தவருமான இவர் பெரும் புலவராக விளங்கியவர். பௌத்தக் கொள்கைகளிலே ஈடுபாடு உடையவர். மதுரை நகரிலே தானிய வாணிகம் செய்து வந்தவராதலின் கூலவாணிகன் என்ற அடைமொழியுடன் கூறப்படுபவர். நற்றிணையுள் 3, அகநானூற்றுள் 5, புறநானூற்றுள் 1, குறுந்தொகையுள் 1, ஆக 10 பாடல்கள் இவர் பாடியுவை. புறநானூற்றுள் இவராற் பாடப்பெற்றோன் பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன் ஆவன்.

**செல்லூர்க் கோசிகன் கண்ணனார் (66)**

செல்லூர் பாண்டி நாட்டுள் ஓர் ஊர். கோசிகன் இவர் பார்ப்பனர் எனக் காட்டும். கண்ணனார் பெயர். கணவன் மனைவி யரின் ஊடற்காட்சி மிகவும் நயமாகச் சித்திரிக்கப் பட்டுள்ளது. செயலூர்க் கோசங்கண்ணனார் எனவும் இவரைக் குறிப்பிடுவர்.

"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி, மறுமை உலகமும் மறுஇன்று எய்துப, செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச், சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப் பல்லோர் கூறிய பழமொழி" என உரைக்கும் இவருடைய சொற்களிலே, அந்நாளிற் புதல்வரைப் பெற்றவர்கள் கொள்ளும் உள்ளப் பூரிப்பினை நன்றாக உணரலாம்.

**சேந்தம் பூதனார் (37)**

சேந்தனுடைய மகனார் பூதனார் என்க. சேந்தன் என்பாரின் மகனாராக வேறுசில புலவர்களும் கூறப்பட்டுள்ளனர். அகநானூற்றுள் 84, 207 பாடல்களும், குறுந்தொகையுள் 90, 226, 247 ஆகிய பாடல்களும், நற்றிணையுள் 69, 221 ஆகியவையும் இவர் பாயடின. மதுரை எழுத்தாளனார் பெயரால் உள்ள இந்நூலின் 84-வது பாடலைப் பாடியவரும் இவரே என்பது வேறு பாடம்.

**தங்கால் முடக்கொற்றனார் (48, 108)**

பாண்டிய நாட்டுத் திருத்தங்கால் இவர் ஊர். 'முடம்' உறுப்பு நோக்கி அமைந்தது. கொற்றனார் எனவும் கொல்லனார் எனவும் பாடம். பொற்கொல்லன் என்பது பூட்கொல்லன் எனவும் காணப்படும்; அதாவது பணித் தட்டார் என்க. மதுரைப் பொற்கொல்லன் வெண்ணாகனாரும், தங்கால் பொற் கொல்லனாரும், இவரும் ஒருவரே என்பர். இவர் பாடியவை அகம் 48, 108, 355, குறுந்தொகை 217, நற்றிணை 313, புறநானூறு 326 ஆக, ஆறு செய்யுட்களாகும். பருத்திப் பெண்டின் செய்தியை இவர் நயம்படக் கூறியுள்ளார். 'காந்தள் நறுமலரிலே ஆடுந்தும்பி கையாடும் வட்டில்போலத் தோன்றும்' (அகம் 108) என்று சிறப்பாக உவமித்தவர் இவர்.

**தாயங்கண்ணனார் (105)**

சோழ நாட்டு எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்பவர் இவரே. எருக்காட்டூர் தஞ்சை மாவட்டத்து நன்னிலந் தாலுகாவிலுள்ளது. இவர் பெயர், ஏடெழுதுவோரால் தையங்கண்ணனார், கதையங்கண்ணனார் எனப் பிழைபட எழுதப்பட்டும் உள்ளன. தமிழகத்தோடு யவனர் செய்து வந்த வாணிகத்தையும், சேரலனிடத்திருந்த பொற்பதுமையைப் பாண்டியன் போர் செய்து பெற்றமையையும், மற்றும் பல வரலாற்றுக் குறிப்புக்களையும் இவர் பாடல்களுள் காணலாம். நற்றிணையுள் 1, குறுந்தொகையுள் 1, அகத்தில் 7, புறத்தில் 1, ஆகப் பத்துப் பாடல்கள் இவர் பாடியவையாக கிடைத்திருக்கின்றன. 'பந்து புடைப் பன்ன பாணிப் பல்லடிச் சில்பரிக் குதிரை' என்று இவர் குதிரைச் செலவைக் கூறும் (அகம். 105) நயம் காண்க.

**நக்கீரனார் (6, 17, 78, 91, 110)**

அகநானூற்றுள் 16, குறுந்தொகையுள் 8, நற்றிணையுள் 7, பத்துப் பாட்டுள் முதலாவது திருமுருகாற்றுப்படை, 7-வது நெடுநல்வாடை, புறநானூற்றுள் 3 பாடல்கள் ஆகியவை இவர் பாடியன. தந்தையார் மதுரைக் கணக்காயனார்; மகனார் கீரங் கொற்றனார். நக்கீரர் நாடிய நாற்பது என்ற நூலும் இயற்றியவர்.

*இறையனாரகப் பொருளுக்குச் சிறந்த உரை வகுத்தவர். வடமொழி தமிழினும் சிறப்புடையது என்று சொன்ன குயக்கொண்டானை இறக்கப் பாடிய தமிழ்ப் பற்று உடையவர். மதுரையிலே, இன்றும் நக்கீரர் கோயிலொன்று உள்ளது. அது சங்கத்தார் கோயில் எனவும் வழங்கும். கைலைபாதி, காளத்திபாதி அந்தாதி, ஈங்கோய்மலை எழுபது போன்ற பதினோராந் திருமுறை நூற்களைப் பாடியவர் வேறு ஒருவர். 'உலகுடன் திரிதரும் பலர் புகழ் நல் இசை வாய் மொழிக் கபிலன்' (அகம். 78) எனக் கபிலரை மனமுவந்து பாடிய இவர், அவர் காலத்தவர்.*

**நல்லாவூர்க் கிழார் (86)**

*ஊர் பற்றி வந்த பெயர் இது. இவர் வேளாண் மரபினர். தமிழகத்தின் பண்டைய திருமணமரபு எப்படி இருந்தது என்பதற்கு நல்ல விளக்கம் இவருடைய பாடல். நல்லாவூர் பாண்டிநாட்டுள் ஓர் ஊர். இப்பாடலைத் தமிழ் மணம் வேண்டுவார் ஒவ்வொருவரும் படிக்க வேண்டும். 'ஓர் இற்கூடி உடன்புணர் கங்குல்' நிகழ்ச்சி, வளமான நற்றிணை 154ஆவது செய்யுள்.*

**நல்வெள்ளியார் (32)**

*இவரோர் பெண்பாற் புலவர். மதுரை நல்வெள்ளியார் எனவும் கூறப் பெறுவர். 'தலைவன் புரவலனைப் போலத் தோன்றி, இரவலனைப்போலப் பணிமொழி பேசினான்' என இவர் இப்பாடலுள் உரைக்கும் நயம் காண்க; சிறந்த காதல் நாடகம் இச் செய்யுள்.*

**நன்பலூர்ச் சிறுமேதாவியார் (94)**

*அகநானூற்றுள் 94, 394 ஆகிய பாடல்களைப் பாடியவர். நன்பலூர் இவர் ஊர். சிறு மேதாவியார் இவர் பெயர்; அல்லது அறிவுடைமை குறித்த சிறப்புப் பெயருமாகலாம். பாடல்கள் இரண்டும் முல்லைத்திணைப் பாடல்கள். 'அன்பு கலந்து ஆர்வம் சிறந்த சாயல்' எனக் காதலியைக் காதலன் கூறுவதாக வரும் சொன்னயம் காண்க. பருவத்தால் இளமையும், அறிவால் முதுமையும் உடையவராதலின் 'சிறுமேதாவியார்' எனப் பெற்றனர் போலும்! பெண்களுள் இத்தகையினரைச் 'சிறுமுதுக் குறைவியர்' என்பது இலக்கிய வழக்கு.*

**நெய்தற் சாய்த்துய்த்த ஆவூர்க் கிழார் (112)**

*இவர் வேறு; ஆவூர்க் கிழார் என்பார் வேறு. 'நெய்தற் சாய்த் துய்த்த' என்பது இவர் வாழ்வின் நிகழ்ச்சிளுள் ஒன்று. 'சான்றோர் பழியொடு வரூஉம் இன்பம், கழியக் காதலராயினும் விரும்பார்' என்று கூறும் இவர், பெண் கோள் ஒழுக்கத்திலே*

உறுதியுடைவர் எனலாம். ஆகவே, தமிழகத்துள் களவுக் கூட்டத்தில் இளையோர் ஈடுபடுதலை ஏற்காத சிலரும் இருந்தனர் எனல் பொருந்தும்.

**நொச்சி நியமங்கிழார் (52)**

நியமம் பாண்டிய நாட்டு ஓரூர். இவர் வேளாண் மரபினர். இவர் பாடியன அக 1, நற் 3, புறம் 1, ஆக ஐந்து பாடல்கள். 'வேங்கை மலரைப் பறிக்க இயலாத குறமகள் வேங்கை வேங்கை எனப் பூசலிட அதனைப் புலிபோலும் எனக் கருதிக் குன்றவர் வருவர்' என்ற செய்தி நயமுடையது (அகம். 5). 'உயிரினும் சிறந்தது நாணம்' (நற்.17) என இவர் கூறுவதும் காண்க. 'நொச்சி' என்பது நொச்சிப்பூ மாலை சூடித் தம் மதிலைக் காக்கும் மறவனைக் கூறுவது. அத்தகைய வீரச் செயலாற்றியமைப்பற்றி இப்பெயர் பெற்றன போலும். 'நியமம்' கோசர்களின் ஊர்களுள் ஒன்று. அவ்வூரினர் இவர் எனலும் பொருந்தும். இது 'நெகமம்' என வழங்கும்.

**நோய்ப் பாடியார் (67)**

நொய்ப்பாடியார் எனவும் கூறுவர். இவர் பாடியது இந்த ஒரே பாடல்தான். இதன்கண்,

> **'நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்**
> **பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்**
> **பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்**
> **வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்'**

என நடுகல் வழிபாட்டைத் திறம்படக் காட்டிக் கூறியுள்ளார். வேறு செய்திகள் தெரிந்திலது. பிரிவினால் வரும் நோயினைப் பாடியவராதலின், இப்பெயர் பெற்றவர் ஆகலாம்.

**பரணர் (6, 62, 76, 116)**

குறுந்தொகையுள் 17, நற்றிணையுள் 12, அகத்துள் 32, புறத்துள் 13 ஆகியவை இவர் பாடியன. பதிற்றுப்பத்துள் 5 ஆம் பத்துப் பாடியவர். இவராற் பாடப்பெற்றோர், கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன், சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி, சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவன், குடக்கோ நெடுஞ்சேரலாதன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி ஆகியோரும், மற்றும் பலரும் ஆவர். கபிலர் நக்கீரர் முதலியோரின் நண்பர். இவர் வரலாறு மிகவும் விரிவானது.

**பாண்டியன் அறிவுடை நம்பி (28)**

பிசிராந்தையாரால் அரசநெறி உரைக்கப்பட்ட பாண்டியன் இவன். சிறந்த அறநெறியாளனாக இருந்தமையோடு புலவனாகவும்

விளங்கியவன். இவன் பாடியன, நற் 1, குறுந்தொகை 1, அகநானூறு 7, புறநானூறு 1, ஆக 4 பாடல்கள். இப்பாடலுள் (அகம். 29) வரும், தோழியர் உரையாடும் சொல்லாட்சித் திறம் பெரிதும் இன்புறத் தக்கதாகும்.

**பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப் பெருவழுதி (26)**

கானப் பேரெயில் என்பது காளையார் கோயில். அதனை ஆண்ட வேங்கைமார்பனை வென்று, அவன் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டதால், இவன் இப்பெயர் பெற்றனன். மாவெண்கோ என்னும் சேரமானுடனும், இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியுடனும் நட்புடையவன். கடைச்சங்கத்தை ஆதரித்தவன். அகநானூறு இவன் சபையிலேயே தொகுக்கப் பெற்றதென்பர். குடும்ப வாழ்விலே காதலும் ஊடலும் இயற்கையாக எழுவன. அதனை மிகவும் சுவையோடு காட்சியாக்கித் தருகின்றனன் இப் பாண்டியன். 'புதல்வன் பிறந்தபின்' எப்படிப் பாசம் உருவாகிறது என்பதை மெய்யாகக் காண, இப்பாடல் உதவும்; பெண்மையின் சால்பை அறியவும், அந்நாளில் தமிழ் நாட்டை ஆண்டவரின் அறிவு வளத்தை உணரவும் உதவும்.

**பாலை பாடிய பெருங்கடுங்கோ (5, 99, 111)**

சேரர் மரபினைச் சேர்ந்தவன். பாலைத் திணைப் பாடல்கள் பாடுவதில் வல்லமையுடையவனாதலின் இச் சிறப்புப் பெயர் பெற்றனன். இவனைப் பேய்மகள் இளவெயினி என்பார் புறநானூற்று 11-வது செய்யுளில் பாடியுள்ளனர். இவன் பாடியவை அகத்துள் 12, புறம் 1, நற்றிணை 10, ஆக 23 பாடல்களும், பாலைக்கலியும் ஆகும். சிறந்த அறநெறிகள் இவன் பாடல்களுள் மிளிர்வனவாம். இவன் வஞ்சிநகரின் கண்ணிருந்து அரசியற்றியவன் என்பதும், இரவலரைப் புரக்கும் வள்ளலாகத் திகழ்ந்தவன் என்பதும், இளவெயினியார் பாடலாற் புலனாவனவாம். 'கிழவர் இன்னோர் என்னாது, பொருள்தான் பழவினை மருங்கிற் பெயர் பெயர்பு உறையும்' (கலி; 21) என்று, பொருளின் நிலையாத இயல்பினையும், 'ஆள்பவர் கலக்குற அலை பெற்ற நாடுபோல்' என அரசின் அமைதியையும், மற்றும் போரிலே மாண்ட வீரனின் புகழையும் பாடிய சிறப்பினன் இவன். இரும்பொறை மரபினனான செல்வக் கடுங்கோவின் மகனாகப் பிறந்த, தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையே இவன் என்பாரும் உளர். ஆனால், அவனைப் பாடிய அரிசில் கிழார், பொன்முடியார் போன்றோர், இதனைத் தெளிவு படுத்தினாரல்லர். ஆனால், அரசில்கிழாருக்கு அரசு கட்டிலையும், மோசிகீரனாருக்கு முரசு கட்டிலையும் வழங்கிய இரும்பொறையை நினைந்தால் அவனே பெரும்புலமை பெற்ற பெருங் கடுங்கோவாயிருத்தல் பொருந்தும் எனவும் கூறலாம். மேலும்,

அவன் செல்வக்கடுங்கோவின் மகனாதலின் பெருங்கடுங்கோ என அழைக்கப்பட்டிருத்தலும் சாலும். அங்ஙனமாயின், இவனிருந்த கருவூர் இன்றைய திருச்சி மாவட்டத்துக் கருவூரே எனலாம்.

**பெருங்குன்றூர் கிழார் (8)**

வேளாளர் மரபினராகிய இவர், பதிற்றுப்பத்தின் ஒன்பதாம் பத்தைப் பாடிச் சேரமான் குடக்கோச்சேரல் இரும் பொறையினிடம் பெரும் பரிசில் பெற்றவர். வையாவிக் கோப்பெரும் பேகனிடம் அவன் மனைவிக்கு அருளுமாறு வேண்டியவர்களுள் இவரும் ஒருவர். நற். 4, பதிற்றுப்பத்துள் 8ஆம் பத்து, அகநானூறு 1, புறம். 3, ஆகியன இவர் பாடியவை. சிறு மேதாவியார், சேந்தம் பூதனார், நல்லந்துவனார், மருதனிளநாகனார், நக்கீரர், பரணர் ஆகியோர் காலத்தவர்.

**பெருந்தலைச் சாத்தனார் (13)**

மற்றும் அகநானூற்றுள் ஒரு பாடலும், நற்றிணையுள் ஒன்றும், புறநானூற்றுள் ஆறு பாடல்களும் இவர் பாடியவை. தென்னவன் மறவனான கோடைப்பொருநன் பண்ணி என்பான், இளங்கண்டீரக்கோ, குமணன், கடிய நெடுவேட்டுவன், மூவன் ஆகியோர் இவரால் பாடப் பெற்றோராவர். இளவிச்சிக் கோவானவன் நன்னன் உறவினனாகலின் அவனைத் தழுவாது, அவனுடனிருந்த நள்ளியின் தம்பியாகிய இளங்கண்டீரக் கோவை மட்டும் தழுவியர். வறுமைத் துயரால் இவர் குடும்பம் பட்ட அல்லல், 'ஆடு நனி மறந்த' என்று தொடங்கும் புறநனூற்றுப் பாடலால் புலனாகும். 'வாள் தந்தனனே தலையெனக்கீய' எனத் தலைசிறந்த குமணவள்ளலின் வள்ளன்மையைப் போற்றியவர். அவனுக்கும் அவனுடைய தம்பிக்கும் இடையிலேயிருந்த மனவேறுபாடுகளைத் தீர்த்தற்குக் காரணமாக உதவியவரும் இவரே என்பர். சீத்தலைச் சாத்தனாரினும் வேறுபடுத்திக்கூற இவர் பெருந்தலைச் சாத்தனார் எனப் பட்டனர். 'பெருந்தலை' என்ற சொல்லுக்கு நாட்டாண்மைக்காரன் என்பது பொருள். இவர் ஆவூர் மூலங்கிழாரின் மகனார் எனவும் கூறப்படுவர்.

**பெருந்தேவனார் (கடவுள் வாழ்த்தும், 51-ம்)**

இவர் தொண்டைநாட்டு வேளாண் மரபினர். பாரதக் கதையைத் தமிழில் முதலிற் பாடியவர். அச்செய்யுட்கள் - சில பழைய உரை நூல்களுள் மேற்கோள்களாகக் காணப் பெறும். ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய தொகை நூற்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர். அதனால், தொகையாசிரியர்கள் காலத்து இருந்தவர் இவர் எனலாம். நற்றிணை 83-வது பாடலும், குறுந்தொகை 225-வது

பாடலும் இவர் பாடியவை. இப் பாடலைக் (51) கடுகு பெருந்தேவனார் பாடியது எனவும் வேறு பாடம் கூறுவர்.

**பேரி சாத்தனார் (38)**

வடமவண்ணக்கண் பேரிசாத்தனார் என்றும், இவர் குறிப்பிடப் பெறுவர். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை இவர் பாடியுள்ளார். இவர் பாடியவை குறு. 5, புற.2, நற். 8, அகம். 4, ஆக இருபது பாடல்கள். சேரமான் மாந்தரஞ்சேரலிரும்பொறையும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பொருதவழிச், சோழற்குத் துப்பாகிய தேர்வண்மலையனை இவர் பாடியுள்ளனர். வண்ணக்கண் என்பது நாணயச்சாலை நோட்டக்காரன் என்ற அரச பதவியைக் குறிக்கும். அப்பதவி வகித்தவர் இவர் எனலாம். 'நீடிதழ் தலைஇய கவின்பெறு நீலம் கண்ணென மலர்ந்த சுனை' என இவர் உரைத்தமையாலும், வடபுலத்தினராதலாலும் வடம வண்ணக்கண் என்றனர் எனலும் ஆம்.

**பொருந்தில் இளங்கீரனார் (39)**

அகநானூற்றுள் இரண்டு பாடல்களும், புறநானூற்றுள் ஒரு பாடலும் பாடியவர். புறநானூற்றுள் இவராற் பாடப் பெற்றோன் சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பானாவன். இவன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காலத்தவன் 'செறுத்த செய்யுட் செய் செந்நாவின் வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்' எனக் கபிலரை மனதாரப் போற்றியவர் இவர். நக்கீரனார் போன்று இவரும் கீரர் குலத்தவராயிருத்தல் கூடும். பொருந்தில் ஓர் ஊர். இந்தச் சேரமான் சிலப்பதிகாரத்துட் பராசரன் என்பானுக்குப் பரிசு வழங்கியவன் எனக் காணுகின்றோம். திருச்சி மாவட்டத்துப் 'பொருந்தலூர்' பொருந்திலாக இருக்கலாம் எனக் கருதலாம். 'இளங்கீரனார்' என்ற பெயருடன் மற்றொருவரும் உள்ளனர். அவர், அகத்துள் 9, குறுந்தொகையுள் 1, நற்றிணையுள் 5, ஆக 15 பாடல்கள் பாடியவர். அவர் எயினந்தை மகனார். அவரினின்றும் வேறுபடுத்தவே, இவரைப் பொருந்தில் இளங்கீரனார் என்றனராகலாம்.

**போந்தைப் பசலையார் (110)**

புகார்த் தெய்வத்தை நோக்கிப் பெண்கள் சூள் உரைக்கும் வழக்கம் இப்பாடலுள் காணப்படுகின்றது. காதலன் செயலெல்லாம் தன் கண்ணுள்ளேயே நிற்கின்றதென்று கூறும், காதலியின் மனோபாவம் சிந்திக்கச் சுவையுடையது. இவர் ஓர் பெண்பாற் புலவர். போந்தை - பனங்குருத்து. அங்ஙனம் பிரிவாற்றாமையினால் பசலையுண்ணப்பட்டவர் இவர் என்க.

**மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் (33)**

அகநானூற்றுள் 7, குறுந்தொகையுள் 2, நற்றிணையுள் 2, புறநானூற்றுள் 388-வது பாடல் ஆக 12 பாடல்கள் இவர் பாடியவை. மள்ளனார் என்பதனால் இவர் படைவீரருள் ஒருவர் என்பது விளங்கும். அது புலப்படப் போர்க்கள வெற்றியை இவர் சிறப்பித்துப் பாடியுள்ளனர். சிறுகுடி கிழான் பண்ணனையும் இவர் பாடியுள்ளனர்.

**"நாளது செலவும் மூப்பினது வரவும்**
**அரிதுபெரு சிறப்பிற் காமத்து இயற்கையும்**

என்று இவர் பிரிந்துறை வாழ்வார் கூறுவதாகக் கூறும் பகுதி மிகவும் நயமுடையதாகும். 'கடவுட் கற்பின்மட வோள்' எனப் பெண்மையை வியந்து போற்றுபவர் இவர். 'முகவாய் திறந்த நகைவாய் முல்லை' என்றாற்போல் - நயமிக்க உவமைகள் பலவற்றையும் இவர் பாடல்களுட் காணலாம்.

**மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் (56)**

மதுரையிலே ஆடைவிற்கும் தொழில் செய்து வந்தவர் இவர். அகநானூற்றுள் 6, குறு, 1, நற். 4, புறநா, 1, ஆக இவர் பாடியவை 12 பாடல்கள். உள்ளத்து உணர்வுகள் பலவும் திறம் படக் கூறப்படும் செய்யுள் நயத்தினை இவர் பாடல்களுட் காணலாம்.

**மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன் கூத்தனார் (102)**

சேந்தன் - தந்தை பெயர். கூத்தனார் இவர் பெயர். இவர் பாடியவை இந்தப் பாடலும், அகநானூற்று 348-வது பாடலுமாகும். குறிஞ்சி பாடுவதிலே வல்லவர் இவர். குறிஞ்சிப் பண்பாடுவதனை இதன்கண் இவர் குறித்துள்ளனர். இவர் பாடியவை, அகநானூற்றுள் 2-ம், நற்றிணையுள் ஒன்றுமாகும். மதுரைப் பாலாசிரியர் எனவும் இவர் குறிக்கப் பெறுவர்.

**மதுரை எழுத்தாளனார் (84)**

இவர் பாடியது இந்த ஒரே பாடல்தான். இதனையே சேந்தம் பூதனார் பாடியது எனவும் கொள்வர் சிலர். இது முல்லைத் திணைப் பாடலாகும். இதன்கண் இவர் கூறும் அரசின் போர்மறம் தனி நயம் உடையதாகும்.

**மதுரை கணக்காயனார் (27)**

அகத்துள் மூன்று பாடல்களும், நற்றிணையுள் ஒன்றும், புறத்துள் ஒன்றும் இவர் பாடியவை. இவர் மகனாரே நக்கீரனார். 'கணக்காயர்' என்பது ஆசிரியத் தொழிலாகும். பாண்டியர்களின் சிறப்பு இவர் பாடல்களில் மிளிரும். பசும் பூட் பாண்டியன் பொறையன், சோழன் ஆகியோரையும் இவர்

சிறப்பித்துள்ளார். 'மறப்போர்ப் பாண்டியர் அறத்தின் காக்கும் கொற்கை' என, அறநெறி தவறாத பாண்டியரின் ஆட்சிமரபை இவர் போற்றுவர் (அக. 27)

**மதுரைக் கவுணியன் பூதத்தனார் (74)**

'கவுணியன், என்ற பெயர், இவரைப் பார்ப்பன மரபினர் எனக் காட்டும். பூதத்தனார் இவர் பெயர். கோவலர்கள் பண்டும் வேய்ங்குழல் ஊதும் வழக்கமுடையவர்கள் என்பது இவருடைய இந்தப் பாடலால் நன்கு புலனாகும். 'முத்தத்தனார்' எனவும் இவர் பெயர் வழங்கும்.

**மதுரைக் காஞ்சிப் புலவர் (89)**

மாங்குடி கிழார், மாங்குடி மருதனார் என்பவரும் இவரே. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மீது மதுரைக்காஞ்சி பாடியதனால் இச் சிறப்புப் பெயரினை இவர் பெற்றனர். பாண்டியன் நெடுஞ்செழியனால் மிகவும் மதிக்கப்பெற்ற மாபெரும் புலவர் இவர். இவர் பாடிய செய்யுட்கள் குறுந்தொகை 3, மதுரைக் காஞ்சி 1, நற்றிணை 2, அகம் 1, புறம் 6, ஆக 13 ஆகும். கழுதைகளைப் பாரஞ்சுமக்க வணிகர் பயன்படுத்திய செய்தி இப்பாடலுள் கூறப்படுகிறது.

**மதுரைச் செங்கண்ணனார் (39)**

அகத்துள் இப்பாடலும், நற்றிணையுள் 122-வது பாடலும் இவர் பாடியவை. கண்ணனார் என்ற பெயரோடு விளங்கிய பலருள் இவரும் ஒருவர். 'செங்கண்' ஓர் அரச கருமம் என்பர். 'காடுகளில் தீப்பற்றி எரியும் செய்தி இப்பாடலுள் காணலாம். பிரிந்த காதல் காதலியர் கனவுகள் கண்ட வயணம் சுவைபடக் கூறப்பட்டுள்ளது.

**மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார் (70)**

புறநானூற்று 334 - வது செய்யுளை இயற்றிய மதுரைத் தமிழ்க் கூத்தனாரின் மகனார் இவர். கடுவன் குடி என்ற பெயருடன் பாண்டிய நாட்டில் பல ஊர்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றினைச் சார்ந்தவர் இவராயிருக்கலாம். 'மள்ளனார்' என்ற சொல், இவர் படையிலே பணியாற்றியவர் என்பதையும், இவர் தந்தையார் 'தமிழ்க்கூத்து' நடத்தியவர் என்பதையும் உணர்த்தும். குறுந்தொகை 82-ஆம் செய்யுளும், நற்றிணை 150-ஆம் செய்யுளும் இவர் பாடியன. குறுந்தொகை 72-வது பாடலியற்றிய மள்ளனாரும் இவரே என்றும் சிலர் கருதுவர். இவர் இராமாயணக் கதையின் சுவையான ஒரு செய்தியை இப்பாடலுள் கூறுகிறார். பாண்டியர் 'கவுரியர்' என்றழைக்கப் பெற்ற செய்தியினையும், இதன்கண் காணலாம்.

**மதுரை நக்கீரர் (36)**

இவரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் ஒருவரே எனவும், வேறுவேறானவர் எனவும் கூறுவர். வரலாறு, நக்கீரனார் என்ற பகுதியுள் காண்க.

**மதுரையாசிரியர் நல்லந்துவனார் (53)**

இவர் கலித்தொகையைத் தொகுத்து, அதற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியதுடன், நெய்தற் கலியினையும் பாடியவர். பரிபாடல்களுள் 6,8, 11, 20 ஆகியவையும் இவர் பாடியவை.

**'அளியரோ அளியர் தாமே அளியின்று**
**ஏதில் பொருட்பிணிப் போகித் தம்**
**இன்றுணைப் பிரியும் மடமை யோரோ'**

எனத் தலைமகன் சொல்வதாக இவர் கூறும் அகப்பாட்டின் (54) தொடர்களும், கலியுள் இவர் கூறும் பலப்பல கருத்துக்களும், சிறந்த சுவையும் கருத்தாழமும் உடையனவாகும். 'அந்துவன்' என்ற பெயருடையாருள் இவரும் ஒருவர். அந்துவன் சேரல் என்பான் இரும்பொறை மரபினனான சேரமான் ஆவன்.

**மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார் (58)**

மதுரையிலே பலசரக்கு வாணிகம் செய்துவந்தவர் இவர். 'தேவனார்' இவர் பெயர். இளந்தேவனார் என்பது, பெருந் தேவனாரிலும் வேறுபடுத்தக் கூறியது. இவர் பாடியவை அகம். 58, 328, நற் 41 ஆகியவை. 'உன்னைத் தழுவுவதிலும் உன்னை நினைந்து காத்திருப்பதே இனிமையுடையது' என்னும் பொருள் படத் தலைவி ஊடிக் கூறுவதாக இவர் கூறுவது நயமான கருத்தாகும்.

**மதுரைப் பாலாசிரியர் நற்றாமனார் (92)**

'பாலாசிரியர்' என்பது இவருடைய தொழில் ஆகும். பெயர் நற்றாமனார். இவர் பாடியது இந்த ஒரே செய்யுளே. இதன்கண் யானைக்குக் 'குஞ்சரம்' என்ற சொல்லினை இவர் வழங்கியுள்ளார்.

**மதுரைப் பேராலவாயர் (87)**

பாடியன நற்றிணையுள் 2, அகத்துள் 2, புறத்துள் 2 ஆக ஆறு பாடல்கள். இவரே இறையனார் எனவும் சிலர் கருதுவர். பாண்டியனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தவர் இவர்.

**மதுரைப் போத்தனார் (75)**

இவர் பாடிய செய்யுள் இது ஒன்றேயாகும். பாலைத் திணைச் செய்யுள் இது. 'போத்தன்' என்பது இவருடைய இயற்பெயர். பிற்காலப் பல்லவர்களுடைய சிறப்புப் பெயர்களுள்

ஒன்றாகப் 'போத்தரையர்' என்ற பெயர் வழங்கிற்று என்பதையும் நினைக்க, சுகசீவனம் உடையவன் என்பது சொல்லின் பொருள். புலியின் ஆணின் பெயராதலால் வலிமையுடையவர் எனவும் கொள்ளலாம். 'அடுபுலி முன்பிற் றொடுகழல் மறவர்' என, வீரரை, இவர் இப்பாடலுட் குறித்தது கொண்டு, இப்பெயர் பெற்றனர் எனலுமாம்.

**மதுரை மருதன் இளநாகனார் (34, 59, 77, 90, 104)**

இவர் பாடியவை அகநானூற்றுள் 21, நற்றிணையுள் 10, புறநானூற்றுள் 2, குறுந்தொகையுள் 4, ஆக 37 செய்யுட்கள். இவர் வேறு; மருதக்கலி பாடிய மருதனிள நாகனார் வேறு என்பர் டாக்டர் உ.வே.சா. பிறர் இருவரும் ஒருவரே எனக் கொள்வர். இவராற் கூறப்படும் பெருமக்கள் நாஞ்சில் வள்ளுவன், பிட்டன், கோசர், வாணன், மாவண், கழுவுள் (அக. 90, 220, 269, 356) ஆகியோர். மருதம் பற்றிய செய்யுட்கள் இயற்றுவதிலே வல்லவர். இறையனாரகப் பொருளுக்கு உரைகண்ட நாற்பத்தொன்பதின்மருள் இவரும் ஒருவர். இவருரை நக்கீரருரைக்கு அடுத்த சிறப்பு உடையது. கண்ணன் கோபியரின் புடவைகளை ஒளித்துவைத்த செய்தியை இவர் குறிப்பிடுகிறார். பரசுராமர் யாகம் செய்ததையும் குறிப்பிடுகிறார். நல்லந்துவனார் என்ற மற்றொரு புலவரைப் போற்றியுள்ளார். நல்ல குடும்பத் தலைவி எப்படியிருக்க வேண்டும்? 'கடவுட் கற்பொடு குடிவிளக்காகிய புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பின், நன்னராட்டி'யாக விளங்க வேண்டும் என்கிறார் இவர். பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி முதலியோரும், இவராற் பாடப் பெற்றோராவர்.

**மருங்கூர் கிழார் பெருங்கண்ணனார் (80)**

'மருங்கூர்' என்பது பாண்டி நாட்டுத் திருவாடாணைத் தாலுகாவில் உள்ள ஊர் என்பர். நாஞ்சில் நாட்டிலுள்ள மருங்கூர் என்பதும் கருதப்படக் கூடியதே. இவ்வூரவராகச் சேந்தன்குமரன் என்பவரும் காணப்படுகின்றனர். இவர் பாடியது நெய்தலைச் சார்ந்த இந்தச் செய்யுள் ஒன்றேயாகும். அழும்பனுடைய மருங்கூர்ப் பட்டினத்தைச் சார்ந்தவராகவும் இவர் இருக்கலாம் என்பர் சிலர். இவர் பாடிய இப்பாடல் நெய்தலைக் குறித்தது. ஆதலின், மருங்கூர்ப் பட்டினத்தைச் சார்ந்தவர் இவர் எனலே மிகப் பொருத்தம் உடையதாகும்.

**மருதம் பாடிய இளங்கடுங்கோ (96)**

இவர் சேரர் மரபினர், பாலை பாடிய இளங்கடுங்கோவின் தம்பியாயிருக்கலாம் என்பர். இளஞ்சேரல் இரும்பொறை

என்பவர் இவரே எனவும் கருதுவர். மருதத்தைச் சிறப்பித்துப் பாடியவர். நற்றிணையுள் ஒன்றும், அகத்துள் இரண்டுமாக மூன்று பாடல்கள் இவர் பாடியவை. அகுதையின் தந்தையான சோழர், பருவூர்ப் போர்க்களத்தில் செய்த போர் இவரால் இப்பாடலுள் குறிக்கப் பெற்றுள்ளது.

**மாமூலனார் (1, 5, 13, 55, 61, 65, 91, 97, 101, 115)**

இவர் அந்தணர் மரபினர். முக்காலமும் உணர்ந்த யோகசித்தி உடையவர். திருமந்திரம் எழுதினோரான திருமூலர் வேறு ஒருவர். இவருடைய பாடல்கள் அனைத்தும் யாதாயினும் ஒரு வரலாற்றுச் செய்தியைக் கூறும் சிறப்பு உடையன. இவரால் சிறப்புடன் பேசப்பட்டோர் பலர். இவர் மோரியரைக் குறித்துப் பாடியுள்ளனராதலின் கி.மு. 260-க்கு முற்பட்டவர் எனக் கருதுவர். இவராற் பாடப்பெற்றோர் வேங்கடமலைத் தலைவனான புல்வி, நெடுவேளாவி, நன்னன், நன்னன் வேண்மான், கட்டி, எருமை, அஞ்சி, கண்ணன், எழினி, பாணன், கரிகால் வளவனோடு போரிட்டுப் புறப்புண்பட்டு வடக்கிருந்து மாண்ட பெருஞ்சேரலாதன், மத்தி, உதியஞ்சேரலாதன், குட்டுவன், கோசர், மழவர், நந்தர், வடுகர், வேளிர் ஆகியோர். களிற்றியானை நிரையுள் இவர் இயற்றியனவாக விளங்கும் பாடல்கள் பத்து. இவையனைத்தும் பாலைத்திணைப் பாக்கள் ஆகும். இவற்றுள் 97-வது பாடலை ஔவையார் பாடியதாகவும், குடவுமுந்தனார் பாடியதாகவும் வேறு பாடங்களும் கூறப்படும். இவையன்றியும், மணிமிடை பவளத்துள் பத்துப் பாடல்களும், நித்திலக் கோவையுள் 7 பாடல்களும் அகநானூற்றுள் இவர் பாடியன. ஆக, அகநானூற்றுள் மட்டும் இவர் பாடியவை 27 பாடல்கள். குறுந்தொகை 11-வது பாடலும், நற்றிணை 14, 75-வது பாடல்களும், திருவள்ளுவ மாலையின் ‘அறம் பொருள் இன்பம்’ என்ற செய்யுளும் இவர் செய்தவையாகக் காணப்படுபவையாம்.

**மாற்றூர் கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் (54)**

மாற்றூர் என்ற பெயருடன் பலவூர்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றைச் சார்ந்தவர். காவிரியின் வடகரையிலுள்ள சிறுகுடியின் கண் விளங்கிய பண்ணனை இவர் பாடியுள்ளார். கொற்றங் கொற்றனார் என்ற பெயர் போர் வெற்றிச் சிறப்பைக் குறிப்பிடுவதும் காண்க. சிறுவர்களுக்குப் பொற்றாலி அணியும் வழக்கத்தை இப்பாடலுள் காணலாம். 52-வது பாடலும் இவர் பாடியதே என்பது மற்றொரு பாடமாகும். இராமநாதபுரத்துப் படுமாற்றூர் - படமாத்தூர் - இவரது மாற்றூராகவும் இருக்கலாம்.

**முடங்கிக் கிடந்த சேரலாதன் (30)**

இவனே இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பர். இப் பாடல் நெய்தல் திணையைச் சார்ந்தது. பரதவர்கள் மீன்வளங் கொணரும் செயலை மிகவும் நயமாக இவர் பாடியுள்ளார். 'வண்ணம் எவனோ என்றனிர் செலினே பெருமை என்பது கெடுமோ?' என்று, தோழி, தலைவனைக் கேட்கும் கேள்வி, நம்மால் என்றுமே மறக்க முடியாததாகும்.

**வண்ணப்புறக் கந்தரத்தனார் (49)**

வண்ணப்புறக் கல்லாடனார் எனவும் வழங்கப் பெறுவர். இவர் பாடியவை அகநானூற்றுள் இந்தப் பாடலும், நற்றிணையுள் 71-வது பாடலும் ஆகும். இரண்டும் பாலைத் திணை பாடல்கள். நற்றிணைப் பாடலுள், 'வண்ணப்புறவின் செங்காற் சேவல்' என்று இவர் கூறிய உவமை கொண்டு, இப்பெயர் பெற்றனர் எனக் கருதலாம். சுந்தரத்தனார், காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார் ஆகியோரினும் வேறுபடுத்த, இவருக்கு இவ்வடைமொழியிட்டு வழங்கினர் போலும். தாயின் மனநிலை இதன்கண் நன்றாக எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது. 'செல்வமகள் அவள்' என ஒவ்வொரு சொல்லும் சுட்டிக் காட்டுவதறிந்து மகிழலாம்.

**விற்றூற்று மூதெயினனார் (37)**

அகத்துள் 3, குறுந்தொகையுள் 1, ஆக 4 பாடல்கள் இவர் பாடியவை. இவர் வேடர் மரபினர். 'விற்றூற்று' என்பது ஊரின் பெயர். அகநானூற்று 136-வது பாடலுள் இவர் திருமண நாளினை மிகவும் நயம்பட வருணித்துள்ளார். இவ்வூரவராக, 'விற்றூற்று' வண்ணக்கண் தத்தனார் என்றொரு புலவரும் உள்ளனர். கள்ளைக் குடிப்பதைக் 'கயம் மண்டு பகட்டின் பருகி' என்று எள்ளலுடன் உவமிக்கும் நயம் காண்க. வேனில் 'காமர் வேனில்' ஆகிய சிறப்பும் இப்பாடலுள் காணலாம்.

**வெள்ளாடியனார் (29)**

இப்பாடல் ஒன்றே இவர் பாடியதாக உள்ளது. இதன் கண் 'கிடந்து உயிர் மறுகுவதாயினும் இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலி' என்று புலியினது இயல்பை இவர் கூறுகின்றார். 'எஃகுற்று இருவேறாகிய தெரிதகு வனப்பின் மாவின் நறுவடி போல' எனக் கண்களுக்கு இவர் கூறும் உவமை நயமுடையதாகும். மதுரை மாவட்டத்துள் வெள்ளோடு என்னும் ஊர் ஒன்று உளது. அவ்வூரவராக இவர் இருந்திருக்கவும் கூடும். அதனால், பெயர் இங்ஙனம் அமைத்திருக்கலாம் என்பதும் கருதுதற்குரியது. 'உடம்பு ஆண்டு ஒழிந்தனம் அல்லதை, மடங்கெழு நெஞ்சம் நின்னுழையதுவே' என்னும் காதற்பாசத்து மிகுதியையும் இச்செய்யுளுட் காண்க.

**வெள்ளி வீதியார் (45)**

அகநானூற்றுள் இரண்டு பாடல்களும், குறுந்தொகையுள் 8 பாடல்களும், நற்றிணையுள் 3 பாடல்களும் இவர் பாடியவை. இவர் பெண்பாலர். மதுரை வெள்ளியம்பல வீதியில் இருந்ததால் இப்பெயர் பெற்றனர். இவர் கணவர் இவரைப் பிரிந்து செல்லப் பிரிவுத் துயரால் மிகவும் வருந்தி உழன்றவர் இவர். பாடல்களைத் தொடர்புபடுத்திக் காணின், பிரிவால் வரும் பெண்மையின் ஏக்கத்தை மிகவும் தெளிவாக உணர்ந்து கொள்ளலாம். 'வெள்ளி வீதியைப் போல ஒன்றுஞ் செலவயர்ந்திசினால் யானே' என ஔவையாரால் சுட்டிக் கூறப்பட்டவர் இவர். திருவள்ளுவமாலைப் பாடல் ஒன்றும் இவர் பெயரால் உள்ளது. 'ஆதிமந்தி போலப் பேதுற்று அலந்தனென் உழல்வென் கொல்லோ?' என, இவர் உரைப்பதனால், அவர்க்குப் பிற்பட்டவர் எனலாம்.

**வெறிபாடிய காமக்கண்ணியார் (22, 98)**

நற்றிணையுள் 268 - வது பாடலும், புறநானூற்றுள் 271, 302 வது பாடல்களும் இவர் பாடியுள்ளனர். பெண்பாற் புலவர். 'வேலனுக்கு வெறியயரும் சிறப்பினை' முறையாக இவ்விரு பாடல்களுள்ளும், நற்றிணைப் பாடலிலும் குறித்துள்ளதனால், இப் பெயர் பெற்றனர். இயற்பெயர் தெரியவில்லை. இவர் கூறும் வெறியாடும் நிகழ்ச்சி, இவருடைய வாழ்விலேயே நடந்தது போலும்!

**பெயர் காணாத பாடல்கள் (114, 117)**

கதிரவன் மறையும் மாலையிலே, காட்டிலே உதிர்ந்து கிடக்கும் பூக்களைக் காண்கின்றான்; 'வேலன் வெறியாட்டு அயர்கின்ற களத்திடத்தே தாவியுதிர்ந்த சிறிய பலவாகிய கலப்புற்ற பூக்கள்' போன்றன என்று கருதுகின்றான். இது, தன் வரவுக்கு ஏங்கி தன் காதலி, மாலை வேளையிலே, அது குறித்து வெறியாடிக் குறிகேட்டபடி துன்புற்றிருப்பள் எனும் நினைவிற் கூறியதாகும். இதனை 114ஆம் செய்யுளில் காணலாம்.

117ஆவது பாடல் வாணனது சிறு குடியின் வளத்தை நயமுடன் கூறுவதாகும். 'மாமரத்திலிருந்து தானே கனிந்து தரையிலே உதிர்ந்து கிடக்கின்ற செவ்வியழிந்து போன பழந்தை, வளைந்த காலையுடைய யாமையானது, தன் பார்ப்போடு கவர்ந்து உண்ணும் பொய்கை சூழ்ந்த, பொய்யாப் புதுவருவாயுடையது வாணனின் சிறுகுடி' என்கின்றனர். சிறுகுடிகிழான் பண்ணனே 'வாணன்' என்றும் வழங்கப் பெற்றனன் போலும். 'பொலந்தொடி தெளிர்ப்பக் கைகளை 'வீசியபடியே,சேவடிச் சிலம்பு நகுமாறு நடக்கும்' இளமகளையும் இதனிடத்தே நாம் காணலாம்.

## பிற்சேர்க்கை - 2

# பாடப்பட்டோர் வரலாறு

(அகநானூறு களிற்றியானை நிரையினுள், புலவர்களால் கூறப்பட்டிருக்கும் தலைவர்களின் வரலாறுகள் இதன்கண் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன. இவை, அந்தச் செய்திகளை நன்கு அறிந்து இன்புறவும், அவற்றின் வரலாற்றுச் சிறப்பை உணரவும், ஓரளவுக்கு உதவுவனவாகும்..)

**அஃதை (96)**

இவள் சோழர் குலத்து நங்கை. இவளுடைய தந்தையும் இவள் உடன் பிறந்தாருமாகிய சோழர்கள் பலரும் ஒருங்கு திரண்டு, பருவூர்ப் பறந்தலை என்னுமிடத்திலே சேர பாண்டியரை வென்ற சிறப்பினை (அகம். 96) மருதம் பாடிய இளங்கடுங்கோவும் குறிப்பிடுகிறார். அதுகாலை போரிட்ட சேரபாண்டியர் யாவர் என அறிதற்கு இயலவில்லை.

**அகுதை (76, 113)**

இவன் கூடல் நகரிலே வாழ்ந்தவன். இவனைப் பாடியவர்கள் கபிலர், கல்லாடனார், பரணர், மருதம் பாடிய இளங்கடுங்கோ, வெள்ளெருக்கிலையார் முதலியோராவர். 'மணநாறு மார்பின் மறப்போர் அகுதை' (புறம். 347) என இவனுடைய மறம் சிறப்பிக்கப் பெறுகிறது. இவன் பாண்டியர் படைத்தலைவருள் ஒருவன் எனவும், பாண்டியர்க்குத் துணையாகப் போரிட்டு எவ்வி என்பானை வென்று, அவனுடைய நீடூரையும், மிழலையையும் கைப்பற்றினான் எனவும் சிலர் கூறுவர். இவனது நாடு 'நெய்தலம் செறுவின் வளங்கெழு நன்னாடு' (அகம்.113), எனக் குறிக்கப்பட்டுள்ளதனால், மேற்கான் நாட்டுக் கூடலாகிய, இந்நாளைய தென்னார்க்காடு மாவட்டத்துக் வடலூரே இவனிருந்த இடம் என்பர் மற்றுஞ் சிலர்.

ஆய் எயினன் என்பான் வெளியத்து, வேளிர்குலத் தலைவன். பாழிக்கு உரியவனான நன்னன் என்பவன் இவன் நண்பன். இந்த நன்னனுக்கும் மிஞிலி என்பவனுக்கும் பகையுண்டாயிற்று. மிஞிலியும் ஆற்றலுடைய பெருவீரன். அவனுக்கு எதிர்நிற்க இயலாது வாடிய நன்னன், ஆய் எயினனின் உதவியை வேண்டினான். அவனும், தன் படையோடு துணைவந்து போரிட்டான். ஆனால், நன்னன் போரிற் கலந்து கொள்ளாமல் போகவே, ஆய் எயினன், களத்தில் வீழ்ந்தான். அவன் மகளிர்கள் மிஞிலியின் கொடுமையினால் கொண்ட துயரோ மிகவும்

பெரிதாயிற்று. தனக்காக உயிர்நீத்த எயினனது மகளிர்களின் கொடுமையைக் கண்டும், இரக்கமற்றவனாக நன்னன் இருந்து விட்டான். அப்போது, அம் மகளிர்களின் துயரைக் களைய முன்வந்ததுடன் மிஞிலியையும் அடக்கிய அருள் உள்ளம் உடையவன் இவன்.

மீண்டும் இவனுக்கு ஆபத்து நேர்ந்தபோது, இவனுக்குத் துணை நின்று, இவனை அரண்மிக்க இடத்திலே வைத்துக் காத்தவர் கோசர்கள். இந்நூலுள் இதனைக் குறிப்பவை, 76, 113, செய்யுட்கள் ஆகும். 76-வது பாடலுள், அஃதை தன் நாளோலக்கத்திலே வரும் பரிசிலர்களுக்குக் களிற்றோடு நன்கலனும் வழங்கும் சிறப்பைப் பரணர் கூறுகிறார். அஃதையைக் கோசர்கள் காத்த செய்தியை 113-வது பாடலுள், கல்லாடனார் குறிப்பிடுகிறார்.

**அஞ்சி (அதியமான்) (115)**

இவன் தகடூரிலிருந்து அரசாண்டவன். வள்ளல்களுள் ஒருவன். ஔவையாருக்குக் கருநெல்லிக்கனி அளித்த சிறப்பினன். மலையமானோடு பகைகொண்டு வாழ்ந்தவன். சேரர்களுக்கும் இவனுக்கும் பகை அதிகமாக, இறுதியிலே, தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையால் அழிவு எய்தினான். இவன் மகன் பொகுட்டு எழினி. தகடூர்ப்போர் தகடூர் யாத்திரை என்று வியந்து பாடப் பெற்றது. அது முற்றவும் இப்போது கிடைத்திலது. இவன் வரலாறு விரிவானது.

**அத்தி (44)**

இவன் சேரர் குடியினருள் ஒருவன். சேரர் படையணிகளிலே பங்குகொண்டு பணியாற்றியவன். ஆதி மந்தியாரை மணந்து, கழாஅர்த் துறைக்கண், காவிரிப் புதுப்புனலில் நீராடும்போது, வெள்ளத்தால் ஈர்க்கப்பெற்றுச் சென்று, பின் மீண்டவன். இவன் மனைவி இவனைத் தேடிப் புலம்பிய பாடல்கள் மிகவும் உருக்கம் உடையனவாகும். பின்னர், கரிகால் வளவனோடு கழுமலப் போரிலே சேரர் படைத் தலைவனாக இருந்து போரிட்டு இறந்தவன். ஆடற்றொழிலில் வல்லவனாதலின், 'ஆட்டனத்தி' எனவும் அழைக்கப் பெறுவான்.

**ஆதிமந்தியார் (45, 76)**

இவர் சோழ நாட்டு உறையூரினர். அத்தி என்னும் ஆடல் வல்லோனான சேரர்குல மறவனை மணந்தார். காவிரிப் புதுவெள்ளத்து நீராடுகையில், அவன் வெள்ளத்தால் இழுத்துச் செல்லப்பட்டான். அவனுக்காகக் கதறியவராகக் காவிரிக்கரை வழியாக அவனைத்தேடிப் புலம்பி ஓடினார் இவர். இறுதியில்,

காவிரிப் புகுமுகத்திடையே மருதியால் மீட்கப்பட்டுக் கிடைத்த கணவனுடன் இன்புற்று வாழ்ந்தார். கணவனைப் பிரிந்து புலம்பும் மகளிர்களின் துயர நிலைக்கு 'ஆதிமந்தியாரைப்போல' என்று உவமித்துப் பேசும் அளவிற்கு, இவர் வரலாறு எங்கும் பரந்தது. இவரைக் கரிகாலனின் மகள் என்பர் சிலர்.

**இருங்கோ வேண்மான் (36)**

சிற்றரையம் பேரரையம் என்ற பகுதிகளைக் கொண்ட நாட்டை ஆண்டவன். 'உவரா ஈகைத் துவரையாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த வேளிருள் வேளே' இவனும் ஆவன். இவன் வமிசத்தினர், பிற்காலத்து இருக்கு வேளிர் என்றழைக்கப் பெற்றனர். கரிகாற் பெருவளத்தானால் வெற்றிகொள்ளப் பட்டவன் இவன் என்கிறார் கடியலூர் உருத்திரங் கண்ணனார். இவனும், நெடுஞ்செழியனோடு தலையாலங்கானத்துப்போரில், போரிட்டுத் தோற்றோடியவர்களுள் ஒருவன். கழாஅத் தலை யாரை இகழ்ந்து அவரால் பழிக்கப்பெற்றவன். 'புலிகடிமாஅல்' என்ற சிறப்புப் பட்டம் பெற்ற குடியினன். இவன் வகுப்பினரே, பிற்காலத்து ஹோய்சாளர்கள் என்பர். இவன் எவ்வி பரம்பரையைச் சார்ந்தவன்.

**உதியஞ் சேரலாதன் (65)**

இவன், சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்று போற்றப்படுபவன். பாரதப் போரிலே பெருஞ் சோறளித்தவன் இவன். இவனுடைய மகனே இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் ஆவன். மற்றொருவன் பல்யானைச் செல்குழு குட்டுவன். இவன் மனைவியாரின் பெயர் நல்லினியார். இந்தப் பாடலுள் மாமூலனார் இவன் பலருடன் போரிட்டு வென்று தன் நாட்டுப் பரப்பினை விரிவாக்கிய செய்தியைக் கூறுகின்றார். சேரர்களின் பொற்காலத்திற்கு வித்திட்ட மூலமுதல்வன் இவனே யாவன்.

**எருமையூரன் (36, 115)**

எருமையூரன், இன்றைய மைசூர் நாட்டுப் பகுதியைச் சேர்ந்த படைத்தலைவன். 'நேரா வன்றோள் வடுகர் பெருமகன்' என்று குறிக்கப் பெற்றவன். இவனும் பாண்டியன் நெடுஞ்செழியனைத் தலையாலங்கானத்திலே எதிர்த்து நின்று தோற்றோடியவருள் ஒருவன்.

**எவ்வி (115)**

சோழ நாட்டைச் சார்ந்த திருவீழிமிழலையும், திருநீடூரும் உள்ளடக்கிய பகுதியை ஆண்டுவந்த குறுநிலத் தலைவன் இவன். பல்வேல் எவ்வி, வாய்வாள் எவ்வி என இவனுடைய ஆற்றல்கள்

புலவர்களாற் போற்றப்பெறும், 'ஓம்பா ஈகை மாவேள் எவ்வி' என வள்ளன்மை பேசப்படும், குடவாயிற் கீரத்தனார், வெள்ளெருக்கிலையார் ஆகியோர் இவனைப் பாடியுள்ளனர். அன்னி என்பவன் இவன் நண்பன். அவன் திதியனோடு வம்பாகப் போரிட முயன்றபோது, நயம்புரி நன்மொழி கூறி அடக்க முயன்ற அறநெறியாளன் எவ்வி. இவன், இறுதியாகத் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனால் வென்று அழிக்கப்பட்டனன். இறந்தபோது, பாணர்கள் மனம் நொந்து, தம் யாழ்களையே முறித்துப் போட்டனர் என்கிறார் வெள்ளெருக்கிலையார்.

**எழினி (105)**

இவன், 'மறமிகு தானைக் கண்ணன் எழினி தேமுது குன்றம்' என்றதனால், முதுகுன்றப் பகுதியை ஆண்ட குறுநில மன்னன் என்க. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனோடு தலையாலங்கானப் போரிலே மற்றையோருடன் கூடிப் போரிட்டுத் தோற்றவன் இவன். பின்பொருகால் மத்தி என்பவனால், 'கல்லா எழினி பல்லெறிந் தழுத்திய வன்கட்க தவின் வெண்மணி வாயில்' (அகம் 211) என்றாற் போல, அழிக்கப் பெற்றவன். சோழர் படைத்துணைவர்களுள் ஒருவனாகத் திகழ்ந்தவன். இவனும் தகடூர் ஆண்ட எழினியரும் வேறாவர்; வாட்டாற்று எழினியாதன் என்பானும் வேறாவன்.

**ஏற்றை (44)**

சேரர் படைத்தலைவருள் ஒருவன். சோழரை எதிர்த்து நடைபெற்ற கழுமலப் போரிலே வீழ்ந்து பட்டவன். குறவர் குடித் தலைவனாக விளங்கிக், குறமகள் இளவெயினியாரால் பாடப்பெற்ற ஏறைக்கோனே இவன் எனவும், சிலர் கருதுவர்.

**ஐயை (6)**

இவள் 'தித்தன்' என்னும் சோழனின் மகள். இந்தத் தித்தன் பிடவூர்க்கிழான் சாத்தன் என்பானின் காலத்தவன்; நக்கீரர் பாடியுள்ளதனால், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் காலத்தவனுமாவன். இவளுடைய உடன் பிறந்தவனே போர்வைக்கோப் பெருநற்கிள்ளி என்பவன்.

**கங்கன் (44)**

இவனும் சேரர் படைத்தலைவனாக இருந்து கழுமலப் போரிலே பழையனால் வெல்லப்பட்டவருள் ஒருவன். சோழன்மீது பகைகொண்டு, அவனை எதிர்த்து, அந்த முயற்சியிலே வீழ்ந்தவன். இவன் பெயரைக் கொண்டு இவனை வட நாட்டைச் சேர்ந்தவன் எனவும் சிலர் கருதுவர்.

**கடலன் (81)**

இவன், விளங்கில் என்னும் ஊரின்கண் இருந்து அரசாண்ட ஒரு குறுநிலத் தலைவன். இவனைப் பாடியவர் ஆலம்பேரிச் சாத்தனார் என்பவர். அவர் மதுரையைச் சார்ந்த ஆலம்பேரி என்னும் ஊரினராவர். எனவே, இக் கடலனது விளங்கிலும் பாண்டிநாட்டுள் ஓரூராயிருத்தல் பொருந்தும். விளாங்குளத்தூர், விளாம்பட்டி என்ற பாண்டி நாட்டு ஊர்களுள் யாதாயினும், இவனூராயிருக்கலாம். பகைவரது போர்க்களத்திலே புகுந்து, களிறுகளை வேலெறிந்து வெல்லுதலிலே சிறந்த மறவன் இவன். அத்துடன் பெருவள்ளன்மை உடையவனாகவும் விளங்கினான். இவனைப்பற்றிய செய்தியைக் கூறுவது இந்நூலுள் 81-வது செய்யுளாகும்.

**கட்டி (44)**

இவன் வமிசத்தாரே சேலம் மாவட்டத்துத் தாரமங்கலக் கோயிலைக் கட்டிய கட்டிமுதலி இனத்தவராவர். இவன் பவானியாற்றுப் பகுதியிலே அரசாண்டவன். உறையூரிலே தித்தன் அரசாண்டகாலத்து, அவனை மற்போரில் வெல்ல முயன்று பின்னிட்டவன். பின்னர், சேரருக்குப் படைத் துணையாகக் கழுமலப் போரிலே ஈடுபட்டு, அதிலும் தோற்றவன்.

**கணையன் (44)**

சேரர் படைத்தலைவருள் ஒருவன். கழுமலப் போரிலே வீழ்ந்து பட்டவன். இவனைச் சேரர் படைமுதலி எனவும் அழைப்பர். சோழர் படைமுதலியாக இருந்த பழையன் பட்டதும், பெரும்பூட்சென்னி சினந்தெழுந்து, இவனை அழித்தான் என, இப்பாடல் கூறும்.

**கரிகால் வளவன் (55)**

இவன் உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் புதல்வன். பொருநராற்றுப் படைக்கும், பட்டினப் பாலைக்கும் பாட்டுடைத் தலைவன். இரும்பிடர்த் தலையாரை அம்மானாகப் பெற்றவன். வெண்ணிப் பறந்தலையிலே சேரமான் பெருஞ்சேரலாதனோடு போரிட்டு, அவனையும், அவனுக்குத் துணையாக வந்த பாண்டியனையும் வென்றவன். இந்தச் சேரமானே இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இப்போரில் தோற்ற சேரலாதன், புறப்புண்பட்டு நாணி, வடக்கிருந்து உயிர் துறந்தான். இவனைப் பாடியோர் கருங்குழலாதனார், வெண்ணிக் குயத்தியார், கடியலூர் உருத்திரங் கண்ணனார் ஆகியோர்.

**காழஅர்த் தலைவன் மத்தி (6)**

*கழாஅர், காவிரிக் கரைக்கண் உள்ள ஒரு துறை; உறையூருக்குக் கிழக்கே இருந்தது. அங்கு ஆடியபோதுதான் ஆட்டனத்தியைக் கடல்கொண்டது. இவனிடம் வேல்வீரரை மிகுதியாகக் கொண்ட பெரும்படை இருந்தது. அதனால் இவன் சோழர்களுக்குப் படைத்துணையாக நின்றனன். ஒரு முறை திருமுதுகுன்றத்துத் தலைவனாயிருந்த எழினி என்பான் சோழனுக்கு உதவாது போயினான். அவனை வென்று, அவன் பல்லைப் பறித்து வந்து, வெண்மணி என்னும் வாயிலில் பதித்த போர்மறம் உடையவன் இவன். இவனைப் பாடியோர் ஓரம்போகியார், பரணர், மாமூலனார் ஆகியோராவர். அதனால், அவர் காலத்தை ஒட்டியவன் இவன் எனலாம். இவன் வள்ளன்மையிற் சிறந்தவனும் ஆவன்.*

**குட்டுவன் (91)**

*இவனை இந்நூலின் 86 - வது பாடலுள் குறிப்பிடுபவர் மாமூலனார். அவர் இமயவரம்பனைப் பாடியவர் ஆதலின், அக்காலத்தே குட்ட நாட்டினை ஆண்டவனும், இமயவரம்பனின் தம்பியுமாகிய பல்யானைச் செல்கெழு குட்டுவனே இதன்கண் குறிக்கப்பட்டவனாகலாம். இவன் சிறந்த பெரு வீரன். இவனைப் பற்றிய மூன்றாவது பதிற்றுப்பத்தைப் பாடியவர் பாலைக் கௌதமனார் என்பவராவர். இவனுடைய் சிறப்புக்களை அதன்கண் காணலாம்.*

**தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் (36, 57, 116)**

*இவனைப் பாடியோர் இடைக்குன்றூர்க்கிழார், கல்லாடனார், குறுங்கோழியூர் கிழார். குடபுலவியனார், மாங்குடி மருதனார் முதலிய பலர் ஆவர். தன் இளமைப் பருவத்திலேயே, தலையாலங்கானத்துக் கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையோடு போர் செய்து அவனைச் சிறைப்படுத்தியதுடன், சேரன், சோழன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகியோரையும் வென்றவன். மாங்குடி மருதனாரியற்றிய மதுரைக் காஞ்சிக்குத் தலைவன். போர் மறத்துடன், சிறந்த தமிழ்ப் புலமையும் உடையவன். இந்த நூலின் - 36 - வது பாடல் இவனுடைய தலையாலங்கானத்துப் போர்ச் சிறப்பைக் குறிக்கிறது.*

**திதியன் (25, 36, 40)**

*அன்னி மிஞிலியின் துயர் தீர்த்தவன் அழுந்தூர்த் திதியன் என்பவன். அன்னி என்பானோடு குறுக்கைப் பறந்தலையிலே*

போரிட்டவன் மற்றொரு திதியன். அவர்களுள் வேறான இவன் பொதியில் திதியன் என்பவனாவான். இவன் சிறந்த வள்ளலாவான். 'பாணர் ஆர்ப்பப் பல்கலம் உதவி, நாளவை இருந்த நனைமகிழ் திதியன்' என இவனைப் போற்றுவர் மாமூலனார். இப்பாடலுள் கூறப்படும் திதியன் வேறு எனவும் சிலர் கூறுவர். அகம் 36-ல் கூறப்படும் சினங்கெழு திதியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை எதிர்த்துப் போரிலே அழிந்தவன். அவனே இவன் எனவும் உரைப்பர். இவன் சிறந்த போராற்றல் உடையவன். பொதியில் ஆய்வேளுக்கு உரியது; இவன் அவன் மரபினன் போலும்!

**தித்தன் (6)**

இவன் சோழ மன்னர்களுள் ஒருவன். உறையூரிலிருந்து அரசாண்டவன். சோழன் போர்வைக்கோப் பெருநற்கிள்ளி என்பானின் தந்தை. தந்தைக்கும் மகனுக்கும் மிக்க பகைமை நிலவி வந்தது. மகன் முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருது வென்ற காலத்துத் தித்தன் பாராட்டாத வருத்தம் புலப்பட, அவனைச் சாத்தந்தையார் என்பார் பாடியுள்ளனர் (புறம் 80). நக்கீரனாரும் இவனைப் பற்றிப் புறம் 395-ல் போற்றியுள்ளனர். இவன் மகள் ஐயை என்பவள். அவள் மிகவும் சிறப்புடன் விளங்கினாள் என்பது, 'ஐயை தந்தை' என இவனைச் சிறப்பித்ததனால் புலனாகும்.

**திரையன் (85)**

வேங்கட நாடாண்ட பெருமையுடையவன் இவன். காஞ்சியிலிருந்து அரசாண்டவன். பட்டினப்பாலை பாடிய பெரும்புலவரான கடியலூர் உருத்திரங்கண்ணனார் இவனையும் பாடியுள்ளனர். அதனால், இவன் திருமாவளவன் காலத் தவனாகலாம். இவனே தொண்டைமான் இளந்திரையன் என்ற சிறப்புடன், பெரும்பாணாற்றுப் படைக்குரிய பாட்டுடைத் தலைவனாகவும் திகழ்ந்தவன். இவனுடைய விரிவான சிறப்புக் களை எல்லாம் அதன்கண் காணலாம். சோழனுக்கும் பீலிவளை என்னும் நாகர்குலக் கன்னிக்கும் பிறந்தவன் இவன் என்பர். 'இளந்திரையம்' என்றொரு நூல் இவனால் இயற்றப்பெற்றதென இறையனாரகப் பொருளுரை கூறும். அதியமானுக்காக ஔவை தூதுரைத்துச் சென்ற தொண்டைமானும் இவனே யாவன்.

**நன்னன் - 1 (15, 97)**

இவன் பாழிமலைக்குத் தலைவனான பல்குன்றக் கோட்டத்துச் செங்கண் மாத்துவேள் நன்னனாவன். பாழி, பாரம், பிரம்பு, நவிரம் என்னும் மலைகளுக்கு உரியவன். இவனுடைய பாழி நகரிலே பெருஞ்செல்வத்தை வேளிர்கள்

பாதுகாவலாக வைத்திருந்தனர் என்பர். விச்சிக்கோ என்பானின் வமிசத்து முன்னோன் இவன். இவன் மகன் நன்னன் மீது இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்பவர், மலைபடுகடாம் என்னும் அரிய நூலைப் பாடியுள்ளனர். இவனே பெண் கொலை புரிந்த நன்னன் என்று ஆன்றோரால் பழிக்கப்படுபவன். மிஞிலியோடு பகைகொண்டு அவன் படையெடுத்து வரத், தன் துணைக்கு வந்த ஆய்எயினன் என்பானோடு சேர்ந்து போரிடாமல், அவனை அழிய விட்டுவிட்டவன் இவன். இந்தக் குறைபாடுகளுடன் வள்ளன்மையும், சிறப்பும், வளமும் உடையவனாகவும் இவன் திகழ்ந்தான். இவனிருந்த நாடு, இன்றைய சேலம் வடாற்காடு மாவட்டத்துப் பகுதிகளுள், திருப்புத்தூர், செங்கம் இடங்களை யொட்டி இருந்தது. 'நன்னன் நறுமா கொன்ற ஒன்று மொழிக் கோசர்' என்பதனால், இவன் கோசர்களுடன் பகை கொண்டு போரிட்டவன் என்றறியலாம்.

**நன்னன் - 2 (44)**

இவன் சேரர்களின் படைத் தலைவருள் ஒருவனாக விளங்கிய நன்னன் ஆவன். இவன் வேறு; அருங்கடிப் பாழி நன்னன், நன்னன் வேண்மான் ஆகியோர் வேறு. கழுமலப் போரிலே சேரர்களுக்குத் துணையாகப் போரிட்டுச் சோழர்களின் தளபதியான பழையனால் அழிக்கப்பட்டவன் இவன்.

**நெடுவேள் ஆவி (1, 61)**

இவனைப் பாடியவர் மாமூலனார். இவன் பொதினி மலைத் தலைவன். வேளிர்குலத்துப் புகழ்மிக்க தலைவர்களுள் ஒருவன். குதிரைப் படையுடன் இவன் நாட்டிலே புகுந்து கொடுமையாக போரிட்ட மழவர்களை அடித்து வெருட்டிய சிறப்பினன். இவனைப் பாடிய மாமூலனார் இமயவரம்பன் காலத்தவர். இவன் பெண்மக்கள் இருவருள் ஒருத்தி இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனையும், மற்றொருத்தி செல்வக் கடுங்கோ வாழியாதனையும் மணந்த சிறப்பினர். இப்பாடலுள், இவன் மழவரை வெருட்டிய போர்ச் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது. முருகனைப்போல் நல்ல போராற்றல் உடையவன் என்கிறார் கவிஞர். 'நெடுவேளாவி பொன்னுடை நெடுநகர் பொதினி (பழனி) அன்னநின் ஒண்கேழ் வனமுலை' என, இவன் மலை மீண்டும் (61) சிறப்பிக்கப் பெறுகிறது.

**பண்ணன் (55)**

சிறுகுடிகிழான் பண்ணன் என்று சிறப்பிக்கப் பெறுபவன் இவனே. இவனுடைய சிறுகுடி காவிரிக்கரையில் உள்ளது

என்பர். வேளாண்மைத் தொழில் பூண்டு வாழ்ந்த இவன் அதே சமயத்திலே வள்ளலாகவும் வீரனாகவும் திகழ்ந்தான். குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனே இப்பண்ணனைப் பாராட்டிப் பாடியுள்ளான் என்றால், இவன் பெருமையை எங்ஙனம் கூறமுடியும்! அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார், மாற்றூர்கிழார் மகனார் கொற்றங் கொற்றனார் ஆகியோரும் இவனைப் பாடியோராவர்.

**பண்ணி (கோடைப் பொருநன்) (13)**

மதுரை மாவட்டத்துக் கோடைக்கானல் மலையைச் சார்ந்த சிறு பகுதியை ஆண்டவன் இவன். இவனுடைய கோநகர் கடியம் என்பது. இவனை வேட்டுவன் எனவும், கடிய நெடு வேட்டுவன் எனவும் புலவர் போற்றுவர். இவனைப் பாடியவர் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவராவர். இவர் ஆவூர் மூலங்கிழாரின் மகனார். இவன் பாண்டியர் படைத்தலைவருள் ஒருவன். யானைகளைப் பிடித்துப் பழக்கி அவற்றை ஏவி நடத்தும் ஆற்றல் உடையவன். பெருந்தலைச் சாத்தனாரை இவன் மதியாது நடத்த, அவர் இவனைக் கடிந்து உரைத்த புறப்பாட்டு, இவன் முதலில் புலவர்களை மதியாது, பின் மனம் மாறியவன் என உணர்த்தும். இவன், ‘பயம்கெழு’ வேள்வி இயற்றியதாகவும் இப்பாட்டுக் கூறுகிறது; அது களவேள்வியாகலாம்.

**பழையன் (44)**

மோகூர்ப் பழையன் என்று அழைக்கப்பெறுபவன் ஒருவன். அவன் பாண்டியர்களின் படைத்தலைவர்களுள் ஒருவனாகிய பழையன் மாறன். கழுமலப் போரிலே சோழர்களின் படைத் தலைவர்களுள் ஒருவனாக விளங்கிய பழையன் ஒருவன்; அவனே இவன். கழுமலப் போரிலே, நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன், கட்டி, புன்றுறை ஆகிய சேரர் படைத்தலைவர்களை வென்று, களத்திலே பட்டவன் இவன். இவன் பட்டதனால் சோழன் ஆத்திரங்கொண்டு போரிட்டுக் களத்திலே வெற்றிபெற்றனன்.

**பாணன் (113)**

தமிழகத்து வடவெல்லைப் பகுதியிலே, ‘வாழ்ந்தவன் இவன். மற்போர் வல்லவனாக விளங்கினான். தன் மற்போர் வல்லமையைக் காட்டத் தமிழகத்துக்கு வந்தான். கணையன் என்பானின் ஆதரவிலே தங்கியிருந்த ஆரியப் பொருநனை மற்போரிலே கொன்று வென்றவன் இவன். பின்னர், சோழனாகிய தித்தனை வெல்ல முயன்று அவனுடைய ஆற்றலை உணர்ந்ததும் பின்வாங்கிச் சென்றவன் இவன். இவன் நாடு வளம் மிக்கது. ‘விழவயர்ந்தன்ன கொழும்பல் திற்றி எழாஅப் பாணன்

நன்னாடு' எனப், புலவர் கல்லாடனார் இவன் நாட்டைப் போற்றுவர். இவனே சிலவிடங்களில் வாணன் எனவும் குறிக்கப் பெறுவான்.

**பாரி வள்ளல் (78)**

பறம்பு மலையையும் அதனைச் சார்ந்திருந்த முந்நூறு ஊர்களையும் ஆண்டு வந்தவன் இவன். பறம்பிற் கோமானான இவன், கொடைக்குக் குறித்துப்பேசும் பெருஞ் சிறப்புடன் திகழ்ந்தவன். இவனுடைய அரிய நண்பர் கபிலர், ஔவையார், நக்கீரர் போன்றோரும் இவனைப் பாடியுள்ளனர். இவனுடைய பெருமையைக் கண்டு மனம் பொறாத மூவேந்தரும் இவன் நாட்டை முற்றுகையிட்டனர். பறம்பு தன் வளத்தாற் குறையாதது. ஆதலின் அவனை எளிதில் வணங்கச் செய்தற்கு இயலவில்லை. 'முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு; முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்; யாமும் பாரியும் உளமே; குன்றும் உண்டு பாடினிர் செலினே!' என்று கபிலர் கூறும் சொற்களிலே பாரியின் அருள் உள்ளத்தைக் காணலாம் - (அகம் 78) இந்தப் பாடலுள் மூவேந்தர் முற்றியிருந்த காலத்தே, கபிலர் கிளிகள் மூலம் நெற்கதிர்கள் கொணர்ந்து பசி போக்கிய செய்தி கூறப்பெற்றுள்ளது. வஞ்சகத்தால் - பாரி வீழ்ந்தான். கபிலர் அவன் மக்களைப் பேணினார். அருள் கொண்ட பாரியின் மக்களுக்காக, அவர் பட்ட வேதனைகள் முதலியவற்றைப் புறநானூற்றுள் பரக்கக் காணலாம்.

'பாரியது அருமை அறியார் போர் எதிர்த்துவந்த வலம் படுதானை வேந்தர்' என்ற (புறம் 116) உள்ளக் குமுறல் அந்தப் புலவர்க்கு மட்டுமன்று அனைவருக்குமே உரியதாகும். இவன் மகளிர் பாடிய 'அற்றைத் திங்கள்' (புறம் 112) என்ற செய்யுள், அவர்கள் வேதனையை நன்கு காட்டும். இறுதியாக, அம் மகளிரை மலையமானின் மக்களுக்கு மணமுடித்து வடக்கிருந்து உயிர் நீத்தார் கபிலர் பெருமான் என்பர்.

**பிட்டன் (77)**

இவன் சேரர்களின் படைமுதலியாகப் பணியாற்றியவன். அதியர்களுக்கு உரித்தாகிய குதிரைமலையின் தலைவனாகத் திகழ்ந்தவன். படையணிகளிலே மாற்றார் எத்துணை வலியுடையவராயினும், அதனைக் கண்டு அழியாத உறுதி யுடையவன். இவன் 'உலைக் கல்லன்ன வல்லாளன்' என்று புகழ்பெற்றவன். கொடை வளத்தினும் இவன் சிறப்புடையவன். வலியுடைய சிங்கம்போன்று விளங்கியவன். இவனுடைய கொற்றத்தின் செவ்வியைக் கண்டு, 'அவன் காலில் முள்ளும் உறுத்தாதிருப்பதாக' என வேண்டுகிறார் ஒரு புலவர்.

இந்நூலினுள் (அகம். 77) இவனைப்பற்றிய செய்தியைக் கூறுபவர் மதுரை மருதன் இளநாகனார் ஆவர். போர் முனையிலே அவன் உயர்த்த வேல் மாற்றார்க்குத் துயர்தரும் சிறப்பு, இதன்கண் உரைக்கப்படுகிறது.

**புல்லி (61, 83)**

இவன் கள்வர்கோமான் புல்லி எனப் பேசப்படுபவன். வடவேங்கடத்தை உள்ளடக்கிய பகுதிக்குத் தலைவனா யிருந்தவன். பாலைபட்டுக் கிடந்த அந்நிலப் பகுதியிலே ஆறலைத்து உண்ணும் வாழ்வினராயிருந்த கள்வர்களின் கோமானாக இவன் விளங்கினான். பாண்டியர்களோடு இவன் தொடர்புடையவனா யிருந்ததுடன், அவர்களுடைய போரணி கட்கு வேண்டிய யானைகளையும் அனுப்பி வந்தவனாவான் (அகம். 27). இவன், தன்னைப் பாடிவந்த பரிசிலர்களுக்கு வாரி வழங்கியன். அதியன் தலைவனாகிப் பேராண்மையுடன் திகழ்ந்த மழவரினத்தை ஒரு சமயம் வெற்றி கொண்டு, தன்னைப் பணிந்து வாழவும் செய்தவன் இவன். ‘பொய்யா நல்லிசை மாவண் புல்லி’ (அகம். 359) எனவும், ‘நெடுமொழிப் புல்லி’ எனவும் இவன் புலவர்களால் போற்றப்பட்டனன். இவனைப் பாடியோர் பலர். அவர்கள், கல்லாடனார், மாமூலனார் முதலியோராவர். அதனால், இவனும் அவர்கள் காலத்தைச் சேர்ந்தவன் என்று நாம் கருதலாம். இவன் நாடு வளம் மிக்கது. களிற்று வேட்டையும், கள்ளுண்ட களிப்புமாக எந்நாளும் மகிழ்வுடன் விளங்குவது.

**புன்துறை (44)**

இவனும் சேரர் படைத்தலைவர்களுள் ஒருவன். கழுமலப் போரிலே பழையனால் வெல்லப்பட்டவன்.

**பெரியன் (100)**

தஞ்சை மாவட்டத்துக் காவிரிப் பூம்பட்டினத்துக்குச் சிலகல் தொலைவிலே, கடற்கரையை ஒட்டியிருக்கும் பொறையாறு என்னும் ஊரிலிருந்து அரசாண்ட குறுநில மன்னன் இவன். ‘நறவுமகிழ் இருக்கை நற்றேர்ப் பெரியன், கட்கமழ் பொறையாறு’ என்று, இவன் ஊரைச் சிறப்பிப்பர். இவன் விளைவயல்களை, ‘வளம்சால் துளி, பதனறிந்து பொழிய, வேலி யாயிரம் விளைக நின் வயலே’ என்று வாழ்த்துகின்றனர் புலவர்கள்.

**பெருஞ்சேரலாதன் (55)**

கரிகாற் பெருவளத்தானோடு வெண்ணிப் பறந்தலையிலே போரிட்டவன் இவன். போரிலே தோற்றதோடு புறப் புண்ணும் பெற்றவன். அதனால் நாணமுற்று வடக்கிருந்து உயிர் நீத்தவன். இவனே இமயவரம்பன் என்பர் அறிஞர்.

**பெரும்பூட் சென்னி (44)**

இவனே கழுமலப் போரின் நாயகன். இவன் சோழன் செங்கணான் எனவும் அழைக்கப் பெறுவான். இவனோடு எதிர்த்து நின்றவன் சேரமான் கணைக்கால் இரும்பொறை என்பவனாகும் என்பர். அவன் இப்போரிலே சிறைப்பட்டான். அவனை மீட்கவே பொய்கையார் களவழி நாற்பது பாடினார் என்பர். சேரமான் கணைக்கால் இரும்பொறை சிறையிலேயே உயிர் துறந்ததாகவும், புலவர் அவனை மீட்டுச் சென்றதாகவும், அறிஞர் இருவேறான கருத்துக்கள் தருவர்.

**பொருநன் (113)**

இவனும், தலையாலங்கானப் போரிலே பாண்டியனை எதிர்த்து நின்று அழிந்தவருள் ஒருவன். தேர்ப்படையிலே சிறப்புறப் பணியாற்றியவனானதால், இயல்தேர்ப் பொருநன் எனப் பெற்றவன். இவனும், சேரர் படை முதலியாக இருந்த கணையனின் ஆதரவிலே இருந்து, பின் பாணனால் மற்போரிலே வெல்லப்பெற்ற ஆரியப் பொருநனும் ஒருவனாக இருக்கலாம். இவன் வேறு; கோடைப் பொருநன் வேறு.

**மலையமான் திருமுடிக்காரி (35)**

இவனைப் பாடியோர் அம்மூவனார், கபிலர், கல்லாடனார், பெருஞ்சித்திரனார், நல்லூர் நத்தத்தனார், பரணர், மாறோக் கத்து நப்பசலையார் ஆகியோராவர். பெண்ணை யாற்றின் கரையிலேயுள்ள திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு, மலையமாநாட்டை ஆண்டவன் இவன். 'காரி ஊர்ந்து பேரமர்க் கடந்த மாரி ஈகை மறப்போர் மலையன்' இவன். கொல்லிமலைத் தலைவனான ஓரியைக் கொன்று, அந் நாட்டை சேரர்க்கு வழங்கியவன். தகடூர் மன்னனாகிய அதியமானுடன் பகை கொண்டு விளங்கியவன். இறுதியாகக் கிள்ளிவளவன் என்னும் சோழமன்னனால் போரிலே அழிக்கப் பெற்றவன். வள்ளல்களுள் ஒருவன் என்ற வான்புகழ் பெற்றவன்.



**பிற்சேர்க்கை - 3**

# எட்டுத்தொகை நூல்கள்

**நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம் புறமென்று**
**இத்திறத்த எட்டுத் தொகை.**

மேலே குறித்த எட்டுத்தொகை நூல்களுள் அகம், அகப் பாட்டு, நெடுந்தொகை என்றெல்லாம் பெயர்பெற்று வழங்குவது அகநானூறு. இதன் முதல் மூன்று பதிப்புக்கள் சேது சமஸ்தானம், **மகாவித்வான், பாஷா கவிசேகர திரு. ரா. ராகவையங்கார்** அவர் களால் பரிசோதிக்கப்பட்டு, முறையே, கிபி.1920, 1923, 1935 ஆண்டுகளில், **ஸ்ரீ வத்ஸ சக்ரவர்த்தி ராஜகோபாலய்யங்கார்** பதிப்பாக, வெளிவந்தன.

இவர்களின் பெரும் பணியைப் போற்றி நினைத்து வணங்கி வாழ்த்துவோமாக.



**பிற்சேர்க்கை - 4**

## சில குறிப்புக்கள்

நெடுந் தொகையாகிய அகநானூற்றைத் தொகுத்தவர், உப்பூரி கிழார் மகனார் உருத்திர சன்மர்.

தொகுப்பித்துத் தந்தவர், பாண்டியன் உக்கிரப் பெருவழுதி யார் ஆவர். இவர் செய்யுள், இக் களிற்றியானை நிரையின் 26ஆம் செய்யுளாகவும் திகழ்கின்றது.

இந்நூலின் தொகுப்பு முறை:

**பாலை வியமெல்லாம் பத்தாம் பனிநெய்தல்**
**நாலு நனிமுல்லை நாடுங்கால் - மேலையோர்**
**தேறும் இரண்டெட் டிவைகுறிஞ்சி செந்தமிழின்**
**ஆறு மருதம் அகம்.**

என்ற பழம் பாடலால் விளங்கும்.

'இக் களிற்றியானை நிரையுள், பாலைக்கு முதலும் கருவும் வந்து உரிப்பொருளால் சிறப்பெய்தி முடிந்தது' என்றாற்போல, அகநானூற்றின் பகுதியான இதனைத் தனிநூல் போலவே காட்டுவது நச்சினார்க்கினியனார் மரபாகும் (அகத். 3 உரை). இப் பகுப்பின் பழைமை இதனால் விளங்கும்.

**ஒன்றுமூன் றைந்தேழொன் பான்பாலை ஓதாது**
**நின்றவற்றின் நான்கு நெறிமுல்லை - அன்றியே**
**ஆறாம் மருதம் அணிநெய்தல் ஐயிரண்டு**
**கூறாதவை குறிஞ்சிக் கூறு.**

என்னும் பாடலும் தொகுப்பு முறையைக் காட்டுவதேயாகும். பாதிப் பாடல்கள், பிரிவுத் திணைக்குரிய பாலைப் பாடல்கள் என்பதை நினைக்கும்போது, எண்ணம் கிளர்ந்தெழும் பிரிவையே, அகத்தை விளக்கும் களனாக்குவதில் புலவர் நிறைவு பெற்றனர் என்று கருதலாம். இதனை நடுநிலைத் திணை என்று தொல்காப்பியம் அகத்திணை யியலுள் (சூ. 8) குறிப்பிடுவதும் சிந்தனைக்கு விருந்தாயுள்ளது!



# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

(எண் - செய்யுள் எண்)

★ ★ ★

சங்க இலக்கியம் - எட்டுத்தொகை

# 1 அகநானூறு

## களிற்றியானை நிரை

மூலமும் உரையும்

GO 919 

நூல் கிடைக்குமிடம் :



நூலங்காடி...
www.thebookstore.in
e-mail : gowra_09@yahoo.in

கௌரா ஏஜென்ஸீஸ்
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.

ரூ.80